# இந்திய மாதர் சங்கம்,
# அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்
# - ஒரு வரலாற்று ஆய்வு

*(குறிப்பாக தமிழ்நாடு தொடர்பாக)*

**சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு**
**முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்படும்**
**ஆய்வேடு**


ஆய்வாளர்

**G.செல்வி,** M.A., M.Phil.,

நெறியாளர்

**முனைவர் S.P. மேகலை,** M.A.(His), M.A.(Yoga), M.Phil., MBA.(Tou.Mt), Ph.D.,

இணைப் பேராசிரியர்





**முதுகலை மற்றும் ஆராய்ச்சி வரலாற்றுத்துறை**

பச்சையப்பன் கல்லூரி

சென்னை–600 030.


**ஜூன் - 2013**

**முனைவர் S.P.மேகலை,** M.A.(His), M.A.(Yoga), M.Phil., MBA.(Tou.Mt), Ph.D.,
இணைப் பேராசிரியர்,
முதுகலை மற்றும் ஆராய்ச்சி வரலாற்றுத்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை–600 030.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**"இந்திய மாதர் சங்கம், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் – ஒரு வரலாற்று ஆய்வு (குறிப்பாக தமிழ்நாடு தொடர்பாக)"** என்னும் தலைப்பில் முனைவர் (Ph.D) பட்டத்திற்காக G.செல்வி செய்துள்ள இந்த ஆய்வு சென்னை பச்சையப்பன் கல்லூரி வரலாற்றுத்துறையில் அவருடைய சொந்த முயற்சியால் உருவானதாகும்.

இதற்குமுன் இந்த ஆய்வு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப்படவில்லை என்றும், இப்பொருளில் வேறு எவரும் ஆய்வு நிகழ்த்தவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை–600 030,
நாள் : 05 .06.2013

Mekalai
**S.P.மேகலை**
நெறியாளர்

**G.செல்வி,** M.A., M.Phil.,
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
முதுகலை மற்றும் ஆராய்ச்சி வரலாற்றுத்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை–600 030.

## ஆய்வாளர் உறுதிமொழி

**“இந்திய மாதர் சங்கம், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் – ஒரு வரலாற்று ஆய்வு (குறிப்பாக தமிழ்நாடு தொடர்பாக)”** என்னும் தலைப்பில் முனைவர் (Ph.D) பட்டத்திற்காக சென்னைப் பச்சையப்பன் கல்லூரி வரலாற்றுத்துறையில் பேராசிரியர் முனைவர் S.P.மேகலை M.A.(His), M.A.(Yoga), M.Phil., MBA.(Tou.Mt), Ph.D., அவர்களின் மேற்பார்வையில் ஆய்வு நிகழ்த்தி அளிக்கப்பெறும் இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இந்த ஆய்வு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

இடம் : சென்னை–600 030,
நாள் : 05.06.2013

G.செல்வி
ஆய்வாளர்

## நன்றியுரை

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் வரலாற்றுத் துறையில் முனைவர்பட்ட ஆய்வு படிப்பை மேற்கொள்வதற்கு இடமளித்த கல்லூரி முதல்வர் P.கஜிவரதன் M.Sc.,M.Phil.,Ph.D., மற்றும் இணைப்பேராசிரியர் முனைவர் K.பானுமதி M.A.,M.Phil.,Ph.D., ஆகியோருக்கும் **"இந்திய மாதர் சங்கம், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்– ஒரு வரலாற்று ஆய்வு (குறிப்பாக தமிழ்நாடு தொடர்பாக)"** எனும் தலைப்பைத் தேர்ந்தெடுக்க ஊக்கம் அளித்து இந்த ஆய்வினை நன்முறையில் நிறைவு செய்ய உற்சாகப்படுத்தி அவ்வப்போது தக்க ஆக்கப்பூர்வமான ஆலோசனைகளையும் அறிவுரைகளையும் வழங்கி உரிய ஆய்வு நெறிமுறைகளை கற்றுத் தந்த என் ஆய்வு நெறியாளர் இணைப் பேராசிரியர் முனைவர் S.P.மேகலை M.A.(His), M.A.(Yoga), M.Phil.,MBA.(Tou.Mt),Ph.D., அவர்களுக்கும் இந்த ஆய்வேடு முழுமை பெற தக்க ஆலோசனைகளை வழங்கி ஊக்கமளித்த துறையின் மூத்த பேராசிரியரான இணைப்பேராசிரியர் முனைவர் K.பாரதி M.A.,M.Phil.,Ph.D., அவர்களுக்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

துறையிலிருந்து பணி ஓய்வு பெற்ற பேராசிரியர்களான, பேராசிரியர் B.சுகுணாபாய் அவர்களுக்கும் பேராசிரியர் L.ராமமூர்த்தி அவர்களுக்கும் பேராசிரியர் முனைவர் P.R.ரங்கசாமி அவர்களுக்கும் பேராசிரியர் T.வாசந்தி அவர்களுக்கும் பேராசிரியர் முனைவர் V.G.சண்முகம் அவர்களுக்கும் பேராசிரியர் முனைவர் C.திருவேங்கடம் அவர்களுக்கும் பேராசிரியர் முனைவர் P.கந்தசாமி அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தற்போது வரலாற்றுத் துறையில் பணியாற்றி வரும் அனைத்துப் பேராசியர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுக்குத் தேவையான தகவல்களை சங்கத்தின் அலுவலகத்தில் திரட்டுவதற்கு அனுமதி அளித்த அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க அகில இந்திய செயலாளர் உ.வாசுகி அவர்களுக்கும் தேவையான தகவல்களை கொடுத்து

உதவிய அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க மாநிலக்குழு உறுப்பினர் R.சாவித்ரி அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் இவ்வாய்வுக்கு நேரடியாகத் தொடர்புடைய பல நூல்களை தந்து உதவிய சென்னை ஆவணக் காப்பக நூலகருக்கும், ஜீவா நூலகம், பெரியார் நூலகம் ஆகியவற்றின் நூலகர்களுக்கும் ரோஜா முத்தையா, கன்னிமாரா, தியோசபிகல் சொசைட்டி, அண்ணா அறிவாலயம் ஆகிய நூலகங்களின் நூலகர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்ஆய்வேட்டை நன்முறையில் கணினியச்சு செய்து கொடுத்த P.ராஜலஷ்மிக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

G. Selvi

**G.செல்வி**

இடம் : சென்னை–600 030,

நாள் : 05.06.2013

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| AIDWA | - | All India Democratic Women's Association |
| AIMWC | - | All India Muslim Women's Conference |
| AIWC | - | All India Women's Conference |
| CPI | - | Communist Party in India |
| CPI (M) | - | Communist Party in India (Marxist) |
| CSWB | - | Central Social Welfare Board |
| IBA | - | Indian Bankers Association |
| NCWI | - | National Council for Women in India |
| NFIW | - | National Federation of Indian Women |
| WIA | - | Women's Indian Association |
| YWCA | - | Young Women Christian Association |
| ஈ.வெ.ரா. | – | ஈரோடு வெங்கடப்ப ராமசாமி |
| வ.வே.சு.ஐயர் | – | வ.வே.சுப்பிரமணிய ஐயர் |
| திரு.வி.க. | – | திரு.வி.கல்யாண சுந்தரனார் |
| தி.மு.க. | – | திராவிட முன்னேற்றக் கழகம் |
| டி.ஐ.ஜி. | – | காவல்துறை துணை கண்காணிப்பாளர் (Deputy Inspector General of Police) |
| ஆர்.டி.ஓ. | – | வருவாய் கோட்டாட்சி அலுவலர் (Revenue Divisional Officer) |
| எஸ்.பி. | – | காவல் துறை கண்காணிப்பாளர் (Superintendent of Police) |
| சி.பி.சி.ஐ.டி. | – | Crime Branch - Criminal Investigation Department |

| | | |
|---|---|---|
| எம்.பி. | – | பாராளுமன்ற உறுப்பினர் (Member of Parliament) |
| பி.ஜே.பி. | – | பாரதிய ஜனதா கட்சி (Barathiya Janatha Party) |
| ஐ.நா.சபை | – | ஐக்கிய நாடுகள் சபை |
| ஐ.ஏ.எஸ். | – | மாவட்ட ஆட்சியர் (Indian Administrative Service) |
| சி.பி.ஐ. | – | குற்ற புலனாய்வுத் துறை (Central Bureau of Investigation) |
| டி.எஸ்.பி. | – | காவல்துறை துணை கண்காணிப்பாளர் (Deputy Superintendent of Police) |
| ஐ.எஃப்.எஸ். | – | இந்திய அயலுறவுத்துறை அதிகாரி (Indian Foreign Service) |
| எம்.எல்.ஏ. | – | சட்டமன்ற உறுப்பினர் (Member of Legislative Assembly) |
| ஐ.என்.ஏ. | – | இந்திய தேசிய ராணுவம் (Indian National Army) |

# பொருளடக்கம்

# முன்னுரை

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த பெண்களின் சில நினைவுக் குறிப்புகளை ஆராயும்போது கல்வி கற்க வேண்டும் என்ற அவர்களின் ஆசையும் அதற்கான போராட்டமும் வெகுவாகவே பதிவாகி உள்ளது. 1809ம் ஆண்டு பிறந்த ராசுந்தரிதேவி என்ற பெண்மணியின் பதிவு குறிப்பிடத்தகுந்தது.

"புத்தகங்களைப் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டபோது எனக்கு என் மீதே கோபம் வந்தது. ஏனென்றால் பெண்கள் படிக்கக் கூடாது, படித்தால் அது மாபெரும் தவறு. வீட்டிலிருந்த வயதான பெண்மணிகள் மீண்டும் மீண்டும் இதை வற்புறுத்தி சொல்வார்கள். என் கையில் ஏதேனும் ஒரு துண்டு காகிதத்தைப் பார்த்துவிட்டால்கூட கோபப்படுவார்கள்"[1] என்று தன் அனுபவத்தை எழுதியிருக்கிறார்.

வங்காளத்தில் பிறந்த ராசுந்தரிதேவி அமர்ஜிபன் (Amarjiban) "My life" என்ற தனது வாழ்க்கை சரிதத்தை 1876ம் ஆண்டு எழுதினார். அந்தக் காலத்தில் வாழ்ந்த பெண்களின் இல்லற வாழ்வு, அவர்களுக்கிருந்த பணிச் சுமைகள், எந்த மதிப்பும் இல்லாமல் அவர்கள் நடத்தப்பட்ட விதம் ஆகியவற்றை வெளிப்படுத்திய முதல் இந்தியப் பெண்ணின் குரலாகவே இந்தப் புத்தகத்தைக் கருதலாம்.

கடும் எதிர்ப்புக்கிடையில் இந்தியப் பெண்களுக்கான கல்வி முயற்சி தொடங்கியது. ஹைமாவதி சென் (1866–1932) என்ற வங்காளத்தைச் சேர்ந்த பெண்மணி கல்விக்காக தான் நடத்திய நீண்ட போராட்டத்தை விவரித்துள்ளார். "பெண்கள் படித்தால் விதவையாகிப் போவார்கள் என்று வீட்டுப் பெரியவர்கள் கடுமையாக எச்சரிப்பார்கள். ஒரு பெண் விதவையாவது என்பதே வாழ்க்கையில் அவளுக்குக் கிடைக்கக் கூடிய அதிகபட்ச தண்டனையாகும். பெண்களின் கல்விக்கும் அவள் விதவையாவதற்கும் என்ன தொடர்பு என்று நான் பிற்காலத்தில் கேட்டுத் தெரிந்து கொண்டேன். ஒரு பெண் கல்வி கற்றால் கணவனுக்கான உணவைத் தயாரிப்பது, கணவரின் நலம் பேணுவது போன்ற குடும்பக்

---

1 . Tharu & Lalitha, Ed. *Women Wirting in India*, Vol.I, p.199.

கடமைகளிலிருந்து அவள் கவனம் தவறிப்போகும். இதனால் கணவரின் உடல்நலம் குன்றி அவர் இறந்துபோகும் வாய்ப்பு ஏற்படும். அதனால் கல்வி கற்கும் பெண் விதவையாவது என்ற விளக்கம் எனக்குக் கிடைத்தது".[2]

பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை கல்வி கற்கும் உரிமையை அடைவதே மிகப் பெரிய போராட்டமாக இருந்த இந்தியப் பெண்களின் வாழ்வில் மெல்ல மெல்ல முன்னேற்றம் ஏற்பட்டது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாடு முழுவதிலும் பரவலாக பெண்கள் எழுதப் படிக்க கற்றுக் கொண்டனர். கடும் எதிர்ப்புகளுக்கிடையில் பெண்களுக்கான கல்வி நிலையங்கள் தோற்றுவிக்கப்பட்டன. வீட்டிற்குள் அடைந்து கிடந்த பெண்களை கல்வி நிலையங்களுக்கு கொண்டு வருவதற்கு மிகப்பெரிய முயற்சிகள் நடந்தன. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள்கைத் திட்டங்களும் இதற்கு ஆதரவாக இருந்தது. ஹண்டர் கமிஷன் அறிக்கை (1882) பெண்கல்வி நிலையங்களுக்கு அதிக சன்மானம் வழங்கி ஊக்கம் அளித்தது. கிறிஸ்தவ மிஷனரிகளும் குறிப்பாக கன்னியாஸ்திரிகள் இந்தியப் பெண்களின் இல்லங்களின் கதவுகளைத் தட்டி கல்வியின் முக்கியத்துவத்தை எடுத்துரைத்தனர்.

பண்டித ரமாபாய், டி.கே.கார்வே ஆகியோரின் சீரிய முயற்சியால் பெண் கல்வி மேலும் பரவலானது. இருபதாம் நூற்றாண்டில் இந்தியப் பெண்களின் வாழ்வில் நிகழ்ந்த மாபெரும் மாற்றங்களுக்கு இந்தக் கல்வி முயற்சிகள்தான் திறவு கோலாக இருந்தது.

மிகக் குறுகிய காலத்திலேயே இந்தியப் பெண்களுக்கு கல்வியின் பயனான விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. தங்களின் சூழ்நிலை, அதில் நிலவிய கடினமான மூட நம்பிக்கைகள், தங்களை முன்னேற விடாமல் கட்டி வைத்திருக்கும் தளைகள் ஆகியவற்றை அடையாளம் கண்டு கொண்டார்கள். இந்த சூழ்நிலையில் இந்திய தேசிய இயக்கத்தின் வளர்ச்சியும் காந்தியின் அரசியல் பிரவேசமும் மேலும் பல மாற்றங்களை விரைவுபடுத்தியது. தம்மைச் சுற்றியுள்ள சமூக பொருளாதார அரசியல் தளங்களைப் பெண்கள் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினார்கள்.

---

2. Geraldine Forbes, *Women in Modern India*, p.32.

தேசத்தின் உரிமைக்குரல் முழக்கங்களை கேட்டபோது இந்தியப் பெண்கள் தங்கள் உரிமைக் குறித்தும் உணர்வு வரப்பெற்றார்கள். அன்னிபெசன்ட் அம்மையார் என்ற ஐரிஷ் பெண்மணியின் வருகையும் அவர் இந்தியப் பெண்களை ஒருங்கிணைக்கச் செய்த முயற்சியும் ஒரு தொடக்கமாக இருந்தது என்று கூறலாம். 1919 முதல் 1927 வரையிலான காலகட்டத்தில் நாடு முழுவதிலும் பெண்களுக்கான இயக்கங்கள் தோன்றின. இந்திய மாதர் சங்கம் (WIA), அகில இந்தியப் பெண்கள் மாநாடு (AIWC), இந்தியப் பெண்களுக்கான தேசிய கவுன்சில் (NCWI) ஆகிய அமைப்புகள் உருவாகின.

காந்தியின் அரசியல் கொள்கையும் இந்தியப் பெண்களின் ஆர்வத்தைத் தூண்டியது. தென்னாப்பிரிக்காவில் இருந்த காலத்திலேயே பெண்களையும் பொது வாழ்க்கைக்குத் தூண்டியவர் காந்தி. இந்திய மக்கள் தொகையில் சரிபாதியை வீட்டிலே பூட்டிவைத்துவிட்டு நாட்டின் விடுதலையை சாதிக்க முடியாது என்பது அவர் கருத்து. மேலும் அகிம்சை வழியிலான அவரது போராட்டம் பெண்களையும் கலந்துகொள்ளத் தூண்டுவதாக இருந்தது. இத்தகைய சூழ்நிலைகளில் இந்தியப் பெண்கள் பொது வாழ்க்கைக்குத் தயாரானதன் அடையாளம்தான் மேற்கூறிய இயக்கங்களின் தொடக்கம்.

இந்திய விடுதலைப் போராட்டத்தை ஆதரித்தப்படியே தங்களுக்கான தனிப்பட்ட சமுதாயப் பிரச்சனைகளில் மாதர் இயக்கங்கள் கவனம் செலுத்தின. இந்த இயக்கங்களில் சென்னை மாகாணத்தில் இயங்கிய இந்திய மாதர் சங்கம் ஒரு முக்கிய இடத்தை வகித்தது. இந்த இயக்கத்தின் தோற்றம் மற்றும் செயல்பாடுகள் குறித்து ஏற்கனவே பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன என்றாலும் இந்த இயக்கத்தின் வரலாற்று முக்கியத்துவம் குறித்து விரிவான ஆய்வு ஏதும் இதுவரை மேற்கொள்ளப்படவில்லை.

நாடு சுதந்திரம் அடைந்ததற்குப் பிறகு தமிழ்நாட்டில் மிகப்பெரிய அளவில் இயங்கிவரும் பெண்கள் அமைப்பான ஜனநாயக மாதர் சங்கமும் பெண்கள் முன்னேற்றத்துக்கு மிகப்பெரிய அளவில் பங்களிப்பை செய்துள்ளது.

இந்திய மாதர் சங்கம் மற்றும் ஜனநாயக மாதர் சங்கத்திற்கு சில அடிப்படையான ஒற்றுமைகளும் அதே சமயம் சில கருத்தியல் வேற்றுமைகளும் இருக்கிறது. இந்த ஒற்றுமை வேற்றுமைகளே இந்த இரண்டு இயக்கங்களையும் குறித்த ஆய்வுக்கு கனம் சேர்க்கிறது.

இந்திய மாதர் சங்கம் பெரும்பாலும் சுயமாக இயங்கியது. அதேசமயம் இந்திய தேசிய இயக்கத்துடன் இணைந்து செயல்பட்டது. தேசிய இயக்கம் சார்ந்த சீர்திருத்த கருத்துக்களையே வழிமொழிந்தது. இந்திய மாதர் சங்கத்தின் அங்கத்தினர்கள் பெரும்பாலும் படித்த பெண்மணிகள். உயர் மற்றும் மத்தியதர வகுப்பைச் சார்ந்தவர்கள். அனைத்திந்திய பெண்கள் மாநாட்டின் (AIWC) ஒரு அங்கமாக இருந்ததால் நாடு முழுவதிலும் இருந்த பல்வேறு மாதர் இயக்கங்களுடன் தொடர்பு இருந்தது. பெண்களுக்கான பன்னாட்டு அமைப்புகளுடனும் தொடர்பு இருந்தது. இயக்க செய்திகளை வெளியிடுவதற்காகவும் பெண்களிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தவும் “ஸ்திரீதர்மம்” என்ற பத்திரிகையை நடத்தினார்கள்.

ஜனநாயக மாதர் சங்கம் நாடு சுதந்திரமடைந்த பிறகு உருவான மாதர் இயக்கம். தேசம் முழுக்க சுதந்திர போராட்டக் காலத்திலேயே பரவியிருந்த இடதுசாரி இயக்க சிந்தனையின் விளைவாக கம்யூனிஸ்ட் கட்சிகள் உருவாயின. இடதுசாரி கொள்கைகளால் ஈர்க்கப்பட்ட பெண்கள் இந்தக் கட்சிகளில் இணைந்து தீவிரமாக பணியாற்றிக் கொண்டிருந்தனர். எழுபதுகளில் இவர்கள் தனித்த அமைப்பாக இயங்க முடிவெடுத்தனர். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பெண்கள் பிரிவாக உருவான ஜனநாயக மாதர் சங்கம் பல மாறுபட்ட கொள்கைகளைக் கொண்டிருந்தது. அமைப்பிலுள்ள குறைகளை சுட்டிக்காட்டி ஆக்கப்பூர்வமாக இயங்கி வருகிறது. மனித உரிமை பிரச்சனைகளை முன்னிறுத்தி போராடி வருகிறது. இதன் அங்கத்தினர்கள் பெரும்பாலும் விவசாய கூலிகளும் தொழிலாளர்களும் ஆவர். மத்தியதர உயர் வகுப்புப் பெண்களும்கூட சில முக்கியப் பொறுப்புகளை வகித்தனர். தமிழ்நாட்டின் எல்லைக்குட்பட்டு மட்டும் இயங்காமல் அகில இந்திய அளவில் செயல்பட்டு பெண்களுக்கான பன்னாட்டு மாநாடுகளில் தொடர்ந்து பங்கேற்று வருகின்றனர். தங்களது கொள்கை விளக்கத்திற்காகவும்

உறுப்பினர்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தவும் "மகளிர் சிந்தனை" என்ற மாதப் பத்திரிகையை தொடர்ந்து நடத்தி வருகின்றனர்.

இரு வேறுபட்ட இயக்கங்களாக இருந்த போதிலும் இரண்டுமே இந்தியப் பெண்களின் வளர்ச்சியில் மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கின்றன. சமூகவியல் வரலாற்றில் பெண்கள் முன்னேற்றம் என்ற அடிப்படையில் இரண்டு இயக்கங்களுமே வெவ்வேறு விதமான பங்களிப்பை செய்திருக்கின்றன.

எத்தனையோ மாதர் இயக்கங்கள் இருக்கும்போது இந்த இரண்டு இயக்கங்களை மட்டும் தேர்வு செய்ய வலிமையான காரணங்கள் இருக்கிறது. தமிழ்நாட்டின் அரசியல் சமூக வரலாற்றை ஆய்வு செய்யும் எவரும் இந்த இரண்டு இயக்கங்களையும் புறக்கணிக்க முடியாது. மற்ற இயக்கங்களைவிட இவை மிக வலிமை பொருந்தியதாக உள்ளது. இவற்றின் வீச்சும் தாக்கமும் இவற்றின் தகுதியை முன்னிலைப்படுத்துகிறது. இந்திய மாதர் சங்கத்தை தலைமையேற்று நடத்தியவர்கள் தேச விடுதலைப் போராட்டத்திலும் மிகப் பெரிய பங்கு வகித்த பெண்மணிகள். அங்கத்தினர்களின் எண்ணிக்கை குறைவாக இருந்தாலும் தலைமை ஏற்றவர்களின் தகுதியும் தீவிர உணர்வும் இயக்கத்திற்கும் வலிமை சேர்த்தது. ஜனநாயக மாதர் சங்கம் அடிமட்டத்து உழைக்கும் பெண்களை முன்னிலைப்படுத்தி இயங்குகிறது. அங்கத்தினர்களின் எண்ணிக்கையே இதற்கு பலமாக இருக்கிறது. இடதுசாரி கொள்கையுடைய பெண்களின் தலைமை இதற்கான தனிச்சிறப்பு.

தமிழக பெண்களின் சமூக அந்தஸ்து பற்றியும் அவர்கள் எதிர்கொள்ளும் பிரச்சனைகள் பற்றியும் மாதர் அமைப்புகளைப் பற்றியும் சில புத்தகங்களும் ஆய்வுகளும் ஏற்கனவே வெளிவந்துள்ளன. விமலா பரூக்கி, ரேணு சக்கரவர்த்தி எழுதிய கம்யூனிசமும் பெண்களும் (இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ் மாநிலக் குழு, சென்னை, 1976), Geraldine Forbes எழுதிய Women in Modern India (Cambridge University Press, U.K. 1998) என்ற இரண்டு நூல்களிலும் இந்திய வரலாற்றில் காலனி ஆதிக்க காலத்தில் பெண்களின் நிலையும் பிரச்சனைகளும் மிகவும் ஆழமான முறையில் விவாதிக்கப்பட்டுள்ளது என்றாலும் அதில் தமிழகப்

பெண்களின் நிலைமைகள் மற்றும் பங்களிப்பு குறித்து மிகக் குறைவான தகவல்களே இடம் பெற்றுள்ளன. விமலா பரூக்கி, ரேணு சக்ரவர்த்தி எழுதிய கம்யூனிசமும் பெண்களும் என்ற நூல் கம்யூனிச கொள்கையின் அடிப்படையில் சுதந்திர இந்தியாவில் பெண்களின் எழுச்சியை விவரிக்கிறது.

தமிழகப் பெண்களின் இன்றைய வளர்ச்சியை புரிந்துகொள்ள வேண்டும் என்றால் காலனி ஆதிக்க காலத்திலிருந்து இன்றுவரை தங்களுக்கான உரிமையாக எவற்றை கருதினார்கள், எவற்றிற்கெல்லாம் முன்னுரிமை தந்தார்கள் என்பது குறித்து ஆய்வுகள் எதுவும் முழுமையாக இதுவரை மேற்கொள்ளப்படவில்லை.

சுதந்திரப் போராட்டத்தில் பெண்களின் பங்களிப்பு குறித்த ஆய்வுகள் நிறைய வெளிவந்திருந்தாலும் அவை பெண்களுக்கு ஏற்பட்ட அரசியல் விழிப்புணர்ச்சியை மட்டுமே மையப்படுத்துவதாக இருக்கின்றன. இந்நிலையில் பெண்களின் அரசியல் சமூக பொருளாதார மற்றும் கலாச்சார கூறுகளை உள்ளடக்கிய ஒரு முழுமையான ஆய்வின் தேவை உணரப்பட்டது. ஆகவே இந்திய மாதர் சங்கம் மற்றும் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் ஆகிய இரண்டு இயக்கங்களின் வளர்ச்சிப் படிகளின் ஊடாக பெண் விடுதலைப் போராட்ட வரலாற்றை முழுமையாக பதிவுசெய்யும் நோக்கத்துடன் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வுப் பொருள்

இரு வேறுபட்ட இயக்கங்களாக இருந்த போதிலும் இரண்டுமே இந்தியப் பெண்களின் வளர்ச்சியில் மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கின்றன. சமூகவியல் வரலாற்றில் பெண்கள் முன்னேற்றம் என்ற அடிப்படையில் இரண்டு இயக்கங்களுமே வெவ்வேறு விதமான பங்களிப்பை செய்திருக்கின்றன. இரண்டு மாதர் இயக்கங்களின் தோற்றம் மற்றும் வளர்ச்சி பற்றி விரிவாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

இரண்டு மாதர் இயக்கங்களுமே பெண்கள் முன்னேற்றத்துக்கான, பாதுகாப்புக்கான, முக்கிய சட்டங்களை முன் மொழிந்திருக்கின்றன. இவர்களின்

தொடர் போராட்டத்தால் கொண்டுவரப்பட்ட முக்கிய சட்டங்களும், சட்டத் திருத்தங்களும் விரிவாக இந்த ஆய்வில் விவாதிக்கப்பட்டுள்ளன.

தமிழகத்தின் அரசியல் சமூக சூழல் ஏனைய இந்தியப் பகுதிகளிலிருந்து மாறுபட்டது. தேசம் முழுவதும் சுதந்திரப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டுக் கொண்டிருந்தபோது தமிழகத்தில் மட்டும் ஒரு சமுதாய இயக்கம் வெகு தீவிரமாக மக்களின் கவனத்தை திசைதிருப்பிக் கொண்டிருந்தது. பெரியார் தலைமையில் இயங்கிய சுயமரியாதை இயக்கம் சமூக தளத்தில் மிகப்பெரிய அதிர்வலைகளை உண்டாக்கியது.

ஆண்–பெண் பாலின சமத்துவத்தை முன்மொழிந்த அவரது கொள்கைகளை வரவேற்று இயக்க ரீதியாக அவர் பின்னால் அணிவகுத்து நின்றவர்கள் ஏராளம். அதுவரை கட்டிகாத்து வந்த மரபுகளை தகர்க்கும் வகையில் சில அடிப்படைக் கேள்விகளை பெரியார் எழுப்பினார். இந்த சுயமரியாதை இயக்கத்தின் தாக்கத்தை இந்திய மாதர் சங்கமும், ஜனநாயக மாதர் சங்கமும் எவ்வாறு எதிர்கொண்டன அல்லது பிரதிபலித்தன என்பதும் ஒரு முக்கியமான கேள்வியாகும். இவ்வாறாக பல்வேறு பரிணாமங்களை வெளிப்படுத்தும் முயற்சியாக இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வின் நோக்கம்

தமிழகத்தின் முக்கியமான இரண்டு மாதர் அமைப்புகளைப் பற்றி ஆராயும் "இந்திய மாதர் சங்கம், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் – ஒரு வரலாற்று ஆய்வு (குறிப்பாக தமிழ்நாடு தொடர்பாக)" என்ற தலைப்பிலான இந்த ஆய்வு கீழ்க்கண்ட நோக்கங்களை கொண்டதாகும்.

- காலனி ஆதிக்க காலத்தில் பெண்களின் நிலை குறித்து ஆராய்தல், இந்திய தேசிய எழுச்சியின்போது பெண்கள் பொது வாழ்க்கைக்கு தயாரான சூழ்நிலைகளை விளக்குதல்.

- மாதர் இயக்கங்களின் முயற்சியால் காலனி ஆதிக்க காலத்தில் ஏற்பட்ட சட்ட ரீதியான மாற்றங்களை ஆய்வு செய்தல்.
- சுதந்திர இந்தியாவிலும் பெண்கள் தங்களுக்கான உரிமைகளுக்காக போராட நேர்ந்த சூழ்நிலைகளை விளக்குதல்.
- இடதுசாரி இயக்கத்தின் எழுச்சியில் அதனை சார்ந்த பெண்ணுரிமை போராட்டங்கள் குறித்து ஆய்வு செய்தல்.
- பெண்களின் உரிமை மற்றும் பாதுகாப்புக்காக கொண்டுவரப்பட்ட பல முக்கிய சட்டங்களையும் சட்டத் திருத்தங்களையும் விவாதிப்பது.

## ஆய்வின் எல்லை

“இந்திய மாதர் சங்கம், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் – ஒரு வரலாற்று ஆய்வு (குறிப்பாக தமிழ்நாடு தொடர்பாக)” எனும் தலைப்பில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் இந்தியப் பெண்களிடம் ஏற்பட்ட விழிப்புணர்வும் கல்வியின் விளைவாக ஏற்பட்ட துணிவும் எவ்வாறு பல சட்டரீதியான மாற்றங்களுக்கு வழி வகுத்தது என்பது விரிவாக ஆராயப்பட்டுள்ளது. இந்த விழிப்புணர்ச்சியின் தொடர்ச்சியாக சுதந்திர இந்தியாவிலும் இடதுசாரி இயக்கத்தின் தாக்கத்துடன் பெண்கள் தங்களுக்கான உரிமை போராட்டத்தை எவ்விதம் நடத்தினார்கள் என்பதை சமகாலம் வரை பதிவு செய்ய குறிப்பிட்ட வரையறைக்குள் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. இந்திய மாதர் சங்கம் மற்றும் ஜனநாயக மாதர் சங்கத்தின் செயல்பாடுகளும் அவற்றின் தாக்கங்களும் இயக்க ரீதியாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

## ஆய்வின் அணுகுமுறை

வரலாற்று ஆய்வாளர் டேவிட் ஆக்டர் கூறுவது போல் “ஒரு பகுதியின் அரசியல் தன்மைகளைச் சரிவர தெரிந்து கொள்ள பகுப்பாய்வு முறை அவசியமாகின்றது”. மாதர் இயக்கங்களின் தொடர் முயற்சியால் பெண்களின் உரிமையை நிலைநாட்டும் பல சட்டங்கள் உருவாயின. அவர்களின் உரிமை

போராட்டங்கள் காலனி ஆதிக்க காலத்தில் தேசியவாத எல்லைக்கு உட்பட்டே செயல்பட்டது. சுதந்திரத்திற்கு பின்பு இடதுசாரி இயக்க சிந்தனையுடன் தோன்றிய ஜனநாயக மாதர் சங்கம் மனித உரிமை குறித்த விழிப்புணர்வுடன் ஒரு புதிய பரிமாணத்தை எட்டியது. இவ்வாய்வேட்டிற்கான அடிப்படை ஆராய்ச்சி முறைகளாக வரலாற்று முறை, தர்க்க நெறி முறை, விளக்க முறை, தொகுப்பு முறை மற்றும் பகுப்பாய்வு முறைகள் பின்பற்றப்படுகின்றன.

**ஆய்விற்கான ஆதாரங்கள்**

"இந்திய மாதர் சங்கம், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் – ஒரு வரலாற்று ஆய்வு (குறிப்பாக தமிழ்நாடு தொடர்பாக)" என்னும் ஆய்வேட்டை எழுதுவதற்கு முதல்நிலை மற்றும் இரண்டாம் நிலை சான்றுகள் சேகரிக்கப்பட்டு அதன் அடிப்படையில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

இந்த ஆய்வுக்கு முதன்மை சான்றுகளாக, மத்திய அரசு வெளியிட்ட அறிக்கைகள், அரசு ஆணைகள், நீதிமன்றத் தீர்ப்புகள், இந்திய மாதர்சங்கத்தின் மாநாட்டுத் தீர்மானங்கள், ஜனநாயக மாதர் சங்கத்தின் மாநாட்டுத் தீர்மானங்கள், ஆவணப்படம் ஆகியவை பயன்படுத்தப்பட்டுள்ளன.

இந்திய மாதர் சங்கத்தை நீண்ட காலமாக தலைமை ஏற்று நடத்திவரும் சரோஜினி வரதப்பன், ஜனநாயக மாதர் சங்கத்தின் முக்கிய பொறுப்பாளர்களான உ.வாசுகி, பாலபாரதி எம்.எல்.ஏ., கல்வியாளர் வசந்தி தேவி ஆகியோரின் நேர்காணல்களும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இரண்டாம் நிலை சான்றுகளாக அவள்விகடன், இலட்சிய பெண், கல்கி, கிருஹலட்சுமி, குமுதம், சிந்தாமணி, புதிய பார்வை, மகளிர் சிந்தனை, ஜெகன்மோகினி, ஸ்திரீ தர்மம், Women's Equality, Indian Ladies Magazine, போன்ற பெண்கள் பத்திரிகைகள் இந்த ஆய்வுக்கு உறுதுணையாக இருந்தன.

இவை தவிர குடியரசு, சுதேசமித்திரன், தினமணி, தினத்தந்தி, தீக்கதிர், Indian Express, THE HINDU, Times of India, போன்ற செய்தித்தாள்களும் ஆனந்த

விகடன், ஜூனியர் விகடன், இந்தியா டுடே, Sunday Observer, Economic and Political Weekly போன்ற மாத, வார பத்திரிகைகளும் பல்வேறு தகவல்களைத் திரட்டுவதற்கு உதவின. இந்தியாவின் சமூக வரலாற்று அரசியல் நூல்களும் பெண்களின் நிலையை ஆராயும் பல்வேறு நூல்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

"இந்திய மாதர் சங்கம், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் – ஒரு வரலாற்று ஆய்வு (குறிப்பாக தமிழ்நாடு தொடர்பாக)" என்ற தலைப்பில் மேற்கொள்ளப்பட்டுள்ள இவ்வாய்வு கீழ்க்கண்டவாறு ஐந்து இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

1. முன்னுரை
2. இந்திய மாதர் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்
3. இந்திய மாதர் சங்கத்தின் செயல்பாடுகள்
4. அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்
5. அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் செயல்பாடுகள்

முதலாவது இயலாக அமைந்துள்ள முன்னுரையில் ஆய்வு தலைப்பின் விளக்கம், ஆய்வின் நோக்கம், ஆய்வின் எல்லை, ஆய்வின் அணுகுமுறை ஆகியன பற்றி விளக்கப்பட்டுள்ளது.

இரண்டாவது இயல் இந்திய மாதர் சங்கத்தின் தோற்றம் மற்றும் வளர்ச்சி பற்றி ஆராய்கிறது. சமகாலத்தில் மூன்று முக்கிய மாதர் இயக்கங்கள் தோன்றின. இவற்றில் சென்னை மாகாணத்தில் தோன்றிய இந்திய மாதர் சங்கத்திற்கு ஒரு நீண்ட வரலாறு உண்டு. 1930களில் பெண்கள் முன்னேற்றத்தில் மிகப்பெரிய பங்கு வகித்த இந்த அமைப்பு இப்போதும் இயங்கி வருகிறது.

மூன்றாவது இயலில் இந்திய மாதர் சங்கத்தின் செயல்பாடுகள், பல்வேறு படிநிலைகள் அனைத்தும் விரிவாக விவாதிக்கப்பட்டுள்ளது. சுதந்திரப் போராட்ட இயக்கம் சார்ந்த சீர்திருத்தங்களை ஆதரித்த போதிலும் தனக்கென்று சில தனிப்பட்ட அடையாளங்களை இந்திய மாதர் சங்கம் தக்கவைத்துக்

கொண்டுள்ளது. இந்த இயக்கத்தின் முயற்சியால் பெண்களின் பிரச்சனைகளுக்கு கிடைத்த சட்டபூர்வமான தீர்வுகள் குறித்து விரிவாக எழுதப்பட்டுள்ளது.

இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தின் பின்னணியையும், அதன் பெண்கள் பிரிவாகத் தோற்றம் கொண்ட ஜனநாயக மாதர் சங்கத்தின் எழுச்சி மிக்க வரலாற்றையும் நான்காவது இயல் விரிவாக விவாதிக்கிறது. பாலின சமத்துவத்தை கம்யூனிஸ்ட் இயக்கங்கள் பொதுவாக வலியுறுத்தி வந்தாலும் அவற்றின் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் உள்வாங்கிக்கொண்டு பெண்ணிலை நோக்கில் பாட்டாளி மக்களையும் உழைக்கும் பெண்களையும் அணுகி இயக்கத்திற்கு வலிமை சேர்த்த ஜனநாயக மாதர்சங்கமும் பல்வேறு வளர்ச்சிப் படிகளை கடந்து வந்திருக்கின்றது.

சமூக அரசியல் தளத்தில் ஜனநாயக மாதர் சங்கத்தின் பங்கு கவனிக்கத்தக்கது. ஆரம்பத்தில் உழைக்கும் பெண்களை ஒருங்கிணைக்கும் முயற்சியாக செயல்பட்ட அவர்கள் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு நேரடியாக களத்தில் இறங்கி போராடி நியாயம் கேட்டபோது ஒரு புதிய பரிணாமத்தை எட்டினர். பல புதிய சட்டங்களும், சட்டத் திருத்தங்களும் இவர்களது முயற்சியால் நடைமுறைக்கு வந்தன. பால் சமத்துவம் மட்டுமில்லாமல் ஜாதி சமத்துவத்தையும் மத நல்லிணக்கத்தையும் வற்புறுத்தி பல புதிய பரிமாணங்களை பதிவு செய்தனர். இந்த இயக்கத்தின் செயல்பாடுகளை வரலாற்று ரீதியாக ஆராயும் முயற்சியாக ஐந்தாவது இயல் எழுதப்பட்டுள்ளது.

இறுதியாக, முடிவுரையில் இந்திய மாதர் சங்கம், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் ஆகியவற்றின் வரலாற்று வழி செயல்பாடுகளும் சாதனைகளும் பகுப்பாய்வு செய்யப்பட்டு பெறப்பட்ட முடிவுகள் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன.

# இந்திய மாதர் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

இந்திய மாதர் சங்கத்தின் தோற்றத்தை ஆராய்வதற்கு முன்பாக வீடே உலகமாக இருந்த இந்தியப் பெண்கள் தங்களுக்குள் ஒருங்கிணைய வேண்டிய சூழ்நிலையை ஆராய வேண்டியிருக்கிறது. இந்தியப் பெண்களின் ஒருங்கிணைப்பும் அமைப்பு ரீதியான அவர்களின் செயல்பாடுகளும் ஒரே நாளில் திட்டமிடப்பட்டு நடைபெறவில்லை. இங்கு நிலவிய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலாச்சார காரணங்களையொட்டி மெல்லமெல்ல நடந்தேறிய ஒரு நிகழ்வாகும். இந்தப் வரலாற்றுப் பின்னணியை முதலில் ஆராய்வது அவசியமாகிறது.

## மகளிர் அமைப்புகளின் தோற்றம்

பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் நிகழ்ந்த கல்வித்துறை முன்னேற்றத்தின் காரணமாக ஒரு 'புதிய பெண்' உருவானாள். அவளது உலகம் வீட்டுச்சுவர்களைத் தாண்டி விரிந்தது. லேடோ ராணி சுட்ச்சி (Lado Rani Zutshi) என்ற முன்னோடிப் பெண்மணி தன் வீட்டிலேயே ஆசிரியர்கள் மூலமாக கல்வி பயின்றார். "தன் மகள்களுக்கு கல்வி அளிக்கும் நோக்கில் **1917**ம் ஆண்டு லாகூர் மாநகரத்தில் குடியேறினார். தன்னுடைய ஆங்கில மற்றும் ஓவியக்கலை பாடங்களை தொடர்வதற்காக இளம் மகளிர் கிருஸ்தவ அமைப்பில் (YWCA) சேர்ந்தார். மாலை நேரங்களில் தன் வகுப்புக்கு மிதிவண்டியில் பயணம் செய்வார். அப்போது இம்மாதிரி பயணம் செய்த மேல்தட்டு இந்தியப் பெண்மணி ஒருவரும் அந்நகரில் இல்லை. . . . . . .அவர் லாகூரில் பெண்களுக்கான பொழுதுபோக்கு அமைப்பு ஒன்றை நிறுவினார் ; அதன் தலைமைப் பொறுப்பையும் ஏற்றார்"[1] என்று அவர் மகள் மன்மோகினி ஸெய்கள் நினைவுகூர்கிறார்.

இந்திய வரலாற்றில் முதன் முறையாக பெண்கள் தங்கள் குடும்பம் சமூக உட்பிரிவு போன்ற வட்டங்களை மீறி மற்ற பெண்களுடன் கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்ளும் வாய்ப்பு உருவானது. முதலில் ஆங்கிலத்தை தங்கள் பொது மொழியாகக் கொண்ட ஒரு குழுவாகவே அது இருந்தது. எனவே மொழி

1 . Geraldine Forbes, *Women in Modern India*, p.64.

எல்லைகளை மீறி உறவுகொள்ள முடிந்தது. அதே நேரத்தில் தாய்மொழியில் எழுதப்படிக்கத் தெரிந்த பெண்களின் எண்ணிக்கை அதிகரித்தது. அவர்களால் பத்திரிகைகளை படித்து, பெண்களின் பிரச்சனைகளை அறிந்துகொள்ள முடிந்தது. பாரம்பரிய சமூகத்தால் ஓரங்கட்டப்பட்ட இந்த இரண்டு குழுவினரும் தங்களை போன்ற பெண்களுடன் தொடர்பும் உறவும் கொள்ள முனைந்தனர். இந்திய தேசிய காங்கிரஸ், தேசிய சமுதாய மாநாடு (National Social Conference) இவற்றின் பெண்கள் துணை பிரிவுகளும் சிறிய சமூகக் குழுக்களும் உருவாயின.

இந்த அமைப்புகள் பெண்களின் கருத்து வெளிப்பாட்டுக்கு கருவிகளாய் அமைந்தன. மேலும் இவை பெண்கள் பிற்காலத்தில் அரசியலிலும், சமூக அமைப்புகளிலும் தலைமைப் பொறுப்பு ஏற்க வழிசெய்யும் பயிற்சி களங்களாக விளங்கின. இந்த அமைப்புகள் இந்திய தேசிய கட்டமைப்பில் முக்கிய பங்காற்றின. அவற்றின் அணுகுமுறை மேற்கத்திய பாணியை ஒட்டியது என்பதை மறுக்க முடியாது. எனினும் இந்தச் சூழலில் இந்த அமைப்புகள் ஆணின் துணையாக, உதவியாளராக, பாசமிக்கத் தாயாக, நாட்டுக்குப் பெருமை சேர்க்கும் குடிமகளாக பெண்ணைப் பற்றிய ஒரு நவீன பிம்பத்தை உருவாக்கின.

சென்னை மாகாணத்தில் பெண்களை ஒருங்கிணைப்பது அவசியம் என்று கருதி அதற்கு முயற்சி எடுத்துக் கொண்டவர்களில் முன்னோடியானவர் சுப்ரமணிய பாரதியார். 1918ம் ஆண்டு மே 13ம் நாள் புதுச்சேரியில் பாரதியாரின் வீட்டில் திருவிளக்குப் பூஜை ஏற்பாடு செய்யப்பட்டது. சுமார் ஏழெட்டு பெண்கள் கூடி விளக்குபூஜை முடித்து பாட்டுகள் பாடினார்கள். அதன் பிறகு வ.வே.சு. ஐயரின்[2] மனைவியாகிய பாக்கியலஷ்மி அம்மாள் உரையாற்றினார். பாரதியாரின் முயற்சியால் 'மஞ்சள் குங்குமம் கூட்டம்' என்ற பெயரில் பெண்கள் ஒன்றாகக் கூடி அரசியல், சமூகம் மற்றும் பெண்கல்வி மீதான பிரச்சனைகளை விவாதித்தனர். அத்தகைய கூட்டங்களில் பாரதியார் உணர்ச்சிபூர்வமாக உரையாற்றுவார்.[3]

2. வ.வே.சுப்ரமணிய ஐயர் மிகச் சிறந்த சுதந்திரப் போராட்ட வீரர். சிறந்த இலக்கியவாதியாகவும் அறியப்பட்டார்.

3. ம.ப.பெரியசாமித் தூரன், *பாரதியும் பெண்மையும்*, ப.167.

## ஆண்களால் நிறுவப்பட்ட பெண்கள் அமைப்புகள்

ஆரம்பகாலத்தில் பெண்கள் அமைப்புகள் சமய மற்றும், சமுதாய சீர்திருத்த இயக்கங்களில் அங்கம் வகித்த ஆண்களால் துவங்கப்பட்டன. வங்காளத்தில் பிரம்ம சமாஜத்தின் தலைவர் கேசவ சந்திரசென் இதில் முக்கிய பங்களித்தார். கல்வித் திட்டங்கள் வகுத்தார். பெண்களுக்கான பத்திரிகை ஒன்றை நடத்தினார். பாரத ஆசிரமம் என்ற அமைப்பையும் நிறுவினார். இந்த அமைப்பில் குடும்பங்கள் ஒன்றாய் வாழ்ந்து, ஆங்கில மத்திய வர்க்க வாழ்க்கை முறையை பின்பற்ற முயன்றனர். விரைவிலேயே பிரம்ம சமாஜத்தின் சில உறுப்பினர்கள் கேசபின் அணுகுமுறையை மிகுந்த பாரம்பரிய சார்புள்ளதாகக் கருதி, அவ்வமைப்பிலிருந்து விலகி சாதாரன் பிரம்ம சமாஜம் என்ற அமைப்பை உருவாக்கினர்.[4] இந்த அமைப்பின் உறுப்பினர்கள் ஆண்–பெண் சமத்துவக் குறிக்கோளை மேற்கொண்டு, தங்கள் குடும்பங்களை சார்ந்த பெண்களுக்காக புதிய அமைப்புகளை உருவாக்கினர்.

மும்பையில் பிரார்த்தன சமாஜம் இந்த பணியை மேற்கொண்டது. ஆரம்பம் முதல் இந்த அமைப்பில் ஈடுபாடு கொண்ட ஆண்கள், சமூகச் சீர்திருத்தத்திலும் பெண்கள் மேம்பாட்டிலும் அக்கறை காட்டினர். இப்பணியில் ஜி.ஆர்.பண்டார்க்கர், நாராயண் கணேஷ் சந்தவர்க்கர், எம்.ஜி.ரானடே ஆகிய மூவரின் பங்கு குறிப்பிடத்தக்கது. 1882ம் ஆண்டு பண்டித ரமாபாய் சரஸ்வதி நாடு திரும்பியபோது, நீதிபதி ரானடேயும், அவரது நண்பர்களும் பெண்களின் ஒட்டுமொத்த முன்னேற்றத்தையும் அறிவு வளர்ச்சியையும் குறிக்கோள்களாகக் கொண்ட ஆரிய மகிள சமாஜம் என்ற அமைப்பை நிறுவ பண்டித ரமாபாய்க்கு உதவிகரம் நீட்டினர்.

1885ல் இந்திய தேசிய காங்கிரஸ் துவங்கப்பட்டபோது எம்.ஜி.ரானடே என்பவர் சமூகக் கேள்விகளையெல்லாம் தனிக் கூட்டத்தொடர் அமைத்து ஆலோசிக்க வேண்டும் என்று கூறினார். டிசம்பர் 1887ல் இந்திய தேசிய சமூக மாநாடு ஒன்று ராஜா டி.மாதவ்ராவ் என்பவர் தலைமையில் ஆரம்பிக்கப்பட்டது. பெண்களுக்காக சேவை செய்வதே அதன் கொள்கையாக இருந்தது. இந்திய

4. F.Max Muller, *Rammohan to Ramakrishna*, p.69.

தேசிய சமூக மாநாடு, நாட்டின் பல பகுதிகளில் வருடாந்திர மாநாடுகள் நடத்தியது. சமுதாயத்தில் பெண்களின் அந்தஸ்தை உயர்த்துவதற்காகப் பல அத்தியாவசிய வழிமுறைகள் கடைபிடிக்கப்பட்டன. இந்த மாநாடு உள்நாட்டு அமைப்புகளை வலுப்படுத்துவதற்காக நடத்தப்பட்டது. அரசியலும், சமூகச் சீர்திருத்த இயக்கமும் சமமான முக்கியத்துவம் கொண்டவை. ஆகையால் இரண்டும் ஒரே சீராக செயல்பட வேண்டும் என்று எம்.ஜி.ரானடே கூறினார்.[5] 1917 வரை இந்த மாநாடு பரவலாகப் பல சீர்திருத்தச் சேவைகளை மேற்கொண்டது.

நீதிபதி ரானடேயின் மனைவி ரமாபாய் இந்த அமைப்பின் முதுகெலும்பாய் விளங்கினார். புதிதாக கல்வியறிவு பெற்ற பெண்களுக்கு உதவும் வகையில் இணை அமைப்பை நிறுவி வாராந்திர விவாதங்களுக்கும், நட்புவளர்ச்சிக்கும் வழிவகுத்தார். ஆரிய மகிள சமாஜத்தின் பார்வையில் பெண் என்பவள் ஒரு திறமையான குடும்பத்தலைவியாகவும், வெள்ளம், பஞ்சம், தொற்றுநோய்கள் இவற்றால் ஏற்படும் அவசரநிலைக் காலங்களில் உதவ முன்வரும் சமூக ஜீவியாகவும் விளங்கவேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது.

சீர்திருத்தவாதிகள் தேசிய சமூக மாநாட்டுடன் இணைந்து 1904ல் பெண்களிடையே ஒரு தொடர்பை ஏற்படுத்துவதற்காக 'பாரத மகிள பரிஷத்' என்ற அமைப்பை நிறுவினர். பெண்கல்வியை பரப்புவதே இந்த அமைப்பின் முக்கிய குறிக்கோளாக இருந்தது. இந்தியப் பெண்களுக்குக் கல்வி போதிப்பதற்காகப் பல பாடப்புத்தகங்களை வெளியிட முடிவெடுத்தனர். இந்த அமைப்பு பெண்களால் தயாரிக்கப்பட்ட கைவினைப் பொருட்களை விற்பதற்காகப் பல மையங்களை அமைத்தது.

பாரத மகிள பரிஷத்தின் முதல் கூட்டம் நடந்த அரங்கில் இருநூறு பெண்கள் கூடியிருந்தனர். பெண்களால் கட்டமைக்கப்பட்ட இந்தக் கூட்டத்தில் ஆண்களுக்கு அனுமதியில்லை. கூட்டம் மராத்தி, குஜராத்தி மொழிகளில் பிரார்த்தனையுடன் துவங்கியது. லேடி பால்சந்திரா தலைமை வகித்தார். ரமாபாய் ரானடே முதன்மை உரை நிகழ்த்தினார். பெண்கள் ஆண்களுடன் இணைந்து

5. Geraldine Forbes, *Opcit,* p.66.

நாட்டின் புனரமைப்புக்காக உழைக்க வேண்டும் என அறைகூவல் விடுத்தார். தங்கள் ஓய்வு நேரங்களில் சமூகத் தன்னார்வ பணிகள் செய்ய வலியுறுத்தினார். ஆதரவற்றோருக்கு பாடம் கற்பித்தல், பெண்கள் பள்ளிகளை மேற்பார்வைசெய்தல், கைம்பெண்கள் கண்ணியமான வேலைவாய்ப்பு பெற உதவுதல் போன்றவை இப்பணிகளின் சில கூறுகள். பிறகு திருமதி.அப்பாஸ்தியாப்ஜி முஸ்லிம் பெண்களின் கல்விநிலை குறித்து உரையாற்றினார். அதைத் தொடர்ந்து ஈகை, சமூக சேவை குறித்த உரைகள் நிகழ்த்தப்பட்டன. மருத்துவ உதவி, குடும்ப வாழ்க்கை, குழந்தைத் திருமணம், குழந்தைகள் நலம் போன்ற கருத்துகளில் பொது விவாதம் நடைபெற்றன.[6]

பிந்தைய ஆண்டுக் கூட்டங்களில் முந்நூறு பெண்கள் பங்கேற்றனர். சில நேரங்களில் எழுநூறு பேர் கூடினர். பரிஷத் கூட்டங்களில் விவாதிக்கப்பட்ட பிரச்சனைகளும் நிகழ்த்தப்பட்ட உரைகளும் தேசிய சமுதாய மாநாட்டில் (National Social Conference) நிகழ்த்திய உரைகளிலிருந்து பெரிதும் மாறுபடாமல் இருந்தபோதிலும், பெண்கள் மட்டுமே தங்கள் கூட்டங்களில் பங்கேற்பதன் முக்கியத்துவத்தை அமைப்பாளர்கள் உணர்ந்தனர். இந்தக் கூட்டங்களில் பெண் கல்வி, குழந்தைத் திருமணம், வரதட்சணை, கைம்பெண் துயர் போன்ற சமூகத் தீமைகளை ஒழித்தல் போன்றவை முக்கிய இடம்பெற்றன. அதன் அடிப்படையில் பெண்கள் எவ்வாறு பணியாற்ற வேண்டும் என்பது குறித்து வலுவான முடிவுகள் எழவில்லை. பொதுவாக இந்தக் கூட்டங்களில் பங்கேற்ற பெண்கள் தங்கள் பிரச்சனைகள் குறித்த விழிப்புணர்வைப் பெற ஆர்வம் காட்டினர்.

இந்த அமைப்புகளின் பணிகள் குறித்த விழிப்புணர்வு வளரவளர அவை போன்ற புதிய அமைப்புகள் உருவாக அது உந்துசக்தியாய் விளங்கியது. பின் நாட்களில் தேசிய அளவில் நிறுவப்பட்ட பெண்கள் அமைப்புகளில் முக்கிய பங்காற்றிய பேகம் ஜஹன்னாரா ஷா நவாஸ் (Begum Jahan Ara Shah Nawaz) முதலில் சேர்ந்த பெண்கள் குழு தனது மாமா ஷா தீன் (Shah Din) என்பவரின் முயற்சியால் உருவானது என்று கூறினார். லாகூரில் நடந்த ஒரு சீக்கியர்கள்

6 . Geraldine Forbes, *Opcit,* p.67.

மாநாட்டில் இருநூறு பெண்கள், பெண்களுக்கான ஒரு உயர்நிலைப் பள்ளியை நிறுவத் தேவையான நிதியைத் திரட்டினர் என்ற செய்தி ஷா தீன் (Shah Din) அவர்களுக்கு எட்டியது. முஸ்லிம் பெண்கள் பின்தங்கிவிட வாய்ப்பு உள்ளது என்ற அச்சத்தின் அடிப்படையில் அவர் தன் குடும்பப் பெண்களை மாதம் இருமுறை சந்திக்கவும், பெண்கல்வி, சமூகச் சீர்திருத்தம் குறித்து கருத்து பரிமாறிக் கொள்ளவும் ஏற்பாடு செய்தார். பிரச்சனைகள் குறித்து கட்டுரைகள் எழுதுவது, அவற்றை கூட்டங்களில் விவாதிப்பது, அண்மையில் உள்ள கிராமங்களில் வசிக்கும் ஏழைப் பெண்களிடையே சமூகச் சேவை செய்வது என்று செயல்படத் தொடங்கினார்கள். இந்த அனுபவத்தின் அடிப்படையில் ஒரு பெரிய நிறுவனத்தை உருவாக்க முடிவுசெய்தனர். இதன் விளைவாக அஞ்சுமன்–இ–கவாட்டின்–இ–இஸ்லாம் (Anjuman-e-Khawatin-e-Islam) என்ற முஸ்லிம் பெண்கள் நிறுவனம் பிறந்தது. பேகம் ஷா நவாஸின் தாயார் அமிர்–உன்–நிஸா இந்த அமைப்பின் நிறுவனராக பஞ்சாப் மாநிலத்தில் பொறுப்பேற்றார். 1915 அளவில் மியான் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் அகில இந்திய முஸ்லிம் பெண்கள் மாநாட்டில் (All India Muslim Women's Conference) முக்கியப் பங்காற்றினர்.[7]

ஆண்களின் உந்துதலிலும் வழிகாட்டுதலிலும் தோன்றிய பெண்களுக்கான அமைப்புகள் பெண்களின் கல்வியிலும், பொதுப்பணியில் அவர்களுக்கு முதல் அனுபவத்தை அளிப்பதிலும் அரிய பங்களிப்பைச் செய்தன. அதே நேரத்தில் சில இடையூறுகளையும் தோற்றுவித்தன. குறிப்பாக, ஆண் சீர்திருத்தவாதிகள் குடும்ப அமைப்பையே பெண்கள் உலகமாகக் கருதினர். சுகாதாரம், குழந்தை வளர்ப்பு முதலிய துறைகளில் விஞ்ஞான அணுகுமுறைகளை தம் வீட்டுப் பெண்கள் தெரிந்துக்கொள்ள வேண்டும் என்று அவர்கள் விரும்பினர். வீட்டு எல்லையைத் தாண்டிய களங்களில் தங்கள் மனைவியர் பணி செய்வதை வரவேற்றனர். நலிந்தோருக்கு உதவுதல், பேரழிவுச் சூழலில் சமூகப்பணியாற்றுதல் போன்றவை இந்தப் பணியின் முக்கிய அம்சங்கள். இந்தக் கூட்டங்களில் பங்கேற்கும்பொழுது, தற்காலிகமாகவேனும் இப்பெண்கள் குடும்பத்திலுள்ள முதியப் பெண்களின் ஆதிக்கத்திலிருந்தும் அவர்களால் ஏற்படும் பாதிப்புகளிலிருந்தும் விடுபட்டு, ஒரு

7. Geraldine Forbes, *Opcit,* p.68.

புதிய சூழலில் இயங்க முடிந்தது. இந்தச் சூழலில் தங்கள் கல்வியறிவைப் பெருக்கிக் கொள்ளவும், நட்பு வட்டத்தை விரித்துக் கொள்ளவும், பொதுப்பணி கூட்டு முயற்சிகளில் ஈடுபடவும் இப்பெண்களுக்கு வாய்ப்புகள் கிடைத்தன.

சுதந்திரமாக செயல்படத் துணிந்தபோதுதான், ஆண்களினால் வரும் இடையூறுகளை அவர்களால் உணர முடிந்தது. சமயச் சீர்திருத்த முயற்சிகளும், சமூக அமைப்புகளும் பெண்கள் எதிர்கொள்ளும் பிரச்சனைகளை ஆண் தலைவர்களின் பார்வையில் அணுகின. பெண்கள் தாங்களாகவே இனங்கண்ட பெண்சார்ந்த பிரச்சனைகளைத் தீர்ப்பதில் ஆண்கள் இயல்பாக உதவவில்லை.

பிரிட்டிஷ் அரசின் கல்விக்கொள்கையும் பெண்கள்மீது உண்மையான அக்கறை கொண்டதாக இல்லை என்பதை நிரூபித்த சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. தன் பதினோறாம் வயதில் தாதாஜி பிக்காஜிக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்ட ருக்மாபாய், திருமணத்துக்குப் பின்னும் தன் தந்தை வீட்டிலேயே வசித்து வந்தாள். கல்வியைத் தொடர்ந்து மெட்ரிகுலேஷன் தேர்வில் தேர்ச்சி பெற்றாள். தாதாஜி அவளைத் தன்னுடன் வாழவேண்டும் என்று வற்புறுத்தியபோது மறுத்தாள். திருமண வாழ்வு உரிமை கோரி தாதாஜி தொடர்ந்த வழக்கில் ருக்மாபாய் வென்றாள். தாதாஜி மேல்முறையீடு செய்ததன் அடிப்படையில், நீதிமன்றம் அவளை கணவனுடன் வாழவேண்டும் அல்லது சிறைத் தண்டனை அனுபவிக்க வேண்டும் என்று தீர்ப்பளித்தது. பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துப் போர்க்கொடி தூக்கிய திலகர் இத்தீர்ப்பை, தர்மசாஸ்திரங்களைக் காப்பதாகக் கூறி ஆதரித்தார். ரானடேயும் மற்ற சீர்திருத்தவாதிகளும் இந்த வழக்கை மக்கள் மன்றத்துக்குக் கொண்டுசெல்லும் நோக்கத்துடன் ருக்மாபாய் பாதுகாப்பு கமிட்டியை நிறுவினர். "அரசாங்கம் பெண்கல்விக்கும் விடுதலைக்கும் ஆதரவு தெரிவிக்கிறது. ஆனால் ஒரு பெண் அடிமையாய் வாழ மறுக்கும்போது, அரசு அவளது உத்வேகத்தை நசுக்குகிறது. அரசாங்கச் சட்டம் அவளது அடிமைச் சங்கிலியை உறுதியாக்குகிறது" என்றார் பண்டித ரமாபாய். இந்த வழக்கில் ஒரு சிறப்பு மேல்முறையீடு விக்டோரியா மகாராணிக்கு சமர்ப்பிக்கப்பட்டதன் அடிப்படையில் அவர் ருக்மாபாயின்

திருமணத்தை ரத்து செய்து ஒரு அரசாணையைப் பிறப்பித்தார்.[8] இதுவே ருக்மாபாயைச் சிறையிலிருந்து காப்பாற்றியது. பிறகு ருக்மாபாய் இங்கிலாந்து சென்று மருத்துவக் கல்வி பயின்று தாய்நாடு திரும்பி பூனா நகரிலுள்ள ஒரு இந்து மருத்துவமனையின் தலைமைப் பொறுப்பை அடைந்தார். இந்த வழக்கிலிருந்து ஒன்று தெளிவாயிற்று. பெண்கல்விக்கு ஆதரவாக குரல் எழுப்பும் காலனி ஆட்சியாளர்கள், பெண்கள் தந்தைவழிச் சட்டத்தை மீற முயலும்போது, இந்த முயற்சிகளுக்குத் துணைபோகமாட்டார்கள் என்பதை இச்சம்பவம் நிரூபித்தது.[9]

## பெண்களால் நிறுவப்பட்ட முன்னோடி மாதர் அமைப்புகள்

தங்களுக்கான ஓர் அமைப்பை பெண்களே நிறுவிய பிறகுதான், பெண்கள் தங்களுடைய தேவைகளை வரையறை செய்வதிலும், தீர்வுகளைக் கட்டமைப்பதிலும் உரிய செயல்பாடுகளை மேற்கொள்வதிலும் ஈடுபட முடிந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பல பெயர்களைத் தாங்கி பெண்கள் அமைப்புகள் இந்தியா முழுவதிலும் தோன்றின. இந்திய தேசிய சமுதாய மாநாட்டின் (Indian National Social Conference) அங்கமாகப் பெண்கள் கூட்டங்கள் நடத்தப்படுவதை எதிர்த்த சரளாதேவி சௌதுராணி, இந்தியப் பெண்களுக்கான ஒரு நிரந்தரக் கூட்டமைப்பு தேவை என்ற கோரிக்கையை வைத்தார். பெண்களிடையே எழுந்த வரவேற்பை பயன்படுத்தி, இத்தகைய முதல் கூட்டத்துக்கு சரளாதேவி திட்டமிடத் தொடங்கினார். பாரத் ஸ்திரீ மஹாமண்டல் (Bharat Stree Mahamandal) என்ற பெயர் கொண்ட அவரது அமைப்பின் முதல் கூட்டம் அலகாபாத் நகரில் 1910ம் ஆண்டு நடந்தது.[10]

பெண்கல்வியைப் பரப்பும் நோக்கத்துடன் பாரத் ஸ்திரீ மஹாமண்டல் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் கிளைகள் நிறுவத் திட்டமிட்டது. "இந்திய நாட்டுப் பெண்களிடையே, இன, சமய, வகுப்பு, கட்சி வேறுபாடின்றி ஒட்டுமொத்த முன்னேற்றத்துக்கு வழிகோலும் வகையில்", லாகூர், அலகாபாத், டில்லி, கராச்சி,

---

8. ஞாநி, *நெருப்பு மலர்கள்,* ப.31.
9. Geraldine Forbes, *Opcit,* p.70.
10. *Ibid..*

அமிர்தசரஸ், ஹைதராபாத், கான்பூர், பங்குரா, ஹஸாரிபாக், மித்னாபூர், கல்கத்தா நகரங்களில் கிளைகள் தோன்றின.

அயர்லாந்து நாட்டுப் பெண்ணியவாதியும், பிரம்மஞான ஈடுபாடு உள்ளவரும், இசையாளருமான மார்கரெட் கசின்ஸ் இந்தியாவுக்கு 1915ம் ஆண்டு வந்தார். விரைவிலேயே பிரம்மஞான சபையின் ஒரு அலுவலர் அவரைச் சந்திக்க சில பெண்களை அழைத்தார். இந்த சந்திப்புக்குப் பின் சிங்கள பிரம்மஞானவாதியும் ஜீனராஜதாஸாவின் மனைவியுமான டோரதி ஜீனராஜதாஸாவை சந்தித்து ஒரு பெண்கள் அமைப்பை நிறுவுவதைப் பற்றி ஆலோசனை செய்தார். சென்னை ராஜதானியில் ஏற்கனவே பல பெண்கள் தமிழ் மாதர் சங்கத்தில் (Tamil Ladies Association) உறுப்பினர்களாய் இருப்பதுடன் ஆங்கிலேயப் பெண்களுடன் இணைந்து இந்திய தேசிய சங்கத்தில் (National Indian Association) அங்கம் வகித்தனர்.

1917ல் இந்திய மாதர் சங்கம் தொடங்கப்பட்டது. இந்த அமைப்பில் இந்தியர்களும் ஐரோப்பியர்களும் உறுப்பினர்கள் ஆகலாம் என்பதால் இந்திய மாதர் சங்கம் (Women's Indian Association) என்று பெயரிடப்பட்டது. சென்னை அடையாரில் தொடங்கப்பட்ட இந்த அமைப்பில் அன்னிபெசன்ட் அம்மையார் முதல் தலைவராகப் பொறுப்பேற்றார். கௌரவச் செயலாளர்களாக மார்கரெட் கசின்ஸ், டோரதி ஜீனராஜதாஸா, மாலதி பட்வர்தன், அம்மு சுவாமிநாதன், தாதாபாய் ஆகியோர் முக்கிய பொறுப்பேற்றனர்.

இந்திய மாதர் சங்கத்தை நிறுவியபிறகு கிளை அமைப்புகளை உருவாக்குவதில் டோரதி ஜீனராஜதாஸா முனைப்பாக இருந்தார். சென்னை மாகாணத்திலுள்ள பிரம்மஞான சபையின் கிளைச் செயலாளர்களுடன் தொடர்பு கொண்டு இந்திய மாதர் சங்கத்தின் கிளைகள் இந்திய மறுமலர்ச்சிக்கு எவ்வாறு உதவும் என்பதை விளக்கினார். இந்தக் கடிதங்களுக்கு மிகவும் உற்சாகமான வரவேற்பு இருந்தது.[11]

---

11. Geraldine Forbes, *Opcit,* pp.72-73.

## இந்திய மாதர் சங்கத்தின் ஆரம்ப குறிக்கோள்கள்

1. மாதர்களுக்கு பாரததேசத்தின் மக்களாக என்ன பொறுப்பு உள்ளது என்பதை எடுத்துரைத்தல்

2. இந்தியாவின் வருங்கால மேன்மை மாதர்களைப் பொறுத்தது. ஏனெனில், பத்தினிமார்களாகவும், தாய்மார்களாகவும் இந்தியாவின் வருங்காலத்து அரசியலை உருவாக்கத் தக்கபடி மக்களைப் பெற்று வளர்த்து நல்ல முறையில் பயிற்றுவித்தல் அவர்கள் கடமை என்பதை மாதர்களுக்கு உணர்த்துதல்

3. தற்பயிற்சிக்கும், கல்விக்கும், பரோபகாரத்திற்கும் சாதமாக மாதர்களை ஆங்காங்கு ஒரோர் கிளைச்சபையாகக் கூட்டிவைத்தல்

4. ஒவ்வொரு ஆண் பிள்ளைக்கும், பெண் பிள்ளைக்கும் மாதப் பயிற்சியுடன் கட்டாய ஆரம்பப் படிப்பு படிப்பித்தல்

5. பால்ய விவாகத்தை ஒழித்து விவாகச் சம்மத வயதைப் பதினாறாக உயர்த்துதல்

6. ஆண்களுக்கு கொடுக்கப்படுவதுபோல அதே நிபந்தனையில் மாதர்களுக்கும் நகரபரிபாலனசபை, சட்டசபைகளுக்கு வாக்குரிமை பெறுவித்தல்

7. நகரபரிபாலனசபை, சட்டசபைகள் எல்லாவற்றுக்கும் மாதர்களை அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்படும் உரிமையை பெறுவித்தல்.[12]

## அங்கத்தினர்

மேற்கூறிய நோக்கங்களை ஒப்புக்கொண்டு அவற்றை நிறைவேற்ற ஒத்துழைப்புத்தரும் பெண்கள் எவர் வேண்டுமானாலும் இந்திய மாதர் சங்கத்தின் அங்கத்தினராகலாம்.[13] மேற்கூறிய நோக்கங்களைக் கொண்டு இயங்கும் மற்ற

---

12. Women's Indian Assoication, Twentieth and Twenty-First *Annual Report*, 1936-38, Madras, pp.1-6.
13. *Ibid.,.*

குழுக்களும் இந்திய மாதர் சங்கத்தைச் சார்ந்து இயங்கலாம். அந்தந்தப் பகுதிகளில் இயங்கும் கிளை அமைப்புகள் தங்களைத் தாங்களே நிர்வாகம் செய்து கொள்ளும்.

## கட்டமைப்பு

ஆண்டுக்கு இரண்டு ரூபாய் சந்தா செலுத்துபவர்கள் முறையான அங்கத்தினர்களாக பதிவு செய்யப்பட்டனர். கட்டணம் எதுவும் செலுத்தாத ஏனைய அங்கத்தினர்கள் கூட்டங்களில் கலந்துகொள்ளவும் கருத்துக்களை தெரிவிக்கவும் பெண்கள் மற்றும் குழந்தைகள் தொடர்பான பிரச்சனைகளுக்கு வாக்களிக்கவும் உரிமை பெற்றனர். கடந்த காலத்தில் அதிகமான பங்களிப்பை செய்த அங்கத்தினர்கள் நிர்வாகக்குழு உறுப்பினர்களாகத் தேர்வு செய்யப்பட்டனர். ஒரு தலைவர் ஒன்று அல்லது ஒன்றுக்கும் மேற்பட்ட துணைத் தலைவர்கள் ஒன்று அல்லது இரண்டு செயலாளர்கள் மற்றும் ஒரு பொருளாளர் ஆகியோர் தேர்வு செய்யப்பட்டனர்.[14]

## நிர்வாகக்குழு

நிர்வாகக்குழுவில் சென்னையைச் சேர்ந்த எட்டு அங்கத்தினர்கள் தேர்வு செய்யப்பட்டார்கள். இந்திய மாதர் சங்கத்தின் கிளைகளைச் சார்ந்த செயலாளர்கள் ஒன்றுகூடி ஆலோசனைக்குழு உறுப்பினர்களைத் தேர்வு செய்தார்கள். வருடாந்திர பொதுக்குழுவில் தேர்வு செய்யப்படும் நிர்வாகிகள் அடுத்த பொதுக்குழு கூடும்வரை பதவியில் நீடித்தார்கள்.

இந்திய மாதர் சங்கத்தின் தேவைக்கேற்ப அவ்வப்போது நிர்வாகக்குழு அதன் சட்டதிட்டங்களை ஒழுங்குமுறை செய்தது. ஊழியர்களை நியமித்துக் கொள்ளவும் அவர்களுக்கு ஊதியம் வழங்கவும் நிர்வாகக்குழுவுக்கு அதிகாரம் இருந்தது. சிறப்பு ஆலோசனைப் பெற துணைக் குழுக்களும் அவ்வப்போது உருவாக்கிக் கொள்ளப்பட்டன. சங்கத்தின் நிதியை முதலீடு செய்யவும் அசையா சொத்துக்களை வாங்கவும் நிர்வாகக்குழு உரிமை பெற்றிருந்தது.

---

14. Women's Indian Assoication, *Opcit,* pp.1-6.

நிர்வாகக்குழுவின் கட்டளையின்படி செயலாளர் கூட்டங்களை கூட்டினார். பொருளாளர் நன்கொடை மற்றும் சந்தாக்களை வசூல் செய்து வங்கிக் கணக்கில் பராமரித்தார். கணக்கு வழக்குகள் முறைப்படி பதிவு செய்யப்பட்டன.[15]

## நிர்வாகக்குழு கூட்டங்கள்

நிர்வாகக்குழு மாதம் ஒருமுறை கூடியது. ஐந்து அங்கத்தினர்கள் ஒப்புதல் அளித்தால் செயலாளர் சிறப்புக் கூட்டத்தைக் கூட்ட முடியும். அவசர கூட்டங்கள் நடத்தவேண்டிய சூழ்நிலையில் இதுபோன்ற கூட்டங்களை மூன்றுநாள் அவகாசத்தில் செயலாளர் கூட்ட முடியும். ஒவ்வொரு நிர்வாகக்குழு உறுப்பினருக்கும் வாக்குரிமை உண்டு. வாக்குகள் சரி விகிதத்தில் இருக்குமேயானால் தலைமை நிர்வாகி தனது வாக்கினை அளிக்கலாம்.

ஆண்டுதோறும் ஏப்ரல் 30ம் நாள் வருடாந்திர பொதுக்குழு கூடி ஆண்டறிக்கையை சமர்ப்பித்தபிறகு மறு ஆண்டிற்கான நிர்வாக உறுப்பினர்கள் தேர்வு செய்யப்பட்டனர்.[16]

இந்திய மாதர் சங்கம், பிரிட்டிஷ் காமன்வெல்த் அமைப்பு பெண்களுக்கான சர்வதேச அமைதி மற்றும் விடுதலை அமைப்பு, வாக்குரிமை மற்றும் சம குடியுரிமைக்கான பெண்களின் சர்வதேச அமைப்பு ஆகிய அமைப்புகளுடன் தொடர்பு கொண்டு இயங்கியது. இந்திய மாதர் சங்கத்தின் சர்வதேச பிரதிநிதியாகிய மார்கரெட் கசின்ஸ் கௌரவச் செயலாளராக இயங்கியது குறிப்பிடத்தக்கது.

இனம், மொழி, மதம் கடந்து இந்தியா முழுமைக்குமான ஒரு முன்னோடிப் பெண்கள் அமைப்பாக இயங்கிய இந்திய மாதர் சங்கம் 1917 முதல் 1938 வரை சுமார் இருபத்தொரு ஆண்டுகள் முழு வீச்சில் இயங்கியது.[17]

15. Women's Indian Assoication, *Opcit,* pp.1-6. Ibid.,
16. Ibid.,
17. Ibid.,

ஆரம்பத்தில் அடையாறில் செயல்பட்ட இந்த அமைப்பு எழும்பூரிலுள்ள பாந்தியன் சாலைக்கு தலைமை அலுவலகத்தை மாற்றிக் கொண்டது. அலுவலகத்தில் இயங்கிய நூலகத்தில் மாதர் இயக்கம் குறித்து பல்வேறு நாடுகளிலிருந்து தருவிக்கப்பட்ட பத்திரிகைகள் அக்காலத்தில் வெளியிடப்பட்ட முக்கிய நூல்கள் இடம் பெற்றிருந்தன.[18]

பிரம்மஞான சபையுடன் இணைப்பையும் அதன் ஆதரவையும் இந்த அமைப்பு பெற்றிருந்த போதிலும், எல்லா இனங்கள், கலாச்சாரங்கள், சமயங்கள் சார்ந்த பெண்களை உறுப்பினர்களாகக் கொண்ட அவர்களை பிரதிநிதித்துவப்படுத்தும் அமைப்பாகவே தன்னை இனங்கண்டது. ஒவ்வொரு கிளையும் சமயம், கல்வி, அரசியல், ஈகை போன்ற களங்களில் அவர்களின் செயல்திட்டங்களை உருவாக்கிக் கொண்டனர். பெண்களை இயல்பாகவே சமயச்சார்பு உள்ளவர்கள் என இனங்கண்டு, குறுகிய எண்ணம் தவிர்த்த சமய செயல்பாடுகளில் ஈடுபட உறுப்பினர்களை ஊக்குவித்தனர். கல்வியே அனைத்திலும் முக்கியமான அம்சமாக அமைந்தது. முதியோர்களுக்கு எழுத்தறிவு, தையல், முதலுதவி போன்ற வகுப்புகளை நடத்தினர். துவக்கம் முதலே இந்திய மாதர் சங்கம் அரசியல் களத்தில் ஈடுபாடு கொண்டிருந்தது. பிரிட்டிஷ் அமைச்சர் (Secretary of State) மாண்டேகுவுக்கு ஒரு தூதுக்குழுவை அனுப்பி பெண்கள் வாக்குரிமைக்கானத் தேவையை வலியுறுத்தியது. நான்காவது அம்சமான ஈகைப்பணி, ஏழைகளுக்கு உணவளித்தல், கைம்பெண்களுக்கு காப்பகங்கள் நிறுவுதல், பேரிடர் நேரும் நிலையில் நிவாரணப் பணி செய்தல் முதலியவற்றை உள்ளடக்கி இருந்தது. ஸ்திரீ தர்மம் என்ற மாதாந்திர ஆங்கிலப் பத்திரிகையை இந்திய மாதர் சங்கம் நடத்தியது. அதில் பெண்களின் பிரச்சனைகளை பிரதிபலிக்கும் நிகழ்வுகள், கிளைகளின் அறிக்கைகள், பெண்களின் நிலை குறித்த கட்டுரைகள் ஆங்கிலம், இந்தி, தமிழ், ஆகிய மொழிகளில் இடம் பெற்றன.

இந்திய மாதர் சங்கத்தில் அங்கத்தினர்களின் எண்ணிக்கை உற்சாகமூட்டும் வகையில் பெருகியது. 1922ல் நாற்பத்து மூன்று கிளைகள், இருபத்துமூன்று மையங்கள், இரண்டாயிரத்து முந்நூறு அங்கத்தினர்கள் என்று குறுகிய காலத்தில்

18 . Women's Indian Assoication, *Opcit,* pp.1-6.

சங்கம் தன்னை வலுப்படுத்திக் கொண்டது. இந்தக் காலகட்டத்தில் பெண்கல்வி, குழந்தைத் திருமணம், விதவைகளின் பிரச்சனை, பலதார மணம் ஆகியவை குறித்து விழிப்புணர்ச்சி ஏற்படுத்த பல சீரிய முயற்சிகளை எடுத்துக் கொண்டது.

"எதிர்கால இந்தியா பெண்களின் கைகளில்தான் இருக்கிறது. ஒரு மனைவியாக, தாயாக அவளால் உருவாக்கப்பட போகிறவர்கள்தாம் வருங்கால இந்தியாவை ஆட்சி செய்யப்போகிறார்கள்"[19] என்ற குறிக்கோளை மனதில் கொண்டு மத்தியதர வகுப்புப் பெண்களுக்கு குடும்பப் பொருளாதாரம், சுகாதாரம் ஆகியவற்றில் பயிற்சி அளித்தது. தேசிய இயக்கத்திலும் சமுதாயப் பணிகளிலும் ஈடுபட வேண்டியதன் அவசியத்தை விளக்கியது. ஸ்திரீ தர்மம் பத்திரிகையில் பெண்கள் குழந்தை பிறப்பு, வளர்ப்பு, கைமருத்துவம் குறித்து கட்டுரை எழுதும்படி கேட்டுக் கொண்டது.[20]

சிதம்பரம் கிளையில் செயலாளராக இருந்த சுந்தரம்மாள் முத்துலட்சுமி ரெட்டிக்கு எழுதிய கடிதத்தில் "மாதம் ஒரு முறை கூட்டம் நடத்துவதே சிரமமாக இருக்கிறது. அறியாமை நிறைந்த பெண்களை கூட்டங்களில் பங்கேற்க வைப்பது மிகப்பெரிய சவாலாக இருக்கிறது" என்று எழுதினார்.[21]

இந்திய மாதர் சங்கத்தின் பல்வேறு கிளைகளிலும் இதுபோன்ற பிரச்சனைகள் இருந்தன. சமய சொற்பொழிவு போன்றவற்றை நடத்தி பெண்களை ஈர்க்க முயன்றனர். ஸ்திரீ தர்மம் பத்திரிகையின் பல பக்கங்கள் வாசித்துக் காட்டப்பட்டன. ஊட்டியில் இந்திய மாதர் சங்கக் கிளையில் உரையாற்றிய எம்.ஏ.காமா 'உங்களை இந்தக் கூட்டங்களுக்கெல்லாம் அழைத்துவருவது உங்கள் கணவர்கள்தான். நீங்களாகவே இந்தக் கூட்டத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்து ஆர்வமாக வரவேண்டும். நாம் சில சமூக பொறுப்புகளை ஏற்கும்போதுதான்

---

19. ஸ்திரீ தர்மம், ஜனவரி 1921, Vol.IV, No.1.
20. *மேலது,* நவம்பர் 1931, Vol.XIV, No.13.
21. S.Anandhi, *Middle Class Women in Colonial Tamilnadu: Gender Relations and the Problem of Consciousness,* p.6.

ஆண்களும் நம்மை மதிப்பார்கள். நமது அந்தஸ்தும் உயரும்' என்று பேசி உற்சாகப்படுத்தினார்.[22]

வீட்டுக்குள் முடங்கிக்கிடந்த பெண்களை மாதர் சங்க நடவடிக்கைகளில் ஈடுபடுத்த பல்வேறு உத்திகள் கையாளப்பட்டன. பெண்களின் கைத்தொழில் வேலைப்பாடுகளான வலைநூல் பின்னல், ஜரிகைப்பூக்கள் போடுதல், சித்திரம், நூற்றல், நெய்தல், உடைகளுக்கு ஓரம் தைக்க உதவும்படியான பூவலைகள் பின்னல், கூடைமுடைதல் இவைகளைக்கொண்டு கண்காட்சி வைத்தனர். அதைப்பார்க்கும் பெண்களுக்கு தாமும் இவற்றை செய்யவேண்டுமென்ற ஆர்வத்தைத் தூண்டச் செய்து, அதனால் வீடுகள் தோறும் தொழில் முயற்சி செழித்து ஓங்க ஏற்பாடுகளை இந்திய மாதர் சங்கத்தினர் செய்தனர்.

சித்தூரில் பெண்களே செய்த பொருட்காட்சி வைத்து, அதில் நானூறுக்கும் மேற்பட்ட பொருட்களை பார்வைக்கு வைத்தனர். பெங்களூரில் 1923ம் ஆண்டு மார்ச் மாதம் மற்றொரு பொருட்காட்சி சாலை ஏற்படுத்தும் முயற்சியை இந்திய மாதர் சங்கத்தினர் செய்தனர்.[23]

பல்வேறு இடர்பாடுகளுக்கிடையே 1928ம் ஆண்டு இந்திய மாதர் சங்கம் எண்பது கிளைகளுடன் நான்காயிரம் அங்கத்தினர்களைக் கொண்டு இயங்கியது.[24] தத்துவஞான சபையில் ஒவ்வொரு ஆண்டும் நடக்கும் கன்வென்ஷனை ஒட்டி வெளிநாட்டிலிருந்தும் பெண்கள் வந்து அங்கு கூடுவார்கள். இதனைப் பயன்படுத்திக் கொண்டு இந்திய மாதர் சங்கம் தங்களது கூட்டத்தை அங்கு நடத்துவது வழக்கம்.[25]

ஆங்காங்கே இருந்த சிறிய பெண்கள் குழுக்களும் இந்திய மாதர் சங்கத்துடன் தங்களை இணைத்துக் கொண்டனர். உதாரணமாக 1923ல் திருச்சி சகோதரிகள் சங்கம் இந்திய மாதர் சங்கத்துடன் இணைந்தது.[26]

---

22. ஸ்திரீ தர்மம், ஜூலை 1919, Vol.I, No.7.
23. ஸ்திரீ தர்மம், ஜனவரி 1923, Vol .VI, No.3.
24. *மேலது,* மே 1929, Vol.XII, No.7.
25. *மேலது,* ஜனவரி 1923, Vol.VI, No.3.
26. சுதேசமித்திரன், 28 நவம்பர் 1923.

இந்திய மாதர் சங்கம் ஸ்திரீ சேவா சங்கம் என்ற அமைப்பை ஏற்படுத்தி பெண்களுக்கு கைவேலைகள், குழந்தை வளர்ப்பு ஆகியவற்றில் பயிற்சி அளித்தது. இதனால் இரண்டாயிரம் பெண்கள் பயனடைந்தார்கள். பின்னாளில் சென்னை சேவாசதன் என்று அழைக்கப்பட்ட அமைப்பினையும் தோற்றுவித்தது.[27] 1930ல் ஔவை இல்லம் என்ற பெண்களுக்கான இல்லத்தையும் துவக்கினர். நிராதரவான பெண்களுக்கு தங்குமிடம், உணவு, உடை, கல்வி ஆகியவற்றை ஔவை இல்லம் உறுதி செய்தது.[28]

## அகில இந்தியப் பெண்கள் மாநாடு (AIWC)

இந்திய மாதர் சங்கத்தால் 1927ல் துவக்கப்பட்ட அகில இந்தியப் பெண்கள் மாநாடு என்ற அமைப்பு சில முக்கிய குறிக்கோள்களைக் கொண்டிருந்தது. ஆரம்பத்தில் பெண் கல்விக்கான திட்டங்களை அரசாங்கத்துக்கு பரிந்துரைசெய்ய ஏற்படுத்தப்பட்ட இந்த அமைப்பு 1929ம் ஆண்டு ஒரு தனித்த இயக்கமாகவே உருவாயிற்று. எண்பது கிளைகள், இருபத்து நான்கு மையங்கள், நான்காயிரம் அங்கத்தினர்கள் அகில இந்திய அளவில் இருந்தனர். கல்வி வளர்ச்சியை முக்கிய குறிக்கோளாகக் கொண்ட இந்த அமைப்பு பெண்கள், குழந்தைகள் நலத்திலும் அக்கறை செலுத்தியது. ஒரு தலைவர், ஆறு துணைத் தலைவர்கள், ஒரு அமைப்புச் செயலாளர், இரண்டு பகுதிநேர செயலாளர்கள், ஒரு பொருளாளர் ஆகியோர் அடங்கிய குழு இந்த அமைப்பை வழிநடத்தியது. ஆண்டுக்கு ஒருமுறை மிகப்பெரிய மாநாடு ஒன்றை நடத்தியது. அனைத்து கிளைகளிலிருந்தும் பிரதிநிதிகள் பங்கேற்றார்கள்.[29]

அகில இந்தியப் பெண்கள் மாநாடு வெவ்வேறு பிரச்சனைகளை ஆராய உபகுழுக்களை உருவாக்கிக் கொண்டது. உதாரணமாக சார்தா சட்டம் குறித்து விவாதிக்க சார்தா சட்ட உபகுழுவை ஏற்படுத்தியது.

---

27. சுதேசமித்திரன், 11 நவம்பர் 1924.
28. பி.எல்.ராஜேந்திரன், *மகளிர் மனம் கவர்ந்த முத்து*, ப.77.
29. சுதேமித்திரன், 13 அக்டோபர் 1932.

அகில இந்தியப் பெண்கள் மாநாடு அகில இந்திய அளவில் மிகவும் முக்கியமானதாக இருந்தது. அதிக எண்ணிக்கையில் கல்வியாளர்கள், சமூகச் சீர்த்திருத்தவாதிகள், தேசிய இயக்கத்துடன் தொடர்புகொண்ட பெண்கள் ஆகியோர் இவர்களின் மாநாடுகளில் கலந்துகொண்டனர். கல்வியில் தொடங்கி பிறகு குழந்தைத் திருமணம், பர்தா அணிவது போன்றவற்றை விவாதித்து தனது பரப்பை விரிவாக்கிக் கொண்டது.[30]

ஆரம்பத்தில் அரசியலை தவிர்த்து இயங்க வேண்டும் என்று நெறிமுறை வகுத்துக்கொண்ட இந்த அமைப்பு 1930களில் தனது போக்கை மாற்றிக்கொண்டது. 1932ல் சென்னையில் நடந்த மாநாட்டில் பெண்கள் அரசியலிலும் பங்கெடுத்துக் கொள்ளவேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தேசிய இயக்கப் போராட்டத்தில் பங்கெடுத்துக் கொள்வதும் பெண்களுக்கான வாக்குரிமையை வலியுறுத்துவதும் முக்கிய கடமைகளாக தீர்மானிக்கப்பட்டது. இதன்பிறகு அகில இந்தியப் பெண்கள் மாநாடு பெண்கள் பிரச்சனையை மட்டும் மையப்படுத்தி இயங்கவில்லை.[31]

## இந்தியப் பெண்களின் தேசியக் கவுன்சில் (NCWI)

அடுத்தபடியாக நிறுவப்பட்ட அகில இந்திய அளவிலான பெண்கள் அமைப்பு இந்தியப் பெண்களின் தேசியக் கவுன்சில் (National Council of Women in India). 1925 அளவில் பம்பாய், கல்கத்தா, சென்னை மாகாணத்திலுள்ள பெண்கள் உலகப்போர் சமயத்தில் நிறுவப்பட்ட உறவு இணைப்புகளை பயன்படுத்திக் கொண்டு பல்வகைப்பட்ட குழுமங்களை ஒரு கவுன்சிலாக இணைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். 1888ம் ஆண்டு பெண்களின் பன்னாட்டு கவுன்சில் என்ற அமைப்பை (International Council of Women) வாஷிங்டன் நகரில் பெண்களின் சமூக, பொருளாதார, அரசியல் உரிமைகளை முன்னிறுத்தி தனது முதல் கூட்டத்தை நடத்தியது. 1925ல் இந்திய தேசியப் பெண்கள் கவுன்சில் பன்னாட்டு கவுன்சிலின் (International Council) தேசிய கிளையாக நிறுவப்பட்டது.

---

30. Geraldine Forbes, *Opcit,* p.64.
31. S.Anandhi, *Opcit,* p.8.

முதல் ஆண்டு பம்பாய் கவுன்சில் செயற்குழுவின் தலைவியாக இருந்தார் மகிரிபாய் டாடா. அவர் பிரபலமான சர்தோரப் டாடாவின் மனைவியாவார். இந்தக் கவுன்சிலின் முன்னேற்றத்தில் முக்கிய பங்கு வகித்தார்.

1940ல் ஐரோப்பாவுக்கு பயணம் செய்தபோது, பொது விஷயங்களில் ஆங்கிலப் பெண்களின் ஈடுபாட்டைக் கண்டு லேடி டாடா வியந்தார். "குடிசைவாழ் பகுதிகளுக்குச் செல்லுங்கள், அங்குள்ள மக்களைத் தொடர்பு கொள்ளுங்கள், உழைத்துப் பிழைப்பதன் அவசியத்தை அவர்களுக்கு உணர்த்துங்கள், சுயமரியாதையுடன் கண்ணியமான பணியில் ஈடுபட அறிவுறுத்துங்கள்" என்று மகிரிபாய் மத்திய வர்க்கப் பெண்களுக்கு அழைப்பு விடுத்தார்.[32]

இந்தக் கவுன்சில் சித்தாந்தத்தை நிறுவுவதில் லேடி டாடா போன்ற பெண்களின் செல்வாக்கு இருந்தபோதிலும், தனிப்பட்ட உறுப்பினர்களின் அக்கறைகள் இதன் செயல்பாட்டை நிர்ணயித்தன. கலை, தொழிலாளர் நலன், சட்டம், பத்திரிகைகள் போன்ற கூறுகளுக்காக தனிப்பட்ட கமிட்டிகள் உருவாக்கப்பட்டன. பொதுவாக இந்தக் கமிட்டிகள் தரவுகளைச் சேகரித்து மனுக்கள் தயாரித்து உரிய அதிகாரிகளிடம் அவற்றை சமர்ப்பித்தனர். பெண்களின் நிலைமையை சட்டம் மூலமாக மேம்படுத்த முயன்ற கமிட்டி மிகவும் சுறுசுறுப்பாக இயங்கியது. ஈகைப் பணிகளும் தொடர்ந்தன. ஆனால் குடிசை பகுதிகளுக்குச் செல்வதோ ஏழைத் தொழிலாளர் இருப்பிடங்களுக்குச் செல்வதோ இந்தக் கவுன்சில் உறுப்பினர்களுக்கு விருப்பமாக இல்லை. மனு சமர்ப்பிக்கும் அரசியலே இந்தப் பெண்களின் ஆர்வத்தையும் கவனத்தையும் ஈர்க்கும் செயற்களமாக இருந்தது. அதனுடைய மேல்தட்டுச் சார்பினால் இந்தக் கவுன்சில் உயிர்துடிப்புள்ள தேசிய நிறுவனமாக வளர முடியவில்லை.[33]

மேலைநாட்டுப் பெண்களின் தொடர்பால் பன்னாட்டு பெண்கள் அமைப்புடன் இந்திய மாதர் சங்கத்துக்கு தொடர்பு ஏற்பட்டது. இதுபோன்ற கூட்டங்களில் மேலைநாட்டுப் பெண்களும் தங்கள் நாட்டில் பெண்கள் எதிர்கொள்ளும்

32. Geraldine Forbes, *Opcit,* p.76.
33. *Ibid.,* p.77.

பிரச்சனைகள் பற்றி பேசியபோது தமிழகப் பெண் பிரதிநிதிகளின் பார்வை விரிவடைய வழிவகுத்தது.

பன்னாட்டுப் பெண்கள் மாநாடுகளில் இந்திய மாதர் சங்கத்தின் சார்பில் கலந்துகொள்ளும் வாய்ப்பும் சிலருக்கு கிடைத்தது. டோரதி ஜீனராஜதாஸா ஆஸ்திரேலியா சென்று திரும்பிவந்தபிறகு தனது அனுபவங்களை பகிர்ந்து கொண்டார்.[34]

உள்நாட்டிலேயே ஒரு பகுதியிலிருக்கும் பெண்களின் சமூகச் சூழல் குறித்து பிற பகுதிகளிலிருக்கும் பெண்கள் புரிந்துகொள்ள இத்தகைய கூட்டங்கள் உதவியது. உதாரணமாக மலபார் பகுதியிலிருக்கும் பெண்களுக்கு பல உரிமைகள் இயல்பாக அமைந்துள்ளன. தாய்வழிச் சமூகத்தை பின்பற்றும் அவர்கள் கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, விவாகரத்து செய்யும் உரிமை, மறுமணம் செய்துகொள்ளும் உரிமை என அனைத்து உரிமைகளையும் பெற்றிருக்கிறார்கள். குழந்தை மணம் என்பதே அங்கு கிடையாது. பர்தா வழக்கம் அங்கு இல்லை. பெண் கல்வியும் முன்னேறியிருக்கிறது[35] என்பது போன்ற தகவல்களை தெரிந்துகொண்டனர்.

அகில இந்திய அளவில் பரவிய இந்திய மாதர் சங்கம், அகில இந்தியப் பெண்கள் மாநாடு தவிர வட்டார அளவில் சில மாதர் அமைப்புகள் இயங்கி வந்தன. கோயமுத்தூர் சகோதரிகள் சங்கம் என்ற அமைப்பு பெண்கள் தேசிய இயக்கத்தில் பங்கு பெறுவதை ஊக்குவித்தது. திருச்சியிலும் சென்னை ராயப்பேட்டையிலும் இதுபோன்ற பெண்கள் சங்கங்கள் இயங்கின. சைதாப்பேட்டை இந்து பெண்கள் சங்கம் பெண்களுக்கான நன்னெறிக் கல்வியை வலியுறுத்தியது. கமலாநேரு மாதர் சங்கம் என்ற அமைப்பு தொழுநோய் ஒழிப்புப் பணியில் ஈடுபட்டது.[36] இதைத்தவிர முஸ்லிம் பெண்களுக்கான அமைப்புகளும் தோன்றின. மெட்ராஸ் முஸ்லிம் பெண்கள் சங்கம் என்ற அமைப்பு திருமதி. முஸ்ருதீன் தலைமையில் இயங்கியது. முஸ்லிம் பெண்கள் மத்தியில் இஸ்லாமிய

34. ஸ்திரீ தர்மம், அக்டோபர் 1919, Vol.I, No.8.
35. *மேலது*, செப்டம்பர் 1927, Vol.X, No.11.
36. கிருஹலஷ்மி, 01 செப்டம்பர் 1939.

கருத்துக்களைப் பரப்பவும், குழந்தை வளர்ப்பு, கைத்தொழில், சுகாதாரம் போன்றவற்றைக் கற்றுத் தரவும் இந்த அமைப்பு இயங்கியது.[37] மேற்கூறிய மூன்று மாதர் சங்கங்களில் இந்திய மாதர் சங்கமும் அகில இந்தியப் பெண்கள் மாநாடும் தமிழகத்தில் ஒத்திசைந்து செயல்பட்டனர். இந்தியப் பெண்களின் தேசியக் கவுன்சில் தமிழகத்தில் பரவலான வளர்ச்சிப் பெறவில்லை.

## பெரியாரின் சுயமரியாதை இயக்கம்

சமகாலத்தில் சென்னை மாகாணத்தில் வலிமையாக வளர்ந்து வந்த மற்றொரு இயக்கம் சுயமரியாதை இயக்கம். இந்த இயக்கம் ஒரு பெண்கள் இயக்கம் என்று கூறமுடியாவிட்டாலும் பெண்கள் பிரச்சனையை முன்வைத்த இயக்கமாகவும் அதிக எண்ணிக்கையில் பெண்கள் ஆர்வமாக பங்குகொண்ட இயக்கமாகவும் இருந்ததால் இந்த இயக்கம் குறித்தும் அது முன்வைத்த பெண்ணுரிமைக் கொள்கை குறித்தும் விவரிக்க வேண்டியது அவசியமாகிறது.

பெரியார் ஈ.வெ.ராமசாமி ஈரோடு நகரில் வெங்கடப்ப நாயக்கருக்கும் சின்னத்தாயம்மாள் என்னும் முத்தம்மாளுக்கும் 1879ம் ஆண்டு செப்டம்பர் 17ம் நாள் இரண்டாவது மகனாகப் பிறந்தார். இவருடன் பிறந்தவர்கள் சகோதரர் ஈ.வெ.கிருஷ்ணசாமி, தங்கைகள் பொன்னாத்தாள், கண்ணம்மாள் ஆகிய மூவரும் ஆவர்.

பள்ளிப்படிப்பை நிறுத்தியவுடன் ராமசாமியை தனது மண்டியிலேயே வேலைக்கு வைத்துக்கொண்டார் அவரது தந்தை. சிரிப்பாகவும், சிந்திக்கும்படியாகவும் பேசுவதைக் கண்டு பலரும் அவரின் பேச்சைக் கேட்க மண்டிக்கு ஆவலாக செல்வது வழக்கம்.

இவர்தம் பத்தொன்பதாவது வயதில் துறவுபூண்டு காவித் துணியோடு பல இடங்களுக்குச் சென்றார். காசிக்கும் சென்றார். அப்போது இந்து சமயத்தில் பிராமணர்களுக்கு உயரிடம் கொடுக்கப்பட்டு பிற சாதியினர் ஒதுக்கப்படுவதை அறிந்து பகுத்தறிவுவாதியாக மாறினார். தமிழக அரசியலில் நுழைந்தார். பின்னர்

---

37. Indian ladies Magazine, 10 May 1929.

காங்கிரசில் சேர்ந்தார். பிராமணரல்லாதோரின் தலைவராக ஈரோடு நகர சபைக்குத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஈரோட்டில் 1920 வரையில் பெரியாரின் தொடர்பில்லாத பொது நிலையங்களே இல்லை. பெரியார் 1919ம் ஆண்டு ஈரோட்டில் நகரமன்றத் தலைவராய் இருந்தபோது இராஜாஜி சேலத்தில் நகரமன்றத் தலைவராக இருந்தார். அப்போதுதான் அவர்களுக்கிடையே நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. இராஜாஜியும் டாக்டர்.வரதராசலு நாயுடுவும் அடிக்கடி பெரியாரின் இல்லத்துக்குச் செல்வது வழக்கம். அவர்கள் பெரியாரை இந்திய தேசிய காங்கிரசுக்கு இழுத்தனர்.

1919ல் ரௌலட் சட்டம் கொண்டுவரப்பட்டபோது காந்தியடிகளின் வேண்டுகோளின்படி பெரியாரும் இராஜாஜியும் ஒரே நேரத்தில் நகரமன்ற தலைவர் பதவியை இராஜினாமா செய்தனர்.

காந்தியடிகளின் திட்டப்படி 1920ல் ஒத்துழையாமை இயக்கம் தொடர்ச்சி பெற்றது. தீண்டாமை ஒழிப்பு, மதுவிலக்கு, நீதிமன்ற புறக்கணிப்பு, அரசுப் பணி துறப்பு முதலியவை பெரியாரின் மனதைக் கவர்ந்தது.

தீண்டாமை ஒழிப்பை செயல்படுத்துவதற்கும், சாதி வேற்றுமையை செயலளவில் களைவதற்கும் ஒரு அறிய வாய்ப்பு கிடைத்ததென்று பெரியார் ஆவலுடன் காங்கிரசில் சேர்ந்தார். தாம் வகித்த மதிப்புக்குரிய பதவிகளையெல்லாம் ராஜினாமா செய்தார். தம் தந்தையார் காலம் முதல் நடந்து வந்த வாணிகத்தையும் நிறுத்தினார் பெரியார். காங்கிரசில் தலைவராக இருந்தபோது சமுதாயத்தில் உள்ள குறைகளைக் களைய பல்வேறு போராட்டங்களை நடத்தினார்.

1920ம் ஆண்டு ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டு இருமுறை சிறைச் சென்றார். 1921ல் சென்னை மாநிலக் காங்கிரஸ் கமிட்டியின் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1924ல் வைக்கம் கோவில் அருகே ஹரிசனங்கள் நடக்கக் கூடாது என்ற அநீதியை எதிர்த்துப் போராட்டம் நடத்தினார். சேரன்மாதேவி பகுதியில் வ.வே.சு.ஐயர் குருகுலத்தில் பிராமணர்களுக்கு தனிப்பந்தி போடுவதைக் கண்டித்தார். நீதிக்கட்சி அமைச்சரவை கொண்டுவந்த அறநிலையப் பாதுகாப்புச்

சட்டங்களை ஆதரித்தார். 1925ல் காங்கிரசிலிருந்து விலகி சுயமரியாதை இயக்கத்தைத் தொடங்கினார்.

சுயமரியாதை இயக்கத்தில் பிராமணியக் கருத்துக்களை எதிர்க்கும் விதமாக புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவற்றில் காணப்படும் அர்த்தமற்ற செயல்களை விமர்சனம் செய்து பொதுக்கூட்டங்களில் பேசினார். சுயமரியாதை இயக்கப் பிரச்சாரமானது, தேசிய இயக்கத்திலிருந்த பிராமணரல்லாத தீவிர இளைஞர்களிடையேயும் நல்ல வரவேற்பை பெற்றது. ப.ஜீவானந்தம், வல்லத்தரசு, எஸ்.ராமநாதன் போன்றோர் காங்கிரஸ் இயக்கத்திலும் பங்கெடுத்துக் கொண்டே சுயமரியாதைக் கூட்டங்களிலும், மாநாடுகளிலும் பேசி வந்தனர். பெரியாரின் நீண்டகால நண்பர்களில் ஒருவரும் தென்னிந்தியாவின் முதல் மார்க்சிய சிந்தனையாளருமான சிங்கார வேலரும் சுயமரியாதை இயக்கத்தின் பகுத்தறிவு மற்றும் நாத்திகப் பிரச்சாரத்துக்கு உதவி புரிந்தார்.[38]

தமிழகத்தில் மொழிப்போர் வலுப்பெற்ற காலத்தில் ஆண்களுக்கு சரிநிகராக பெண்களையும் மொழிப்போரில் கலந்துகொள்ள வைப்பது என்று முடிவு செய்தார். இதற்காக 1938ம் ஆண்டு நவம்பர் மாதம் 3ம் நாள் சென்னையில் மறைமலை அடிகளாரின் மகள் நீலாம்பிகை அம்மையார் தலைமையில் தமிழ்நாட்டுப் பெண்களின் மாநாடு கூடியது. தமிழ்நாட்டுப் பெண்கள் இப்போராட்டத்தில் கலந்துகொண்டு சிறைச் செல்ல முடிவு செய்தனர். இம்மாநாட்டின் தீர்மானப்படி டாக்டர் தருமாம்பாள், மூவலூர் ராமாமிர்தம் அம்மையார் ஆகியோர் சிறைச் சென்றனர். இம்மாநாட்டில் பெரியார் ஆற்றிய சொற்பொழிவு பெண்களை வீறுகொண்டு எழச் செய்தது. இப்பெண்கள் மாநாட்டில்தான் ஈ.வெ.ரா. பெயரின் முன் பெரியார் என்று சேர்க்க வேண்டும் என தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அன்று முதல் அவர் இறக்கும் வரை தமிழக மக்களால் 'பெரியார்' என்று அழைக்கப்பட்டார்.

---

38. என். ராமகிருஷ்ணன், *தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் (1917–1964)*, ப.121.

குடியரசு, புரட்சி, விடுதலை போன்ற பத்திரிகைகள் சுயமரியாதைக் கொள்கையினை வெளிப்படுத்தின. பெரியாரும் சில நூல்களை எழுதி வெளியிட்டார்.

"உலகத்தில் ஆண்மை நிற்கும் வரையில் பெண்ணடிமையும் வளர்ந்து கொண்டே வரும். ஆண்மை என்ற தத்துவம் அழிக்கப்பட்டாலன்றிப் பெண்மை விடுதலையடைய இயலாது. ஆண்மையும் பெண்ணடிமையும் கடவுளால் ஏற்படுத்தப்பட்டதாக ஆண்கள் கருதுகிறார்கள். பெண்கள் அதை நம்புகிறார்கள். தாங்கள் முழு விடுதலைக்குரியவர்கள் என்ற எண்ணம் இன்னமும் பெண்களுக்குத் தோன்றவில்லை.

பெண்கள் தங்களுடைய அடிப்படை உரிமைகளை இழந்ததாலேயே மேம்பாடு அடைய முடியவில்லை. சொத்துரிமை, பதவி உயர்வு, கௌரவம் முதலிய பக்கபலங்களில்லாத அடிமைப் பெண்களின் மனதை ஆண் பிள்ளைகள் எளிதில் கலக்கிக் குழம்பச் செய்து விடுகிறார்கள். பெண்ணடிமைத்தனத்தை நிலைக்கச் செய்வது ஆணாதிக்கம் என்பது உண்மை.

எல்லா நிலைகளுக்கும் எல்லா மனிதர்களுக்கும் பொதுவாக நல்லதை நாடாத மைல்கல்லைப் போல அசையாமல் ஆடாமல் சட்டம் இருக்கிறது. அதை மாற்றும் வழி அறியாமல், மாற்றத் தைரியம் இல்லாமல் நமது நாட்டிலே கோழைத்தனமும், கள்ள மனப்பான்மையும், ஆபாசத் தீயச்செயல்களும் மலிந்து கிடக்கின்றன. ஆணாதிக்கம் விளைவித்த அடிமைத்தனம் சமுதாயத்தில் மட்டுமன்றி அரசியல் சட்டத்தாலும் வலியுறுத்தப்பட்டுள்ளது" என்றார்.

கற்பு என்ற வார்த்தையைப் விளக்கி பார்ப்போமேயானால், கல் என்பதிலிருந்து வந்ததாகவும், அதாவது படி—படிப்பு என்பது போல் கல்—கற்பு என்கிற இலக்கணம் சொல்லப்பட்டு வருகிறது. கற்பு என்பது சொல் தவறாமை. அதாவது நாணயம், ஒப்பந்தத்திற்கு விரோதமில்லாமல் என்கிற கருத்துகள் கொண்டதாக இருக்கிறது.[39]

---

39. தந்தை பெரியார், *பெண் ஏன் அடிமையானாள்*, ப.9.

இந்த இடத்தில் திருவள்ளுவரின் நிலைபாடும் தனக்குச் சற்று மயக்கத்தையே தருகிறது என்கிறார் பெரியார். அதாவது குறளில் வாழ்க்கைத் துணை நலத்தைப் பற்றி சொல்ல வந்ததும், பெண் வழிச்சேரல் என்பதைப்பற்றி சொல்லவந்ததும் சில தனி இடங்களிலும் பெண்கள் விஷயத்தில் மிக்க அடிமைத் தன்மையும் தாழ்ந்த தன்மையும் புகுத்தப்பட்டிருப்பதாகவே காண முடிகிறது. "தெய்வத்தைத் தொழாமல் தன் கொழுநனாகிய தன் தலைவனைத் தொழுகின்றவள்" "மழையைப் பெய்யென்றால் பெய்யும்" என்றும் வாசகங்கள் காணப்படுகின்றன.[40]

"சில சமூகங்களில் பர்தா என்றும், கோஷா என்றும், திரை என்றும் அதாவது பெண்கள் அறைக்குள் இருக்க வேண்டியவர்கள் என்றும் முகத்தை மூடிக்கொண்டு வெளியில் போக வேண்டியவர்கள் என்றும் ஏற்படுத்தப்பட்ட கொள்கைகளும், புருஷன் பல பெண்களை மணக்கலாம், பெண்கள் இக்காலத்தில் ஒரு கணவனுக்கு மேல் கட்டிக்கொண்டு வாழக்கூடாது என்ற கொள்கையும் நம் நாட்டில் ஒரு தடவை கணவன்–மனைவி என்கின்ற சொந்தம் ஏற்பட்டுவிட்டால், பிறகு அந்தப் பெண்ணுக்கு சாகும்வரை வேறு எந்தவித சுதந்திரமும் இல்லை" என்றும் எடுத்துக் கூறினார் பெரியார்.[41]

இந்நிலை சட்டத்தாலும் மதத்தாலும் மட்டும் ஏற்பட்டதென்று சொல்லுவதற்கில்லாமல் பெண் சமூகமும் ஒப்புக்கொண்டு இந்நிலைக்கு உதவி புரிந்து வருவதனாலும் இது வளர்ந்து வருகிறதென்றே அவர் கருதினார்.

மேலும் "ஆண்–பெண் திருமண விஷயத்தில் அதாவது, கணவன்–மனைவி என்ற வாழ்க்கையானது நமது நாட்டில் உள்ள கொடுமையைப் போல் வேறு எந்த நாட்டிலும் கிடையவே கிடையாது என்று கூறலாம். நமது திருமணத் தத்துவத்தை சுருக்கமாய் பார்த்தால், பெண்களை ஆண்கள் அடிமையாகக் கொள்வது என்பதைத் தவிர வேறு ஒன்றுமே அதில் இல்லை. அவ்வடிமைத்தனத்தை மறைத்து பெண்களை ஏமாற்றுவதற்கே சடங்கு முதலியவைகள் செய்யப்படுவதோடு, அவ்வித

40. தந்தை பெரியார், *முன்குறித்தது*, ப.11.
41. *மேலது*, ப.12.

திருமணத்துக்கு தெய்வீகத் திருமணம் என்பதாக ஒரு அர்த்தமற்ற போலிப் பெயரையும் கொடுத்ததை கண்டிக்கின்றோம்" என்றார்.

"ஒரு பெண் ஏதோ திருமணம் என்பதாக ஒன்றைச் செய்து கொண்டோமே, செய்தாகிவிட்டதே, அது எப்படி இருந்தாலும் சகித்துக் கொண்டுதானே இருக்க வேண்டும் என்று கருதி, துன்பத்தையும் அதிருப்தியையும் அனுபவித்துக் கொண்டிருப்பதும், அனுபவித்துக் கொண்டிருக்கச் செய்வதும் மனிதத்தன்மையும் சுயமரியாதையுமற்ற காரியமாகுமேயல்லாமல் ஒரு நாளும் அறிவுடைமையாகாது என்பதே தமதபிப்ராயமாகும்" என்றும் கூறினார்.[42]

"பெண்களுக்கு மிகவும் முக்கியமான ஒன்றாக இருப்பது தாலி. அந்த தாலி மிகவும் பெண்களை அடிமையாக்கிவிடுகிறது. பெண்கள் அடிமையாகுவதற்கு தாலியும் காரணமாக இருக்கின்றது" என்று கருதிய பெரியார் தாலியை மறுத்த, சடங்குகளை மறுத்த சுயமரியாதைத் திருமணங்களை நடத்தி வைத்தார். உயர் சாதியினரின் அடக்குமுறைக்கு ஆளாகியிருந்த ஆயிரக் கணக்கானவர்கள் பெரியாரின் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டனர். தமிழக அரசியல் சமூகச் சூழலில் மிகப்பெரிய கிளர்ச்சியை ஏற்படுத்திய இவரது இயக்கத்தில் நாகம்மை, மணியம்மையார், மூவலூர் ராமாமிர்தம் அம்மையார், நீலாம்பிகை அம்மையார் ஆகியோர் தீவிரமாக ஈடுபட்டனர்.

சுயமரியாதை இயக்கத்தில் பெண்களுக்கென்றே தனியாக மாநாடுகள் நடத்தப்பட்டதும் ஏராளமான பெண்கள் தங்கள் குழந்தைகளையும் தூக்கி கொண்டுவந்து மாநாட்டு வளாகத்தில் தங்கியிருந்து பெரியாரின் கருத்துக்களை ஆர்வத்துடன் கேட்டதும் அவரைப் பின்பற்றியதும் தமிழகத்தின் சமூகத் தளத்தில் மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது.

பெண்களால் தோற்றுவிக்கப்பட்டு இயங்கிய மேற்கூறிய அமைப்புகள் தவிர பெரியாரின் சுயமரியாதை இயக்கமும் சமகாலத்தில் இயங்கியது. இந்த இயக்கம் மிகத் தீவிரமாக பெண்களின் பிரச்சனைகளை முன்னெடுத்துச் சென்றது. சமூக

---

42. பி.மனோகர், *பெண் விடுதலையில் பெரியார்*, ப.46.

அரசியல் தளத்தில் அதிர்வலைகளை ஏற்படுத்தியது. அவர் உருவாக்கிய இயக்கம் இந்திய சுதந்திரப் போராட்டத்தலைவர்கள் கொண்டிருந்த சமூக, வர்க்கப் பிரச்சனைகளின் சமரசக் கொள்கைக்குப் பதிலளிப்பதாகவே இருந்தது. சமூக வரலாற்று ஆய்வாளர்கள் பெரியாரை எப்பொழுதும் பகுத்தறிவுவாதியாகவும், தேசியவாதியாகவும், பிராமண எதிர்ப்புவாதியாகவும், நாத்திகராகவுமே கண்டுள்ளனர். ஆனால் ஒரு பெண்ணிலைவாதியாக பெரியாரினுடைய பார்வை சீர்திருத்தத் தன்மை வாய்ந்தது. சமூக பழக்கவழக்கங்கள், சமய சம்பிரதாயங்கள், மூடநம்பிக்கைகள் ஆகிய அனைத்தும் அவரது தாக்குதலுக்கு இலக்காயின. பார்ப்பணர்களின் சமூக, பொருளாதார மற்றும் சமய ரீதியான உயர்நிலையும் அவர்கள் ஏனைய மக்கள்மேல் செலுத்திவந்த ஆதிக்க தன்மையினையும் பகிரங்கப்படுத்தினார் பெரியார்.

“குடும்பத் திட்டம்”, “பெண் ஏன் அடிமையானாள்” ஆகிய இரண்டு பிரசுரங்களும் பெரியாரின் பெண்நிலைக் கொள்கையை தெளிவுபடுத்துகின்றன.

“இந்திய நாட்டின் ஆட்சியுரிமை இந்திய மக்களுக்கே கிடைக்க வேண்டுமென அரசியல் சீர்திருத்தக்காரர்களும், இந்திய மக்களிடையே இருக்கும் வகுப்புப் பிரிவினையும், சாதி வேற்றுமையும் ஒழிய வேண்டுமென்று சமூகச் சீர்திருத்தக்காரர்களும் போராடுகிறார்களேயன்றி மக்கள் கூட்டத்தில் ஒரு பகுதியினராகிய பெண்கள் ஒரு பக்கம் அழுத்தப்பட்டு வருவதைப் பற்றி எவருமே கவலை கொள்வதாக இல்லை. உலகில் மனித வர்க்கத்தினருக்குள்ளிருக்கும் அடிமைத் தன்மை ஒழிய வேண்டுமானால் பெண்ணுலகை அடிமையாகக் கருதி நடத்தும் அகம்பாவமும் கொடுமையும் அழிய வேண்டும். அது அழிந்த நிலையே சமத்துவம், சுதந்திரம் என்னும் முளை முளைக்கும் இடமாகும்” என்று கூறினார் பெரியார்.[43]

பெரியாரின் கொள்கைகள் பார்ப்பணரல்லாதோரை ஒருங்கிருணைத்தது. பார்ப்பணரின் ஆதிக்கத்துக்கு எதிரான அவர்களின் போராட்டம், அவர்கள் வீட்டுப் பெண்களையும் இயக்கத்தின்பால் ஈர்த்தது. பெண்களுக்கென்று தனிப்பட்ட

43. ஏ.பி.வள்ளிநாயகம், *பெரியார் பிறப்பித்த பெண்ணுரிமைப் பிரகடனங்கள்.*

மாநாடுகள் நடத்தப்பட்டன. அவற்றில் பெண்களின் பிரச்சனைகள் விவாதிக்கப்பட்டன.

பெரும்பாலும் உயர்ஜாதிப் பெண்களால் முன்னெடுத்துச் செல்லப்பட்ட இந்திய மாதர் சங்கம், பெரியாரின் இயக்கத்தை எப்படி எதிர்கொண்டது என்பது ஆய்வுக்குரியது. தேசிய இயக்கத்தின்பால் சார்புத்தன்மை கொண்ட இந்திய மாதர் சங்கம் பெரும்பாலும் சுயமரியாதை இயக்கத்தை ஓர் இணை இயக்கமாகவே கருதியது. ஆரம்பத்தில் இந்திய மாதர் சங்கக் கூட்டங்களில் தேவதாசி முறையை பற்றி முழக்கமிட்ட மூவலூர் ராமாமிர்தம் அம்மையார் போன்றவர்கள் பிற்காலத்தில் பெரியாரின் இயக்கத்துடன் ஐக்கியமாயினர். டாக்டர்.முத்துலட்சுமி ரெட்டி போன்றவர்களும் சுயமரியாதை இயக்கக் கொள்கைகளை ஆதரித்தனர். இரண்டு இயக்கத்தினரும் பொதுப் பிரச்சனைகளான தேவதாசி முறை எதிர்ப்பு, குழந்தை மணம், விதவைகளுக்கு இழைக்கப்படும் கொடுமைகள் ஆகிய பிரச்சனைகள் குறித்து வெவ்வேறு தளத்தில் போராடி இருக்கிறார்கள்.

1931ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் விருதுநகரில் மூன்றாவது மாகாண சுயமரியாதை மாநாடு நடந்தது. அதில் கலந்துகொண்ட இந்திராணி பாலசுப்ரமணியம் தலைமை உரை நிகழ்த்தினார். அதில் சார்தா சட்டத்தை ஆதரித்து பேசிய அவர், அதனை எதிர்ப்பவர்களை கண்டனம் செய்தார். அதில் பொருந்தா திருமணம் மற்றும் பலதாரமணம் இவற்றை சாடிய அம்மையார் இத்தகைய செயல்களுக்கு துணைபோகும் புராண, இதிகாச கதைகளையும் கண்டனம் செய்தார். அரவது உரை முழுவதுமாக ஸ்திரீ தர்மம் பத்திரிகையில் இடம் பெற்றிருந்தது.[44] இவ்வாறு இரு இயக்கத்தினரும் தங்களது பொதுவான குறிக்கோளை ஒட்டி இணையாக இயங்கினர்.

**இந்திய மாதர் சங்கத்தின் சில முக்கிய தலைவர்கள்**

**டாக்டர் அன்னிபெசன்ட்**

1893ல் அயர்லாந்திலிருந்து இந்தியாவுக்கு வந்தார். இந்தியக் குடிமகளாகப் பதிவுசெய்து தமிழகத்தை இருப்பிடமாகக் கொண்டார். 1914ம் ஆண்டு அரசியலில்

44. ஸ்திரீ தர்மம், அக்டோபர் 1931, Vol.XIV, No.12.

ஈடுபட்டார். பூபேந்திரநாத் தலைமையில் சென்னையில் கூடிய காங்கிரஸ் மாநாட்டில் முதன்முதலாக உரையாற்றினார். தன்னாட்சி என்பது இந்தியரின் பிறப்புரிமை என்றார். 'நியூ இந்தியா' பத்திரிகையின் ஆசிரியராகப் பணியாற்றி தன்னாட்சி இயக்கத்துக்கு மக்களிடையே பெரும் ஆதரவு திரட்டினார்.

காங்கிரசில் ஏற்பட்ட பிளவை இணைக்க முயன்று அதில் ஓரளவு வெற்றியும் பெற்றார். நியூ இந்தியா பத்திரிகையில் அரசுக்கு எதிரான செய்தியை வெளியிட்டதால் ஆங்கிலேயரின் அடக்குமுறைக்கு உள்ளானார். விடுதலைப்போரில் ஈடுபட்டு சிறைச் சென்ற முதல் பெண்மணி அன்னிபெசன்ட். இவரை சிறையிலடைத்ததை எதிர்த்து டில்லி சட்டமன்றத்திலும் லண்டன் பாராளுமன்றத்திலும் கண்டனக் குரல்கள் எழுந்தன. அதனால் எந்த நிபந்தனையுமின்றி ஆங்கில அரசு அன்னிபெசன்டை விடுதலை செய்தது.

பெண் விடுதலை இயக்கங்களைத் தோற்றுவித்ததில் இவருக்கு பெரும் பங்கு உண்டு. தன்னாட்சி இயக்க அமைப்பில் பெண்களுக்கென ஒரு பிரிவு இயங்கி வந்தது. பெண்கள் இயக்கம் நாடெங்கும் வேகமாக பரவத் தொடங்கியது. மகளிர் அமைப்புகளை ஒருங்கிணைத்து இந்திய மாதர் சங்கம் தொடங்கப்பட்டபோது மார்கரெட் கசின்சுக்கு துணைநின்றார் அன்னிபெசன்ட். 1917ம் ஆண்டு சிறைப்பட்டு வெளிவந்தபோது நாடெங்கும் இருந்த பெண்கள் அவருக்கு வரவேற்பளித்தனர். இந்திய தேசிய காங்கிரசின் முதல் பெண் தலைவரானார்.[45] இந்திய தேசிய காங்கிரசில் இணையும் முன்னரே பெண் விடுதலை இயக்கத்துக்கு குரல் கொடுத்தவர்.

பெண்கள் இயக்கம் வாக்குரிமைக்காக போராடியபோது, மாண்டேகு–செம்ஸ்போர்டு குழுவைச் சந்திக்க மார்கரெட் கசின்சுடன் அன்னிபெசன்டும் இணைந்து டி.கே.கார்வே மூலம் ஏற்பாடுகள் செய்தனர். அக்குழு 1917ம் ஆண்டு டிசம்பர் 18ம் நாள் பெண்களுக்கு வாக்குரிமை வேண்டுமென்று அரசிடம் முறையிட்டது.

---

45. ஸ்திரீ தர்மம், அக்டோபர் 1933, Vol.XVI, No.12.

“வாக்குரிமைக்கான கொள்கைகளை வகுக்கும்போது பெண்களையும், அரசு மக்களினத்தின் ஒரு பகுதியாகக் கருதவேண்டும். பால் அடிப்படையில் வேற்றுமைகாட்டி அவர்களைத் தகுதியற்றவர்கள் என ஒதுக்கிவிடக்கூடாது. ஆண்களுக்குரிய அரசியல் பிரதிநிதித்துவ உரிமைகளைப் பெண்களுக்கும் வழங்க வேண்டும்” என்று தெளிவான கோரிக்கையையும் அக்குழு அரசின்முன் வைத்தது.

அன்னிபெசன்ட் அம்மையாரின் தலைமையில் கல்கத்தாவில் கூடிய மாநாட்டில் பெண்களுக்கு ஸ்தல ஆட்சியில் பங்கேற்கும் உரிமையும் வாக்குரிமையும் கொடுக்கவேண்டும். ஆண்களுக்குரிய தேர்வுத் தகுதிகளைப் பெண்களுக்கும் மேற்கொள்ளவேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது குறிப்பிடத்தகுந்தது.

### மார்கரெட் கசின்ஸ்

மார்கரெட் எலிசபெத் கசின்ஸ் **(1978–1954)** க்ரெட்டா கசின்ஸ் என்றும் அறியப்படுபவர். அயர்லாந்தைச் சார்ந்த இவர் கல்வியாளர். இந்தியப் பெண்களின் வாக்குரிமைக்காகப் போராடியவர். பிரம்மஞானசபையைச் சேர்ந்தவர். 1927ல் அனைத்திந்தியப் பெண்கள் மாநாட்டை நிறுவியவர். கணவர் ஜேம்ஸ் கசின்ஸ் கவிஞர், இலக்கியத் திறனாய்வாளர்.

மார்கரெட் அயர்லாந்தில் பாயில் மாவட்டத்தில் பிறந்தவர். ப்ராட்டஸ்டண்ட் பிரிவை சேர்ந்தவர். இசைக் கல்வியில் தேர்ச்சிப் பெற்று 1920ல் பட்டம் பெற்றார். இசைத்துறையில் ஆசிரியராகப் பணியாற்றினார். தனது ஆசிரியரும் கவிஞருமான ஜேம்ஸ் கசின்சை மணந்தார். இருவரும் சேர்ந்து சோஷலிசம், மரக்கறி உணவுப் பழக்கம் மற்றும் உளவியல் துறையில் ஆய்வுகளை மேற்கொண்டனர். 1906ம் ஆண்டு மான்செஸ்டரில் நடைபெற்ற தேசியப் பெண்கள் மாநாட்டில் கலந்துகொண்டனர். அடுத்த ஆண்டு லண்டனில் நடைபெற்ற பிரம்மஞானசபை மாநாட்டிலும் கலந்துகொண்டனர். அயர்லாந்து மகளிர் வாக்குரிமைக் கழகத்தை 1908ல் தோற்றுவித்து வாக்குரிமைக்காக போராடினர்.

மார்கரெட் 1910ல் பெண்கள் வாக்குரிமைக்காக பாராளுமன்றம் நோக்கி நடந்த பேரணியில் கலந்துகொண்டார். அதற்காக கைதாகி சில நாட்கள் சிறையிலடைக்கப்பட்டார். 1912ல் ஆங்கிலேயக் கவிஞர் டபிள்யூ.பி.ஈட்ஸ் மூலமாக

ரவீந்திரநாத் தாகூரின் கவிதைகளைப் பற்றி இருவரும் அறிந்து கொண்டனர். இரண்டு ஆண்டுகள் கழித்து இருவரும் 1915ல் இந்தியாவுக்கு வந்தனர். அன்னிபெசன்ட் நிறுவி நடத்திவந்த 'நியூ இந்தியா' பத்திரிகையில் ஜேம்ஸ் கசின்ஸ் பணியாற்றினார். மார்கரெட் மதனப்பள்ளி கல்லூரியில் ஆங்கில ஆசிரியையாக பணியாற்றினார். பூனாவில் செயல்பட்டுவந்த இந்திய மகளிர் பல்கலைக் கழகத்தில் 1916ம் ஆண்டு முதலாவது இந்தியரல்லாத பணியில் சேர்ந்தார். 1917ல் அன்னிபெசன்ட், டோரதி ஜீனராஜதாஸாவுடன் இணைந்து இந்திய மாதர் சங்கத்தை நிறுவினார். ஸ்திரீ தர்மம் பத்திரிகையின் பதிப்பாளராக மார்கரெட் பணிபுரிந்தார். 1919–20களில் மங்களூரில் இருந்த தேசிய மகளிர் பள்ளியின் முதலாவது தலைமைப் பொறுப்பேற்றார். 1922ல் இந்தியாவின் முதலாவது பெண் மேஜிஸ்ட்ரேட்டாக நியமிக்கப்பட்டார். 1927ல் இந்திய மாதர் சங்கத்தின் இணை நிறுவனராக இருந்து 1936 வரை அதன் தலைவியாக பணியாற்றினார். பெண்களின் வாக்குரிமைக்காக சென்னையில் ஒரு குழுவை அமைத்து இந்தியாவுக்கான அமைச்சர் மாண்டேகுவை சந்தித்தனர்.[46]

1932ல் பெண்ணுரிமைப் போராட்டங்களில் கலந்து கொண்டதற்காக கைதாகி சிறைச் சென்றார். விடுதலைக்குப்பிறகு 1930களில் இந்திய பெண்ணுரிமைப் போராட்டங்களில் நேரடியாக பங்கேற்கவில்லை. 1943ல் பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டார். சென்னை அரசாங்கமும் பின்னர் நேரு தலைமையிலான அரசாங்கமும் அவர் இந்தியாவில் ஆற்றிய சேவையை பாராட்டி பல வகைகளில் ஆதரவு கரம் நீட்டியது. 1954ல் மறைந்தார்.

1922ல் ஆசிய பெண்மையின் எழுச்சி (The Awakening of Asian Womenhood) என்ற நூலையும், 1935ல் கிழக்கத்திய மற்றும் மேற்கத்திய இசை (The Music of Orient and Oxiccedent) என்ற நூலையும், 1941ல் இன்றைய இந்தியாவின் பெண்மை (Indian Womenhood Today) என்ற நூலையும் எழுதினார். சென்னை பிரம்மஞான சபையில் சென்னை சேவா சதன் மற்றும் குழந்தைகள் உதவி கழகத்தை (Children Aied Society) ஏற்படுத்தினார்.[47]

46. History AIWC *website –www.aiwc.org.in*, accessed on 24.12.2012.
47. THE HINDU, 15 March 1954.

## சரோஜினி நாயுடு

கவிக்குயில் என்று அழைக்கப்பட்ட சரோஜினி நாயுடு 1879ம் ஆண்டு பிப்ரவரி 13ம் நாள் ஐதராபாத்தில் பிறந்தார்.[48] தந்தை அகோரநாத் சட்டோபாத்யாயா. தாய் வரதசுந்தரி. அகோரநாத் மனைவியின் துணையுடன் பெண் கல்வியில் கவனம் செலுத்தினார். அவர் குழந்தைத் திருமணத்துக்கு எதிரானவர். பெண்கள் படிக்க தகுந்த பள்ளி ஐதராபாத்தில் இல்லாமல் போனதால் சரோஜினி சென்னைக்கு அனுப்பப்பட்டார். பள்ளி இறுதித் தேர்வில் முதல்வகுப்பில் தேர்ச்சி பெற்றார்.

1898ல் நாயுடுவை மணந்தார். நண்பர் கமலா சத்யநாதன் 1901ல் தொடங்கிய இந்திய மகளிர் இதழ் (Indian Ladies Magazine)[49] என்ற புகழ் பெற்ற இதழில் அவரது கவிதைகள் வெளியிடப்பட்டன. சரோஜினி கோகலேயுடனும் காந்தியுடனும் நட்புறவு பூண்டார். அவர்களுடன் தன்னை தேசிய இயக்கத்தில் ஈடுபடுத்திக் கொண்டார். 1922ல் மகாத்மாவைப் பற்றிய பெரிய நியாய விசாரணை நடைபெற்றது. சரோஜினி நீதிமன்ற நடவடிக்கைகளை கவனித்து பம்பாய் க்ரானிக்கல் என்ற இதழில் எழுதினார். மகாத்மா கைது செய்யப்பட்டப் பிறகு சரோஜினி அரவது பணியை மேற்கொண்டார். 1925 டிசம்பர் மாதம் கான்பூரில் நடந்த கூட்டத்தில் சரோஜினி நாயுடு காங்கிரஸின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.[50]

1930ல் காந்தி தண்டியில் உப்புச் சட்டத்தை மீறியபோது சரோஜினியும் கலந்துகொண்டார். 1931ம் ஆண்டு நடந்த வட்டமேஜை மாநாட்டிலும் சரோஜினி நாயுடு கலந்துகொண்டார். 1942ம் ஆண்டு வெள்ளையனே வெளியேறு போராட்டத்தில் கலந்துகொண்டதால் கைதானார். இவர் மகளிர் உரிமைக்காக பெரிதும் உழைத்தவர். 1949 மார்ச் 2ம் தேதி மறைந்தார். சி.ராஜகோபாலாச்சாரியார் அவரது இறுதிச் சடங்கில் உரையாற்றும்போது இவர் பெண்கள் விடுதலைக்குத் தலைவி என்று புகழ்ந்து பேசினார்.

---

48. பத்மினி சென் குப்தா, தமிழாக்கம் : மு.க.தங்கவேலன், *சரோஜினி நாயுடு*, ப.12.
49. *மேலது*., ப.26.
50. *மேலது*., ப.65.

டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி

1886ல் புதுக்கோட்டையில் பிறந்தார் முத்துலட்சுமி.[51] தந்தை எஸ்.நாராயணசாமி உயர் வகுப்பைச் சேர்ந்த ஒரு பார்ப்பணர். தாய் சந்திராம்மாள் இசை வேளாளர் வகுப்பைச் சேர்ந்தவர். புதுக்கோட்டை மகாராஜா கல்லூரியில் முதல்வராக இருந்த தந்தை முத்துலட்சுமியை பள்ளிக்கு அனுப்பி தரமான கல்வியை அளித்தார். வயது வந்தபிறகு பள்ளிக் கல்வி தடைபட்டாலும் வீட்டிலேயே கல்வி தொடர்ந்தது.

மகாராஜா கல்லூரியில் சேர்ந்து தனது உயர்கல்வியை அவர் தொடர விரும்பியபோது அன்றைய கல்லூரி முதல்வரும் மற்ற மாணவர்களின் பெற்றோரும் எதிர்ப்பு தெரிவித்தனர். தன்னால் எந்தவித பிரச்சனைகளும் ஏற்படாது என்று முத்துலட்சுமி உறுதியளித்த பிறகே கல்லூரியில் படிக்க அனுமதி கிடைத்தது. சென்னை மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து 1912ம் ஆண்டு மருத்துவ பட்டம் பெற்றார்.[52] சென்னை தாய்–சேய் நல அரசு மருத்துவமனையில் பயிற்சி மருத்துவராகப் பணியாற்றினார்.

கல்லூரியில் படிக்கும்போது சரோஜினி நாயுடுவை சந்தித்தார் முத்துலட்சுமி. பெண்களின் நிலை குறித்தும், பிரச்சனைகள் குறித்தும் அவருடன் விவாதித்தார். டாக்டர் டி.டி.சுந்தரரெட்டி என்பவரை 1914ம் ஆண்டு தனது இருபத்து எட்டாம் வயதில் முத்துலட்சுமி ரெட்டி மணந்து கொண்டார்.

இந்திய மாதர் சங்கத்தில் தலைமைப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட முத்துலட்சுமி ரெட்டி ஸ்திரீ தர்மம் பத்திரிகையில் பல கட்டுரைகளை எழுதி பெண்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்தினார். 1927ம் ஆண்டு சென்னை மாகாண சட்டசபைக்கு தேர்வு செய்யப்பட்டார். பெண் கல்வி, பெண்களின் சுகாதாரம் மற்றும் உடல்நலம் ஆகியத் துறைகளில் பல்வேறு பங்களிப்பை செய்தார் முத்துலட்சுமி. தேவதாசி ஒழிப்பு மசோதாவை சட்டசபையில் கொண்டுவந்ததும் நிறைவேற்றியதும் அவரின் முக்கிய பங்களிப்பாகும்.

---

51. Geraldine Forbes, *Opcit,* p.103.
52. *Ibid,* p.104.

## அம்புஜம்மாள்

1889ல் சென்னையில் பிறந்த அம்புஜம்மாளின் தந்தை எஸ்.சீனிவாச ஐயங்கார் மிகவும் பிரபலமான தேசியவாதி. 1920ம் ஆண்டு சென்னைக்கு வந்த மகாத்மா காந்தியும் கஸ்தூரிபாவும் தங்கள் வீட்டில் தங்கியிருந்தபோது அவர்களது எளிமையான வாழ்வை நேரில் கண்டு உணர்ந்து கொண்டார் அம்புஜம்மாள். இந்த நிகழ்ச்சி அவருக்குள் மிகப்பெரிய பாதிப்பை ஏற்படுத்தியது. தான் அணிந்திருந்த நகைகளை காந்தியிடம் நன்கொடையாக அளித்தார். பட்டுப்புடவையை தவிர்த்துவிட்டு காதி உடைக்கு மாறினார். 1930ல் சட்டமறுப்பு இயக்கத்தில் கலந்துகொண்டார். 1932ம் ஆண்டு கைது செய்யப்பட்டு நான்கு மாதங்கள் வேலூர் சிறையில் இருந்தார்.[53] 1940களில் இந்திய மாதர் சங்கத்தின் தலைமைப் பொறுப்பேற்ற அம்புஜம்மாள் சமூக சேவையில் தீவிரமாக ஈடுபட்டார்.

## சரோஜினி வரதப்பன்

சரோஜினி வரதப்பனின் தந்தை பக்தவச்சலம். 1963–67 வரையிலான காலக் கட்டத்தில் தமிழ்நாட்டின் முதலமைச்சராக பதவி வகித்தவர். 1921ம் ஆண்டு பிறந்த சரோஜினி சென்னையில் படித்தார். பிறகு மைசூர் பல்கலைக் கழகத்தில் முதுகலை பட்டம் பெற்றார். தனது இருபதாவது வயதில் இந்திய மாதர் சங்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டார். மத்திய சமூக நலவாரியத்தை 1963ல் நிறுவிய துர்காபாய் தேஷ்முக்குடன் சரோஜினியும் இணைந்து பணியாற்றினார்.[54]

நீண்ட அனுபவத்துக்குப் பின் சமூகநலவாரியத்தின் தலைமை பொறுப்பேற்ற சரோஜினிக்கு இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் மேற்கொள்ளும் வாய்ப்பு கிடைத்தது.[55] 1959 முதல் 1961 வரை அனைத்திந்தியப் பெண்களின் மாநாட்டில் கௌரவச் செயலாளராக பணியாற்றினார்.

1975ம் ஆண்டு பெர்லினில் நடந்த சர்வதேசப் பெண்கள் மாநாட்டில் கலந்துகொண்டார். தற்போது இந்திய மாதர் சங்கத்தின் சென்னை தலைவராகவும்,

---

53. S.P.Sen, *Dictionary of National Biography*, Vol-II, p.65.
54. Manohar Kaur, *Women in India's Freedom Struggle*, p.183.
55. Manohar Kaur, *Opcit,* p.260.

மத்திய சமூகநல வாரியத்தின் (CSWB) தலைவராகவும் பொறுப்பு வகிப்பவர். 1978ல் குடும்பக் கட்டுப்பாடு முழு உற்சாகத்துடன் பரவலாக்கப்பட வேண்டும் என்று துரிதப்படுத்தினார். மக்கள்தொகை ஒரு தேசியப் பிரச்சனை, ஆயினும் அதனைத் தொண்டு ஊழியர்களான அகில இந்தியப் பெண்கள் மாநாடு போன்ற அமைப்புகள் சவாலாக, ஒழுங்கான முறையில் உண்மையாகத் தங்கள் கைகளில் எடுக்க வேண்டும் என்று வலியுறுத்தினார். அப்பொழுதுதான் மக்கள்தொகை அதிகமாவதை தடுக்க முடியும் என்ற கருத்தைத் தெரிவித்தார். அந்த நேரத்தில் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டின் பல கிளைகள் சிறிது காலம் தங்களின் மையத்தை மூடியதோடு மட்டுமல்லாமல் ஆலோசனை கொடுப்பதையும் நிதியின்மையால் நிறுத்தி வைத்திருந்தன.[56] 1983ம் ஆண்டு அனைத்திந்தியப் பெண்கள் மாநாட்டின் தலைவராக அவர் தேர்வு செய்யப்பட்டார். தமிழ்நாடு சமூக நல வாரியம், ஸ்திரீ சேவா மந்திர், இளம் பெண்கள் கிருஸ்தவ அமைப்பு ஆகிய அமைப்புகளுடன் தன்னை தொடர்புபடுத்திக் கொண்டார் சரோஜினி வரதப்பன். பெண்கள் நலம், பாதுகாப்பு, சுகாதாரம் போன்ற ஆக்கப்பூர்வ பணிகளில் ஈடுபட்டார்.

மக்கள் தொகை ஆண்டாக 1974ம் ஆண்டு அறிவிக்கப்பட்டது. அகில இந்தியப் பெண்கள் மாநாடும் மற்றும் இந்திய மாதர் சங்கமும் இணைந்து "மக்கள் தொகை கோட்பாடுகளும் தேசிய முன்னேற்றமும்" என்ற தலைப்பில் கருத்தரங்கு ஒன்றை நடத்தியது. கலந்துரையாடல் நடத்தப்பட்டு அறிவுப்பூர்வமான குடும்பக் கட்டுப்பாடு மற்றும் கருச்சிதைவு வழிமுறைகளும் தேவை என எடுத்துக் கூறப்பட்டது.[57]

இந்திய மாதர் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சிப்படிகளும் தமிழ்நாட்டின் சமூக அரசியல் வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. உரிமைகள் மறுக்கப்பட்ட காலனி ஆதிக்கக் காலத்தில் வீட்டுக்குள் முடங்கியிருந்த பெண்கள் விழிப்புணர்வு பெற்றதும் தங்களது உரிமைகளைக் கோரி ஒருங்கிணைந்ததும் ஒரு மகத்தான எதிர்காலத்தின் அடையாளமாகவே இருந்தது.

---

56. ப.சு.சந்திர பாபு, இல.திலகவதி, *பெண் வரலாறும் விடுதலைக்கான போராட்டமும்*, ப.260.
57. *மேலது*, ப.526.

# இந்திய மாதர் சங்கத்தின் செயல்பாடுகள்

இந்திய மாதர் சங்கத்தின் செயல்பாடுகளை இரண்டு தளங்களில் ஆராயலாம். ஒன்று சமூகத்தளம் மற்றொன்று அரசியல்தளம். சமூகத்தளத்தில் பெண்கல்வி வளர்ச்சி, சமூகச் சட்டங்களுக்கு ஆதரவான பிரச்சாரம் போன்றவை முன்னுரிமை பெற்றன. அரசியல் தளத்தில் தேசிய இயக்கத்தில் பங்கு பெறுவது, பெண்களுக்கான வாக்குரிமையை வலியுறுத்துவது, தேர்தலில் பங்குபெறுவது ஆகியவை முக்கியத்துவம் பெற்றன. இத்தகைய செயல்பாடுகளில் இந்திய மாதர் சங்கமும் அகில இந்தியப் பெண்கள் மாநாடும் ஒருங்கிணைந்து ஈடுபட்டனர்.

## பெண்கல்வி

பெண் கல்வி சம்பந்தமாக பத்தொன்பதாம் மற்றும் இருபதாம் நூற்றாண்டில் அரசுக் கொள்கைகளில் பெரும் மாற்றங்கள் மேற்கொள்ளப்பட்டன. பெண்களுக்கான பள்ளிகள் நாட்டின் பல இடங்களில் ஆரம்பிக்கப்பட்டன. பெண்கல்வி வளர்ச்சிக்குப் பலபகுதிகளில் திட்டங்கள் அமைக்கப்பட்டன. ஆனால் இதன் வளர்ச்சி அவ்வளவு வேகமாகவும், சீராகவும் இல்லை. மெதுவாகவே வளர்ந்தது. 1871ல் நம் நாட்டில் ஆயிரத்து எழுநூற்று அறுபது ஆரம்பப் பள்ளிகளும், நூற்று முப்பத்துநான்கு மேல்நிலைப் பள்ளிகளும் இருந்தன. இதன் வளர்ச்சிக்குத் தனியாரின் முயற்சியே காரணமாகும். பெண்கள் பள்ளிகளுக்கு நிதியுதவி வழங்கியதன் மூலம் 1882ம் ஆண்டு இந்தியக் கல்விக் கமிஷன், பெண் கல்வியை பரவலாக்கியது.

எழுத்தறிவு வளர்ச்சி (1891–1941)[1]

| வருடம் | படித்தவர்கள் ஆண்–பெண் இருபாலரும் % | ஆண் % | பெண் % |
|---|---|---|---|
| 1891 | 6.1 | 11.4 | 0.5 |
| 1901 | 6.2 | 11.5 | 0.7 |
| 1911 | 7.0 | 12.6 | 1.1 |
| 1921 | 8.3 | 14.2 | 1.9 |
| 1931 | 9.2 | 15.4 | 2.4 |
| 1941 | 15.1 | 27.4 | 6.9 |

1. ஸ்திரீ தர்மம், பிப்ரவரி 1923, Vol.VI, No.4.

கல்வி மட்டுமே பெண்களிடத்தில் சுயமதிப்பையும் தன்னம்பிக்கையையும் வளர்த்து அவர்களை வலிமைபடுத்தும் என்று இந்திய மாதர் சங்கம் கருதியது. கல்வியில்மட்டுமே பெண் தனது சமத்துவத்தையும் விடுதலையையும் அடையமுடியும் என்று நம்பப்பட்டது. அதேசமயம் எத்தகைய கல்வியை இந்த அமைப்பு ஆதரித்தது எவ்வகையான கல்வித்திட்டத்தை பெண்களுக்கு பரிந்துரைத்தது என்பதும் ஆய்வுக்குரியது.

ஸ்திரீ தர்மம், சிந்தாமணி போன்ற பத்திரிகைகளில் பெண் கல்வி குறித்த தங்கள் கருத்துக்களை இந்திய மாதர் சங்கப் பெண்கள் பதிவு செய்திருக்கிறார்கள்.

“பண்டையக் காலத்தில் நம்நாடு சுபிட்சமாக இருந்ததற்கு காரணம் பெண்களுக்கு கல்வி அறிவு இருந்ததே ஆகும். கல்விகற்ற பெண் திறமைமிக்க மனைவியாக பொது விஷயங்களில் கணவனுக்கு ஆலோசனை கூறுபவளாக இருக்க முடியும். குழந்தைகளுக்கு நல்ல பழக்கவழக்கங்களையும் அவளால் சொல்லித் தரமுடியும்” என்று இந்திய மாதர் சங்கத்தைச் சேர்ந்த பி.வி.சரோஜினி தேவி கருத்து தெரிவித்துள்ளார்.[2]

பெண்களுக்காக தனிப்பட்ட கல்வி நிலையங்கள் இருக்க வேண்டும். அவற்றில் தாய்மொழியில் கல்வி கற்பிக்க வேண்டும். மனையியல் விஞ்ஞானம், உடற்பயிற்சி மற்றும் சுகாதாரம் ஆகியவையும் பரிந்துரைக்கப்பட்டன.

இந்திய மாதர் சங்கம் பெண் கல்விக்கென சில கோரிக்கைகளை முன்வைத்து அரசாங்கத்திடம் நிதியுதவி கேட்டது. ஆண்களுக்கும், பெண்களுக்கும் இலவசமான கட்டாயக் கல்வி சாதிமத வேறுபாடின்றி வழங்கப்பட வேண்டுமென்பது ஒரு முக்கிய கோரிக்கையாக இருந்தது.

முதல்நிலைக் கல்வி கிராமப்புறங்களிலும் நகர்புறங்களிலும் கட்டாயமயமாக்கப்பட வேண்டுமென்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. உயர்நிலைக் கல்வியும் பெண்களுக்கு அளிக்கப்பட வேண்டுமென்று முத்துலட்சுமி ரெட்டி அறிவுறுத்தினார். முஸ்லிம் பெண்களுக்கும் கல்வியை வற்புறுத்தி தீர்மானங்கள்

2. சிந்தாமணி, மார்ச்–ஏப்ரல், 1929.

இயற்றப்பட்டது.[3] 1934ம் ஆண்டு அரசாங்கம் பெண் கல்விக்கான, நிதி ஒதுக்கீட்டையும் சலுகைகளையும் குறைத்தது. இந்திய மாதர் சங்கம், அரசாங்கம் இதனை மறுபரிசீலனை செய்ய வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தது. இதன் அடிப்படையில் மீண்டும் அதே சலுகைகள் அரசாங்கத்தால் வழங்கப்பட்டன.[4]

இந்தக்காலக் கட்டத்தில் பெண்கள் வக்கீலாக தொழில் புரிவதற்கு எதிர்ப்பு இருந்தது. 1923ம் ஆண்டு பெண்களும் வக்கீல்களாகி வழக்காடலாம் என்ற ஒரு சட்டம் அரசாங்கத்தால் இயற்றப்பட்டது.[5] இதன்பிறகு மும்பை இந்திய மாதர் சங்கத்தைச் சேர்ந்த இரு பெண்கள் பாரிஸ்டர் பட்டம் பெற்றனர். இந்திய மாதர் சங்கம் அவர்களைப் பாராட்டியது.[6] தாய்மொழி தவிர ஆங்கிலம் இந்தி போன்றவையும் கற்பிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை முன்வைக்கப்பட்டது. கைவேலைப்பாடுகள், செவிலியர் பயிற்சி போன்றவை பெண் கல்வியின் ஒரு பகுதியாக வலியுறுத்தப்பட்டது. அதேசமயம் குழந்தை வளர்ப்பு, மனையியல் கல்வி ஆகியவற்றின் அவசியமும் வலியுறுத்தப்பட்டது.

ஆண்களுக்கும், பெண்களுக்கும் சமமான கல்வியை இந்திய மாதர் சங்கம் வலியுறுத்தியதா என்ற கேள்விக்கு விடை தேடுவது அவசியம்.

"உடற்கூறு ரீதியாக பெண் ஆணைவிட பலவீனமானவள். அதனால் அவள் பள்ளியில் ஒரு நாள் ஒரு மணி நேரம் படித்தால்போதும். அவள் வாழ்க்கைக்கு எது தேவையோ அவற்றைக் கற்றுக் கொண்டால்மட்டும் போதுமானது" என்று 1920ல் சென்னையில் நடந்த அகில இந்திய மாதர் சங்கத்தின் கூட்டம் ஒன்றில் திருமதி.எஸ்.சீனிவாச ஐயங்கார் கருத்து தெரிவித்தார்.[7]

இந்திய மாதர் சங்கத்தின் ஆதரவுடன் சென்னையில் ஸ்ரீசாரதா வித்யாலயா என்னும் பெண்கல்வி நிலையத்தைத் தொடங்கிய சகோதரி சுப்புலட்சுமி அம்மாள் அகில இந்தியப் பெண்கள் மாநாடு நடத்திய கல்வி சீர்திருத்த மாநாட்டில்

3. சுதேசமித்திரன், 18 ஜனவரி 1921.
4. G.O. No. 47, Law (General) Department, Goverement of Madras, February 6, 1934.
5. ஸ்திரீ தர்மம், மார்ச் 1923, Vol.VI, No.5.
6. *மேலது,* பிப்ரவரி 1923, Vol.VI, No.4.
7. *மேலது,* ஜனவரி 1921, Vol.IV, No.1.

கலந்துகொண்டு பெண்களுக்கு நன்னடத்தைப் பயிற்சியும் ஆன்மீக நெறிகளும் கட்டாயமாக்கப்படவேண்டும் என்ற தீர்மானத்தை வலியுறுத்தினார்.[8] பெண்களுக்கான தனிப்பட்ட பாரம்பரிய கல்விமுறையையே இந்திய மாதர் சங்கம் பரிந்துரைத்தது குறிப்பிடத்தகுந்தது.

## சமூக நலச் சட்டங்கள்

### குழந்தைத் திருமணம்

நமது குடும்ப அமைப்பின் கட்டமைப்பு தேச நலனை நிர்ணயிப்பதாக இருக்கிறது. அந்த குடும்ப அமைப்பின் மையப்புள்ளியாக இருப்பது பெண்கள்தான். குழந்தைத் திருமணம் என்பது பெண்களின் உடல் மற்றும் மனநலத்தை சீர்குலைப்பதாக அன்றைய சமூக சீர்திருத்தவாதிகள் கருதினர்.

எட்டு வயதிலும் ஒன்பது வயதிலும் திருமணம் செய்து வைக்கப்படும் சிறுமிகள் தங்களின் கணவரின் அறிவு வளர்ச்சிக்கு ஈடுகொடுக்க முடியாமல் தங்களை தாழ்மையாக உணர்ந்தார்கள். கணவன் என்பவன் ஒரு பெண்ணுக்கு கடவுளுக்கு இணையானவன். அவனுக்கு அடிபணிவதும் சேவை செய்வதுமே மனைவியின் கடமை என்று இந்து ஸ்மிருதிகள் கூறியிருப்பதால் அன்றைய சமூகம் இந்த ஏற்றத் தாழ்வை இயல்பாகக் கருதியது.[9]

இளம் வயதில் திருமணம் செய்துவைக்கப்படுவதால் கல்வி மறுக்கப்பட்டு கணவன் வீட்டில் பல்வேறு பொறுப்புக்களை சுமந்துகொண்டு உடல் மற்றும் உளவியல் பாதிப்புகளுக்கு ஆளாகும் நிலை பெண்களுக்கு இருந்தது. ஈரோடு நகரில் சுயமரியாதை இயக்கக் கூட்டத்தில் முத்துலட்சுமி ரெட்டி குழந்தைத் திருமணங்கள் குறித்த புள்ளிவிவரத்தை தெரிவித்தார். அதன்படி ஐந்து வயதுக்குள் திருமணமான பெண்களின் எண்ணிக்கை 2,18,463. பத்து வயதுக்குள் திருமணம் செய்து வைக்கப்பட்ட பெண்களின் எண்ணிக்கை 20,16,697.[10]

8. S.Anandhi, *Middle Class Women in Colonial Tamilnadu: Gender Relations and the Problem of Consciousness,* p.14.
9. A.S.Altekar, *The Position of Women in Hindu Civilization*, p.355.
10. ஸ்திரீ தர்மம், மே 1929, Vol.IX, No.7.

பெண்கல்விக்கு தடையாக இருக்கும் காரணங்களை ஆராய்ந்த இந்திய மாதர் சங்கம் குழந்தைத் திருமணமும் கைம்பெண் கொடுமையும் முக்கிய காரணங்களாக கண்டறிந்தது. சென்னையில் நடந்த கூட்டத்தின் தலைமையுரையில் பெண்களின் திருமண வயதை உயர்த்த வேண்டியதன் அவசியத்தை மார்கரெட் கசின்ஸ் வலியுறுத்தினார்.[11]

1927ம் ஆண்டு பூனாவில் நடந்த முதல் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டில் பதினாறு வயதுக்குமுன்பு பெண்களுக்கு திருமணம் செய்யக் கூடாது. பெண்களுக்கு பதினாறு வயதும் ஆண்களுக்கு இருபத்தொரு வயதும் நிறைவடைந்த பின்னரே திருமணம் செய்ய வேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.[12] இந்தத் தீர்மானத்தை மக்கள் மத்தியில் கொண்டுசெல்ல இந்திய மாதர் சங்கம் சுமார் எண்பது கூட்டங்களை நடத்தியது.[13]

பால்ய விவாகம் என்பது இந்தியப் பெண்களை பற்றிக்கொண்ட ஒரு சாபக்கேடாகவே இருந்தது. அறியாப்பருவத்தில் திருமணமும் அதனை ஒட்டிய கட்டுப்பாடுகளும் அவளது எல்லையை வரையறுத்தன. இதனாலேயே கல்வியும் மறுக்கப்பட்டது. இளம் விதவைகளின் எண்ணிக்கையும் பெருகியிருந்தது. மறுமணம் என்பதே இல்லாத நிலையில் இளம் விதவைகளை சமூக நடவடிக்கைகளிலிருந்து விலக்கிவைத்து தண்டித்தது இயல்பாக நடந்தேறியது.

பண்டைய பிராமணர்களே பெரும்பாலும் பால்ய விவாகத்தை புனிதமான மதச்சடங்காகக் கருதி நடத்தி வந்தனர். முற்போக்குச் சிந்தனையாளர்கள் இதை அடியோடு ஒழிக்க எண்ணினர். 1914ம் ஆண்டு டிசம்பர் மாதம் சென்னை மாகாண சட்ட ஆலோசனைசபை மூலம் பால்ய விவாகத்தை எதிர்த்து மசோதா அமைக்கப்பட்டது. ஒரு பெண்ணுக்குத் திருமணத்தின் அவசியத்தையும், அர்த்தத்தையும், குறிக்கோளையும் அறியும்முன்னே திருமணம் செய்து வைப்பதால்தான் விதவைகள் உருவாகின்றனர். இந்த மசோதாவானது விதவைகள் விகிதத்தைக் குறைக்கும் என்று எஸ்.சீனிவாச சாஸ்திரி நம்பினார். இந்த

---

11. ஸ்திரீ தர்மம், அக்டோபர் 1929, Vol.II, No.3.
12. S.Anandhi, *Opcit,* p.17.
13. *Ibid.,*

மசோதாவைச் சட்டமாக்கினால் இதனால் பெண்களுக்கு முறையான கல்வியளிக்க முடியும். மேலும் பெண்களின் நிலையை பெருமளவுக்கு மேம்படுத்த முடியும் என்று விவாதித்தார்.[14]

பொதுவாக அக்காலத்து இந்துக்கள் திருமணத்தை இரண்டுவித சடங்காகப் பிரித்து நடத்தினார்கள். நிச்சயதாம்பூலம் என்ற சடங்கை மிகச் சிறிய வயதிலேயே முடித்துவிடுவார்கள். பிறகு முறைப்படி திருமணம் நடந்தது. ஆண் குழந்தைகள் அதிகம் வெளியில் புழங்குவதாலும், நீச்சல், மரம் ஏறுதல் போன்ற சாகசங்களாலும் இறக்க நேர்வது சகஜம். குழந்தைப் பருவத்தை தாண்டும்போதே விதவைக் கோலத்தை அடையும் சிறுமிகளின் எண்ணிக்கை அதிகமாக இருந்தது. உயர் ஜாதிகளில் நிலவிய இந்தப்பழக்கம் அடுத்த மட்டங்களிலிருந்த ஜாதிகளிலும் ஊடுருவியிருந்தது. கோமுட்டி செட்டியார்கள் மற்றும் வைசியர்கள் போன்ற ஜாதியினரும் இந்த வழக்கத்தைக் கடைபிடித்தனர்.[15]

1927ம் ஆண்டு பிப்ரவரி 1ம் தேதி ராஜ்சாஹிப் எம்.ஹர்பிலாஸ் சார்தா என்பவரால் இந்து பால்ய விவாக மசோதா ஏகாதிபத்திய சட்டசபையில் அறிமுகப்படுத்தப்பட்டது. பால்ய விவாகத்தை கட்டுப்படுத்தவும் பதினொரு வயதுக்குமுன் திருமணம் செய்து வைப்பது தவறு என்றும் உணர்த்துவதே இந்த மசோதாவின் குறிக்கோள்களாகும். இந்த மசோதா இந்துக்கள், பிரம்மசமாஜத்தினர், ஆர்ய சமாஜத்தினர், புத்த மதத்தினர், சமண மதத்தினர் மற்றும் சீக்கியர்கள் என்று அனைவருக்கும் பொருந்தும். இந்து மதத்தைச் சேர்ந்த ஆணுக்கு பதினைந்து வயதும், பெண்ணுக்கு பன்னிரண்டு வயதுமே திருமணத்துக்கு உகந்த வயது என்றும் இதற்கும் இளையவர்களாக இருப்பின் அத்தகைய திருமணம் செல்லுபடியாகாது என்றும் இந்த மசோதாவில் முடிவெடுக்கப்பட்டது. இது ஏகாதிபத்திய சட்டசபையில் அறிமுகப்படுத்தப்பட்டது. 1927 செப்டம்பர் 15ல் சட்டசபையில் இந்த மசோதாவின் காரணகர்த்தாவாகிய சார்தா, பால்ய விதவை முறையை ஒழிப்பதே இதனுடைய நோக்கம் என்று தெரிவித்தார். அத்தகைய விதவைகளின் குழந்தைகளை முன்னேற்றுவதும் அவர்களுடைய மரணம் மற்றும்

14. ப.சு.சந்திர பாபு, இல.திலகவதி, *பெண் வரலாறும் விடுதலைக்கான போராட்டமும்*, ப.260.
15. P.Jagadeesan, *Marriage and Social Legislation in Tamilnadu*, p.52.

அழிவைத் தடுப்பதுவுமே இந்த மசோதாவின் இரண்டாவது நோக்கம் ஆகும். ஆளுநர் சபையின் ஒத்துழைப்போடும் உயர்நீதிமன்றம், சட்ட நிபுணர்களின் சங்கம் மற்றும் பிற உள்நாட்டு அதிகாரிகளின் ஒத்துழைப்போடும் இந்த மசோதா பற்றிய பல சுற்றறிக்கைகள் உள்நாட்டு அரசுக்கு அனுப்பப்பட்டன.[16]

1927 செப்டம்பர் 15ம் நாள் சிம்லா மாகாண சட்டசபையில் இந்து குழந்தைத் திருமண மசோதா தாக்கல் செய்யப்பட்டது. மாதர் அமைப்புகளின் சார்பாக முத்துலட்சுமி ரெட்டி அதே போன்ற ஒரு மசோதாவை சென்னை சட்டமன்றத்தில் தாக்கல் செய்தார். அதில் குறைந்தபட்சம் பெண்ணுக்கு பதினாறும், ஆணுக்கு இருபத்தொன்றும் திருமண வயதாக இருக்க வேண்டும் என்ற கோரிக்கை முன்வைக்கப்பட்டது. திருத்தப்பட்ட சார்தா மசோதா பெண்ணுக்கு பதினான்கும் ஆணுக்கு பதினெட்டும் திருமண வயதாக முடிவு செய்தது.

இந்திய மாதர் சங்கத்துக்கு பெண்களின் திருமண வயதை அவர்கள் நிர்ணயித்த பதினாறிலிருந்து பதினான்காக குறைத்தது அதிருப்தி அளித்தது என்றாலும் இம்மசோதாவை ஆதரிக்க முடிவு செய்தனர். இந்த மசோதாவுக்கு ஆதரவு தெரிவித்து தமிழ்நாடு முழுவதுமாக பிரச்சாரம் செய்த இந்திய மாதர் சங்கம், சுமார் ஆயிரத்து எழுநூறு கையெழுத்துக்களை இந்த மசோதாவுக்கு ஆதரவாக திரட்டி தந்தது.[17]

1928ல் நடந்த அகில இந்தியப் பெண்கள் மாநாட்டில் பால்ய விவாகத்துக்கு எதிராக துணைக்குழு ஒன்று நியமிக்கப்பட்டது. இந்தக்குழு ஒவ்வொரு மாகாணத்திலும் சார்தா மசோதாவுக்கு ஆதரவான பிரச்சாரத்தை ஒருங்கிணைப்பதில் ஈடுபட்டது.

இந்தச் சூழ்நிலையில் மாதர் அமைப்புகள் வைதீக பிராமணர்களிடமிருந்து கடும் எதிர்ப்பை சந்திக்க நேர்ந்தது. இந்து சாத்திரங்களுக்கு விரோதமானது என்ற அவர்களின் குற்றச்சாட்டுக்கு இந்திய மாதர் சங்கப் பெண்கள் தகுந்த பதிலை

16. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது,* ப.261.
17. S.Anandhi, *Opcit,* p.17.

முன்வைத்தனர். வைதீக குடும்பத்தை சேர்ந்த லேடி.சதாசிவ ஐயர் வேதத்திலிருந்து மேற்கோள்காட்டி அந்த காலத்தில் பெண்களின் திருமண வயது பதினெட்டாக இருந்தது என்று உறுதி செய்தார். முத்துலட்சுமி ரெட்டி பண்டைய சாஸ்திரங்களை மேற்கோள்காட்டி சரஹர் போன்றவர்கள் உடற்கூறு ரீதியாக பெண்ணுக்கு பதினாறு வயதும் ஆணுக்கு இருபத்து நான்கு வயதும் ஆரோக்கியமானது என்று நிறுவியதை உதாரணம் காட்டினார். வேத காலத்திலும் புராண காலத்திலும் ஒருபோதும் குழந்தைத் திருமணம் நடைபெறவில்லை. தமயந்தி, சீதை, சாவித்திரி போன்ற பெருமைமிகு பெண்களுக்கு தன் கணவரை தேர்ந்தெடுப்பதில் பூரண உரிமை இருந்தது என்று விவாதித்தார்.[18]

மருத்துவரான முத்துலட்சுமி ரெட்டி விஞ்ஞானபூர்வமாகவும் இந்தப் பிரச்சனையை விவாதித்தார். “ஒவ்வொரு உயிரினத்துக்குமே உடல் ரீதியான வளர்ச்சி முழுமையடைய குறிப்பிட்ட கால அவகாசம் தேவைப்படும். அதுவரை பொறுமையாக காத்திருத்தலே விஞ்ஞான ரீதியான அணுகுமுறை ஆகும். எலும்பு வளர்ச்சி, தசைகளின் வளர்ச்சி, நரம்பு மண்டலத்தின் வளர்ச்சி இவையனைத்தும் வலிமை அடையும்போதுதான் ஒரு பெண்ணால் தாய்மைக்குத் தயாராக முடியும். இதற்கு மாறாக சிறுமி பருவத்தில் திருமணம் செய்வது இயற்கைக்கு விரோதமானதாகும்”[19] என்றார்.

இந்திய மாதர் சங்கத்தினரின் விவாதம் அன்றைய வைதீக நெறியையும் ஆண் மேலாதிக்கத்தையும் அசைத்தது. “பிராமணர்கள் மற்ற விஷயங்களில் சாத்திரங்களை பின்பற்றுகிறார்களா. நீச்சபாஷையான ஆங்கிலத்தை படித்து நீச்ச சேவைசெய்து பணம் சம்பாதிப்பதுமட்டும் சாத்திர விரோதமில்லையா. வேத பாராயணம் செய்துகொண்டு தர்ம நெறிப்படி அவர்கள் வாழ்கிறார்களா” என்று கேள்விகளை எழுப்பினார்கள்.[20]

“சார்தா சட்டத்தை எதிர்ப்பவர்கள் தகுந்த வயதில் திருமணம் செய்யாவிட்டால் பெண்கள் கெட்டுப்போவார்கள் என்று கூறுகிறார்கள். நமது

18. S.Anandhi, *Opcit,* p.18.
19. *Ibid.*, p.19.
20. ஸ்திரீ தர்மம், அக்டோபர் 1931, Vol.XIV, No.12.

வழக்கப்படி தாலியைக் கட்டினாலும் பெண் ருதுவான பிறகு சிறிது காலம் கழித்துதான் புகுந்த வீட்டுக்கு அனுப்புகிறோம். அதுவரையில் நாம் எப்படி அவர்களைக் காப்பாற்றுகிறோம். அதேபோல் மூன்று வயதிலும் ஐந்து வயதிலும் விதவையான பெண்களை எப்படி காப்பாற்றுகிறோம்" என்பது போன்ற கேள்விகளை எழுப்பி எதிர்ப்பு வாதங்களுக்கு பதிலடி கொடுத்தார்கள்.[21]

சார்தா சட்டம் 1930ம் ஆண்டு நிறைவேற்றப்பட்டபோது மாதர் இயக்கங்கள் அதனை மிகப்பெரிய வெற்றியாக கருதின. இந்தச் சட்டத்தை மீறுவோருக்கு தண்டனையை கடுமையாக்க திருத்தம் கொண்டுவர அரசாங்கத்திடம் வேண்டுகோள் வைத்தனர். சென்னையில் ஒரு குழு சார்தா கமிட்டி என்ற பெயரில் உருவானது. ஜி.விசாலாட்சி, அம்மு சுவாமிநாதன், ராஜீவ்பாய் சிவராவ், திருமதி. சங்கரநாராயண ஐயர் ஆகியோர் அக்குழுவில் இருந்தனர். இந்தக்குழு இந்தச்சட்டத்தை மீறுபவர்களைக் கண்டறிந்து நீதிபதிகளிடம் சமர்ப்பித்தல், சட்ட மீறலைத் தடுப்பதற்கு நடவடிக்கை எடுத்தல் போன்றவற்றில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டது.[22] கடும் கண்காணிப்பு நடவடிக்கைகளுக்கு நடுவில் சார்தா சட்டத்தை மீறத் துணிந்தவர்கள் அருகிலிருந்த இந்திய அரசுகள் மற்றும் பிரெஞ்சுக்காரர்கள் ஆண்ட பாண்டிச்சேரி, காரைக்கால் ஆகிய பகுதிகளுக்கு இடம் பெயர்ந்து சென்று திருமணத்தை நடத்திக் கொண்டார்கள்.[23]

## தேவதாசி முறை

தேவதாசி என்ற வார்த்தை கோயிலுக்கு தங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் நடனப் பெண்களைக் குறிப்பதாகும்.[24] தேவதாசிகள் 'நித்திய சுமங்கலி' என்று மங்களம் பொருந்தியவளாக கருதப்படுகிறாள். ஒரு பெண்ணுக்கு சுமங்கலி தன்மை என்பது திருமணம் செய்வதன் மூலம் உணர்த்தப்படுகிறது. தாலி, பூ, தங்கம், நெற்றியில் இடப்படும் பொட்டு இவையே சுமங்கலியின் அடையாளமாகும். கணவனால் அளிக்கப்படும் இந்த சுமங்கலி அந்தஸ்து கணவன் இறந்த பிறகு

---

21. ஸ்திரீ தர்மம், அக்டோபர் 1931, Vol.XIV, No.12.
22. *மேலது,* ஜனவரி 1930, Vol.XII, No.4.
23. *மேலது,* ஜனவரி 1930, Vol.XII, No.4.
24. G.O.No. 407, Judicial Department, 2 October, 1924.

அகற்றப்பட்டுவிடும். எல்லா சுபகாரியங்களிலிருந்தும் அவள் அப்புறப் படுத்தப் படுகிறாள்.

ஆனால் தேவதாசியைப் பொருத்தவரையில் அவள் குடும்பம் என்னும் வட்டத்துக்குள் இல்லை. ஒரு ஆணுக்கு மனைவியாக்கப்படவில்லை. பல ஆண்களோடு தொடர்பு வைத்துக்கொள்பவள். ஆனால் அவள் எந்தக் காலத்துக்கும் சுமங்கலியாகக் கருதப்படுகிறாள். இந்த முரண்பட்ட கருதுகோளை விளக்குவது அவ்வளவு சுலபமல்ல.[25]

தேவரடியாள் என்னும் தமிழ்ச் சொல்லின் சமஸ்கிருத மொழிபெயர்ப்பே தேவதாசியாகும். தேவதாசி என்பவள் ஒரு பெண்ணின் திருமணத்தின்போது இடம்பெறும் பல வகையான சடங்குகள் மூலம் கோயிலில் உள்ள கடவுளுக்கு அர்ப்பணிக்கப்படுகிறாள்.

பல்லவர் காலத்திலே கோயிலுக்கும் கலைப் பெண்களுக்கும் இடையே இருந்த தொடர்புக்கு ஆதாரம் இருக்கிறது. ஆனாலும் சோழர் ஆட்சியின் போதுதான் தேவரடியாள் முறை அமைப்பு ரீதியாக வலிமைபெற்றது. ராஜராஜ சோழன் காலத்து கல்வெட்டு ஒன்றில் தேவதாசிப் பெண்களைப் பற்றிய குறிப்பு இடம் பெற்றிருக்கிறது. தஞ்சை கோவிலில் இருக்கும் கி.பி.1004ம் ஆண்டு கல்வெட்டு ஒன்று சுமார் நானூறு "தளிச்சேரிப் பெண்டுகள்" அந்தக் கோயில் பணியில் ஈடுபட்டதாக தெரிவிக்கிறது.[26]

கோயிலோடு சம்பந்தப்பட்ட தேவரடியாள் முறை, சமூக கலாச்சார சம்பிரதாயங்களால் உருவாக்கப்பட்டு வந்த தமிழரின் நீண்ட வரலாற்றில் ஒரு முக்கிய முரண்பாட்டைத் தோற்றுவித்தது. இந்த வரலாறு ஒழுக்கம், தூய்மை, கற்பு, கௌரவமிக்க குடும்ப அந்தஸ்து மொத்தத்தில் இவை யாவும் தெய்வீகத் தன்மையோடு இனங்காணப்படல் போன்ற கருத்துக்களால் உருவாக்கப்பட்டது. ஒரு இளம் தேவதாசி, சடங்குகள் அடங்கிய வைபவ முறையில் கடவுளுக்கு அர்ப்பணிக்கப்படுகிறாள். இதில் இடம்பெறும் சடங்குமுறைகள் பிராமணரது

---

25. செல்வி. திருச்சந்திரன், *தமிழ் வரலாற்றுப் படிமங்கள் சிலவற்றில் ஒரு பெண்நிலை நோக்கு*, ப.65.
26. Jogan Shankar, *Devadasi Cult : Sexological Analysis*, p.51.

கல்யாணச்சடங்கு முறைகளை ஒத்ததாய் உள்ளன. அவள் கோயில் வளாகத்தில் சென்று வசிக்கிறாள். நாட்டியத்திலும், இசையிலும் கடும் பயிற்சி பெறுவது அவளுக்கு அவசியமானது. ஒரு ஆண் அவளின் காப்பாளராக ஏற்றுக் கொள்ளப்படுகிறார். ஆனால் அப்படி ஏற்றுக்கொள்ளப்படுவர் திருமணமானவராய் இருக்க வேண்டும் என்பது மரபாகும். அவளுக்கு இல்லற தர்மம் வலியுறுத்தப்படவில்லை. குடும்பம் என்ற அமைப்பு அவளைக் கட்டுப்படுத்தவில்லை. அவள் தன்னை இசைக்கும் நடனத்துக்கும் அர்ப்பணித்து விடுகிறாள். இத்தோடு அவள் கோயிலுக்கும் பலவித கடமைகளை செய்ய வேண்டியவளாகிறாள். விளக்கேற்றுதல், திருவிழாக் காலங்களில் தெய்வ உருவங்கள் ஊர்வலமாக வரும்போது நடனமாடுதல், சாமரம் வீசுதல் போன்றவை அவள் கோயிலுக்குச் செய்ய வேண்டிய கடமைகளில் சிலவாகும்.

## தேவதாசி முறையின் வீழ்ச்சி

பிரிட்டிஷார் நாட்டைக் கைப்பற்றிய பின்னர் கோயில்கள் அரசின் கவனிப்பிலிருந்து கைவிடப்பட்டன. இந்த வெற்றிடத்தை நிரப்புவர்களாய், சடங்குகளையும் அதன் தூய்மையைப் பேணும் உரிமையையும் சாக்காகக் கொண்டு பிராமணர்கள் கோயில் அதிகாரங்களைக் கைப்பற்றினர். இதற்கு உள்ளூர் நிலக்கிழார்கள் தமது சமூக, பொருளாதார ஆதிக்க அடிப்படையில் அவர்களுக்கு ஒத்துழைப்பு வழங்கினர். அதனால் தேவதாசிகள் இவர்களின் வைப்பாட்டிகளாக மாறினர். அவர்கள் தமக்குரிய சடங்குகளையும் சமூக அந்தஸ்தையும் இழந்தனர். இதனால் அவர்கள் ஆண்களின் காம இச்சையைத் தீர்க்கும் போகப்பொருள் என்னும் படிமத்தையே பெற்றுக் கொண்டனர்.

பிரிட்டிஷ் அரசாங்கம் பெண்களை கோவிலுக்கு நேர்ந்துவிடும் வழக்கத்துக்கு முடிவுகட்ட சில முயற்சிகளை எடுத்தது. 1873ம் ஆண்டு கவர்னர் ஜெனரல் ஆணைப்படி இந்தப்பழக்கம் தடை செய்யப்பட்டது. ஆனால் பாண்டிச்சேரி காரைக்கால் ஆகிய பிரெஞ்சு ஆதிக்கப்பகுதிகளுக்கு அழைத்துச் சென்று பொட்டுக் கட்டும் பழக்கம் நீடித்தது.[27]

27. G.O.No. 266, Home Department, Government of India, August 1873, NA.

தேசியவாதிகளும், சமூக சேவையாளர்களும் தேவதாசிகள் என்னும் அமைப்பின் தேவைபற்றி கேள்வியெழுப்பியதோடு அது இந்திய பண்பாட்டுக்கு ஒரு கறை என்ற கருத்தை முன்வைத்தனர். பெண்களை ஜாதியின் பெயராலும் பிறப்பின் அடிப்படையிலும் இப்படி சீரழிக்கும் முறையை ஒழித்துக் கட்டவேண்டும் என்பதற்கான முதல் குரல் அந்த சமூகத்திலிருந்தே புறப்பட்டது.

திருவாரூரைச் சேர்ந்த கிருஷ்ணசாமி, சின்னம்மாள் ஆகியோரின் மகளாக 1883ல் பிறந்த ராமாமிர்தம் அம்மையார், மேடை ஏறி சொற்பொழிவாற்றும் திறமையாளரானார். அப்போதெல்லாம் மேடை ஏறிப் பேசக்கூடிய பெண்கள் மிகமிகக் குறைவு. அதில் ராமாமிர்தம் ஒரு முன்னோடி. திரு.வி.க. நடத்தி வந்த நவசக்தி இதழின் தீவிர வாசகராக இருந்த ராமாமிர்தம், காங்கிரஸ் இயக்கத்தால் கவரப்பட்டு அதில் பணியாற்றினார். காங்கிரசுக்குள் பெரியாரின் அணியில் கலந்தார். சமூகச் சீர்திருத்தமும் மூடநம்பிக்கை ஒழிப்பும் ராமாமிர்தத்துக்கு முக்கிய குறிக்கோள்களாயின. தேவதாசி முறையை ஒழிக்க வேண்டும் என்றால் முதலில் தேவதாசியாக ஒரு பெண்ணை கோவிலுக்கு பொட்டு கட்டிக் கொடுக்கும் பழக்கத்தை ஒழித்து, அவள் திருமணம் செய்து கொண்டு குடும்ப வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்று திட்டமிட்டார் ராமாமிர்தம்.[28]

1925ல் மாயவரத்தில் முதல் இசைவேளாளர் மாநாட்டை ராமாமிர்தம் முன்னின்று நடத்தினார். பொட்டு கட்டும் பழக்கத்திலிருந்து நமது ஜாதி வெளியே வரவேண்டும் என்று சுயஜாதியை விமர்சனம் செய்யும் மாநாடு இது என்று அறிவித்தார்.[29] மாநாட்டுக்குப்பின் ராமாமிர்தம் பல ஊர்களில் பொட்டறுப்பு சடங்குகளைத் தொடங்கினார். மேடையில் தேவதாசிப் பெண்கள் வந்து தாங்கள் கோயிலுக்கு கட்டிய பொட்டு எனப்படும் தாலியை அறுத்து எறிந்த நிகழ்ச்சிகள் பெரும் பரபரப்பை ஏற்படுத்தின. கொலை மிரட்டல், கூட்டமேடை எரிப்பு, கூட்டத்தில் கலவரம் போன்ற எதிர்ப்புகளுக்கெல்லாம் அஞ்சாமல் இயங்கியவர் ராமாமிர்தம். இவர் செய்த பணிதான் டாக்டர்.முத்துலட்சுமி ரெட்டிக்கு உத்வேகம் தந்தது.

---

28. ஞாநி, *நெருப்பு மலர்கள்,* ப.27.
29. *மேலது.,*

இந்திய மாதர் சங்கத்தில் சேர்ந்த டாக்டர்.முத்துலட்சுமி ரெட்டியின் தாய் சந்திரம்மாள் இசை வேளாளர் சமூகத்தைச் சேர்ந்தவர். பெரும் எதிர்ப்புக்கு இடையில் மருத்துவக் கல்வி படித்த முத்துலட்சுமி, தேவதாசி முறைக்கு முற்றுப்புள்ளி வைப்பதை முக்கிய லட்சியமாகக் கொண்டிருந்தார். கல்லூரி மாணவியாக இருந்தபோது சரோஜினி நாயுடுவை சந்தித்த முத்துலட்சுமிக்கு பெண்களுக்கான உரிமைப் போராட்டத்தில் ஆர்வம் பிறந்தது. இந்திய மாதர் சங்கத்தின் பிரதிநிதியாக சென்னை சட்டமன்றத்துக்கு தேர்வு செய்யப்பட்டார் முத்துலட்சுமி ரெட்டி. தேவதாசி முறை ஒழிப்பு மசோதாவை கொண்டுவந்து சட்டசபையில் அதற்கு ஆதரவு தேடினார் முத்துலட்சுமி. அப்போது காங்கிரஸ் கட்சியின் முக்கியத் தலைவரான திரு.சத்தியமூர்த்தி தலைமையில் பல அங்கத்தினர்கள் இதற்கு எதிர்ப்பு தெரிவித்தார்கள். மிகக் கடுமையான விவாதம் நடைபெற்றது.

சட்டமன்றத்துக்கு உள்ளேயும் வெளியேயும் இந்த மசோதாவைப் பற்றி எல்லாத் தளங்களிலும் விவாதம் நடைபெற்றது. தனக்கு ஆதரவு வேண்டிய முத்துலட்சுமி ரெட்டி இந்திய மாதர் சங்கக் கூட்டங்களில் உரையாற்றினார். ஸ்திரீ தர்மம் பத்திரிகையிலும் தேவதாசி முறை ஒழிக்கப்பட வேண்டியதன் அவசியம் குறித்து பல கட்டுரைகளை எழுதினார்.

“சென்னை ராஜதானியில் இப்போது எடுக்கப்பட்டுவரும் முயற்சிகள் வெறும் ஆரம்பநிலை முயற்சிகள்தான். இந்துமத அறநிலையச் சட்டம் திருத்தப்பட்டு தேவதாசிகளின் இசை மற்றும் நடனப் பணிகளுக்காக கோயில்கள் மானியம் அளித்து ஆதரிப்பதை தடுப்பது அவசியம். பெண்கள் சிறுமிகளாக இருந்தாலும் வயது வந்தோராக இருந்தாலும் கோயில்களுக்கு அர்ப்பணிப்பதை ஒருபோதும் ஆதரிக்கக்கூடாது. ஒழுக்கமற்ற பெண்கள் பெண் குழந்தைகளை தத்தெடுக்கும் வழக்கத்தையும் சட்டப்படி தடை செய்யவேண்டும். இத்தகைய கருத்துக்களுக்கு பொதுமக்களின் ஆதரவை திரட்ட வேண்டும்” என்று கருத்து தெரிவித்தார் முத்துலட்சுமி ரெட்டி.[30]

---

30. ஸ்திரீ தர்மம், மார்ச் 1929, Vol. XII, No.5.

இதற்கு இந்திய மாதர் சங்கம் முழு ஆதரவு தெரிவித்தது. 1927ம் ஆண்டு தேவதாசி முறையை ஒழிக்க மசோதா ஒன்றை முத்துலட்சுமி ரெட்டி சென்னை சட்டமன்றத்தில் கொண்டு வந்தார். 1929ம் ஆண்டில் கல்வி மற்றும் சமூக சீர்த்திருத்தம் குறித்த அகில இந்தியப் பெண்கள் மாநாட்டு கூட்டத்தில் சகோதரி விசாலாட்சி அம்மாள் தேவதாசி முறையை கண்டித்தும் மசோதாவை வரவேற்றும் தீர்மானம் இயற்றினார்.[31] இந்த முறை ஒழிக்கப்பட்ட பிறகு பாதிப்புக்கு ஆளான இளம் பெண்களுக்கு பள்ளிகளையும் இல்லங்களையும் நிறுவி அவர்களை மீட்க வேண்டும் என்ற ஆலோசனை வழங்கப்பட்டது.[32]

காங்கிரஸ் கட்சியுடன் முரண்பாடு ஏற்பட்டதால் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தில் இணைந்து தேவதாசி முறைக்கு எதிரான வாதங்களை முன்வைத்தவர் மூவலூர் ராமாமிர்தம் அம்மையார். முத்துலட்சுமி ரெட்டியோ காங்கிரசை விட்டு வெளியேறாமல் சென்னை மாகாண காங்கிரஸ் தலைவர்களின் பிற்போக்கு பார்வையை கண்டித்து காந்திக்கு கடிதம் எழுதினார். காந்தி, முத்துலட்சுமி ரெட்டியின் இயக்கத்தை ஆதரித்து கருத்து தெரிவித்தார். முத்துலட்சுமி ரெட்டி கொண்டுவந்த தேவதாசி முறை ஒழிப்பு மசோதாவை பெரியார் ஆதரித்தார்.[33] 1938ம் ஆண்டு சட்டமன்றத்தில் தேவதாசி ஒழிப்பு மசோதா நிறைவேறியது. அதன்படி பிறப்பின் அடிப்படையில் பெண்கள் பொட்டு கட்டும் வழக்கத்துக்கு ஆளாவதும் தடைசெய்யப்பட்டது. தொடர்ந்து சென்னை மாகாணத்தில் முத்துலட்சுமி ரெட்டி தேவதாசி முறையை எதிர்த்துப் பல போராட்டங்கள் நடத்தினார். தேவதாசி இன பெண்கள் சங்கத்தைச் சேர்ந்தவர்களிடமிருந்து பெரும் ஆதரவு பெற்றார் இவர்.

## அரசியல் செயல்பாடுகள்

ஆரம்பத்திலிருந்தே மாதர் அமைப்புகள் சமூக பிரச்சனைகளுடன் மட்டும் நின்றுவிடாமல் அரசியலிலும் ஆர்வம் காட்டினார்கள். தாங்கள் அரசியலில் ஈடுபடலாமா கூடாதா என்பது குறித்து மாதர் இயக்கப் பெண்களிடையே விவாதம்

31. *மேலது.,* அக்டோபர் 1929, Vol. III, No.3.
32. *மேலது.,* செப்டம்பர் 1927, Vol. X, No.11.
33. கோ.கேசவன், *சுயமரியாதை இயக்கமும் பொதுவுடைமையும்,* ப.87.

நடந்தது. இந்திய மாதர் சங்கத்தைச் சேர்ந்த அன்னிபெசன்ட், மார்கரெட் கசின்ஸ் ஆகியோர் ஏற்கனவே தேசிய இயக்கத்தில் ஈடுபட்டிருந்தவர்கள். இருந்தபோதிலும் அவர்கள் அரசியல் தவிர்த்த சமுதாய பிரச்சனைகளை மட்டுமே முன்னெடுத்து செல்லக்கூடிய ஒரு இயக்கம் உருவானால்தான் பல்வேறு தரப்பிலுள்ள பெண்களையும் அதில் ஈடுபடுத்த முடியும் என்று கருதினார்கள். அரசியலைத் தவிர்த்தால்தான் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆதரவுடன் சில சலுகைகளை பெறலாம் என்பதும் அவர்களின் நோக்கமாக இருந்தது. ஆனாலும் இந்திய மாதர் சங்கம், அகில இந்தியப் பெண்கள் மாநாடு ஆகிய இரண்டு அமைப்புகளிலும் பெண்கள் அரசியலில் ஈடுபடுவது பற்றிய விவாதம் நடைபெற்றது.

1930ல் காந்தியை கைதுசெய்தபோது அதற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் தனது சட்டசபை அங்கத்தினர் பதவியை ராஜினாமா செய்தார் முத்துலட்சுமிரெட்டி. சட்டமறுப்பு இயக்கத்தின்போது 'யங் இந்தியா' பத்திரிகையில் 'உப்புசத்தியாகிரகத்தில் பெண்கள் கலந்து கொள்ளத் தேவையில்லை' என்று காந்தி எழுதியிருந்ததற்கு எதிர்ப்பு தெரிவித்த இந்திய மாதர் சங்கம், அந்தப் போராட்டத்தில் தீவிரமாக கலந்துகொண்டது. அம்புஜம்மாள், ருக்மணி லட்சுமிபதி, ஜானம்மாள் ஆகியோர் கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டு சிறை சென்றனர். ராட்டையில் நூல் நூற்பது, கைத்தறி துணிகளை விற்பது ஆகியவற்றிலும் ஈடுபட்டனர். இவ்வாறாக 1930களில் இந்திய மாதர் சங்கம் இந்திய தேசிய காங்கிரசின் அரசியல் நிலைபாட்டை ஆதரிக்கத் தொடங்கியது.[34]

அரசியலா சமூக பிரச்சனையா என்று வரும்போது இரண்டில் ஒன்றைதான் தேர்ந்தெடுக்க முடியும் என்ற நிலைமை ஏற்பட்டபோது முத்துலட்சுமி ரெட்டி பெண்கள் நலனையே முக்கியமாகக் கருதினார் என்பதும் வரலாற்று உண்மை. இந்திய தேசிய காங்கிரஸ், சைமன் கமிஷனை புறக்கணிப்பது என்ற முடிவை எடுத்தது. சைமன் கமிஷனின் ஒரு பிரிவாகிய ஹார்டாக் (HARTOG) கல்விக் கமிட்டியில் பெண்களுக்காக அறிவிக்கப்பட்ட பிரதிநிதித்துவத்தை ஏற்றுக் கொண்டார் முத்துலட்சுமி ரெட்டி. இதன் காரணமாக இந்திய மாதர் சங்க

34. S.Anandhi, *Opcit,* p.31.

அங்கத்தினர்கள் அவரை விமர்சனம் செய்தார்கள்.[35] அகில இந்தியப் பெண்கள் மாநாட்டைப் பொருத்தவரையில் அவர்களது குறிக்கோள் பெண் கல்வியும் சமுதாயச் சட்டங்களும்தான். இந்த இயக்கத்தின் அடிப்படை கொள்கைகளில் ஒன்று அரசியலைத் தவிர்ப்பது. ஆனாலும் 1930ல் அரசியலில் தீவிரமாக ஈடுபட்ட இந்த இயக்கத்தைச் சேர்ந்த பெண்கள் அரசியலைத் தவிர்க்க வேண்டும் என்ற அடிப்படைக் கொள்கையை மாற்ற வேண்டும் என்று கோரினார்கள்.

இந்த நிலைபாட்டின் காரணமாக சென்னை அரசாங்கம், அரசாங்கப் பணியிலிருக்கும் பெண்கள் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டின் அங்கத்தினர்களாயிருந்தால் அவர்களை பணிநீக்கம் செய்யும் முயற்சியை எடுத்தது. இதனைத் தொடர்ந்து சகோதரி சுப்புலட்சுமி, அகில இந்தியப் பெண்கள் மாநாட்டிலிருந்து விலகிக் கொண்டார். இந்திய சமஸ்தான பகுதிகளிலிருந்த இந்தியப் பெண்கள் மாநாட்டுக் கிளைகளும் சென்னை கிளையிலிருந்து விலகுவதாக அறிவித்தன. இந்த நிலைமைக்கு எதிப்பு தெரிவித்தது இந்திய மாதர் சங்கம்.[36]

இந்த இயக்கத்தின் அரசியல் ஈடுபாடு அவர்களது பெண்ணுரிமை அக்கறையிலிருந்து விலகவைத்தது என்றாலும் வாக்குரிமை போன்ற விஷயங்களில் தீவிரமாக ஈடுபடுத்தியது.

1917ம் ஆண்டு டிசம்பர் 1ம் நாள் மாண்டேகு செம்ஸ் போர்டு சென்னையில் இருந்தபோது பதினான்கு பெண்களைக் கொண்ட அகில இந்தியப் பெண்கள் தூதுக்குழு ஒன்று பெண்களுக்குப் பாலின சமத்துவ அடிப்படையில் வாக்குரிமை வழங்க வேண்டுமென்று கோரியது. இதுவே இந்தியாவில் விழிப்புணர்வுமிக்க பெண்கள் இயக்கத்தின் ஆரம்பமாகவும் இருந்தது. அதன்பின் இந்திய மாதர் சங்கம் பெண்களுக்கு வாக்குரிமை வேண்டும் என்றும் பெண் என்பதால் அவள் தகுதியற்றவள் என்று கருதுவதைப் போக்கவும் பாடுபட்டது. இந்திய தேசியக் காங்கிரசுக்கும், இந்தியப் பெண்களுக்கு வாக்குரிமைகோரி பெண் பிரதிநிதிகள்

35. S.Anandhi, *Opcit,* p.31.
36. *Ibid,* p.32.

அனுப்பப்பட்டனர். இதன் பிரதிபலிப்பாக பெண் என்பதால் அவள் தகுதியற்றவள் என்று எடைபோடக்கூடாது. ஆணுக்கு வைக்கப்படும் சோதனைகளைப் பெண்களுக்கும் நடத்தி அவர்கள் வலிமையுடையவர்களா தகுதியுடையவர்களா என்று ஆராய வேண்டும் என்று இந்திய தேசிய காங்கிரஸ் அதன் வருடாந்திரக் கூட்டத்தொடரிலும் பல காங்கிரஸ் கமிட்டியிலும் தீர்மானங்கள் இயற்றியது. வாக்குரிமை விஷயத்தில் ஆண்–பெண் இருவரும் சமமே என்று தீர்மானத்தில் முடிவெடுக்கப்பட்டது.

"எதற்காக பெண்களுக்கு வாக்குரிமை என்று பலரும் கேட்கிறார்கள். நாங்கள் எல்லாப் பெண்களுக்கும் வாக்குரிமை கேட்கவில்லை. எந்த அடிப்படையில் ஆண்களுக்கு வாக்குரிமை வழங்கப்படுகிறதோ அதே அடிப்படையில்தான் பெண்களுக்கும் வாக்குரிமை வழங்கும்படி கேட்கிறோம். அது சொத்துரிமையாக இருக்கலாம். கல்வித்தகுதியாக இருக்கலாம். இந்த அடிப்படையில் ஒரு ஆணுக்கு வாக்குரிமை வழங்கப்படுமானால் அதே தகுதியுடைய பெண்ணுக்கு பால் வேறுபாடு காரணமாக அதை மறுப்பது நியாயமாகுமா."

"பர்தா அணிந்த பெண்களும் கோஷா பெண்களும் வாக்களிக்க முன்வரமாட்டார்கள் என்ற வாதம் நிலவுகிறது. அவர்கள் வசிப்பிடத்திற்கு சென்று வாக்குகளை சேகரித்துக் கொள்ளலாம். பெண்கள் வாக்குரிமை தந்தாலும் அவர்கள் அதனை பயன்படுத்தமாட்டார்கள் என்றுகூட வாதிக்கிறார்கள்."

"சரியானபடி ஊக்கம் தந்தால் பெண்கள் தங்கள் வாக்குரிமையை நிச்சயம் பயன்படுத்துவார்கள். பிரிட்டிஷ் ஆதிக்கத்தை எதிர்க்கும் ஆண்கள் பெண்கள்மீது தாங்கள் ஆதிக்கம் செலுத்துவதை உணர்ந்து தங்கள் மனப்பான்மையை மாற்றிக் கொள்ள வேண்டும்" என்று இந்திய மாதர் சங்கப் பெண்கள் ஆணித்தனமாக தங்களது வாதங்களை முன்வைத்தார்கள்.[37]

அவர்களது முயற்சி வீணாகவில்லை. சென்னை மாகாண சட்டமன்றம் பெண்களுக்கு வாக்குரிமை வழங்கிய அதே சமயம் தேர்தலில் போட்டியிடும்

37. ஸ்திரீ தர்மம், மார்ச் 1918, Vol.I, No.5.

உரிமையை மறுத்தது. இந்திய மாதர் சங்கம் இதற்கு எதிர்ப்பு தெரிவித்தது. 1918ம் ஆண்டு சௌத்பரோ கமிட்டி பெண்கள் வாக்குரிமை பற்றிய கேள்வியை ஆராய்ந்தது. பல இந்தியப் பெண்கள் அமைப்பின் கிளைகளும் வாக்குரிமை கோரி தங்கள் தீர்மானத்தை கமிட்டிக்கு அனுப்பியது. பெண்ணுக்கு வாக்குரிமை வழங்கும் அளவுக்கு இந்திய சமூக நிலை சரியாக வளர்ச்சியடையவில்லை என்று அந்தக் கமிட்டி அறிக்கையை சமர்ப்பித்தது. உள்ளாட்சி மன்றங்களில் பெண்கள் நியமிக்கப்படுவதையோ தேர்ந்தெடுக்கப்படுவதையோ தடைசெய்வது தவறு என்று வாதித்தது.

மாதர் அமைப்புகளின் தொடர் போராட்டத்தின் விளைவாக பிரிட்டிஷ் அரசாங்கம் 1926ம் ஆண்டு பெண்கள் சட்டமன்றத்துக்கு தேர்வு செய்யப்படலாம் என்று அறிவித்தது.[38]

இந்திய மாதர் சங்கம் தீவிரமாக பிரச்சாரம் செய்தும்கூட 1926ம் ஆண்டுத் தேர்தலில் ஒரு பெண் அங்கத்தினர்கூட தேர்வாகவில்லை. பெண் அங்கத்தினர்களே இல்லாமல் இருப்பதை ஒப்புக்கொள்ள முடியாத இந்திய மாதர் சங்கம் அரசாங்கம் தானே முன்வந்து பெண் பிரதிநிதிகளை நியமிக்க கோரியது. அதன் விளைவாக சென்னை மாகாண சட்டமன்றம், டாக்டர் முத்துலட்சுமி ரெட்டியை அங்கத்தினராக நியமித்தது. இவ்வாறாக அவர் சட்டசபையில் இடம் பெற்ற முதல் இந்தியப் பெண்மணி ஆனார்.

உள்ளாட்சி மன்றங்களிலும் பெண்கள் நியமிக்கப்பட்டார்கள். அலர்மேலு மங்கத் தாயாரம்மாள் கௌரவ மேஜிஸ்ட்ரேட்டாக நியமிக்கப்பட்ட முதல் பெண்மணி ஆவார். தூத்துக்குடி முனிசிபாலிட்டிக்கு லட்சுமி ஏகாம்பரமும், கோயமுத்தூர் மாவட்ட கல்வி கவுன்சிலில் லலிதா பால சுப்ரமணியமும் நியமிக்கப்பட்டார்கள்.[39]

ஆண்களுடன் தேர்தலில் போட்டியிடுவது கடினமாக இருந்ததால் பெண்கள் நியமன உறுப்பினர்களாக இடம்பெற வேண்டும் என்றும் அது இயலாமல் போனால்

38. சுதேசமித்திரன், 28 மே 1926.
39. S.Anandhi, *Opcit,* p.35.

தேர்தலில் போட்டியிட இடஒதுக்கீடு தரவேண்டும் என்றும் இந்திய மாதர் சங்கம் கோரிக்கை வைத்தது.

பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவுக்கு சுயாட்சி தருவது குறித்து விவாதிக்க வட்டமேஜை மாநாட்டுக்கு அழைத்தது. அந்த மாநாட்டில் பெண் பிரதிநிதிகளும் கலந்துகொள்ள வேண்டும், அவர்களது கருத்தும் அறியப்பட வேண்டும் என்று கோரிக்கை வைத்தது இந்திய மாதர் சங்கம்.

சரோஜினி நாயுடு, முத்துலட்சுமி ரெட்டி, பிரிட்ஜ்லால் நேரு ஆகியோர் இந்திய மாதர் சங்கத்தினால் தேர்வு செய்யப்பட்ட பிரதிநிதிகளாவர். ஆனால் அவர்களை புறக்கணித்த இந்திய அரசு ராதாபாய் சுப்பராயன்,[40] பேகம் ஷாநவாஸ் ஆகியோரை வட்டமேஜை மாநாட்டுப் பிரதிநிதிகளாக தேர்ந்தெடுத்தது. இந்திய அரசின் தேர்வை இந்திய மாதர் சங்கம் அங்கீகரிக்கவில்லை.

1931ம் ஆண்டு இந்திய மாதர் சங்கம், அகில இந்தியப் பெண்கள் மாநாடு, இந்தியப் பெண்களின் தேசிய கவுன்சில் என்ற மூன்று அமைப்புகளும் இணைந்து எதிர்கால இந்திய அரசியல் அமைப்பில் பெண்களின் நிலை குறித்த கருத்துக் குறிப்பு ஒன்றைத் தயாரித்தார்கள். இருபத்தொரு வயது நிரம்பிய ஆண்–பெண் இருபாலருக்கும் தேர்தலில் சமவாய்ப்பு தரப்படவேண்டும் என்று அதில் அறிவித்தார்கள். தொகுதி இடஒதுக்கீட்டையும் அவர்கள் மறுத்தார்கள்.[41]

காந்தி–இர்வின் ஒப்பந்தத்துக்கு பிறகு 1931ம் ஆண்டு இரண்டாவது வட்டமேஜை மாநாடு நடைபெற்றது. இதில் மாதர் அமைப்புகளின் பிரதிநிதியாக சரோஜினி நாயுடு கலந்துகொண்டார். இந்திய தேசிய காங்கிரசின் சார்பாக காந்தி கலந்துகொண்டார். பேகம் ஷாநவாஸ், ராதாபாய் சுப்பராயன் இருவரும் மீண்டும் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் தேர்வு செய்யப்பட்டனர். பேகம் ஷாநவாஸ், காங்கிரசின் கோரிக்கையான அனைவருக்கும் சமமான வாக்குரிமை என்ற நிலைபாட்டை எடுத்தார். ஆனால் ராதாபாய் சுப்பராயனோ இடஒதுக்கீட்டை வற்புறுத்தினார்.

40. Geraldine Forbes, *Women in Modern India*, p.107.
41. ஸ்திரீ தர்மம், ஜூலை 1931, Vol. XIV, No.9.

மாநாட்டின் இறுதியில் வெளியான வெள்ளை அறிக்கையின்படி, பிரிட்டிஷ் அரசாங்கம் வயதுவந்தோர் வாக்குரிமை பிரச்சனையை விவாதிக்க லோதியன் கமிட்டியை நியமித்தது. இந்திய தேசிய காங்கிரஸ் இந்தக் கமிட்டியை புறக்கணித்தது. ஆனால் இந்திய மாதர் சங்கம் கமிட்டி முன்பாக தங்கள் கோரிக்கையை முன்வைத்தது. 4:1 என்ற விகிதத்தில் இந்தக் கமிட்டி பெண்களுக்கு வாக்குரிமையை வழங்கியது. தனித்தொகுதியையும் வழங்கியது. அனைத்து மாதர் இயக்கங்களும் இந்த பரிந்துரையை நிராகரித்தன.[42]

1933ம் ஆண்டு மூன்றாவது வட்டமேஜை மாநாட்டின் முடிவில் 1:10 என்ற விகிதத்தில் பெண்களின் வாக்குரிமை மிகவும் குறைக்கப்பட்டது. தவிர பெண்களுக்கு மத அடிப்படை தொகுதியையும் பரிந்துரைத்தது. இதற்கு இந்திய மாதர் சங்கமும் அகில இந்தியப் பெண்கள் மாநாடும் கடும் எதிர்ப்பு தெரிவித்தன. ஆனால் பேகம் ஷாநவாஸ் முஸ்லிம் பெண்களுக்கு தேர்தலில் போட்டியிட கிடைக்கும் வாய்ப்பை எண்ணி இந்தப் பரிந்துரைகளை ஏற்றுக்கொண்டார். இதைத் தொடர்ந்து அனைத்து மாதர் இயக்கங்களும் இந்த வெள்ளை அறிக்கைக்கு எதிராக குரல் கொடுத்தனர். தங்களது கோரிக்கையான வயது வந்தோர் வாக்குரிமை மற்றும் இடஒதுக்கீடு தவிர்த்து பொதுத் தொகுதிகள் என்ற கோரிக்கையை முன்வைத்து மற்றொரு கருத்துக்குறிப்பை வெளியிட்டனர்.

1935ம் ஆண்டு இந்திய அரசுச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. கல்வித்தகுதி, சொத்துரிமை ஆகியவற்றின் அடிப்படையில் இருபத்தொரு வயது நிரம்பிய பெண்களுக்கு வாக்களிக்கும் உரிமை வழங்கப்பட்டது. இதை மாதர் இயக்கங்கள் ஏற்கவில்லை. ஏனென்றால் அவர்களது கோரிக்கையான வயது வந்தோர் வாக்குரிமை இதில் இடம் பெறவில்லை. மாதர் அமைப்புகளின் கருத்தைக் கேட்டு தெரிந்து கொள்ளாமலே காங்கிரஸ் கட்சி இந்தச் சட்டத்தை வரவேற்றது. மாதர் இயக்கங்களில் இருந்த தேசிய இயக்கப் பெண்களின் வற்புறுத்தலால் தேர்தலில் பங்குகொள்ள பெரும்பான்மையானவர்கள் சம்மதித்தனர். முத்துலட்சுமி ரெட்டி சென்னையில் அவருக்கு அளிக்கப்பட்ட தொகுதி ஒதுக்கீட்டை ஏற்க மறுத்தார். ஆனாலும் இந்திய மாதர் சங்கமும் அகில இந்தியப் பெண்கள் மாநாடும் தேர்தலில்

42. ஸ்திரீ தர்மம், ஜூலை 1931, Vol. XIV, No.9.

போட்டியிட முடிவு செய்தனர். தொடர்ந்து ஸ்திரீ தர்மம் பத்திரிகையில் தங்களது வாக்குரிமையை பயன்படுத்திக்கொள்ள பெண்களிடையே விழிப்புணர்ச்சி ஏற்படுத்தினார்கள். பெண்களின் உரிமைகளை பாதுகாப்பவர்களுக்கு வாக்களிக்கும்படி கேட்டுக் கொண்டார்கள்.[43]

1937ல் சென்னை மாகாண தேர்தல் நடைபெற்றது. 31.5 சதவிகித பெண்கள் தங்களது வாக்குரிமையை பயன்படுத்தினார்கள். சி.ராஜகோபாலாச்சாரியின் தலைமையில் மந்திரிசபை அமைக்கப்பட்டது. அதில் ஒரு பெண் தலைவர்கூட மந்திரிசபையில் இடம் பெறவில்லை என்பது மாதர் இயக்கங்களுக்கு ஏமாற்றம் அளித்தது.[44]

## ஸ்திரீ தர்மம்

இந்திய மாதர் சங்கத்தின் செயல்பாடுகளில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது இந்த இயக்கம் நடத்திவந்த ஸ்திரீ தர்மம் பத்திரிகை. சற்றேறக்குறைய பதினெட்டு ஆண்டுகள் தொடர்ந்து வெளிவந்த இந்த மாத பத்திரிகையில் பெரும்பாலும் இந்திய மாதர் சங்கம் மற்றும் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டின் இயக்கச் செய்திகள் இடம் பெற்றன. பெரும்பாலான கட்டுரைகள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டன. அதே சமயம் தமிழ், தெலுங்கு, இந்தி ஆகிய வட்டார மொழிகளிலும் கட்டுரைகள் வெளியிடப்பட்டன. இவற்றில் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட கட்டுரைகள் அதிக முற்போக்காகவும், பகுத்தறியும் தன்மையுடனும் இருந்ததையும், தமிழ் கட்டுரைகள் அதிகமாக பாரம்பரிய வழியில் இருந்ததையும் வெளிப்படையாக பார்க்க முடிந்தது. ஒருவேளை தமிழ் இலக்கியத்தை மட்டுமே படித்தவர்களைவிட ஆங்கிலம் கற்றவர்கள் இந்த விஷயங்களில் அதிகமாக முற்போக்கு மற்றும் பக்குவமான சிந்தனைக்கு பழக்கப்பட்டவர்களாக இருந்திருக்கலாம்.[45] மேற்கூறிய கருத்துக்கு உதாரணமாக ஸ்திரீ தர்மம் பத்திரிகையில் இடம்பெற்ற ஒரு கட்டுரையின் சுருக்கம்:–

43. S.Anandhi, *Opcit,* p.42.
44. *Ibid.,*
45. மைதிலி சிவராமன், *ஒரு வாழ்க்கையின் துகள்கள்,* ப.94.

"கிருஹிணி" என்னும் பெயர் பெண்களுக்கான பெருமையாக கருதப்பட்டது. கணவன் வெளியில் சக்தியுள்ளவனாயினும், வீட்டில் பெண்ணே தலைவியாக கருதப்பட்டாள். பெண்மையின் உயர்வை எடுத்துக்காட்ட அயல்நாட்டுப் பெண்கள் முன்மாதிரிகளாக இந்தியப் பெண்களுக்குத் தேவையில்லை. சத்தியம், தா்மம், கற்பு முதலிய சிறந்த குணங்களே விலையில்லா ஆபரணங்களாக நம் பெண்களுக்கு இருந்து வருகிறது. தன் கணவனைத் தெய்வமென பாவித்து அவன் பார்வைக்கு நிலவாக பிரகாசிப்பதைத்தவிர ஒரு இந்து சிறுமிக்கு பேறு வேறு இல்லையெனக் கருதி வருவது அவர்களுக்கு மிக்க அழகாகுமே தவிர வேறொன்றுமில்லை. கணவனுக்கு தொண்டு செய்யவே மனைவி கடவுளால் படைக்கப்படுகிறாள் போன்ற விஷயங்கள் மேலை நாட்டைப்போல நம் நாட்டுக்குப் பொருந்தாது.[46]

அதே சமயம் பெண்களின் பிரச்சனைகள் குறித்து கூர்மையான விமர்சனங்களும் முன்வைக்கப்பட்டது. குழந்தைத் திருமணம் பற்றி டிசம்பர் 1922ம் ஆண்டு ஸ்திரீ தர்மம் பத்திரிகையில் எழுதப்பட்ட கட்டுரை இவ்வாறு கூறியது. 'மிகச் சிறிய வயதுள்ள மென்மையான பத்து பெண்களில் ஆறு பேருக்கு விதவையாகக் கூடிய ஒரு தண்டனையை அளித்து தமது சமூகத்தை சற்றும் நியாயமற்ற முறையில் நடத்துபவர்களுக்கு எப்படி கடவுள் சுயாட்சியை அளிப்பார்'.[47]

ஸ்திரீ தர்மம் பத்திரிகை உயர்வகுப்பு, மத்தியதர வகுப்பைச் சேர்ந்த பெண்களின் நலன்களை மட்டும் ஆதரிக்கவில்லை. உழைக்கும் பெண்கள் சந்தித்த சவால்களையும் எடுத்துக் கொண்டது. சுரங்கங்களின் கீழ்ப்பகுதியில் பெண்களும், குழந்தைகளும் பணி செய்வதை கண்டித்தது. சுரங்க சம்மேளனம் இந்தப் பணியை தடைசெய்தால் அது நாட்டிலுள்ள 'முக்கிய தொழில்களை அழித்துவிடும்' என்ற வாதத்தை கடுமையாக விமர்சித்தது. "தொழில் வளர்ச்சியானது பெண்கள், குழந்தைகளின் ஆரோக்கியத்தையும், மனநலனையும், மரபுகளையும் அழித்துதான் வரவேண்டுமென்றால் அது இல்லாமலிருப்பதே மேல்"[48] என்று வாதிட்டது.

46. ஸ்திரீ தர்மம், ஜனவரி 1923, Vol.VI, No.3.
47. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.95.
48. ஸ்திரீ தர்மம், பிப்ரவரி 1923, Vol.VI, No.4.

பெண்களின் பிரச்சனைகளான குழந்தை மணம், பலதார மணம், தேவதாசி முறை, சொத்துரிமை, விவாகரத்து என்ற அனைத்து பிரச்சனைகள் குறித்தும் பல விவாதங்களையும் கட்டுரைகளையும் வெளியிட்டது ஸ்திரீ தர்மம். இந்த காலக்கட்டத்தில் படித்த பெண்களுக்கிடையில் தங்கள் நிலை குறித்து எழுந்த கேள்விகளும் அதற்கு விடைதேட அவர்கள் முயன்றதையும் ஸ்திரீ தர்மம் பதிவு செய்திருக்கிறது.

ஸ்திரீ தர்மம் பத்திரிகை இந்திய மாதர் சங்கத்தின் பணிகள் குறித்து மட்டும் கட்டுரைகளை வெளியிடவில்லை. ஓரளவு விழிப்புணர்வு பெற்ற பெண்கள் தங்களது எண்ணங்களை வெளிப்படுத்தும் பிரச்சார மேடையாகவே செயல்பட்டது. இயக்கச் செய்திகளைத் தவிர விழிப்புணர்வு பெற்ற பெண்களின் அனுபவங்களும் பதிவு செய்யப்பட்டன. அதில் ஒரு முக்கியமான கட்டுரை 1930ம் ஆண்டு மார்ச் இதழில் வெளியிடப்பட்டிருந்தது.

இளம் வயதிலே கணவனை இழந்த பாகீரதி அம்மாள் என்ற விதவைப் பெண் தான் பொதுச் சேவையில் குறிப்பாக கிராம சேவையில் ஈடுபட்ட அனுபத்தை விவரித்திருக்கிறார்.

“நான் இளம் வயதிலேயே கணவனை இழந்தேன். தாயுமானவர் பாடல்கள் பாகவதம் ஆகிய நூல்களை படித்துத் தேர்ச்சி பெற்றேன். சகல ஜீவன்களுக்கும் பணி செய்வதே உண்மையான தொண்டு என்று உணர்ந்தேன். அப்போது என் வீட்டுக்கு வந்த தேசாபிமானி ஒருவர் ஊருக்கு வெளியே காட்டுப் பிரதேசத்தில் வசிக்கும் படிப்பறிவில்லாத மக்களுக்கு சேவை செய்வதன் அவசியத்தை என்னிடம் கூறினார். திருச்சி ஜில்லாவில் பழைய ஜெயங்கொண்ட சோழபுரம் என்ற அந்த ஊருக்குப் புறப்பட்டு சென்றேன். அந்த ஊரில் ஒரு வீட்டில் தங்கிக்கொண்டு அன்றாட பூஜையை முடித்துவிட்டு பாடல்களை பாடிக்கொண்டிருந்தேன். அப்போது அந்த ஊர்ப் பெண்கள் என்னைத் தேடிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் என்னிடம் நீங்கள் ஏன் இந்த ஊருக்கு வந்தீர்கள். உங்கள் ஜாதிக்காரர்கள் ஜாதியிலிருந்து தள்ளி விட்டார்களா. உங்கள் ஜாதிக்காரர்கள் இருக்குமிடத்தில் இல்லாமல் இங்கு ஏன் வந்து வசிக்கிறீர்கள் என்று பலவிதமாய் கேள்விகள் கேட்டார்கள். ஓரளவு

கல்வி ஞானமுடைய என்னால் உங்களுக்கு உதவ முடியும் என்ற நம்பிக்கையில் வந்திருக்கிறேன் என்று சொன்னேன். மெல்ல அவர்களுடன் பழகி அவர்கள் செய்யும் அன்றாட வேலைகளை எப்படி எளிமையாக செய்வது அதனால் எவ்வளவு நேரம் மிச்சமாகிறது என்று சொல்லிக் கொடுத்தேன். தினமும் அவர்கள் இரவு நேரத்தில் கதை கேட்பதற்கு என்னிடம் வருவார்கள். நல்லொழுக்கத்தை போதிக்கும் கதைகளை அவர்களுக்கு சொல்வேன். சுகாதாரமாக வாழ்வதன் அவசியத்தையும் எடுத்துச் சொன்னேன். அவர்களில் சில பெண்கள் கோலம் போடுதல், பக்தி பாடல்கள் பாடுதல் ஆகியவற்றில் தேர்ச்சி பெற்றார்கள். பிறரை பழித்துப் போசாமை வயதானவர்களுக்கு உதவுவது, தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கி வைத்தவர்களுக்கு தண்ணீர் இறைத்துக் கொடுப்பது போன்ற நல்ல பண்புகளை பழகிக் கொண்டார்கள். தினமும் குழந்தைகள் என்னிடம் வந்து நீதிக் கதைகளை கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். தேசியப் பாடல்களையும், பக்தி பாடல்களையும் கற்றுக் கொண்டார்கள். அன்பு செலுத்துவதன் மூலமும் அதிக கவனம் செலுத்துவதன் மூலமும் அந்தக் குழந்தைகளுக்கு பல நல்ல விஷயங்களை பதியவைத்தேன்.

என்னை நாடிவந்த குழந்தைகளுக்கு கல்வியில் ஆர்வத்தை ஏற்படுத்தினேன். சமூக சேவையிலும் ஈடுபடுத்தினேன். ஊரில் குப்பைகளை சேகரித்து தூய்மையை பேண கற்றுக் கொடுத்தேன். தனிப்பட்ட என் அனுபவத்தின் அடிப்படையில் விதவையான எத்தனையோபேர் வீட்டில் அடைந்து கிடக்கிறார்கள். ஊர் வம்பு பேசுகிறார்கள். ஞான நூல்களை படிக்கிறார்களே தவிர பாமரர்களிடம் வெறுப்பும் விலக்கமும் காட்டுகிறார்கள். இது தவறல்லவா.

இப்போது நம் தேசத்தில் கிராம சேவை செய்வதன் அவசியம் பற்றி நம் தேசத்தலைவர்கள் பேசி வருகிறார்கள். விதவைப் பெண்களுக்கு வாழ்க்கையில் ஓர் அர்த்தம் ஏற்படுத்திக் கொடுக்கும் கிராம சேவையே ஈஸ்வர சேவை என்பதை என் அனுபவத்தில் நான் அனுபவித்த மனநிறைவை என் போன்ற மற்ற சகோதரிகளும் அனுபவிக்க ஆசைப்படுகிறேன்".[49]

49. ஸ்திரீ தர்மம், மார்ச் 1930, Vol. XIII.

மேற்கூறிய கட்டுரையை இந்தியப் பெண்களுக்கு ஏற்பட்ட விழிப்புணர்வின் பிரதிபலிப்பாகக் கருதலாம்.

இந்தக் காலக்கட்டத்தில் இந்திய மாதர் சங்கம் எதிர் கொண்ட பிரச்சனைகள், விவாதங்கள், தீர்வுகள் என்று அனைத்தையும் பதிவு செய்திருக்கும் ஸ்திரீ தர்மம் ஓர் வரலாற்று ஆவணமாகும்.

**சுப்புலட்சுமி**

இந்தியப் பெண்கள் சங்கத்தில் பங்கு கொண்ட சுப்புலட்சுமி என்ற பெண்ணின் வாழ்க்கை பிற்காலத்தில் அவரது பேத்தியான மைதிலி சிவராமனின் முயற்சியில் தனிநபர் வரலாறாக பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்து உயர்சாதிக் குடும்பத்தில் 1897ம் ஆண்டு பிறந்தார் சுப்புலட்சுமி. நன்றாக படிக்கவிரும்பிய சுப்புலட்சுமிக்கு அவரது ஆசை நிறைவேறவில்லை. இளம் வயதிலேயே தந்தையை இழந்ததால் கல்வியும் தடைப்பட்டது. எழுதப் படிக்க கற்றவரான சுப்புலட்சுமி தனது மன போராட்டங்களை கையேடு ஒன்றில் பதிவு செய்தார். அது ஒன்றுதான் அவரது வாழ்க்கையின் போராட்டத்தை அறிந்து கொள்ளும் சான்றாக இருந்தது.

பதினொரு வயதாகும்போது பால்யவிவாகம் செய்து வைக்கப்பட்டவர் சுப்புலட்சுமி. கணவர் பி.ஆர்.கோபாலகிருஷ்ணனுக்கு அப்போது வயது இருபத்துமூன்று. உப்பு மற்றும் சுங்கத்துறையில் உதவி ஆய்வாளராக வேலைபார்த்து வந்தார். கணவருக்கு வெவ்வேறு பணியிடங்களுக்கு மாறுதல் ஆனபோதெல்லாம் புதிய சூழ்நிலைகளிலும் தனிமையான சூழ்நிலைகளிலும் தன் குழந்தையை வைத்து கொண்டு வாழ்க்கையை எதிர் கொண்டார் சுப்புலட்சுமி. முதல் பெண் குழந்தைக்கு பங்கஜம் என்று பெயர். அதன் பிறகு பிறந்த இரண்டு ஆண் குழந்தைகள் பிள்ளை பருவநோயால் இறந்து போனார்கள். சுப்புலட்சுமிக்கு கிரேஸ் சாமுவேல் என்ற பெண்ணுடன் ஆழ்ந்த நட்பு இருந்தது. தன் பெருமளவு வாழ்நாளை தனிமையில் கழித்த சுப்புலட்சுமிக்கு மிகப்பெரிய ஆறுதலாக இருந்தவர் கிரேஸ். இருவருக்கும் கடிதப்போக்குவரத்தும் இருந்தது. கிரேஸின் வாழ்வில் கணவருடன் அவருக்கு தோழமையும் நேசமும் இருந்தது. ஆனால் சுப்புலட்சுமிக்கு மணவாழ்வில் கசப்பும் ஏமாற்றமுமே மிஞ்சியது.

சென்னை, அடையாறில் உள்ள தியோசபிகல் சொசைட்டிக்கு அடிக்கடி சென்றுவருவார் சுப்புலட்சுமி. ஏற்கனவே பாரதியாரின் கவிதைகளால் ஈர்க்கப்பட்ட அவர் மெல்லமெல்ல அரசியலின்பாலும் ஈர்க்கப்பட்டார். தேச விடுதலை இயக்கத்தில் ஆர்வம் காட்டிய அவர் தன் கணவர் அரசுப் பணியில் இருந்த நிலையிலும் மன உறுதியுடன் காதி நிதிக்கு பணம் கொடுத்தார். கைராட்டையும் சுற்றினார். காந்தியின் மீது மதிப்பு கொண்டிருந்த சுப்புலட்சுமி காந்தியுடன் முரண்பட்ட தாகூரையும் மிகவும் போற்றினார்.

இந்திய மாதர் சங்கம் நடத்திய ஸ்திரீ தர்மம் பத்திரிகையை சுப்புலட்சுமி வாசித்தார்.[50] அகில இந்தியப் பெண்கள் மாநாடு 1927ல் தொடங்கப்பட்டபோது அதன் அமைப்புச் செயலாளரும், பொருளாளருமான கமலாதேவி சட்டோபாத்யாயாவுடன் சுப்புலட்சுமிக்கு தொடர்பு ஏற்பட்டது. சரோஜினி நாயுடுவின் சகோதரி மிருளாணினி சட்டோபாத்யாயாவையும் அவர் அறிந்திருந்தார். பெண்கல்வி குறித்து மார்கரெட் கசின்ஸ் ஆற்றிய உரையை அவர் கேட்கும் வாய்ப்பு பெற்றார். தன் மகள் பங்கஜத்திற்கு எப்படியாவது கல்வி கற்பிக்க வேண்டும் என்ற எண்ணம் அவரை ஆட்கொண்டது.

சுப்புலட்சுமியின் கனவு தன் மகள் பங்கஜத்தை ரவீந்திரநாத் தாகூர் உருவாக்கிய சாந்தி நிகேதனில் படிக்க வைக்க வேண்டும் என்பதே. ஆனால் நிறைவேற வாய்ப்பே இல்லாத இந்த கனவை அவர் வளர்த்துக்கொண்டு நிராசை அடைந்தார். சட்டோபாத்யாக்களுக்கு கடிதம் எழுதி அதற்கான முயற்சியும் செய்தார். ஆனால் கணவரோ தன் மகள் பங்கஜம் ஆங்கிலக் கல்வி கற்பதே கலாச்சாரத்திற்கு விரோதம் என்று கருதினார். ஓரிரு ஆண்டுகளில் பங்கஜத்துக்கு மணமுடித்துவிட வேண்டுமென்பதே அவரது எண்ணம்.

"நான் மறந்து விடுகிறேன்
என்னிடம் பறக்கும் குதிரை இல்லை என்பதை
நான் தனியே வசிக்கும் வீட்டில்
அனைத்துக் கதவுகளும் அடைக்கப்பட்டுள்ளன
என்பதை நான் எப்போதும் மறந்துவிடுகிறேன்"

---

50. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.96.

என்று தனது நாட்குறிப்புகளில் சுப்புலட்சுமி எழுதி வைத்திருந்த தாகூரின் கவிதை அவரது வாழ்க்கைப் போராட்டத்திற்கு பொருந்துவதாகவே இருந்தது.[51]

சுப்புலட்சுமிக்கு மனநிலையும் உடல் நிலையும் பாதிக்கப்பட்டது. இந்த நிலையில் பங்கஜம் பள்ளியிலிருந்து நிறுத்தப்பட்டார். பங்கஜத்துக்கு 1929ம் ஆண்டு பதினெட்டு வயதில் திருமணமானது.[52] குழந்தைத் திருமண தடைச்சட்டம் அவரது தந்தையின் அவசர திருமண முடிவிலிருந்து காப்பாற்றியது. பெண்ணுக்கு கல்வி கற்பித்து அவரை மருத்துவராக்கும் முடிவில் தோற்றாலும் குழந்தைத் திருமணத்திலிருந்து காப்பாற்றிவிட்டதில் மகிழ்ச்சியடைந்தார் சுப்புலட்சுமி. பிற்காலத்தில் தமிழிலும் ஆங்கிலத்திலும் நிறைய நூல்களைப் படித்து தனது தனித்துவத்தை வளர்த்துக் கொண்டார் பங்கஜம். தனது கல்விக்காக தந்தையுடன் கடுமையாக போராடிய தாய் சுப்புலட்சுமியை மிகவும் மதித்துப் போற்றினார் பங்கஜம். அவர் எழுதிய நாட்குறிப்புகள், அவர் சேகரித்த நூல்கள் ஆகியவற்றை ஒரு பெட்டியில் வைத்து பாதுகாத்தார். 1978ம் ஆண்டு தனது எண்பத்தி ஒராம் வயதில் சுப்புலட்சுமி இறந்தார்.[53] சுமார் முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு அவரது பேத்தியும் ஜனநாயக மாதர் சங்கத்தில் முக்கிய பொறுப்பு வகித்தவருமான மைதிலி சிவராமன் தனது பாட்டி விட்டுச் சென்ற குறிப்புகளை வைத்துக் கொண்டு அவரது போராட்ட வாழ்வை எழுதியுள்ளார்.

### தற்போது இந்திய மாதர் சங்கம்

1940க்குப் பிறகு இந்திய அரசியல்களம் மேலும் தீவிரமடைந்தது. காந்தியின் வேண்டுகோளுக்கிணங்க அனைத்துப் பிரிவினரும் தங்களது தனிப்பட்ட கோரிக்கைகளை ஒதுக்கிவிட்டு நாட்டு விடுதலைக்காக ஒருமுகமாக குரல் கொடுத்தனர். அரசியல் பிரச்சனை அதிக முக்கியத்துவம் பெற்றதில் சமூகப் பிரச்சனைகள் பின்னுக்குத் தள்ளப்பட்டன.

நாடு விடுதலையடைந்த பிறகு அகில இந்திய மாதர் சங்கமும் அகில இந்தியப் பெண்கள் மாநாடும் முன்பிருந்த அதே தீவிரத் தன்மையுடன்

51. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.137.
52. *மேலது*, ப.147.
53. *மேலது*, ப.154.

செயல்படவில்லை என்பது வரலாற்று உண்மை. அவர்களது சட்டரீதியான தீர்வுத் தேடல்களுக்கு அவசியமல்லாத வகையில் இந்திய அரசியல் சட்டம் முழு மனதுடன் ஏற்றுக்கொள்ளப்பட்டது. பால் சமத்துவ உரிமைகளும் வாக்குரிமையும் உறுதி செய்யப்பட்டது. அதன் பிறகு ஐம்பதுகளிலிருந்தே சேவை மையங்களாக மாறிவிட்ட இந்த அமைப்புகள் அவற்றில் சமூக சீர்திருத்த தன்முனைப்பை அடியோடு கைவிட்டன.

இந்த அமைப்பில் நீண்டகாலம் பொறுப்பிலிருந்த சரோஜினி வரதப்பன் இந்திய மாதர் சங்கம் குறித்த தம் நினைவுகளை பதிவு செய்திருக்கிறார். “ஆரம்பகாலத்தில் என்னுடைய அம்மா இந்திய மாதர் சங்கத்தில் அங்கத்தினராக இருந்தார். அவருக்கு பதிலாக சில கூட்டங்களுக்கு நான் போக நேர்ந்தது. அதன் பிறகு எனக்கே அந்த இயக்கத்துடன் இணைந்துகொள்ள ஆர்வம் பிறந்தது. இந்திய மாதர் சங்கம், அகில இந்தியப் பெண்கள் மாநாடு ஆகிய இரண்டு அமைப்புகளும் நடத்திய மாநாடுகளில் நான் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறேன். கோபன் ஹேகன், பெர்லின், நைரோபி, பெய்ஜிங் ஆகிய சர்வேதசப் பெண்கள் மாநாடுகளிலும் கலந்து கொண்டிருக்கிறேன். அகில இந்தியப் பெண்கள் மாநாட்டின் தலைமை பொறுப்பையும் நான் ஏற்று பல்வேறு திட்டங்களை செயல்படுத்தி இருக்கிறேன். இந்திய மாதர் சங்கத்தில் செயலாளர் பொறுப்பையும் ஏற்றிருக்கிறேன். பல சமூக சீர்திருத்த சட்டங்களை முன்னெடுத்துச் சென்ற பெருமை இந்த இயக்கத்துக்கு உண்டு” என்று நினைவு கூர்ந்தார்.[54]

தற்போது எழுபத்தைந்து கிளைகளுடன் இயங்கிவரும் இந்திய மாதர் சங்கம் சேவை நிறுவனமாக உருமாறியிருக்கிறது.

- பெண்கள் மற்றும் குழந்தைகள் நலத்தை பேணுவது
- பெண் கல்வியை வளர்ப்பது, தற்கால பிரச்சனைகளை தீர்ப்பது
- சமூக சீர்த்திருத்த சட்டங்களை உருவாக்குவது
- பெண்களை சமூக சேவையில் ஈடுபடுத்துவது
- பால் சமத்துவம், சம வாய்ப்பு, சமஉரிமை ஆகியவற்றுக்காக பாடுபடுவது

54. நேர்காணல் : *சரோஜினி வரதப்பன்*, 25 ஆகஸ்ட் 2011.

- வாழ்க்கையில் உயர் ஒழுக்க நெறிகளை குறிக்கோளாகக் கொள்வது
- தேசிய ஒருமைப் பாட்டுக்காகவும், உலக அமைதிக்காகவும் பாடுபடுவது

இவ்வாறு புதுப்பிக்கப்பட்ட குறிக்கோள்களுடன் இயங்கி வருகிறது. வேலைபார்க்கும் பெண்களுக்கு குழந்தை வளர்ப்பு மிகப்பெரிய பிரச்சனை. சென்னையிலும் புறநகரிலும் ஆயிரத்து ஐநூறு குழந்தைகள் பராமரிப்பு இல்லங்கள் நடத்தப்படுகின்றன. இது மத்திய சமூகநல வாரியத்தின் பொருளாதார உதவியுடன் நடத்தப்பட்டு வருகிறது. ஏழைகளின் நலன்களுக்காகவே இந்திய மாதர் சங்கம் தற்போது ஆரம்ப, உயர்நிலைப் பள்ளிகளை நடத்தி வருகிறது. வேலை பார்க்கும் பெண்களுக்கு உதவியாக குறைந்த கட்டணத்தில் தங்கும் விடுதிகள் நடத்தப்படுகின்றன. சென்னை குரோம்பேட்டையில் குடும்ப பிரச்சனையால் தவிக்கும் பெண்களுக்கு ஆலோசனை மையம் நடத்தப்படுகிறது. வயது முதிர்ந்தோர், தொழு நோயாளிகள் ஆகியோரும் கவனம் பெறுகின்றனர். தொழு நோயிலிருந்து நோயாளிகளை மீட்டெடுத்து அவர்கள் தங்க வீடுகள் கட்டித் தருவது, வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தருவது ஆகியவற்றை செய்கின்றனர். ஏழைப் பெண்களுக்கு உதவும் வகையில் செவிலியர் பயிற்சி, தையல் பயிற்சி, கம்ப்யூட்டர் பயிற்சி ஆகியவை அளிக்கப்படுகின்றன.

"சமூக சேவையின் முக்கியத்துவத்தை இந்திய மாதர் சங்கத்தில் விதைத்தவர் அம்புஜம்மாள். ஏழைகளின் குழந்தைகளுக்கு பால் வழங்குவது முதல் திட்டமாக இருந்தது. அவர்களுக்கு இலவச வகுப்புகள் எடுப்பது, பயிற்சிகள் தருவது போன்றவற்றில் வசுமதி ராமசாமி அக்கறை காட்டினார்" என்று சுதந்திரத்திற்கு பின் இந்திய மாதர் சங்கத்தின் சேவையை மையமாகக் கொண்ட, அரசாங்க ஆதரவுடன் கூடிய அணுகுமுறையை விளக்குகிறார் சரோஜினி வரதப்பன்.[55]

## தற்போது அகில இந்தியப் பெண்கள் மாநாடு

இந்தியப் பெண்களைப் பற்றி ஆராய்ந்து புள்ளிவிவரக் கணக்கெடுத்தல், கல்வி கற்பித்தல், சமுதாய, பொருளாதார மேம்பாடு, குடிசைத் தொழில்கள்,

55. நேர்காணல் : *சரோஜினி வரதப்பன்,* 25 ஆகஸ்ட் 2011.

பகுதிநேர வேலைத் திட்டங்கள் போன்றவற்றை செய்தல், சிறு சேமிப்பு, கல்வி, முறைசாராக் கல்வி, பலதரப்பட்ட மக்களின் மருத்துவம் போன்றவற்றை ஊக்குவித்தல், சமுதாய நலன், கலாச்சார வகுப்புகள், இசை சம்பந்தப்பட்ட காட்சிகள், நடனம், மலர் அலங்காரம் பிறரோடு ஒத்துழைத்துத் தடையின்றி வெளிவரும் கால்வருட 'ரோஷிணி' என்ற பத்திரிகையை பிரசுரித்தல் போன்றவைகளை அகில இந்தியப் பெண்கள் மாநாடு செய்து வருகிறது.

அகில இந்தியப் பெண்கள் மாநாட்டினால் புத்தகங்களும் அறிக்கைகளும் வெளியிடப்பட்டன. ஜே.லாம் எழுதிய 'இந்தியாவில் பெண்கள்' என்ற ஆங்கில புத்தகமும் 'எண்பதுகளின் பெண்கள்' போன்ற புத்தகங்களும் ஜூன் 1971–1973ம் ஆண்டுகளுக்கான 'பெண்களுக்கு எதிரான கொடுமைகள் ஒழிப்புக்கான செயலாக்கம் பற்றிய அறிக்கையும்' பிரசுரிக்கப்பட்டன.

டில்லியில் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டின் தலைமைக் கட்டிடம், கடைசித் தலைவர் லெட்சுமி ரகுராமையாவின் சீரிய முயற்சியில் கட்டப்பட்டதாகும். அதில் வேலை பார்க்கும் பெண்களுக்கு ஒரு விடுதி (இந்திய மற்றும் அயல்நாட்டினர்) நூலகம், உணவகம், ஆகாகான் அரங்கம், குழு கூடுவதற்கான அறைகள் போன்றவை அவரது முயற்சியே. இவையனைத்தும் உடைய பிரமாண்டமான பல அடுக்கு மாடிகளைக் கொண்டு இக்கட்டிடம் அமைந்துள்ளது.

அகில இந்தியப் பெண்கள் மாநாடு தேசிய மற்றும் பன்னாட்டு தகுதி கொண்டது. எனவே ஐ.நா. மற்றும் பன்னாட்டுப் பெண்களின் அமைப்புகளோடு ஆலோசனை அளிக்கக்கூடிய தகுதியும் கொண்டது. பெண்களின் விடுதலை மற்றும் இந்திய சமுதாயத்தில் அவர்களின் தகுதி முன்னேற்றம் தொடர்பான கூட்டங்களிலும், திட்டங்களிலும் முழு ஈடுபாடு கொண்டு செயல்படுகிறது.[56]

---

56. ப.சு.சந்திர பாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.533.

# அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

## வரலாற்றுப் பின்னணி

ஒரு நூற்றாண்டுக்கு மேலாக இந்திய மக்கள் நடத்திய ஏகாதிபத்திய எதிர்ப்பு இயக்கத்துடனும் ஜனநாயகப் போராட்டங்களுடனும் நெருக்கமாகத் தொடர்பு கொண்டு உருவாகி வளர்ந்த இயக்கம் இந்திய கம்யூனிச இயக்கம். விடுதலைப் போராட்டம் நடைபெற்ற காலத்தில் இந்திய மக்களின் புரட்சிகரமான எழுச்சி பல்வேறு வடிவங்களில் வெளிப்பட்டது. ஏகாதிபத்திய எதிர்ப்பு இயக்கங்களாக, உழைப்பாளிகளின் வர்க்கப் போராட்டங்களாக, விவசாயிகளின் கலகங்களாக, ஜனநாயகத்துக்கான பொதுப் போராட்டங்களாக, சமூக சீர்திருத்த இயக்கங்களாக பலப்பல வடிவங்களில் அது வெளிப்பட்டது. இந்தப் போராட்டத்தில் ஈடுபட்ட பல போராளிகள் கம்யூனிச இயக்கத்தில் இணைந்தனர். இந்த வகையில் தேச விடுதலைப் போராட்டப் பாதையில் தோன்றிய இயக்கம்தான் இந்திய கம்யூனிச இயக்கம். தேச விடுதலை இயக்கமும் உலகம் முழுவதும் ஏற்பட்ட ஏகாதிபத்திய எதிர்ப்பு எழுச்சியின் பகுதியாக உருவாயிற்று என்பதையும் குறிப்பிட வேண்டும்.

1917ம் ஆண்டு ரஷ்யாவில் நடைபெற்ற அக்டோபர் புரட்சி மனிதகுல வரலாற்றில் புதியதோர் அத்தியாயத்தை தொடங்கி வைத்தது. உலகம் முழுவதிலுமுள்ள உழைக்கும் மக்கள் மத்தியில் அது பெரும் விழிப்புணர்வினைத் தோற்றுவித்தது. இதன் தொடர் விளைவாக 1919ம் ஆண்டில் 'கம்யூனிஸ்ட் அகிலம்' அமைக்கப்பட்டது.[1] கம்யூனிஸ்ட் அகிலம் உதயமானதைத் தொடர்ந்து அடிமை நுகத்தடியில் சிக்கிக் கிடந்த இந்தியா, சீனா, பாரசீகம் போன்ற நாடுகளில் கம்யூனிஸ்ட் கட்சிகள் அமைக்கப்படுவதற்கான பாதை திறந்துவிடப்பட்டது. துன்ப துயரங்களிலிருந்து மக்களை விடுவிக்கும் தத்துவம் என்ற வகையில் பொதுவுடைமைத் தத்துவத்தின் ஈர்ப்பு, அடிமைப்பட்டுக் கிடந்த நாடுகளின் மக்கள் மத்தியில் பெரும் பிரதிபலிப்பை ஏற்படுத்தியது.

---

1. கி.இலக்குவன், *இந்திய கம்யூனிஸ்ட் இயக்க வரலாறு (1920–1933)*, ப.15.

முதலாளித்துவ அமைப்பு முறையிலிருந்து சோஷலிச அமைப்பு முறைக்கு மாற்றம் என்ற புதிய யுகத்தின் தோற்றுவாயாக அமைந்த அக்டோபர் புரட்சி வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகும். தேச விடுதலைப் போராட்டங்களுக்கு ஆதரவளிப்போம் என்று லெனின் வெளியிட்ட பிரகடனம், உலகம் முழுவதிலும் தேச விடுதலைக்காகப் போராடி வந்த மக்களின் கவனத்தைக் கவர்ந்தது. 1919ம் ஆண்டில் கம்யூனிஸ்ட் அகிலம் அமைக்கப்பட்டதும், அதன் இரண்டாவது மாநாட்டில் காலனி மக்கள் பிரச்சனைப் பற்றி லெனின் வடிவமைத்திருந்த கோட்பாடுகள் ஏற்றுக்கொள்ளப்பட்டதும் தேச விடுதலை இயக்கங்களுக்குப் புதிய பாதையை அமைத்து தந்ததுடன் அவற்றுக்குப் புதிய வலிமையையும் அளித்தன.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலேயே கார்ல்மார்க்ஸ் மற்றும் ஏங்கல்ஸ் ஆகியோரின் படைப்புகளில் இந்தியாவைப் பற்றி கூர்மையான முறையில் கவனம் செலுத்தப்பட்டிருந்தது. 'இந்திய வரலாறு பற்றிய காலவரிசைப்படியான குறிப்புகள்' என்ற நூல் இந்திய விவகாரங்கள் குறித்து அவர் காட்டிய சிறப்பான அக்கறைக்கு உதாரணமாக அமைந்துள்ளது. 'இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி' என்ற தலைப்பிலும் 'இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எதிர்கால விளைவுகள்' என்ற தலைப்பிலும் மார்க்ஸ் எழுதிய கட்டுரைகள் நியூயார்க் டெய்லி டிரிப்யூன் பத்திரிகையில் வெளியிடப்பட்டன. மிகுந்த பாராட்டுதலைப் பெற்ற இக்கட்டுரைகளில் இந்தியாவில் நடைபெற்ற பிரிட்டிஷ் ஆட்சியின் சுரண்டல் தன்மையை மார்க்ஸ் அம்பலப்படுத்தினார். 1857ம் ஆண்டில் நடைபெற்ற கலகத்தை முதல் இந்திய விடுதலைப் போர் என்று முதன்முதலில் அழைத்தவர்கள் மார்க்ஸ், ஏங்கல்ஸ் இருவரும்தான்.[2]

இந்திய நாட்டை அடிமைப்படுத்திய பிரிட்டிஷ் ஆட்சியை கூர்மையாக விமர்சனம் செய்த கார்ல்மார்க்ஸ், அதே நேரத்தில் பொருளாதார தேக்க நிலையுடன் சாதியக் கட்டமைப்பில் சிக்குண்டு கிடந்த இந்தியாவின் புராதன சமூக அமைப்பையும் ஏற்கவில்லை. புதியதொரு சமூக அமைப்பை உருவாக்கத் தவறிய

---

2. கி.இலக்குவன், *முன்குறித்தது*, ப.25.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளின் கொள்கையை அவர் விமர்சித்தார். இந்தியாவின் பழைய சமூக அமைப்பு முறையை அழுத்தமாக விமர்சித்தார்.

1917ம் ஆண்டில் நிகழ்ந்த அக்டோபர் புரட்சியைத் தொடர்ந்து இந்தியப் புரட்சியாளர்கள் சோவியத் யூனியனைத் தங்களின் நம்பிக்கை நட்சத்திரமாக கருதத் தொடங்கினார்கள். ஒரு புதிய சமூக அமைப்பை உருவாக்க முடியும் என்ற நம்பிக்கையை சோவியத் புரட்சி தோற்றுவித்தது. போராடும் இந்திய மக்களுக்கு அது பெரும் உத்வேகத்தை அளித்தது.

கம்யூனிசக் கருத்துக்கள் இந்தியாவில் ஊடுருவி வருவதை பிரிட்டிஷ் காலனி ஆட்சியாளர்கள் அறிந்து வைத்திருந்தனர். அவை ஊடுருவுவதைத் தடுக்க கண்காணிப்பு நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்.

1919ம் ஆண்டு மார்ச் 2ம் தேதியன்று சர்வதேச கம்யூனிஸ்ட் மாநாடு மாஸ்கோவில் தொடங்கியது. மார்ச் 4ம் தேதியன்று கம்யூனிஸ்ட் அகிலத்தின் முதல் மாநாடாக அது தன்னை அறிவித்துக் கொண்டது. பிரிட்டன் உள்ளிட்ட இருபத்தியொரு நாடுகளின் முப்பத்தைந்து அமைப்புகளைச் சார்ந்த ஐம்பத்து இரண்டு பிரதிநிதிகள் கம்யூனிஸ்ட் அகிலத்தின் துவக்க மாநாட்டில் கலந்துகொண்டனர். ஆனால் இந்த மாநாட்டில் இந்தியாவில் இருந்து எவரும் கலந்துகொள்ளவில்லை.[3]

முன்னேறிய நாடுகளின் உழைப்பாளி வர்க்கங்களின் விடுதலையுடன் இணைந்துதான் காலனிகளின் விடுதலையும் சாத்தியமாகும் என்று மாநாடு பிரகடனப்படுத்தியது. 1920ம் ஆண்டு ஜூன், ஜூலை மாதங்களில், கம்யூனிச அகிலத்தின் இரண்டாவது மாநாடு நடைபெறுவதற்கு முன்னர் "ஒரு இந்தியக் கம்யூனிச பிரகடனம்" என்றவொரு ஆவணத்தை எம்.என்.ராய் என்று அறியப்பட்ட நரேந்திரநாத் பட்டாச்சார்யா கிளாஸ்கோ சோஷலிஸ்ட் பத்திரிகையில் வெளியிட்டிருந்தார். "தேசியம் என்பதிலிருந்து வேறுபட்ட ஒரு சிந்தனையான

---

3. கி.இலக்குவன், *முன்குறித்தது*, ப.78.

பாட்டாளி வர்க்கப் புரட்சி என்ற சிந்தனை இந்தியாவுக்கு வந்து விட்டது'' என ராய் பிரகடனத்தில் குறிப்பிட்டிருந்தார்.[4]

கம்யூனிஸ்ட் அகிலத்தின் இரண்டாவது உலக மாநாடு நடந்து முடிந்தவுடன் தொடர்புகொள்ளும் நிலையில் இருந்த கம்யூனிஸ்டுகளையும் ஒத்த கருத்துக்கொண்ட குழுக்களையும் இணைத்து வெளிநாட்டிலிருந்து இயங்கக்கூடிய இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றை அமைப்பதற்கான முன்முயற்சியில் கம்யூனிஸ்ட் அகிலத்தின் தலைமை ஈடுபட்டது. கம்யூனிஸ்ட் அகிலத்தின் வழிகாட்டுதலின் அடிப்படையில் புலம்பெயர்ந்த இந்தியப் புரட்சியாளர்களால் 1920ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் தாஷ்கண்ட் நகரில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி அமைக்கப்பட்டது.[5]

தொழிற்சங்கம், விவசாயிகள் சங்கம் ஆகியவற்றை நிறுவி பாட்டாளி மக்களை ஒருங்கிணைத்து மிக வேகமாக வளர்ந்தது கம்யூனிஸ்ட் இயக்கம். இந்த இயக்கத்தின் வளர்ச்சியை கூர்ந்து கவனித்த பிரிட்டிஷ் அரசாங்கம் அடக்குமுறையை ஏவியது. இரண்டாம் உலகப்போரின்போது இந்திய கம்யூனிஸ்டுகள் தீவிரமான பாசிச எதிர்ப்பு போராட்டத்தில் ஈடுபட்டனர். நாடு விடுதலை பெற்ற பிறகு 1948ம் ஆண்டு பிப்ரவரி மாதம் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் இரண்டாவது அகில இந்திய மாநாடு கல்கத்தாவில் நடைபெற்றது. இதில் இந்தியாவுக்கு கிடைத்த சுதந்திரம் பற்றிய அறிக்கை வெளியிடப்பட்டது. சுதந்திர இந்தியாவில் ஆட்சியாளர்களின் ஏகாதிபத்திய அணுகுமுறையும் முதலாளித்துவ பார்வையும் சுட்டிக்காட்டப்பட்டது. இந்த மாநாடு முடிந்த உடனேயே காங்கிரஸ் ஆட்சியாளர்கள் கம்யூனிஸ்டுகள் மீது கொடூரத் தாக்குதலை தொடர்ந்தார்கள். கேரளா, தமிழ்நாடு, ஆந்திரா போன்ற மாகாணங்களில் அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்பட்டது.[6] தொடர்ந்து ரயில்வே தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தையொட்டி சுமார் இரண்டாயிரம்பேர் கைது செய்யப்பட்டனர்.

---

4. கி.இலக்குவன், *முன்குறித்தது*, ப.81.
5. *மேலது*, ப.97.
6. அருணன், *இந்திய கம்யூனிச இயக்க வரலாறு*, ப.318.

1949 அக்டோபர் 1 அன்று சீனப் புரட்சி வெற்றியடைந்தது. மா–சே–துங் தலைமையில் சீன மக்கள் குடியரசு மலர்ந்தது. இதே காலத்தில் வியட்நாமிலும் ஹோசிமின் தலைமையிலான கம்யூனிஸ்ட் இயக்கம் வெற்றி பெற்றது. இந்தச் சூழல் இந்தியக் கம்யூனிஸ்டுகளுக்கு புதிய உத்வேகத்தை அளித்தது. ஏற்கனவே ரஷ்யப் பாதையில் இயங்கிக் கொண்டிருந்த இந்தியக் கம்யூனிஸ்டுகளில் ஒரு பகுதியினர் சீனப் பாதையின்பால் ஈர்க்கப்பட்டனர். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக்குழு மாற்றியமைக்கப்பட்டது.

1960ல் இந்திய–சீன எல்லைப் பிரச்சனை கடுமையானது. அன்றைய காங்கிரஸ் ஆட்சியாளர் கம்யூனிஸ்டுகளில் சீன ஆரதவு பிரிவினரை கடுமையாக எதிர்த்தார்கள். திரிபுரா, அஸ்ஸாம், மேற்குவங்கம், உத்தரப் பிரதேசம் போன்ற மாநிலங்களில் கம்யூனிஸ்ட் இயக்கத்தினர் விசாரணையின்றி சிறையில் அடைக்கப்பட்டனர். இயக்கத்தின் ஒரு பிரிவினர் மட்டும் பாதிக்கப்பட்டபோது அவர்களின் விடுதலைக்காக கட்சியின் தலைமை நடவடிக்கை எடுக்காதது கட்சிக்குள் பிளவை ஏற்படுத்தியது. ஏற்கனவே கொள்கை ரீதியாக ஏற்பட்ட பிளவு, அமைப்பு ரீதியாகவும் பிளவுபடும் சூழ்நிலை ஏற்பட்டது.

ஆந்திராவில் உள்ள தெனாலியில் 1964ல் சிறப்பு மாநாடு ஒன்று நடத்தப்பட்டது. இந்த மாநாட்டின் முடிவுக்கு இணங்க கட்சியின் ஏழாவது அகில இந்திய மாநாட்டினை இடதுசாரிகள் கூட்டினர். மாஸ்கோ ஆதரவு கட்சி அல்லது பீகிங் ஆதரவுக் கட்சி என்று இல்லாமல் சித்தாந்த ரீதியாக சொந்தக்காலில் நிற்கும் இந்தியக் கட்சி உருவாக்குவது பற்றி விவாதிக்கப்பட்டது. இந்த மாநாட்டில் கூடிய பிரதிநிதிகள் தாங்கள்தான் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் உண்மையான பிரதிநிதிகள் என்று அறிவித்துக் கொண்டனர். இவ்வாறாக இந்த மாநாட்டில் கலந்துகொண்டவர்கள் அமைப்பு ரீதியாக தனித்த அடையாளத்தை தெளிவுபடுத்தினார்கள். இவ்வாறு பின்னர் தேர்தல் கமிஷனால் "இந்திய கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்)" என்ற கட்சி உதயமானது. பி.சுந்தரய்யா, இ.எம்.எஸ். நம்பூதிரிபாட், ஏ.கே.கோபாலன், பி.ராமமூர்த்தி, எம்.பசவ புன்னையா, ஜோதி பாசு ஆகியோர் இதன் முக்கியத்தலைவர்கள். கேரளா, மேற்குவங்கம், திரிபுரா, ஆந்திரா, தமிழ்நாடு போன்ற மாநிலங்களில் மார்க்சிஸ்ட் கட்சி ஒரு முக்கியமான சக்தியாகத்

திகழ்கிறது.[7] டாங்கேயின் தலைமையை பின்பற்றியவர்கள் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி என்ற பெயரில் இயங்கி வருகின்றனர்.

### இடதுசாரி மாதர் இயக்கம்

நாட்டு விடுதலைக்கான இயக்கம் மற்றும் சமூகச் சீர்திருத்த இயக்கம் ஆகிய இந்த இருபெரும் நீரோட்டங்கள்தான் இந்திய மாதர் இயக்கத்துக்கு அடிப்படையாக அமைந்தன. அதனால்தான் மாதர் இயக்கத்தில் ஈடுபட்டவர்கள் சுதந்திரப் போராட்டத்திலும் கலந்துகொண்டார்கள். இவ்வாறாக ஆரம்பம் முதலே மாதர் இயக்கங்கள் அரசியலுக்கு அப்பாற்பட்டதாக இல்லாமல் அரசியல் சார்பு நிலையுடன் இயங்கத் தொடங்கியது. நாட்டு விடுதலைக்கு முன் இந்திய மாதர் சங்கம் அதிலிருந்து தோன்றிய ‘அகில இந்தியப் பெண்கள் மாநாடு’ ஆகிய அமைப்புகள் இந்திய தேசிய காங்கிரசுடன் பெரும்பாலும் ஒன்றுபட்டே செயல்பட்டன.

சுதந்திரம் பெற்றபின் ‘அகில இந்தியப் பெண்கள் மாநாடு’ என்ற அமைப்பு அரசாங்கத்தின் முழு ஆதரவையும் நிதியுதவியையும் ஒத்துழைப்பையும் பெற்றது. அகில இந்தியப் பெண்கள் மாநாடு அறிவார்ந்தவர்களால் தலைமைத் தாங்கப்பட்ட போதிலும், நடுத்தரவர்க்க அமைப்பாகவே விளங்கியது. சாதாரண உழைக்கும் பெண்கள் மற்றும் விவசாயத் தொழிலாளர் பெண்கள் ஆகியோரை இந்த அமைப்புக்குள் கொண்டுவரும் முயற்சி நடைபெறவில்லை.

இந்த அமைப்பு விடுதலைக்குப் பின்பும் சில முக்கியப் பணிகளில் ஈடுபட்டது. ஏழை மக்கள் வசிக்கும் பகுதிகளில் பள்ளிகளை அமைத்து எழுத்தறிவை ஏற்படுத்தியது. தொழில்களை கற்றுத்தந்து வேலைவாய்ப்பை உருவாக்கியது. இப்படி சேவை மனப்பான்மையுடன் பல பணிகளை மேற்கொண்ட அவர்கள் உழைக்கும் பெண்களின் உரிமைகளைப் பற்றியோ அவர்களை ஒன்றிணைத்து உரிமைகளைப் பெற்றுத்தருவது குறித்தோ அக்கறை செலுத்தவில்லை. ஒரு சில முற்போக்கு சக்திகள் இந்த அமைப்பின் தளத்தை விரிவுபடுத்தும் நோக்கத்துடன் உறுப்பினர் ஆண்டு சந்தாவை மூன்று

7. அருணன், *முன்குறித்தது*, ப.479.

ரூபாயிலிருந்து நான்கு அணாவாக ஆக்க முற்பட்டனர். இது 1944 வாக்கில் நடந்தது. ஆனால் இதற்கு கடுமையான எதிர்ப்பு இருந்தது. ஏழை எளிய பெண்களை அமைப்புக்குள் கொண்டுவருவதன் அவசியம் குறித்து இதன் தலைவிமார்கள் சிந்திக்கவில்லை. உறுப்பினர் கட்டணம் நான்கு அணாவாக ஆக்கப்பட்ட முயற்சி தோற்கடிக்கப்பட்டது.[8]

இரண்டாவது உலக யுத்தம் முடியும் தருவாயில் கல்கத்தாவில் மகிள ஆத்மரக்சசமிதி துவங்கப்பெற்றது. பாசிசத்துக்கு ஏதிரான போராட்டத்துடன், இந்தப் புதிய அமைப்பு மிகப் பெரும் அளவில் வளர்ந்தது. வங்காளத்தைச் சூழ்ந்து நின்ற கொடும் பஞ்சத்துக்கு எதிராக இது போராடியது. 1943ல் வங்காளத்தின் கிராமங்களில் பட்டினியால் அவதியுற்ற பெண்களின் மாபெரும் பட்டினி ஊர்வலம் ஒன்றை ஏற்பாடு செய்து வங்காள சட்டசபைக்கு அழைத்துச் சென்றது.

இந்த ஊர்வலத்தின் பயனாக முதலமைச்சர் சட்டமன்றத்துக்குள் இருக்கும்போதே அரிசி விநியோகிக்க உத்தரவிட்டார். முதல் தடவையாக பெண்கள் அமைப்பு ஒன்று கிளர்ச்சிப் பாதையை மேற்கொண்டது. அதுவும் ஆர்ப்பாட்ட வடிவத்தில் இது அமைந்தது. இதைத் தொடர்ந்துதான் அரசாங்கம் அரிசிக் கடைகளையும், கஞ்சித் தொட்டிகளையும் திறந்தது. பின்னர் பங்கீடு (ரேஷன்) முறை கொண்டுவரப்பட்டது.[9]

இந்த புதிய மாதர் சங்கத்தின் உறுப்பினர்கள், அரிசி, கஞ்சி விநியோகத்தில் தொண்டர்களாகப் பணியாற்றினர். குறுகிய காலத்தில் இந்த அமைப்பு பல்வேறு கிளைகளுடன் வங்காளத்தின் எல்லா மாவட்டங்களிலும் செயல்பட்டது. இவ்வாறு விவசாய மத்தியதரப் பெண்களைக் கொண்ட புதியதோர் பெண்கள் அமைப்பு தோன்றியது. நகரங்களில், குடிசைப் பகுதிகளில் வாழ்ந்த பெண்களும் உறுப்பினர்களாக ஆனார்கள். வங்காளத்தில் நாற்பதாயிரம் உறுப்பினர்களைக் கொண்ட இந்த அமைப்பு போராட்டங்கள், கிளர்ச்சிகள் ஆகிய முறைகளைக் கையாண்டு பெண்களின் துயரங்களுக்கு தீர்வுகாண முற்பட்டது. கைத்தொழில்

8. விமலா பரூக்கி & ரேணு சக்ரவர்த்தி, *கம்யூனிஸமும் பெண்களும்*, ப.55.
9. *மேலது*, ப.57.

மையங்கள், மருத்துவ நிலையங்கள், ஆரம்பப் பள்ளிகள் ஆகியவற்றை ஏற்படுத்தினார்கள். நிர்மானப்பணி, கிளர்ச்சி ஆகிய இரட்டை முறைகளை கையாண்டதன் மூலம் அமைப்பு பரவலான வளர்ச்சியைப் பெற்றது. மோகினிதேவி, ஜோதிர்மயி கங்கூலி, நிர்மல் குமாரி மகலனோபிஸ் போன்றவர்கள் இந்த அமைப்பில் தீவிரப் பணியாற்றும் தலைவர்களாகச் செயல்பட்டனர். இவர்கள் தேசிய இயக்கப் பாரம்பரியமும், சமூக நலப்பணிகளில் ஆர்வமும் கொண்டவர்களாவார்கள். இதிலிருந்தே இயக்கத்தின் வீச்சைப் புரிந்துகொள்ள இயலும்.

இதைப்போல ஆந்திராவில் ஆந்திர மகளிர் சங்கமும் பெரிய அமைப்பாக வளர்ச்சி பெற்றது. இதற்கு நூற்றுக்கணக்கான கிராமங்களில் கிளைகள் தோன்றின. டாக்டர் அச்சமாம்பா, சூரியவதி, சாவித்திரியம்மா ஆகியோர் இந்த அமைப்பு பெரிதாக வளர உதவி புரிந்தனர். அந்த அமைப்பு ஒரு கட்டத்தில் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டுடன் இணைக்கப்பட்டது. பஞ்சாபிலும் முதலில் மாதர் தற்காப்புக் கழகமும் பின்னர் லோகஸ்த்ரீ சபாவும் தோன்றின.

1948ல் இந்த அமைப்புகள் அனைத்தும் இடதுசாரி இயக்க செயல்பாடுகளில் ஈடுபட்டன. உழைப்பாளர் முன்னணியை ஏற்படுத்தும் முயற்சியில் அரசாங்க எந்திரத்துடன் நேரடியாக மோதும் நிலைமை ஏற்பட்டது. இந்த நிலையில் வங்காளத்தில் இந்த அமைப்பு சட்ட விரோதமாக்கப்பட்டது. எனவே 1949–51 வரை தலைமறைவாக இருந்து பணியாற்ற நேர்ந்தது.

1951க்கு பிறகு மேற்குவங்கப் பெண்கள் அமைப்பு சட்டப்பூர்வமாக இயங்கத் தொடங்கியது. உழைக்கும் பெண்கள், தொழிலாளர்களின் மனைவிமார்கள், மத்தியதரவர்க்கப் பெண்கள், மாணவிகள் ஆகியோரை தொடர்பு கொண்டு ஒருங்கிணைக்க முயன்றது. இதர மாதர் சங்கங்களுடன் சேர்ந்து வேலை செய்யவேண்டும் என்பதும் தெளிவாயிற்று.

தொழிற்சங்கங்களில் அதிக அளவில் சேர முன்வந்த மாதர்களைப் பற்றிக் குறிப்பிடாவிட்டால் வரலாறு பூர்த்தியாகாது. பம்பாயில் நடந்த மாபெரும் ஜவுளி ஆலைகள் வேலை நிறுத்தக் காலத்தில் பெண்கள் பெருமளவில் கலந்து கொண்டனர். உஷா தாய் டாங்கே, சாந்தா பாலே ராவ் ஆகியோர் மகாராஷ்டிரத்தில்

பெண்களை அமைப்பு ரீதியாகத் திரட்டிய முன்னோடிகள். 1920–30களில் நடைபெற்ற சணல் ஆலைத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தின்போதும் பெண் தொழிலாளர்கள் முக்கியமான பங்குவகித்தனர்.[10]

கல்கத்தாவில் நடைபெற்ற துப்புறவுத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தில் சகினா மயூஸத்தா முக்கியப் பங்கு வகித்தார். தொழிலாளி வர்க்கப் பெண்களை அமைப்பு ரீதியாக திரட்டுவதற்கு பிரபாவதிதாஸ்குப்தா, சுதாராய் போன்றவர்கள் மிகப்பெரிய பங்களிப்பை செய்தனர். தோட்டத் தொழிலாளர்கள், முந்திரித் தொழிலாளர்கள், சணல் மற்றும் புகையிலைத் தொழிலாளர் பெண்களை இவர்கள் ஒருங்கிணைத்தனர். இவர்களைத் தவிர தொழிற்சங்க இயக்கங்களின் தலைமையில் பார்வதி கிருஷ்ணன், மைத்ரேயி போஸ் மணிபென்காரா ஆகியோர் முன்னணியில் இருந்தனர்.[11]

இந்தக் காலக்கட்டத்தில் எந்தவொரு தொழிலாளி வர்க்கப் பெண்ணும் தொழிற்சங்க வர்க்கத் தலைவியாகவில்லை. இதற்கு காரணம் இவர்கள் பெரும்பாலும் கல்வியறிவு அற்றவர்களாக இருந்தனர். தோட்டங்களிலும் தொழிற்சாலைகளிலும் இவர்களின் உழைப்பு சுரண்டப்பட்டது. குடும்ப பாரமும் இவர்கள்மீது சுமத்தப்பட்ட நிலையில் இரட்டை நெருக்கடியின்கீழ் அவதிக்குட்பட்டனர்.

மாநில அளவில் இயங்கி வந்த மேற்கூறிய அமைப்பினர் அகில இந்திய அளவில் பெண்கள் அமைப்பு ஒன்றை உருவாக்க முயற்சி மேற்கொண்டனர். சிறிது காலம்வரை அகில இந்தியப் பெண்கள் மாநாட்டுடன் இணைந்து வேலைசெய்வதா அல்லது சுயேச்சையான ஒரு அமைப்பை உருவாக்குவதா என்பது பற்றிய விவாதம் தொடர்ந்து நடைபெற்றது.

1946ல் ஹிட்லர் மற்றும் ஜப்பானிய பாசிசம் முறியடிக்கப்பட்டப் பின்னர் சர்வதேச ஜனநாயக மாதர் சம்மேளனம், பாரிசில் அமைக்கப்பட்டது. தத்தம் நாட்டுச் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக வீரமிக்க பாத்திரமேற்ற மாதர்கள், உலக

10. விமலா பரூக்கி & ரேணு சக்ரவர்த்தி, *முன்குறித்தது*, ப.62.
11. *மேலது*, ப.63.

யுத்தத்தையோ, அல்லது பாசிசத்தையோ தங்கள் குழந்தைகளின் உயிர்களை அல்லது குடும்பங்களின் வாழ்வைக் குடிக்க அனுமதியோம் என்று சபதமேற்றனர். இந்தக் காலக்கட்டத்தில்தான் 1953ல் கோபன்ஹேகனில் (டென்மார்க்) நடந்த சர்வேதச ஜனநாயக மாதர் சம்மேளன மாநாட்டில் கலந்து கொள்வதற்கு அழைப்பு வந்தது.

கோபன்ஹேகன் மாநாட்டில்தான் 'மாதர்களின் உரிமைப் பிரகடனம்' வெளியிடப்பட்டது. இந்த அறைகூவலைத் தொடர்ந்து நாடு திரும்பிய இந்தியப் பிரதிநிதிகள் 1954ல் கல்கத்தாவில் ஒரு மாநாட்டை கூட்டினர். இதில்தான் இந்திய மாதர்களின் தேசிய சம்மேளனம் (NFIW) பிறந்தது.[12]

இந்த அமைப்பு பாரதிய மகிளா சம்மேளனம் என்ற பெயரில் இந்தியிலும் அறியப்பட்டது. இதில் பங்கேற்ற அருணா ஆஷப்அலி, அனுஷியா கெயின்ஷித், விமலா பரூக்கி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

இது அகில இந்திய அமைப்பாக வளர்ச்சி பெற்றது. இந்த அமைப்பு ஒருபுறம் உரிமைகளுக்கான போராட்டங்களை நடத்திக்கொண்டே மறுபுறம் ஆக்கப்பூர்வமான வேலைகளான பள்ளிகள், பயிற்சி நிலையங்கள் நடத்துவது வரை பல்வேறு பணிகளில் ஈடுபட்டது.

இந்திய மாதர் தேசிய சம்மேளனம் சர்வதேச ஜனநாயக மாதர் சம்மேளனத்துடன் இணைக்கப்பட்டது. அதற்கு ஆப்பிரிக்கா, அமெரிக்கா, லத்தீன் அமெரிக்கா, ஆசியா, ஆஸ்திரேலியா, ஐரோப்பா ஆகிய எல்லா நாடுகளுடனும் தொடர்புகள் இருந்தன. "எல்லா நாடுகளுடனும் நட்புறவை பலப்படுத்துவது, சமாதானத்துக்காக ஒத்துழைப்பது, உலகிலுள்ள மாதர்கள் அனைவரின் விடுதலைக்காக நடைபெறும் போராட்டங்களின் ஒரு பகுதியாக இவற்றைக் கொள்வது என்பது இந்திய மாதர் தேசிய சம்மேளத்தின் கொள்கை" என்று பல ஆண்டுகளாக இந்த ஸ்தாபனத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு நீண்ட

12. விமலா பரூக்கி & ரேணு சக்ரவர்த்தி, *முன்குறித்தது*, ப.61.

காலமாக சேவை புரிந்துவரும் கோமதி கண்ணப்பன் கூறுகிறார்.[13] எனவே இந்தத் திட்டத்தின் முக்கியமான பகுதியாக ஜனநாயகத்துக்கான போராட்டம் அமைந்தது. அதனால்தான் வியட்நாம் மக்களுடைய போராட்டமும், பங்களாதேஷ் மக்களுடைய போராட்டமும் அவர்களுக்கு நெருக்கம் கொண்டதாக விளங்கின.[14]

## ஜனநாயக மாதர் சங்கத்தின் தோற்றம்

இந்தியாவில் பரவிய கம்யூனிச இயக்கம் குறுகிய காலத்திலேயே இரண்டாகப் பிளவுண்டது. கம்யூனிஸ்ட் கட்சி (CPI), மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி (CPI(M)) என்றும் இரண்டு அமைப்பாக செயல்படத் தொடங்கியது. இந்தப் பிரிவையொட்டி இடதுசாரி மாதர் இயக்கமும் இரண்டாகப் பிரிந்தது. ஏற்கனவே இயங்கிக் கொண்டிருந்த இந்திய மாதர் தேசிய சம்மேளனம் (NFIW) இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (CPI) பிரிவுடன் இணைந்து செயல்பட்டது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கையில் ஈர்க்கப்பட்டவர்கள் அதிலிருந்து பிரிந்துவந்து தங்களுக்கென்று ஒரு தனி அமைப்பை ஏற்படுத்திக் கொள்ள திட்டமிட்டார்கள்.

தமிழ் மாநிலத்தைப் பொருத்தவரையில் இந்த முயற்சியில் ஈடுபட்ட தொழிற்சங்கவாதிகளாகத் தங்களை முன்னிறுத்திக் கொண்ட முக்கியப் பெண்மணிகள் கே.பி.ஜானகியம்மாள், பாப்பா உமாநாத், ருக்மணியம்மாள், ஷாஜாதி கோவிந்தராஜன் ஆகியோர். அகில இந்திய அளவில் மற்ற மாநிலங்களைச் சேர்ந்த கேப்டன் லஷ்மி, மல்லுஸ்வராஜ்யம், அகல்யா ரங்கனேசர், விமலா ரணதிவே, சுசீலா கோபாலன், கௌரி அம்மாள், கோதாவரி பருலேகா, அன்னை லட்சுமி, பங்காரம்மாள் ஆகியோர் இணைந்து செயல்பட்டனர்.

மேற்குறிப்பிட்ட பெண்களில் பெரும்பாலானோர் தேசிய இயக்கத்தில் ஈடுபட்டவர்கள். கேப்டன் லஷ்மி ஆயுதமேந்தி போராடியவர். சுதந்திரத்துக்குப் பிறகு இவர்களில் பலரும் இடதுசாரி இயக்கத்தின்மீது கொண்ட ஈடுபாட்டின் காரணமாக தொழிற்சங்க நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். இந்திய மாதர் தேசிய சம்மேளனத்தில்

13. தினமணி, 30 ஜூலை 1989.
14. விமலா பரூக்கி & ரேணு சக்ரவர்த்தி, *முன்குறித்தது*, ப.67.

இணைந்து செயல்பட்டனர். பிறகு கம்யூனிஸ்ட் இயக்கத்தில் பிளவு நேர்ந்ததும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடன் இணைந்து செயலாற்றும் வகையில் தங்களுக்கென்று ஒரு தனி அமைப்பை ஏற்படுத்த விரும்பினார்கள்.

இவர்கள் 1973 டிசம்பர் 8, 9, தேதிகளில் திண்டுக்கல்லில் கூடி தமிழக ஜனநாயக மாதர் சங்க துவக்க கூட்டம் நடத்தினர். தொன்னூற்று ஒன்பது முக்கியத் தலைவர்கள் பங்கு கொண்டனர்.

பெண் விடுதலை, சமத்துவம், சோஷலிசம் என்ற முப்பெரும் லட்சியங்கள் உயர்த்திப் பிடிக்கப்பட்டது. அமைப்பு விதிகள், கொடி ஆகியவை இறுதி செய்யப்பட்டது. வெகுஜன பெண்கள் அமைப்பாக விஸ்தரிக்க முடிவு செய்யப்பட்டது. இதன் அடிப்படையில் உறுப்பினர் பதிவு நடத்தப்பட்டது. இதே காலத்தில் பெண்ணுரிமை இயக்கம் உருவாயிற்று. வேறு சில அரசுசாரா அமைப்புகளும் உருவாயின. திராவிட இயக்கத்திலும் பெண்கள் ஈர்க்கப்பட்டனர்.

1973 டிசம்பர் திங்களில் உருவாக்கப்பட்ட தமிழக ஜனநாயக மாதர் சங்கம் 1974ம் ஆண்டில் முப்பதாயிரத்துக்கும் மேற்பட்ட பெண்களை உறுப்பினர்களாக இணைத்த பெருமை நடந்தேறியது. 1974 டிசம்பர் 30, 31, 1975 ஜனவரி 1 ஆகிய மூன்று நாட்கள் திருவாரூரில் முதல் மாநில மாநாடு திட்டமிட்டப்படி கூடியது.[15] நூறு உறுப்பினர்களுக்கு ஒரு பிரதிநிதி என முந்நூற்று இருபத்தொன்பது பேர் கலந்துகொண்டனர். இம்மாநாட்டில் புதிய நிர்வாகிகள் தேர்வு செய்யப்பட்டனர். தலைவர் கே.பி.ஜானகியம்மாள், செயலாளர், பொருளாளர் பாப்பா உமாநாத் மற்றும் மைதிலி. ஷாஜாதி, விஜயா ஜானகிராமன், ஜானகி ராமச்சந்திரன், வீரம்மாள், கிருஷ்ணம்மாள், கஸ்தூரி, குஞ்சிதம் பாரதி மோகன், கந்தாயி, நாகம்மாள், ரோகிணி, தனலஷ்மி, ருக்மணி அம்மாள் ஆகியோர் நிர்வாகிகள் ஆவர். உறுப்பினர் சந்தா ஆண்டுக்கு இருபத்தைந்து காசுதான். ஆனால் உறுப்பினர்களை சேர்க்க அன்றைய ஊழியர்கள் பட்டபாடு, சந்தித்த கேள்விகள், வீட்டுக்குள்ளும்,

15. *அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் துவக்கமும்–வளர்ச்சியும்*, கையேடு, சென்னை.

வெளியிலும் ஊழியர்களை பற்றிய சந்தேகப் பார்வைகள், வசை மொழிகள் ஏராளம்.[16]

தமிழக ஜனநாயக மாதர் சங்கம் உறுப்பினர் பதிவு நடத்திய மாவட்டங்களில், பெண்கள் சந்திக்கும் அடிப்படை பிரச்சனைகளான குடிநீர், கழிப்பிட வசதி, சாலை வசதி, இடுகாட்டு வசதி, கூலி உயர்வு பொதுவான வரதட்சணை எதிர்ப்பு, நியாயவிலைக் கடை திறக்க கோருதல் போன்ற கோரிக்கைகளை முன்வைத்து கூட்டங்கள் நடத்தினர். 1975 ஜனவரி 20ம் தேதி உணவு நெருக்கடிக்கு உரிய தீர்வு காணக்கோரி, மாநிலம் முழுவதும் மாவட்டத் தலைநகர்களில் மறியல் போர் நடத்துவது என்றும், ஆயிரம் பேர் கைதாக வேண்டும் எனவும் அழைப்பு விடுக்கப்பட்டது.[17] அன்றைய தினம் அநேகமாக பதினொரு மாவட்டங்களில் மாதர் இயக்கம் காலூன்றியிருந்தது. இருப்பினும் முதன் முதலாக நடந்த இம்மறியல் போரில் ஆயிரத்து பத்துப் பேர் கைக் குழந்தைகள் உட்பட கைதானார்கள்.[18]

## அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் துவக்கம்

ஒரு பெண்கள் அமைப்புக்கான எல்லைகளைத் தாண்டி உலக அரங்கில் நடைபெறும் பிரச்சனைகளையும்கூட விவாதிக்கும் அளவுக்கு விழிப்புணர்வுடன் செயல்பட்டார்கள். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி காலூன்றியிருந்த மாநிலங்களிலெல்லாம் பெண்கள் பிரிவும் துடிப்பாக இயங்கி வந்தன. இவை அனைத்தையும் ஒருங்கிணைத்து வலிமைப்படுத்தும் எண்ணம் தோன்றியது. அகில இந்திய ரீதியான அமைப்பின் அவசியம் உருவானது. இதற்கான முதல் அகில இந்திய மாநாடு 1981ல் தமிழகத்தில் சென்னையில் நடத்தப்பட்டது. மேற்கு வங்கம், கேரளம், தமிழ்நாடு, திரிபுரா, ஆந்திரா மற்றும் சில மாநிலங்களின் பிரதிநிதிகள் கலந்துகொண்ட முதல் அகில இந்திய மாநாடு நடந்தது. இம்மாநாட்டில் ஏற்கனவே மாநில அளவில் கொண்டிருந்த மூன்று லட்சியங்களை மறு ஆய்வு செய்தது. பெண் விடுதலை, சமத்துவம், சோஷலிசம் என்பதை நம் நாட்டின் அரசியல் சமூக சூழ்நிலையிலிருந்துதான் எடுத்துச் செல்லப்பட வேண்டும் என்பதை

16. மகளிர் சிந்தனை, மார்ச் 1997.
17. அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் துவக்கமும்–வளர்ச்சியும், *முன்குறித்தது.*
18. *மேலது.*,

கவனப்படுத்தியது. அதன் காரணமாக ஜனநாயகம், சமத்துவம், பெண் விடுதலை என்பதாக மூன்று லட்சியங்களையும் வரிசைப்படுத்தியது. மேலும் இம்மாநாடு முக்கியமான ஒரு அம்சத்தை சுட்டிக்காட்டிது. ஜனநாயக மாதர் சங்கம், பெண்கள் பிரச்சனைகளை மூன்று கோணங்களிலிருந்து அணுகப்படவேண்டும் என வலியுறுத்தியது. பெண், குடிமகள், உழைக்கும் வர்க்கம் ஆகிய மூன்று அம்சங்களிலும் பெண்கள் மீதான பாதிப்புகள், தாக்குதல்களை எதிர்த்துப் போராடவேண்டும் என்ற சரியான வழியை காட்டியது. இதன் காரணமாக அமைப்பின் செயல்பாடுகளும், தலையீடுகளும் புதிய வீச்சை எட்டியது.[19]

நாட்டில் உணவு பற்றாக்குறை கடுமையாக பாதித்த நிலையில், உலக உணவு வகைகளை வைத்து கண்காட்சி நடத்தப்பட்டது. அதன் திறப்பு விழாவுக்காக சென்னைக்கு பாரதப் பிரதமர் வருகை தந்தார். அந்நிகழ்ச்சியில் பிரதமர் இந்திராகாந்தி கலந்து கொள்ளுவதற்கு, எதிர்ப்பு தெரிவித்து ஜனநாயக மாதர் சங்கத்தின் சார்பில் கருப்பு கொடி காட்டப்பட்டது. காவலை மீறிய இப்போராட்டத்தில் அறுபத்தேழு பெண்கள் கைது செய்யப்பட்டனர்.

ஜனநாயக மாதர் சங்கத்தின் ஆரம்பகால போராட்டங்களில் பதுக்கல் அரிசியை கைப்பற்றி விநியோகித்த போராட்டம் மக்களின் கவனத்தை ஈர்த்தது. மதுரை நகரில் 1977ம் ஆண்டு பதுக்கல் அரிசியைக் கைப்பற்றுவதில் ஜனநாயக மாதர் சங்கம் பெரும் பரபரப்பை மக்கள் மத்தியில் ஏற்படுத்தியது. ஆறு ரூபாய்க்கு படி அரிசி விற்கப்பட்டது. பல இடங்களில் பதுக்கலின் காரணமாக அரிசி தட்டுப்பாடு ஏற்பட்டது. மதுரை நகரில் கே.பி.ஜானகியம்மாள் முஸ்லிம் பெண்போல் வேடமணிந்து மற்ற பெண்களையும் திரட்டிக்கொண்டு பதுக்கல் ஏரியாவுக்குள் சென்று அரிசி மூட்டைகளை கைப்பற்றினார். ஆறு ரூபாய்க்கு விற்ற படியரிசியை, மாதர் சங்கம் கைப்பற்றி இரண்டு ரூபாய்க்கு விற்றது.[20] மதுரைக்குள் மட்டுமல்லாது பல்வேறு நகரங்களில் பதுக்கல் அரிசியை மகத்தான போராட்டத்தின் மூலம் கைப்பற்றி மக்களுக்கு விநியோகித்தது. இத்தகைய போராட்டத்தில் ஈடுபட்ட

---

19. மாநாட்டுக் குறிப்புகள், ஜனநாயக மாதர் சங்கம், முதலாவது மாநில மாநாடு, திருவாரூர், 28, 29 டிசம்பர் 1974.
20. கே.பாலபாரதி, *இலட்சிய நதியாக*, ப.118.

பெண்கள்மீது அன்றைய தி.மு.க. அரசு கொள்ளை வழக்குப் போட்டது. மாதர் சங்கம் அந்த வழக்கை நீதிமன்றத்தில் சந்தித்தது.[21]

இந்தியப் பிரதமர் இந்திராகாந்தி அவர்களால் 1975ம் ஆண்டு அவசரகால சட்டம் பிரகடனப்படுத்தப்பட்டது. இச்சட்டத்தின் காரணமாக ஜனநாயக உரிமைகள் அனைத்தும் குழிதோண்டிப் புதைக்கப்பட்டது. மாதர் இயக்கம் பெண்கள் என்ற வட்டத்தைத் தாண்டி, அரசியல் ரீதியான ஜனநாயக உரிமைகளுக்காக அவசரகாலச் சட்டத்தை வாபஸ் வாங்கக் கோரினர். பாராளுமன்றத்தில் இந்திராகாந்தியின் 'கரிபி அட்டோவ்' (வறுமையே வெளியேறு) என்ற வெற்று கோஷத்தை கண்டித்து பல மாவட்டங்களில் கூட்டங்கள் கருத்தரங்குகள் நடத்தப்பட்டன. அடக்குமுறை காலத்திலும் அடங்கிவிடாத ஆரம்பகால போராட்டங்கள் இயக்கத்துக்கு மேலும் வலிமை சேர்த்தது. ஜனநாயக மாதர் சங்கம் சர்வதேச பிரச்சனைகளையும் கவனித்து அதில் சரியான புரிதலுடன் தீர்வுக்கான கோஷங்களையும் முன்னெடுத்துச் செல்லும் இயக்கமாக பரிணமித்தது. ஈரான்—ஈராக் போரால் உள்நாட்டுப் பொருளாதாரம் பாதிக்கப்பட்டது. பெட்ரோல், டீசல் விலைஉயர்வு அமல்படுத்தப்பட்டது. போர் நடக்கும் நாடுகளில் பெண்கள், குழந்தைகளின் துயரங்களும், பாதிப்புகளும் விவாதிக்கப்பட்டது. இந்நிலையில் தமிழக ஜனநாயக மாதர் சங்கம் உலக சமாதானம் தேவை என்பதை வலியுறுத்தி திருச்சியில் மாநில அளவில் உலக சமாதான மாநாட்டை நடத்தியது. முதன் முதலாக ஒரு பெண்கள் அமைப்பு இப்படி ஒரு மாநாட்டை நடத்தியது அனைவரது கவனத்தையும் கவர்ந்தது.[22]

ஆரம்பம் முதலே பெண்கள் மீதான வன்முறையை ஜனநாயக மாதர் சங்கம் எதிர்த்தது. பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆதரவாக போராடவும் துவங்கியது. தனிநபர் பிரச்சனைகளை சமூகப் பிரச்சனையாகக் கருதி நியாயம் கேட்டுப் போராடியது.

- வரதட்சணை கொடுமை, கொலை
- பாலியல் பலாத்கார முயற்சி

21. கே.பாலபாரதி, *இலட்சிய நதியாக*, ப.117.
22. அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் துவக்கமும்—வளர்ச்சியும், *முன்குறித்தது*.

- பணியிடங்களில் பாலியல் வன்முறை
- ஈவ்–டீஸிங்
- போலிச் சாமியாரால் பாலியல் பலாத்காரம்
- காவல் நிலைய பாலியல் பலாத்காரம்
- ஆதிவாசி மலைவாழ் பெண்கள் மீதான தாக்குதல், பாலியல் பலாத்காரம்
- சிறு குழந்தைகள் மீதான பாலியல் பலாத்காரம்
- பெண் கருக்கொலை, சிசுக் கொலை
- தலித் பெண்கள் மீதான பாலியல் வன்முறை, சாதிய வன்முறை
- அரசியல் பெண்கள் மீதான வன்முறை
- பெண்களை கடத்தி கட்டாயப்படுத்தி விபச்சாரத்தில் ஈடுபடுத்துதல்

மேற்கூறிய பிரச்சனைகள் குறித்து விழிப்புணர்வு ஏற்படுத்தியது ஜனநாயக மாதர் சங்கம்.[23] சென்னை, திருச்சி, சிவகங்கை, கடலூர், காஞ்சிபுரம், குமரி, சேலம் ஆகிய மாவட்டங்களில் 'மகளிர் சட்ட உதவி மையம்' அமைக்கப்பட்டது. ஒரு குறிப்பிட்ட நாளில் ஜனநாயக மாதர் சங்கம் சார்பில் வழக்கறிஞர் ஒருவர் பாதிக்கப்பட்ட மக்களின் குறைகளை கேட்பார். வழக்குத் தொடர உதவியும் செய்வார்.

ஜாதி, மதம் போன்ற அமைப்புகளை கேள்விக்கு உட்படுத்தியது ஜனநாயக மாதர் சங்கம். ஜாதி அமைப்பும் மத அடிப்படைவாதமும் பெண்களின் உரிமைகளை பறிப்பதால் இவற்றை எதிர்த்து போராடும் நிலைபாட்டை எடுத்தது ஜனநாயக மாதர் சங்கம்.

- முஸ்லிம் பெண்களின் விவாகரத்து, ஜீவனாம்ச உரிமை பிரச்சனை
- முஸ்லிம் வழிபாட்டுத் தலமான பாபர் மசூதி இடிப்பு, மற்றும் அதை ஒட்டிய மத கலவரத்துக்கு எதிர்ப்பு தெரிவித்து
- தலால் ஆஸ்மி பிரச்சனை

23. அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் துவக்கமும்–வளர்ச்சியும், *முன்குறித்தது.*,

- கிருஸ்தவ பெண்கள், கன்னியாஸ்திரிகள் பலாத்காரம் மற்றும் வழிபாட்டு தளங்கள் மீதான தாக்குதலை கண்டித்து
- குஜராத் கலவரம் மற்றும் ரயில் எரிப்பு சம்பவத்தை கண்டித்து
- கோவையில் ஏற்பட்ட குண்டு வெடிப்பு சம்பவத்தை ஒட்டி
- தலித் மக்கள், பெண்கள் மீதான சாதிய அடக்குமுறை, தீண்டாமை கொடுமைக்கு எதிராக

என்று பல்வேறு போராட்டங்களை சந்தித்தது ஜனநாயக மாதர் சங்கம்.[24]

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் நிலைபாடுகளில் ஜனநாயக மாதர் சங்கமும் பங்குகொண்டது.

- விலை உயர்வு
- வரி உயர்வு
- போக்குவரத்துக் கட்டண உயர்வு
- மின் கட்டண உயர்வு
- தொலைபேசி கட்டண உயர்வு
- ஆலை மூடல்
- ஆட்குறைப்பு
- பொதுத்துறைகள் தனியார்க்குத் தாரை வார்ப்பு
- கல்வி, சுகாதாரம் அடிப்படை வசதிகளில் அரசின் பங்கைக் குறைத்தல்
- பொது விநியோக முறையை பலவீனப்படுத்தல்
- தொழிலாளர் விரோத, மக்கள் விரோதச் சட்டங்கள் கொண்டு வருதல்
- பெண்களுக்கு 33 சதவிகித இட ஒதுக்கீட்டை சட்டமன்ற, பாராளுமன்றத்தில் சட்டமாக்க மறுத்தல்
- பெண்கள், விவசாயிகள், தொழிலாளர்கள் நல திட்டங்களை கைவிடுதல்
- ஜனநாயக உரிமைகளை மறுத்தல்
- சாதிய, வகுப்புவாதத்துக்கு துணை போதல், ஊக்குவித்தல்

---

24. அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் துவக்கமும்—வளர்ச்சியும், *முன்குறித்தது.*

போன்ற அரசின் மக்கள் விரோத, பெண்கள் விரோத, நடவடிக்கைகளை எதிர்த்து தொடர்ச்சியான இயக்கங்களையும், போராட்டங்களையும் நடத்தி வருகிறது ஜனநாயக மாதர் சங்கம். போராட்டத்தில் பலத்தை அதிகரிக்க சில நேரங்களில் மற்ற அமைப்புகளோடு இணைந்தும் செயல்பட்டு வருகிறது. மேலும் மாற்றுத் திட்டங்களையும், ஆலோசனைகளையும், சட்டத் திருத்தங்களையும் ஜனநாயக மாதர் சங்கத்தின் மூலமும் மற்ற மாதர் அமைப்புகளை இணைத்து கொண்டும் அரசின் கவனத்துக்கு கொண்டு செல்கிறது.[25]

பெய்ஜிங் மாநாடு (1995), பெய்ஜிங் +5 மாநாடு (2000), வறுமை வன்முறை எதிர்ப்பு–நியூயார்க் மாநாடு (2000) கனடா மாநாடு (2001), பிரேசில் மாநாடு (2002) ஆகிய ஆசிய நாடுகளின் மாநாடு, ஜெனிவா மாநாடு (2003) ஆகிய சர்வதேச மாநாடுகளில் ஜனநாயக மாதர் சங்கம் கலந்துகொண்டு பங்களிப்பை செய்திருக்கிறது.

சுமார் நாற்பதாண்டு காலமாக செயல்பட்டு வரும் ஜனநாயக மாதர் சங்கத்தின் தமிழ்நாட்டுக் கிளையில் ஏழு லட்சம் உறுப்பினர்கள் இருக்கிறார்கள். முப்பத்து நான்கு மாவட்டக் குழுக்கள் இயங்கி வருகின்றன. முழுநேர ஊழியர்களாகவும் பல பெண்கள் அர்ப்பணிப்புடன் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

மீடியாக்குழு, சட்ட உதவி துணைக்குழு, கிராமப் புற பெண்கள் துணைக்குழு, சிறு சேமிப்பு துணைக்குழு, தலித் துணைக்குழு, சிறுபான்மை துணைக்குழு என்று பல்வேறு குழுக்களாக இயங்கி வருகின்றனர்.[26]

தேர்தல் அரசியலில் ஈடுபட்டு சட்டமன்ற உறுப்பினர்களாகவும் பஞ்சாயத்து பிரதிநிதிகளாகவும் ஜனநாயக மாதர் சங்கப் பெண்கள் ஆக்கப்பூர்வமாக பணியாற்றி வருகின்றனர்.

---

25. அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் துவக்கமும்–வளர்ச்சியும், *முன்குறித்தது.*
26. *மேலது.,*

மாதர் சங்கத்தின் செயல்பாடுகளில் பல்வேறு தரப்பினரும் அறியும் வகையில் 'மகளிர் சிந்தனை' என்ற மாத இதழ் வெளியிடப்படுகிறது. 1983ல் உழைக்கும் மகளிர் சிந்தனை என்ற பெயரில் தொடங்கப்பட்ட இந்தப் பெண்கள் பத்திரிகை இயக்கத்தின் பிரச்சாரக் கருவியாக செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் நாடு தழுவிய மாநாடு மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை வெவ்வேறு மாநிலங்களில் நடைபெறும். மாநாட்டுக்கென்று சில நடைமுறைகள் இருக்கின்றன. உதாரணமாக இரண்டாவது மாநாடு 1986ம் ஆண்டு அக்டோபர் மாதம் திருவனந்தபுரத்தில் நடைபெற்றது.[27] தமிழகத்தின் சார்பாக எழுபத்து இரண்டு பிரதிநிதிகள் கலந்துகொண்டனர். நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து சுமார் எழுநூற்று இருபத்தெட்டு பிரதிநிதிகளும், பார்வையாளர்களும் பங்கெடுத்துக் கொண்டனர். மாநாட்டு ஏற்பாடுகளை வரவேற்புக்குழு பார்த்துக் கொள்ளும். தங்குமிடம், உணவு அனைத்தும் அவர்கள் பொறுப்பு. ஒவ்வொரு மாநில பிரதிநிதி குழுவுக்கும் ஒரு தலைவரும் உதவித் தலைவர்களும் நியமிக்கப்படுவார்கள்.

முதல்நாள் நிகழ்ச்சியாக சங்கத் தலைவர் மஞ்சரிகுப்தா கொடியேற்றி வைத்தார். பல்வேறு மொழிகளில் கோஷங்கள் விண்ணைப் பிளந்தன. பொதுவாக அரங்கத்துக்கும் நுழைவாயிலுக்கும் முக்கியத் தலைவர்களின் பெயர் சூடப்பட்டிருக்கும். தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தியபின் தோழர் கௌரியம்மாள் வரவேற்புரை நிகழ்த்தினார். தோழர் இ.எஸ்.நம்பூதிரிபாட் மாநாட்டை தொடக்கி வைத்து பேசினார். பிறகு தகுதி நிர்ணயக்குழு, தீர்மானக்குழு, வழிநடத்தும்குழு ஆகியவை தேர்ந்தெடுக்கப்பட்டன. வந்திருந்த சீனப் பிரதிநிதிகள் அறிமுகப்பத்தப்பட்டனர். பொதுச் செயலாளர் சுசீலா கோபாலன் அறிக்கை சமர்ப்பித்தார்.

அன்று முழுவதும் அறிக்கைமீது விவாதம் நடந்தது. மாலையில் "பெண்கள் இயக்கம் முன்னுள்ள பிரச்சனைகள்" என்பது பற்றிய கருத்தரங்கு நடைபெற்றது. மாலை நடந்த கலை நிகழ்ச்சிகளில் கேரளாவின் பல மாவட்டங்கள் பங்கெடுத்தன.

---

27. மகளிர் சிந்தனை, நவம்பர் 1986.

பாட்டு, நடனம், நாடகம் உட்பட பல நிகழ்ச்சிகள் நடந்தன. தமிழகத்தின் சார்பாக நாடகம் நடத்தப்பட்டது.

மறுநாள் மேற்குவங்க முதலமைச்சர் ஜோதிபாசு மாநாட்டை வாழ்த்திப் பேசினார். அதில் கலந்துகொண்ட பிற அமைப்புகளின் பிரதிநிதிகளும் மாநாட்டை வாழ்த்திப் பேசினர்.

மூன்றாம் நாள் பொதுச்செயலாளர் விவாதத்துக்கு பதிலளித்தார். மையப்படுத்தப்பட்ட வகுப்புகள் ஏற்பாடு செய்து மாதப்பத்திரிகை மற்றும் பிரசுரங்கள் வெளியிடுவது, சிறுபான்மை இனத்தவருடன் தொடர்புகள் ஏற்படுத்துவது, கிராமப்புற பெண்களிடம் அதிக கவனம் செலுத்துவது போன்ற ஆலோசனைகளை ஏற்றுக் கொண்டார். புதிய மத்தியக் குழுவும் நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தமிழ்நாட்டிலிருந்து பாப்பா உமாநாத் துணைத் தலைவராகவும், மைதிலி சிவராமன் இணைச் செயலாளராகவும், குஞ்சிதம், கஸ்தூரி, சுதா ஆகியோர் மத்தியக்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். எதிர்கால நடவடிக்கைகள் பற்றி அகல்யா விளக்கிப் பேசினார். பல்வேறு முக்கியத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தாஷ்கண்ட் கருத்தரங்கு பற்றி மைதிலி சிவராமன் சுருக்கமாக உரையாற்றினார். மாலை நான்கு மணிக்கு ஊர்வலம் துவங்கியது.

மொழி வேறு இனம் வேறு ஆனாலும் அனைத்து இந்தியப் பிரதிநிதிகளும் வெண்கொடி ஏந்தி கோஷங்கள் எழுப்பியவாறு ஊர்வலம் சென்றனர். இறுதியாக பொதுக்கூட்டம் நடந்தது. மேற்கூறிய வகையில்தான் ஜனநாயக மாதர் சங்கத்தின் மாநாடுகள் நடைபெற்றன.[28]

## சர்வதேசப் பெண்கள் மாநாடு

சர்வதேசப் பெண்கள் மாநாடுகளிலும் ஜனநாயக மாதர் சங்கத்தின் பிரதிநிதிகள் கலந்துகொண்டார்கள். 1986ம் ஆண்டு தாஷ்கண்டில் நடந்த சர்வேதசப் பெண்கள் மாநாட்டில் கலந்துகொண்ட மைதிலி சிவராமன் தனது அனுபவங்களை பதிவு செய்திருக்கிறார்.

---

28. தீக்கதிர், 21 அக்டோபர் 1986.

“ரஷ்யாவில் பெர்கானாவில் ஒரு தொழிற்சாலையை சுற்றிப்பார்த்தபோது என்னைக் கவர்ந்த விஷயம் அங்கிருந்த குழந்தைகள் காப்பகங்களும், சிறுவர்கள் விளையாடுவதற்கான கிண்டர் கார்டன்களும். தாய்மையும் குழந்தை பராமரிப்பும் சமூகக் கடமையாகவே பார்க்கப்படுகின்றன.

சுத்தமாகவும் அழகாகவும் வைக்கப்பட்டிருந்த அறைகளில் வசதியான சூழ்நிலையில் வளரும் இக்குழந்தைகளுக்கு ஆடல் பாடல் மட்டும் கற்றுக் கொடுக்கப்படுகிறது. ஆறுவயதுக்கு மேற்பட்டு பள்ளிக்கு போகும்போதுதான் எழுதக் கற்றுக் கொடுக்கிறார்கள். அதுவரை பல சிறந்த கதைகள், ஒழுக்கம், நல்ல பழக்கவழக்கங்கள், தேசப்பற்று, உழைப்பின் மதிப்பு, உலக சமாதானம் போன்ற கருத்துக்களைக் கொண்ட சிறு பாடல்கள், நாட்டியம், வரைதல் போன்றவை மட்டுமே கற்றுக் கொடுக்கப்படுகின்றன.

குழந்தைகளின் அழகிய கலை நிகழ்ச்சிகளை கண்டுகளித்த அதே சமயம் நம்நாட்டுச் சிறுவர்களுக்கு இத்தகைய வாய்ப்புகள் என்று கிடைக்கும் என்ற ஏக்கமும் எங்கள் உள்ளத்தில் எழும்பியது. நம் ஊர் சிறுவர்கள் மூன்று வயது குழந்தை முதுகில் ஒரு மூட்டை புத்தகங்களை சுமந்து சென்று, பள்ளியில் கை உடைய எழுதி, குட்டும்பட்டு, வீடு திரும்பியபின் ஓடி ஆடவேண்டிய மாலைப் பொழுதிலும் எழுதிக் கொண்டிருக்கும் அபத்தம்.

தாய் வேலைக்குச் சென்றுவிட்டபின், கவனிப்பார் இன்றி தெருப்புழுதியில் புரண்டு கொண்டிருக்கும் சின்னஞ்சிறுசுகள் எத்தனை. இருட்டோடு எழுந்து பகல் முழுவதும் கம்பெனியில் உழைத்து இருட்டிய பின்னே வீடு திரும்பும் குழந்தைத் தொழிலாளர்களின் அவலநிலை. இப்படிப்பட்ட பல நினைவுகள் எங்கள் உள்ளத்தில் முள்ளாய் தைத்தன”.[29]

“பெண்கள் தனித்து இயங்குவதில்லை. சமூகம் சார்ந்தே இயங்குகிறார்கள். அதனால் அவர்கள் வாழும் சமூக, பொருளாதார அமைப்பில் அடிப்படை

---

29. மகளிர் சிந்தனை, டிசம்பர் 1986.

மாற்றங்களை கொண்டு வராமல் பெண்களின் நிலையில் முன்னேற்றம் காண இயலாது" என்ற கருத்தை அவர் வலியுறுத்தினார்.[30]

1986ம் ஆண்டு அனைந்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் இரண்டாவது மாநாட்டில் சீனப் பிரதிநிதிகளான குவான் மின் குவான், லீ பிங் ஆகியோர் கலந்துக்கொண்டனர். சீனாவில் பெண்களின் நிலை குறித்து தங்கள் கருத்துக்களை பகிர்ந்து கொண்டனர்.

சோவியத் யூனியன் வீழ்ச்சிக்குப்பிறகு கிழக்கு ஐரோப்பாவில் ஏற்பட்ட மாற்றங்கள் எவ்விதம் பெண்களை பாதித்தது என்பதையும், பாதிக்கிறது என்பதையும் ஜனநாயக மாதர் சங்கம் கூர்ந்து கவனித்தது. சோவியத் ரஷ்யாவில் பதினாறு லட்சம் தொழிலாளர்கள் வேலை இழக்கும் சூழ்நிலை ஏற்பட்டது.

கிழக்கு ஐரோப்பிய நாடுகளின் நிகழ்ச்சிப் போக்குகள் சோஷலிச அமைப்பு முறையில் பெண்கள் இயக்கம் பெற்ற பல நன்மைகள் வெகுவாக அதிகரிக்கத் தொடங்கின. குழந்தைகள் கவனிப்பு மற்றும் பிரசவகால சலுகைகள் உள்ளிட்ட சமூகப் பாதுகாப்பு மற்றும் வேலை உத்தரவாதம் ஆகியவையும் தாக்குதலுக்கு உள்ளாகியுள்ளன. கருக்கலைப்பதற்கான உரிமை போன்ற பெண்களுக்கான முற்போக்கான சட்டங்கள்கூட காக்கப்பட்டு வருகின்றன. முதலாளித்துவ, வணிகக் கலாச்சாரம் சோஷலிச கோட்பாடுகளில் ஊடுருவத் தொடங்கியுள்ளன. சோவியத் ரஷ்யாவில் அழகிப் போட்டிகளின் மூலம் பெண்களை வியாபாரப் பொருளாக்குவதை அகில இந்திய ஜனநாயக மாதர் சங்கம் கண்டனம் செய்துள்ளது. எனினும், இந்நாடுகளில் பெண்களின் உரிமைகளையும், சோஷலிசத்தையும் பாதுகாப்பதற்குமான போராட்டத்தை பெண்கள் முன்னெடுப்பர் என ஜனநாயக மாதர் சங்கம் கருதியது.

"பலவீனங்களையும், தவறுகளையும், பிரச்சனைகளையும் களைவதற்கான சரியான நடவடிக்கைகளை எடுப்பதற்கு பதிலாக சந்தைப் பொருளாதாரத்தை நோக்கிய கொள்கைமுடிவுகள் இப்போது எடுக்கப்படுகின்றன. இது எப்போதுமே

30. மகளிர் சிந்தனை, டிசம்பர் 1986.

சரியான தீர்வை அளிக்காது. வேலையின்மை மற்றும் ஏழ்மையை களைய தன்னால் முடியாது என்பதை முதலாளித்துவம் நிரூபித்துள்ளது. இந்த மாற்றங்களினால் மிக மோசமாக பாதிக்கப்படுவோர் பெண்களே. எனவே, சோஷலிச சித்தாந்தத்தையும் அதன் மதிப்பையும் மிகப்பெரிய அளவில் பிரச்சாரம் செய்வது நமது கடமையாகிறது. சீனா, கியூபா, வியட்நாம், சோஷலிச கொள்கைகளை உயர்த்திப் பிடிக்கவும் இணைந்து பணியாற்றுகின்றன. சோஷலிசத்தின்கீழ் மட்டுமே பெண்களின் சமஉரிமை உத்தரவாதப்படுத்தப்படும் என்பதால் உலகிலுள்ள அனைத்துப் பெண்களும் இந்தப் போராட்டத்தில் தங்களை இணைத்துக் கொள்ள வேண்டும்" என்று ஜனநாயக மாதர் சங்கம் கருதியது.[31]

"மெக்சிகோ சர்வதேச மகளிர் மாநாடு காலத்திலிருந்து பெய்ஜிங் மகளிர் மாநாடு வரையிலான காலகட்டம் சமகால சமூக வரலாற்றில் வெறும் இருபதாண்டுகள்தான். ஆனால், பெண்ணுரிமைக்கான போராட்ட வரலாற்றுக் கண்ணோட்டத்தில் இவ்வாண்டுகளைப் பார்க்கும்போது இந்தியாவில் மட்டுமல்ல, உலகெங்குமே இவை நிகழ்வுகள் நிறைந்த மிக முக்கியக் காலமாகும்" என்று பெய்ஜிங் பெண்கள் மாநாட்டுக்காகத் தயாரிக்கப்பட்ட இந்திய அரசின் அறிக்கை கூறியது. இத்தகைய காலக்கட்டத்தில் இந்தியப் பெண்களின் அந்தஸ்தில் ஏற்பட்ட மாற்றங்கள், அரசு கொள்கைகளின் தாக்கம், திட்டங்களின் நிறை குறைகள் பற்றிய இந்த அறிக்கை மாதர் அமைப்புகளால் கடுமையாக விமர்சிக்கப்பட்டது.

பெய்ஜிங் மாநாட்டில் இந்திய அரசு பல வாக்குறுதிகளை அளிக்கவேண்டும் எனக்கோரி மாதர் ஒருங்கிணைப்புக்குழு பிரதிநிதிகள் பிரதமரை சந்தித்தனர். "பெய்ஜிங் மாநாட்டில் பெண் சிசுக்கொலை, வரதட்சணை சாவு போன்றவற்றைப் பற்றி பேசாதீர்கள் இது சர்வதேச அரங்கில் நமக்குக் கெட்ட பெயரை ஏற்படுத்துவதோடு, இவற்றை நமது எதிரிகள் நம் நாட்டிற்கு எதிராகப் பயன்படுத்தவும் வாய்ப்பாக அமைந்துவிடும்" என பிரதமர் கூறியதாக பத்திரிகையில் செய்தி வந்தது.

---

31. மகளிர் சிந்தனை, டிசம்பர் 1990.

இந்திய அரசின் அறிக்கையில் இந்தியப் பெண்களின் அவல நிலையின் மூலகாரணங்கள் அடையாளம் காட்டப்படவில்லை. பிரச்சனைகளுக்கான தீர்வு பற்றிய பார்வை மேலோட்டமாக உள்ளதென தேசிய மாதர் அமைப்புகளின் பிரகடனம் 1995ம் ஆண்டு பிப்ரவரி மாதம் விமர்சித்தது. மாதர் அமைப்புகளின் சார்பாக "பெய்ஜிங்கை நோக்கி இந்திய மாதர் இயக்கத்தின் ஒரு கண்ணோட்டம்" என்ற மாற்று அறிக்கை ஒன்றையும் பிரசுரித்தது.[32]

அதில் சர்வதேசப் பெண்கள் ஆண்டையொட்டி 1975ல் தயாரிக்கப்பட்ட இந்தியப் பெண்கள் அந்தஸ்து பற்றிய அறிக்கையில் வன்முறைப் பற்றி அதிகமாக ஒரு பிரிவு கொடுக்கப்படவில்லை. அதைத்தொடர்ந்து 1975–1995 வரையிலான இருபது ஆண்டுகால மகளிர் நலத்திட்டங்கள், பொருளாதார வளர்ச்சி ஆகியவற்றுக்குப் பின் பெய்ஜிங்கிற்கான இந்திய அரசு அறிக்கையில் ஓர் அத்தியாயம் சேர்க்க வேண்டிய அளவுக்கு வன்முறைகள் வளர்ந்தது. அதற்கான காரணங்களாக "சாதீயம், வர்க்கம், இனம், பழமைவாதம், பயங்கரவாதம் போன்றவை பெண்களைப் பாதிக்கின்றன" என்று சுருக்கமாகக் கூறியது அரசின் அறிக்கை.

தீய சக்திகளின் வளர்ச்சிக்கும் அரசின் கொள்கைகளுக்கும் தேர்தல் உத்திகளுக்கும் தொடர்புகளை அரசின் அறிக்கையில் தேடுவதில் அர்த்தமில்லை எனக்கருதியது மாதர் அமைப்புகள். வன்முறை அதிகரிப்புக்கும் பொருளாதார வளர்ச்சிப் பாணிக்கும் உள்ள தொடர்பை அறிக்கையில் விளக்கப்படவில்லை. மேற்கூறிய மாதர் அமைப்புகளின் மாற்று அறிக்கை இவ்வாறான இணைப்பை வலியுறுத்தியது.

வரதட்சணைக் கொடுமைகளின் அதிகரிப்பு இதற்கு ஓர் உதாரணமாக கருதப்பட்டது. நாட்டில் வாங்கும் சக்தியுள்ள சுமார் பதினைந்து சதவிகித மக்கள் அனுபவிக்கும் பொருட்களை உற்பத்தி செய்து, இறக்குமதியும் செய்து நுகர்ப்பொருள் கலாச்சாரத்தை வளர்ப்பது என்பது அரசின் புதிய பொருளாதாரக் கொள்கையின் ஓர் அடிப்படை அம்சம்.

---

32. மைதிலி சிவராமன், *பெண்ணுரிமை– சில பார்வைகள்*, ப.74.

இதனால் "இத்தகைய வளர்ச்சிப்பாணி என்பது நடைமுறையில் ஒரு சிலருக்கு வளர்ச்சியும் பலருக்கு வளர்ச்சியின்மையும் ஆகும். ஒரு சிலருக்கு அமைதியும் பலருக்கு வன்முறையும் என்று பொருள். இது பெண்களின் நலனுக்கு ஏற்றதல்ல என்பதால் இவ்வளர்ச்சிப்பாதையை மாதர் இயக்கம் ஏற்காது" என்று மாதர் அமைப்புகளின் மாற்றுஅறிக்கை அரசு கொள்கைகளின் விளைவை நிராகரித்தது.[33]

இந்திய சமுதாயத்தில் பெண் மிக எளிதாக, குறிவைத்துக் தாக்கப்படக் கூடிய 'Soft Target' ஆக இருப்பதற்கான காரணத்தையும் பெண்களின் மாற்று அறிக்கை வலியுறுத்தியது.

அதன்படி "பொருளாதாரத்தில் பெண்கள் ஓரங்கட்டப்படுகிறார்கள் என்பது கொடுமையான எதார்த்தமாகும். இதுவே அவர்கள் மனித உரிமைப் பறிப்புக்கு மூல ஆதாரமான பின்னணியாக உள்ளது". சமுதாயத்தில் ஏழைப் பெண்களே அம்மாதிரியான பாதிப்புக்கு உள்ளாகிறார்கள்.

அரசின் பொருளாதாரக் கொள்கைகள் பெண்களை எப்படிப் பாதிக்கின்றன என்பது பற்றி அரசு அறிக்கையில் ஒரு அத்தியாயம் இருந்தும், வன்முறைக்கும் ஏழ்மைக்கும் உள்ள நெருக்கமான தொடர்பு தெளிவாக்கப்படாதது ஆச்சரியமானதல்ல. "மக்கள் தொகைப் பெருக்கத்தின் காரணமாக நாட்டில் குற்றங்கள் அதிகரித்துள்ளன என்ற பொதுவான போக்கின் பின்னணியில் பெண்கள் வன்முறைக்கு ஆளாக்கப்படுவதை பார்க்க வேண்டும்" என்று மத்திய உள்துறை இணையமைச்சர் சயீத் மக்களவையில் கூறினார். இது பிரச்சனையின் வேர்களை அடையாளம் காட்ட அரசு தயாராக இல்லை என்பதும் மக்கள் தொகை பெருக்கத்தையே கோடிட்டுக் காட்டுகிறது[34] என்று ஜனநாயக மாதர் சங்கம் கருத்து தெரிவித்தது.

33. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.75.
34. *மேலது*, ப.76.

அரசின் அறிக்கைக்கு மாதர் இயக்கத்தின் ஒப்புதலை கட்டாயம் பெறவேண்டும். எனவே அறிக்கைத் தயாரிப்பில் சில பெண்ணியலாளர்களும் மாதர் அமைப்புப் பிரதிநிதிகளும் ஈடுபட்டனர்.

"பொருளாதார கட்டமைப்பு சீரமைப்பு வேலையின்மையை அதிகரிக்கக் கூடும். இதனால் ஏற்படும் பாதிப்பை பெண்களே பெருமளவு சுமக்க வேண்டி வரலாம். பணவீக்கம் தீவிரமாகி உண்மை ஊதியம் சுருங்கும்போது பெண்களின் வேலைப்பளு மேலும் கனமாகும்". இவ்வாறான பொருளாதார சீரமைப்பை அமலாக்கிய நாடுகளில் அரசின் செலவினங்கள், மக்களின் தேவைகளை நிறைவேற்றுவதற்கான பொறுப்பு ஆகியவை குறைக்கப்பட்டு எல்லாவற்றுக்கும் மார்க்கெட்டையே சார்ந்திருப்பது பெண்களின் வாழ்நிலை, வேலை நிலைமையை பாதித்துள்ளது. அதில் அவர்களின் கணிப்புகளில் நிராகரிக்க இயலாத சில ஒப்புதல் வாக்குமூலங்கள் இடம் பெற்றன.

இதற்கும் மேலாக "வளர்ச்சிப்பாணி, பொருளாதார மாற்றம் ஆகியவை பெண்களை, குறிப்பாக ஏழைப்பெண்களை மிக மோசமாகப் பாதித்துள்ளது என்பது பரவலாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது" என்றும் அறிக்கை குறிப்பிடுகிறது. இத்தகைய வளர்ச்சிப்பாணியை மாற்ற வேண்டியதன் அவசியம் பற்றி பேசவில்லை. தாராளமயமாக்கல் என்ற பெயரில் இத்தகைய வளர்ச்சியை மேலும் தீவிரப்படுத்தும் கொள்கைகளே கடைபிடிக்கப்படுகின்றன. வளர்ச்சியின் பாதிப்பிலிருந்து பெண்களைக் காக்க, சமூகசேவைத் துறையில் கூடுதலான நடவடிக்கைகள் எடுப்பது, கிராமப்புற வளர்ச்சி, சமூகப்பாதுகாப்பு நடவடிக்கை நலத்திட்டங்கள் போன்றவற்றால் பெண்கள் பயனடைய விசேஷ முயற்சிகள் எடுப்பது போன்ற எப்பொழுதும் இருப்பவையே இதில் இடம் பெற்றன.

'வறுமையே பெண்களின் பிரதான எதிரி' என்கிறது அரசுசாரா அமைப்புகளின் பெய்ஜிங் மாநாட்டிலிருந்து வந்தச் செய்தி. அரசு அறிக்கையும் இதே காரணத்தைத்தான் கூறுகிறது. "தீவிர வறுமையும் மேலும் பெண்களே இதற்குப் பலியாவதும் நாம் எதிர்நோக்கும் சவாலாகும். இதை எதிர்நோக்கும் விதத்தில் அரசின் புரிதலின்மை வெளிப்படுகிறது. அதன் கொள்கையில், பொருளாதார

அமைப்பில் சில அட்ஜெஸ்ட்மெண்டுகள் செய்து மார்க்கெட்டின் உண்மை நிலைமை தெரியுமிடத்தில்மட்டும் சரிசெய்து பெண்களை வறுமையிலிருந்து விடுவித்துவிடலாம்'' என்ற நம்பிக்கையை இந்த அறிக்கை பிரதிபலிக்கிறது என்று மாதர் சங்கங்கள் கருத்து தெரிவித்தன.[35]

இதோடு மட்டுமல்லாமல் ''மார்க்கெட் என்பது யாருக்கும் பதில் சொல்ல வேண்டிய பொறுப்புடையதால், பெண்களைப் போன்ற நிதி பலமோ அரசியல் துணையோ இல்லாதவர்களுக்கு மார்க்கெட் பொருளாதாரத்தில் கிடைக்கும் சமூகப் பொருளாதார உரிமைகள் மிகக்குறைவு'' என்றும் அரசின் அறிக்கை கணித்துள்ளது.

வறுமையிலிருந்து பெண்கள் தப்பிக்கத் தேவையானது பொருளியல் அமைப்பின் சீரமைப்பல்ல. அமைப்பு முழுமையாக மாற்றப்படவேண்டும் என்று மாதர் சங்கங்கள் எடுத்துக் கூறியது. மேலும் கூடுதலான பெண்கள் வறுமையின் பிடியில் சிக்கிக் கொள்வதும் பசியைப் பெண்கள் கூடுதலாக பகிர்ந்து கொள்வதுமாகத்தான் இருக்க முடியும்.

இதற்கு பதிலாக அமைப்பு மாற்றத்தின் விளைவு பெண்கள் சம உரிமையை அனுபவிக்கும் விதத்தில் சமூக மாற்றத்தையும், வளத்தையும், சொத்தையும் பங்கீடு செய்வதாகவே அமையும் என்று அரசின் அமைப்புக்கு மாதர்களின் மாற்று அறிக்கை பதில் அளித்தது. அடிப்படையான அமைப்பு ரீதியான மாற்றத்துக்கான கோரிக்கை நிறைவேற வேண்டுமானால் சர்வதேச அரங்கிலும் சில நாடுகளின் ஆதிக்கம் முறியடிக்கப்பட்டு செழுமையும் வளமும் சில நாடுகளால் சுரண்டப்படுமேயானால் உலக மக்கள் அனைவரின் வாழ்க்கையையும் மேம்படுத்த பயன்படவேண்டும் என்றும் மாதர் அமைப்புகள் வலியுறுத்தின. இது பெய்ஜிங்கில் அரசுசாரா அமைப்புகள் மாநாட்டில் மூன்றாம் உலகநாட்டுப் பிரதிநிதிகளால் பலராலும் எழுப்பப்பட்டது.

35. மைதிலி சிவராமன், முன்குறித்தது, ப.77.

ஒரு நாட்டின் வளர்ச்சிப் பணியை அந்நாட்டு மக்களே நிர்ணயித்துக் கொள்ளும் உரிமை இருந்தால்தான் அந்நாட்டு பெண்களுக்குத் தங்கள் வாழ்க்கை மீது ஆளுமை ஏற்படும் என்ற பிரகடனம் உரக்க ஒலித்தது.

பெய்ஜிங் மாநாடு தொடங்கி பின்னர் வெளியிடப்பட்ட இறுதியான அறிக்கையில் மேற்கூறிய அடிப்படையான பலவீனங்கள் நிவர்த்தி செய்யப்படவில்லை என்றாலும் மாதர் அமைப்புகளின் ஆலோசனைகள் சேர்க்கப்பட்டது என்பது மாதர் இயக்கத்தின் வளர்ந்து வரும் வலிமையைப் பிரதிபலிப்பாகக் கருதியது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்.[36]

## மாதர் சங்கத் தலைவர்கள்

சமத்துவத்தில் நம்பிக்கைக் கொண்ட ஜனநாயக மாதர் சங்கத்தில் தலைமையேற்றவர்களை கூட சக உணர்வுடன் 'தோழர்' என்றே அழைப்பது வழக்கம். அப்படி அழைத்துக் கொள்ளும்முறை பால் வேறுபாடின்றி இடதுசாரிகள் மத்தியில் நிலவுகிறது.

எல்லோருமே தோழர்கள் என்றாலும் சித்தாந்த ரீதியாக பிரச்சனைகளை புரிந்துகொண்டு பெண்கள் மத்தியில் கொண்டு செல்ல ஒருசிலர் தலைமையேற்பதும் அமைப்பு என்ற வகையில் தவிர்க்கமுடியாதது. அந்த வகையில் சில முக்கியத் தலைவர்களை, அவர்களின் பங்களிப்பை விவாதிப்பதும் முக்கியமானது.

## கேப்டன் லஷ்மி

லஷ்மி சுவாமிநாதன் 1914ம் ஆண்டு செப்டம்பர் 24ம் தேதி சென்னையில் பிறந்தார். பள்ளியில் படிக்கும்போதே தேசிய இயக்கத்துக்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் கையால் நூல் நூற்று தயாரித்த கதர் ஆடைகளையே அணிவார். அவரது பள்ளியில் தேசிய இயக்கம், குழந்தைத் திருமணம், சமூகச் சீர்திருத்தம் ஆகியவற்றைப் பற்றி விவாதங்கள் நடக்கும். அதில் இவரும் கலந்துகொள்வார். லஷ்மியின் தாய் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டில் சேர்ந்திருந்தார். அவருடன்

---

36. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.78.

இணைந்து லஷ்மியும் அடிக்கடி கூட்டங்களுக்குச் செல்வது வழக்கம். கல்லூரிப் பருவத்தில் தேசிய இயக்கத்தில் லஷ்மியின் ஈடுபாடு அதிகரித்தது.[37]

தென்னிந்தியாவில் விடுதலைக்கான அரசியல் போராட்டம் என்பது சமூகச் சீர்திருத்தப் போராட்டங்களுடன் இணைந்தே நடைபெற்றது. 1920களில் ஹரிஜனங்களின் கோவில்நுழைவுப் போராட்டம், குழந்தைத் திருமண எதிர்ப்புப் போராட்டம் ஆகியவை வலுப்பெற்றன. பொதுமேடைகளில் குழந்தைத் திருமணத்தை ஆதரித்து பழைமையில் ஊறிய இந்துப் பெண்கள் பேசினர். லஷ்மியின் தாய் குழந்தைத் திருமணத்தையும் வரதட்சணையையும் கடுமையாகச் சாடினார்.

காங்கிரஸ் இயக்கத்தில் பங்கேற்றபோதும் லஷ்மி தன்னை ஒரு முழுமையான காங்கிரஸ் ஊழியராகக் கருதவில்லை. மாணவர்கள் பள்ளிகள், கல்லூரிகளை விட்டுவிட்டு விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடவேண்டுமென்ற மகாத்மா காந்தியின் நிலைபாட்டை லஷ்மி ஏற்கவில்லை. இந்தியாவுக்கு விடுதலை கிடைக்குமெனில் படிக்கும் வாய்ப்பை தவறவிட்டவர்களால் புதிய இந்தியாவை உருவாக்குவது கடினம் என்று நினைத்தார்.

மருத்துவக் கல்லூரியில் படிக்கும்போது சரோஜினி நாயுடுவின் சகோதரி சுகாசினியை சந்தித்தார். சுகாசினி ஜெர்மனியில் வசித்தவர். புரட்சி சிந்தனை கொண்டவர். இந்தியாவுக்கு சிறந்த அரசியலமைப்பு கம்யூனிசம்தான் என்ற சுகாசினியின் பேச்சு லஷ்மியைக் கவர்ந்தது.

1938ம் ஆண்டு சென்னை மருத்துவக்கல்லூரியில் எம்.பி.பி.எஸ். பட்டம் பெற்றார். 1940ல் சிங்கப்பூர் சென்றார். அங்கு நேதாஜியை சந்தித்தார். அந்த சந்திப்பு லஷ்மியின் வாழ்க்கைப் பாதையை மாற்றியது.

ஐ.என்.ஏ.வில் தனக்கு ஒரு பொறுப்பு தரவேண்டுமென தலைவர்களிடம் லஷ்மி தொடர்ந்து வலியுறுத்தினார். டாக்டர் வேலையாக இருந்தாலும் முழுவதுமாக ஐ.என்.ஏ.பணியில் ஈடுபட விரும்பினார். 1941ம் ஆண்டு மீண்டும் நேதாஜியை சந்தித்தார். அனைத்துப் பெண்கள் ராணுவப் படைத் தயாரிப்பு பணிகளில் ஈடுபட

37. மகளிர் சிந்தனை, ஆகஸ்ட் 2012.

ஆரம்பித்தார். 1943ம் ஆண்டு அக்டோபர் 23ம் நாள் முந்நூறு வீராங்கனைகளுடன் ஜான்சிராணி படைப்பிரிவு ஆரம்பிக்கப்பட்டது. அப்படைப்பிரிவின் கமாண்டிங் ஆபீசராக நேதாஜியால் நியமனம் செய்யப்பட்டார் லஷ்மி.[38] பெண்வீரர்களின் பயிற்சியையும், பொது நிர்வாகத்தையும் பார்த்துக் கொண்டார்.[39]

அந்தக்காலத்தில் கேப்டன் லஷ்மி தமிழ்நாட்டில் படித்தவர்கள் மத்தியில் பரவலாக அறியப்பட்டிருந்தார். எழுத்தாளர் ராஜம்கிருஷ்ணன் இவரைப்பற்றி குறிப்பிடுகையில் "அப்போது எங்கள் குடும்பம் திருவல்லிக்கேணியில் வசித்து வந்தது. அந்த ஆண்டு நவராத்திரி விழாவில் புதிய பொம்மைகளின் வரவில் ஒன்றாக கேப்டன் லஷ்மியின் உருவத்தைப் பார்த்து நான் மிகவும் நெகிழ்ச்சி அடைந்தேன். ஒரு பெண் என்ற வகையில் பெருமிதமாகவும் இருந்தது"[40] என்று நினைவு கூர்கிறார்.

1945ல் நேதாஜி இறந்தவுடன் பர்மாவின் காடுகளில் இருந்த பிரிட்டிஷ் துருப்புகள் லஷ்மியை கைதுசெய்து ஒரு மாதகாலம் வீட்டுக் காவலில் வைத்தனர். மகாத்மா காந்தி மீது லஷ்மிக்கு மதிப்பு மரியாதை இருந்தபோதிலும் காந்தியின் அரசியல் பார்வையால் லஷ்மி ஈர்க்கப்படவில்லை. இடதுசாரிகளுடன் பணியாற்ற விரும்பி, கம்யூனிஸ்ட் தோழர்களுடன் தொடர்பு கொண்டார். தனது மருத்துவப்பணி மீது கவனம் செலுத்தி, உழைக்கும் வர்க்க பின்னணிக் கொண்ட ஏழை மக்கள் வசிக்கும் பகுதிகளில் பணியை மேற்கொண்டார். அவரிடம் வந்த நோயாளிகள் கான்பூர் பஞ்சாலைத் தொழிலாளர்கள். வங்கத்திலுள்ள அகதிகள் முகாமில் பணியாற்ற மருத்துவர்கள் தேவை என்ற ஜோதிபாசுவின் வேண்டுகோள் லஷ்மியின் கவனத்தை ஈர்த்தது. துணிமணிகள், மருந்துகளுடன் கல்கத்தா சென்று மக்கள் நிவாரணக் குழுவுடன் எல்லைப்பகுதிக்குச் சென்றார். திரும்பும்போது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமை குழுவிடம் தான் சந்தித்த நிலைமைகளைப் பதிவு செய்தார். அதன்பின் கட்சி உறுப்பினரானார்.

---

38. மகளிர் சிந்தனை, ஜனவரி 1996.
39. *மேலது*, ஆகஸ்ட் 2012.
40. ராஜம் கிருஷ்ணன், *இந்திய விடுதலைப் போரில் பெண்கள்*, ப.79.

1981ல் அனைந்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் அமைக்கப்பட்டபோது, அதனுடைய அகில இந்திய துணைத் தலைவராக தேர்வு செய்யப்பட்டார். மாதர் சங்கத்தின் நடவடிக்கைகள், போராட்டங்கள், பிரச்சாரங்களில் முக்கியப் பங்கேற்றார். 1984ல் போபாலில் யூனியன் கார்பைட் கம்பெனியில் ஏற்பட்ட விஷவாயு கசிவால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு மருத்துவக் குழுவுடன் பணிசெய்து கர்ப்பிணிப்பெண்கள் மீது விஷவாயு ஏற்படுத்தும் விளைவு பற்றிய அறிக்கையை சமர்ப்பித்தார்.

மாதர் இயக்கம் மதவாதம், சாதிய பாகுபாடு, வன்முறை போன்ற அதிகரித்துவரும் பிரச்சனைகளின்மீது கூடுதல் கவனம் செலுத்த வேண்டும். இப்பிரச்சனைகளை எதிர்கொள்ள மாதர் இயக்கம் புதிய யுக்திகளை கையாள வேண்டும். அவ்வாறு செய்கையில் எப்படிப்பட்ட கலாச்சார சூழலில் இத்தகைய வன்முறைகள் நடக்கின்றன என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும் என்று தன் கருத்தைக் கூறி வழிகாட்டியிருக்கிறார் லஷ்மி. 2012 ஜூலை 23ம் நாள் இறந்தார்.[41] அவரது மறைவு இடதுசாரி இயக்கத்துக்கு பெரிய இழப்பாகும்.

**மணலூர் மணியம்மாள்**

ஒன்றுபட்ட கம்யூனிஸ்ட் இயக்க காலத்தில் தஞ்சை மக்கள் மத்தியில் பரவலாக அறியப்பட்ட முன்னோடிப் பெண்மணி மணலூர் மணியம்மாள். மணலூரில் மிராசு குடும்பத்தில் பிறந்தவர். இவரது இயற்பெயர் வாலாம்பாள். இவரை துணைவியாக திருமணம் செய்து கொண்டிருந்த கணவர் ஒரு வழக்கறிஞர். துணைவிக்கு ஆங்கிலக் கல்வியை கற்றுத்தர ஏற்பாடு செய்திருந்தார். கணவர் இறந்தபிறகு தாய்வீடு திரும்பிய மணியம்மாள் விதவைக்கான கட்டுப்பாடுகளுடன் வாழநேர்ந்தது. தஞ்சாவூருக்கு வந்த காந்தியை நேரில்சென்று பார்த்தார் மணியம்மாள்.[42] காங்கிரசின் சமூக புனரமைப்புத் திட்டம் அவரைக் கவர்ந்தது. தன்னைச் சுற்றிலும் விவசாயக் கூலிகள் சுரண்டப்படுவதை கண்ட அவர், அவர்களின் உரிமைக்காக போராட விரும்பினார். ஆண்களைப் போல கிராப் வைத்துக்கொண்டார். கதர் வேட்டியும், மேல் சட்டையும், சால்வையும் அணிந்துகொண்டார். சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொண்டதுடன் சிலம்பமும்

41. THE HINDU, 24 July 2012.
42. ஞாநி, *நெருப்பு மலர்கள்*, ப.70.

கற்றுக்கொண்டார். ஆரம்பத்தில் காங்கிரஸ் ஆதரவாளராக இருந்த மணியம்மாள் உழைக்கும் மக்களுக்கு விடுதலையை தரக்கூடிய கம்யூனிச இயக்கத்துடன் இணைத்துக் கொண்டார். ஏராளமான போராட்டங்களில் ஈடுபட்டார். விவசாய சங்கத்தை நிறுவினார். ஆலைத் தொழிலாளர் பிரச்சனைக்காகவும் போராடினார். 1947ம் ஆண்டில் கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்டபோது மணியம்மாளும் சிறை வைக்கப்பட்டார்.[43] நாகைப் பகுதியின் மிராசுதாரர்களுக்கு செங்கொடி கட்சி அன்று சிம்மசொப்பனமாக விளங்கியது.

ஒரு முறை கூலித்தகராறு பிரச்சனைக்காக பேச்சுவார்த்தை நடத்திவிட்டு திருவாரூர் செல்ல பஸ் நிலையத்தில் காத்திருந்தபோது மணியம்மாள் கொல்லப்பட்டார். உள்ளூர் பிரமுகரின் வளர்ப்பு மான் மணியம்மாவை குத்தி சாய்த்தது. இதை சதி என்றுதான் இன்று வரை மக்கள் கருதுகிறார்கள்.

### கே.பி.ஜானகியம்மாள்

தொழிலாளி வர்க்க லட்சியத்தை மனப்பூர்வமாக ஏற்று அதற்காக தனது வாழ்வை அர்ப்பணித்தவர் கே.பி.ஜானகியம்மாள். ஏற்றுக்கொண்ட லட்சியத்துக்காக வசதிமிக்க வாழ்வைத் துறந்தவர். பலமுறை சிறைச் சென்று கொடுமைகளை அனுபவித்தவர்.

1917ம் ஆண்டு மதுரையில் பிறந்தார். தாய் லட்சுமி அம்மையார். தந்தை பத்மனாபன். மதுரையிலுள்ள கீழஆவணி மூலவீதியிலுள்ள அரசாங்கப் பெண்கள் பள்ளியில் படித்தவர். ஆறுமுகத்தாய் என்ற இயற்பெயர் அவரது தலைமறைவு வாழ்க்கை காலத்தில் 'ஜானகி' என்று மாற்றப்பட்டு அதுவே நிரந்தரப் பெயராக நிலைப் பெற்றது.

இருபதுகளில் இந்தியாவிலுள்ள மக்கள் அனைவரையும் தேசிய இயக்கத்தில் ஈர்ப்பதற்காக காங்கிரஸ் பல திட்டங்களை அறிவித்துக் கொண்டிருந்தது. ஜானகியம்மாவும் இந்தப் பிரச்சாரத்தில் ஈர்க்கப்பட்டார். வீட்டிலேயே நூல் நூற்கத் தொடங்கினார். கதராடைகளை உடுத்தினார்.

---

43. ஞாநி, *முன்குறித்தது,* ப.73.

பொதுவாக அக்காலத்தில் ஆண் நாடக நடிகர்களே பெண் வேடமணிந்து நடித்து வந்தார்கள். அக்காலக் கட்டத்தில் தேசபக்தியை ஊட்டும் நாடகங்கள் நடத்தப்பட்டன. ஆத்திரமடைந்த ஆங்கிலேய அரசாங்கம் அந்நாடகங்களுக்குத் தடைவிதித்தது. இந்தச் சூழ்நிலையில் ஜானகியின் பன்னிரண்டாம் வயதில் 1928ம் ஆண்டு மதுரையில் இருந்த பழனியாப்பிள்ளை பாய்ஸ் கம்பெனி என்ற நாடகக் கம்பெனியில் சேர்ந்தார்.[44] ஓரிரு ஆண்டுகளில் கதாநாயகியாக நடிக்கும் அளவுக்கு உயர்ந்தார். இனிய குரல்வளமும் அவருக்கு உண்டு. தேசபக்தி பாடல்களை பாடிவந்தார்.

1934ம் ஆண்டு தேசிய இயக்கத்தில் ஆர்வம் கொண்ட ஹார்மோனிய வாத்தியம் வாசிப்பவரான எஸ்.குருசாமி என்பவரைத் திருமணம் செய்து கொண்டார். ஜானகிக்கு அரசியல் ஆர்வமும் நாட்டு விடுதலைக்கு தன்னை அர்ப்பணித்துக் கொள்ளவேண்டும் என்ற எண்ணமும் கணவரின் தூண்டுதலால் ஏற்பட்டது.

தேசிய இயக்கத்தில் ஆர்வம் ஏற்பட்டதால் நாடகங்களில் நடிப்பதை நிறுத்தினார். 1936ம் ஆண்டு காங்கிரஸ் கட்சியின் உறுப்பினரானார். மதுரை நகரில் பிரபலமானார். தனது இருபத்துமூன்றாவது வயதில் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியின் மதுரை கமிட்டிச் செயலாளர் பொறுப்பை ஏற்குமளவுக்கு உயர்ந்தார்.[45]

1939ம் ஆண்டு பொன்மலையில் மாபெரும் யுத்தப் எதிர்ப்பு பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதில் 'நிமிர்ந்து சண்டைபோடு தோழா' என்ற உணர்ச்சியூட்டும் பாடலைப் பாடினார் ஜானகி. அதற்காக ஆங்கிலேய அரசாங்கத்தால் கைது செய்யப்பட்டு ஆறுமாதகால கடுங்காவல் தண்டனை வழங்கப்பட்டது.[46] கைது செய்யப்பட்டு வேலூர் சிறையில் அடைக்கப்பட்டார். பின்னர் கடலூர் சிறைக்கு மாற்றப்பட்டார். சிறையிலிருக்கும்போது அட்டூழியம் புரிந்துவரும் ஊழியர்களை எதிர்த்து சிறையிலேயே போராட்டத்திலும் ஈடுபட்டார். யுத்த எதிர்ப்புப்

44. த.சுப்பிரமணியன், *ஆயுதமேந்திய அபூர்வப் பெண்மணிகள்*, ப.27.
45. THE HINDU, 29 March 1992
46. த.சுப்பிரமணியன், *முன்குறித்தது*, ப.27.

பிரச்சாரத்துக்காக தென்னிந்தியாவிலேயே முதன் முதலாக தண்டிக்கப்பட்ட பெண்மணி இவர்தான்.

1941ம் ஆண்டு ஆங்கிலேய அரசாங்கத்தால் பாதுகாப்புச் சட்டத்தின்படி கைது செய்யப்பட்டார் ஜானகி. தென்னிந்தியாவில் பாதுகாப்புச் சட்டப்படி முதன்முதலாக கைது செய்யப்பட்ட முதல் பெண்மணியும் இவரே. ஆரோக்கியமான உடல்நலத்துடன் சென்ற இவர் விடுதலையாகி வெளியே வரும்போது ஆஸ்துமா நோயாளியாகத் திரும்பினார்.

1942ல் வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் பங்கு கொண்டு ஓர் ஆண்டு சிறை தண்டனை பெற்றார். 1943ல் வங்காளத்தில் கடும் பஞ்சம் நிலவியது. கம்யூனிஸ்ட் கட்சி தம் தொண்டர்களுக்கு நிவாரண நிதி வசூலிக்கும்படி வேண்டுகோள் விடுத்தது. தமிழ்நாட்டில் கலை நிகழ்ச்சிகளை நடத்தி நிதி வசூல் செய்ததில் ஜானகியம்மாவுக்கு பெரும்பங்குண்டு.

1943ம் ஆண்டு மதுரை ஹார்வி மில்லில் போனஸ் கோரிக்கையை முன்வைத்துப் போராட்டம் நடந்தது. அதில் கலந்துகொண்டதற்காக ஜானகி கைதுசெய்யப்பட்டு சிறையிலடைக்கப்பட்டார். தொடர்ந்து நான்கு ஆண்டுகள் சிறையில் துன்பப்பட்டார்.

1944ம் ஆண்டு மதுரை மாவட்டத்தில் விவசாயிகள் சங்கத்தை உருவாக்கும் வேலையில் ஜானகி ஈடுபட்டார். உத்தமபாளையம், பெரியகுளம், மற்றும் மதுரை தாலுக்காவில் விவசாயிகள் சங்கக் கிளைகள் உருவாயின. கிராம மக்கள் இவரை 'ஜானகியம்மா' என்று அன்போடு அழைத்தனர்.

போராட்ட குணம் மிகுந்த ஜானகி நாடு சுதந்திரமடைந்தபிறகு ஓய்ந்து உட்காரவில்லை. உழைக்கும் பெண்களுக்கான உரிமைப் போராட்டத்தில் தொடர்ந்து தன்னை ஈடுபடுத்திக்கொண்டார். 1947ல் மதுரை மாநகராட்சி தேர்தல் நடைபெற்றது. இவர் 5வது வார்டு பூந்தோட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் வேட்பாளராக நிறுத்தப்பட்டார். தொள்ளாயிரம் வாக்குகள் பெற்று வெற்றி பெற்றார். கம்யூனிஸ்ட் கட்சி தடை செய்யப்பட்டது. அப்போது பாதுகாப்புச் சட்டத்தின்கீழ்

மீண்டும் கைதுசெய்யப்பட்டார் ஜானகி. சிறைகளில் கம்யூனிஸ்ட் ஆதரவாளர்கள் தாக்கப்பட்டனர். ஜானகியம்மா தனி அறையில் பூட்டி வைக்கப்பட்டார்.

1951ம் ஆண்டு விடுதலையான ஜானகியம்மா கணவரின் ஊரான பரிவில்லிக் கோட்டைக்குச் சென்று அவரது குடும்பத்தினருடன் சிறிது காலம் தங்கியிருந்தார். பின்னர் மதுரைக்கு சென்று விவசாய சங்கத்தைக் கட்டும் பணியில் ஈடுபட்டார். விரைவிலேயே விவசாய சங்கத்தில் தாலுக்கா செயலாளரானார். கட்சியின் மதுரை நகர்க்குழு உறுப்பினரானார்.

1954ம் ஆண்டு ஜில்லா போர்டு தேர்தலில், கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் சமயநல்லூர் தொகுதியில் வேட்பாளரானார். தேர்தலில் வெற்றியும் பெற்றார்.[47] 1955ம் ஆண்டு நடைபெற்ற கட்சி மாநாட்டில் கம்யூனிஸ்ட் கட்சியின் தாலுக்கா செயலாளராக தேர்ந்தெடுக்கப்பட்டார். விரைவிலேயே கட்சியின் மாவட்டச் செயற்குழு உறுப்பினரானார். பின்னர் கட்சியின் தமிழ்மாநில கவுன்சில் உருவாக்கப்பட்டபோது அதன் உறுப்பினரானார்.

1957ம் ஆண்டு விவசாயிகள் சங்கத்தின் ஒன்பதாவது மாநிலமாநாடு நெல்லை மாவட்டத்தில் நடைபெற்றது. அதில் விவசாயிகள் சங்கத்தின் நிர்வாகக்குழு உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.[48] 1962ம் ஆண்டு இந்திய–சீன எல்லைத் தகராறைத் தொடர்ந்து பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் கைது செய்யப்பட்டு வேலூர் சிறையில் அடைக்கப்பட்டார். கம்யூனிஸ்ட் கட்சி பிளவுபட்டபோது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியோடு தன்னை இணைத்துக் கொண்டார்.

1967ம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தலில் மதுரை கிழக்குத் தொகுதியிலிருந்து அதிக வாக்குகள் பெற்று சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.[49] நான்கு ஆண்டுகாலம் பணியிலிருந்தார். சட்டமன்ற உறுப்பினர் என்ற முறையில் மக்களின் பிரச்சனைகளை அரசாங்கத்தின் கவனத்துக்கு கொண்டுவந்து சட்டமன்ற விவாதங்களில் அந்தப் பிரச்சனைகளை

47. என்.ராமகிருஷ்ணன், *ஒரு அம்மாவின் கதை*, ப.38.
48. *மேலது*, ப.39.
49. *மேலது*, ப.45.

எழுப்பி அதற்கு நிவாரணம் தேடித்தந்தார். அப்போது பெண்களை அரசியல் இயக்கத்துக்கும், விவசாய இயக்கத்துக்கும், தொழிற்சங்க இயக்கத்துக்கும் கொண்டுவந்த பெருமை அவருக்கு உண்டு. எழுபதுகளில் அவர் பெண்களை பால் சமத்துவ, வர்க்கப்போராட்டப் பிரச்சனைகளில் ஒன்று திரட்டுவதில் ஈடுபட்டார்.

மாதர் சங்கத்தை உருவாக்கும் பணியில் முழு மூச்சுடன் ஈடுபட்டார். 1973ம் ஆண்டு தமிழக ஜனநாயக மாதர் சங்கம் உருவானது. 1974ம் ஆண்டு மதுரையில் நடைபெற்ற தமிழக ஜனநாயக மாதர் சங்கத்தின் முதல் மாநாட்டில் ஜானகியம்மா தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.[50] சிறைவாசம் அனுபவித்து ஆஸ்துமா நோயால் பாதிக்கப்பட்ட ஜானகியம்மா 1992ம் ஆண்டு மார்ச் முதல் நாள் இறந்தார்.[51]

ஜானகி தன் முழு வாழ்க்கையை எப்படி வாழ்ந்தார் என்பதற்கு ஒரு சிறந்த அடையாளம் அவர் தனக்கு அரசு அளித்த தாமிர பத்திரம் முதல் எல்லா விடுதலைப் போராட்ட தியாகிகள் சலுகைகளையும் ஒட்டு மொத்தமாக நிராகரித்ததாகும். மக்களின் உரிமைகளைத் தொடர்ந்து மீறுகிற இந்திய அரசிடமிருந்து எந்த நஷ்ட ஈடும், சலுகையும் பெறக்கூடாது என்று அவர் அவற்றை நிராகரித்தார்.[52]

### மைதிலி சிவராமன்

1939ம் ஆண்டு டிசம்பர் 14ம் நாள் பிறந்த மைதிலி சிவராமன் இடதுசாரி இயக்கத்தில் மிகப்பெரிய பங்கை ஆற்றியிருக்கிறார். சென்னை எத்திராஜ் கல்லூரியில் இண்டர்மீடியட் முடித்த அவர் பிறகு மாநிலக் கல்லூரியில் பட்டப்படிப்பைத் தொடர்ந்தார். முதுகலைப் படிப்புக்காக அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் வாய்ப்புக் கிடைத்தது. அங்கிருந்தபோது அமெரிக்க ஏகாதிபத்தியத்துக்கு எதிராக கியூபாவில் ஏற்பட்ட போராட்டம் அவர் கவனத்தை ஈர்த்தது.[2] மார்க்சியப் பாதை ஒன்றே பால்ஏற்றத்தாழ்வுகளையும் வர்க்கப்பேதங்களையும் அறவே

---

50. என்.ராமகிருஷ்ணன், *முன்குறித்தது,* ப.47.
51. மகளிர் சிந்தனை, ஏப்ரல் 1992.
52. *மேலது,* சிறப்பு மலர், செப்டம்பர் 1986.
53. அவள் விகடன், 23 ஜுலை 1999.

ஒழிப்பதற்கான வழியென்று உணர்ந்து கொண்டார். கியூபா சென்று திரும்பிய அவர் தாய்நாடு திரும்பியதும், இடதுசாரி இயக்கத்துடன் இணைந்து போராட விரும்பினார்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியில் 1969ம் ஆண்டு அங்கத்தினராக இணைந்தார். ஜனநாயக மாதர் சங்கத்துக்கு அடித்தளம் வகுத்தவர்களில் ஒருவரான மைதிலி சிவராமனின் பங்களிப்பு மிகவும் முக்கியமானது. மேலை நாட்டுக் கல்வி கற்றிருந்த இவர் மார்க்சிய சித்தாந்தத்தை நன்றாகப் புரிந்துகொண்டு அதனைக்கொண்டு உழைக்கும் பெண்களிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினார். படித்த மத்தியதர வகுப்பைச்சேர்ந்த வங்கிப்பணியாளர்கள், தொலைத்தொடர்புத் துறையில் பணியாற்றியவர்கள் என்று பல்வேறு தளத்திலும் பணிபுரிந்து கொண்டிருந்த பெண்களிடம் அவர்களின் அன்றாடப் பிரச்சனைகளுக்கும் அரசியலுக்கும் இருக்கும் தொடர்பை எடுத்துச்சொல்லி விழிப்புணர்வை ஏற்படுத்தினார். மைதிலி சிவராமன் ஒரு சிறந்த வரலாற்றாளரும்கூட. தனது தாய்வழி பாட்டியைப் பற்றி களஆய்வு செய்து புத்தகம் எழுதியிருக்கிறார். "மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பெண்கள் பிரிவு என்ற ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் இயங்கிக்கொண்டிருந்த ஜனநாயக மாதர் சங்கத்தை வெகுஜன அமைப்பாக மாற்றிக்காட்டிய பெருமைக்குரியவர் மைதிலி சிவராமன்" என்று கூறினார் உ.வாசுகி.[54]

சென்னையில் இயங்கிக் கொண்டிருந்த இளம்பெண்கள் கிருஸ்தவ சங்கம், பெண்ணுரிமை இயக்கம், மண்டே சாரிட்டி கிளப், இந்திய தேசிய மாதர் சம்மேளனம் ஆகிய அனைத்து அமைப்புக்களையும் ஒருங்கிணைத்து பிரச்சனைகளை முன்னெடுத்துச் சென்றத்தில் மைதிலி சிவராமனுக்கு மிகப்பெரிய பங்கு இருந்தது. வெவ்வேறு தளங்களில் உரிமைக்கோரும் அமைப்புகளாகவும், சேவை நிறுவனங்களாகவும் இயங்கிவந்த இந்த அமைப்புகளை மதநல்லிணக்கம், பாலியல் குற்றங்களுக்கானத் தீர்வு, ஊடகங்களில் பெண்கள் சித்தரிக்கப்படுவது குறித்த விவாதங்கள் போன்ற பொதுப் பிரச்சனைகளை முன்வைத்து

54. மகளிர் சிந்தனை, செப்டம்பர் 2011.

ஒருங்கிணைத்தது ஒரு முக்கியமான பங்களிப்பாகும். "பெண் விடுதலை என்பது ஜனநாயகத்தோடு சம்பந்தப்பட்டது என்பதை ஆழமாக புரியவைத்தவர்" என்று சுபாஷினி அலி பாராட்டுத் தெரிவித்திருக்கிறார்.[55]

பாப்பா உமாநாத்

பெண்கள் இயக்கத்திலும் பல பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டு சட்டமன்றம் பஞ்சாயத்து ஆகிய தளங்களில் ஆற்றலுடன் செயல்பட்ட தலைமைப் பண்புமிக்க பெண்களையும் அறிந்துகொள்வது அவசியம். கே.பி.ஜானகியம்மாள் எம்.எல்.சி. ஆக தேர்ந்தெடுக்கப்பட்டது ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. அந்த வரிசையில் பாப்பா உமாநாத் எம்.எல்.ஏ., பாலபாரதி எம்.எல்.ஏ., கவுன்சிலர் லீலாவதி ஆகியோரின் பணி குறிப்பிடத்தகுந்தது. 1931ம் ஆண்டு ஆகஸ்ட் 6ம் தேதி காரைக்காலில் உள்ள கோவில்பத்து என்ற ஊரில் பிறந்தார் தனலட்சுமி. தாய் லட்சுமி என்ற அலமேலு. தந்தை பக்கிரிசாமி. லட்சுமியின் இருபத்தேழாம் வயதில் பக்கிரிசாமி இறந்தார். குடும்பம் துன்பப்பட்டது. சொத்துத் தகராறு காரணமாக லட்சுமி தன் சொந்த ஊரான நாகப்பட்டினத்தை விட்டு வெளியேறும் நிலை ஏற்பட்டது. திருச்சிக்கு அருகில் உள்ள பொன்மலைக்கு குடும்பத்துடன் இடம் பெயர்ந்தார் லட்சுமி. அங்கு தனலட்சுமியின் பள்ளி படிப்பு ஆரம்பமானது. ரயில்வே தொழிலாளர் சங்கத்தினரின் உதவியோடு குடிசை அமைத்துத் தொழிலாளர்களுக்காக உணவகம் ஒன்றை நடத்தினார். கல்யாணசுந்தரம், அனந்தநம்பியார் போன்றவர்கள் அந்த உணவகத்துக்குச் செல்வது வழக்கம். உணவருந்த சென்ற தோழர்கள் அனைவரும் சிறுமி தனலட்மியை 'பாப்பா' என்று அழைத்தனர். பின்னர் அதுவே அவர் பெயராக நிலைத்துவிட்டது.

பொன்மலை ரயில்வே பணிமனையில் அப்போது பத்தாயிரத்துக்கும் மேற்பட்டத் தொழிலாளர்கள் வேலை செய்தனர். தென்னிந்திய ரயில்வே தொழிற்சங்கம் உருவாக்கப்பட்டிருந்தது. இளம் வயதிலேயே பாப்பா வாழ்ந்தச் சூழல் விடுதலைப் போராட்டம் மற்றும் வார்க்கப் போராட்டம் பற்றிய புரிதலை

55. மகளிர் சிந்தனை, செப்டம்பர் 2011.

ஏற்படுத்தியிருந்தது. தொழிற்சங்க நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனித்து வந்தார் பாப்பா.

பொன்மலை ரயில்வே தொழிற்சங்கத்தின் முற்சியால் பொன்மலையில் உருவான பாலர் சங்கத்தில் பாப்பாவும் ஒரு உறுப்பினர். போராட்டங்களுக்கான துண்டு பிரசுரங்கள் விநியோகம் இந்த பாலர் சங்கத்தின் மூலமாகத்தான் நடைபெறும்.[56]

இரண்டாம் உலகப்போரின்போது தன் தாயகமான சோவியத் ரஷ்யாவை பாதுகாக்க வீரமங்கை டான்யா செய்த உயிர் தியாகம் சிறுமி பாப்பாவின் மனதில் ஆழப்பதிந்தன. சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்ட கே.பி.ஜானகியம்மாள் இந்தக் காலக்கட்டத்தில் பொன்மலைக்குச் சென்றார். பாலர்சங்கத்துக்கு பாடல்களை கற்றுக்கொடுத்தார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு எதிரான போராட்டத்தில் பொன்மலை ரயில்வே தொழிலாளர்களுடன் பாப்பாவும் கலந்துகொண்டார்.

1945ல் தனது பதினான்காவது வயதில் பாப்பா கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். ஜீவானந்தம், மோகன் குமாரமங்கலம், எம்.கல்யாணசுந்தரம் மற்றும் பி.ராமமூர்த்தி போன்ற தலைவர்களின் தொடர்பு பாப்பாவுக்கு கிடைத்தது. கட்சியின் பல்வேறு நடவடிக்கைகளில் பாப்பா பங்கேற்றார்.[57]

1948ல் போராடுகிற அரசியல் உரிமை அரசால் பறிக்கப்பட்டு இரயில்வே தொழிலாளர்களுக்கான சங்க அதிகாரம் ரத்து செய்யப்பட்டது. கம்யூனிஸ்ட் கட்சியையும் தடைசெய்தனர். அதையொட்டி தலைமறைவு வாழ்க்கையை மேற்கொண்டார் பாப்பா. 1949ல் தலைமறைவு வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த தோழர் உமாநாத்தை பாப்பா சந்தித்தார். 1950ல் அவர்கள் இருந்த இடத்தைக் கண்டுபிடித்து கைது செய்தனர். சென்னை மத்திய சிறையில் அடைக்கப்பட்டனர்.[58] சிறைக்கொடுமைகளை எதிர்த்து உண்ணாவிரதம் மேற்கொண்டனர். சிறையில்

56. கே.பாலபாரதி, *முன்குறித்தது*, பக்.27.
57. என்.ராமகிருஷ்ணன், *தமிழகத்தில் கம்யூனிஸ்ட்இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் (1917–1964)* ப.98.
58. மகளிர் சிந்தனை, சிறப்பு மலர், செப்டம்பர் 1986.

இருபத்து மூன்று நாட்கள் உண்ணாவிரதம் இருந்து இறந்தார் பாப்பாவின் தாய் லட்சுமி. "இறந்தத் தாயை பார்க்க வேண்டுமானால் கட்சியிலிருந்து விலகுவதாக எழுதிக்கொடுத்தால் உங்கள் அம்மாவைப் பார்க்கலாம். இதுதான் அரசின் ஆணை" என்றார் சிறையிலிருந்த அதிகாரி. லட்சியத்தை கைவிடுவதாக இல்லை "உங்கள் ஆணையைத் தூக்கி குப்பையில் போடுங்கள்" என்று கூறி ராஜினாமா கடிதத்தைக் கொடுக்க மறுத்துவிட்டார். பாப்பாவும் உமாநாத்தும் 1952ல் திருமணம் செய்துகொண்டனர். சர்க்கரைச் செட்டியாரின் தலைமையில் எந்தவித சடங்குகளுமின்றி அவர்களது திருமணம் நடைபெற்றது.

1962ல் இந்திய–சீன பிரச்சனை வெடித்தபோது நாடு முழுவதிலுமுள்ள பிரபல கம்யூனிஸ்ட் தலைவர்கள் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டனர். இந்திய–சீன எல்லைத் தகராறை பேச்சுவார்த்தை மூலம் தீர்க்கமுடியும் என்ற நிலைபாட்டை கம்யூனிஸ்ட் கட்சி எடுத்தது. கம்யூனிஸ்ட் கட்சி தேசவிரோதமானது என்றுகூறி இந்திய அரசு கம்யூனிச தலைவர்களையும், ஏராளமான தொண்டர்களையும் கைதுசெய்தது. திருச்சியில் பாப்பாவையும், மதுரையில் ஜானகியம்மாவையும் கைது செய்து வேலூர் சிறையில் அடைத்தது.

ஓராண்டு சிறைவாசத்துக்குப் பின் பாப்பா விடுதலையானார். அப்போது கட்சிக்குள்ளேயே தத்துவார்த்த நெருக்கடி ஏற்பட்டது. 1964ல் கட்சி உடைந்தபோது பாப்பாவும், உமாநாத்தும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியில் இணைந்தனர். உமாநாத் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியினுடைய அலுவலகச் செயலாளராக இருந்து அன்றாடப் பணிகளை கவனிக்க ஆரம்பித்தார். 1964ல் இந்தியா–பாகிஸ்தான் பிரச்சனை ஏற்பட்டபோதும் கட்சி பேச்சுவார்த்தை மூலம் அதை தீர்க்கவேண்டுமென வலியுறுத்தியது. கட்சித் தலைவர்கள் கைது செய்யப்பட்டனர்.[59] 1964ல் டிசம்பர் 29ல் மீண்டும் பாப்பாவையும் ஜானகியம்மாவையும் கைதுசெய்து சிறையிலடைத்தனர்.

நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டு வழக்கு விசாரணை நடைபெற்றது. கம்யூனிஸ்ட் கட்சியையும், தொழிற்சங்கத்தையும் தடைசெய்தது தவறு என

59. சு.உஷா, *தோழர் பாப்பா உமாநாத்*, M.Phil., ஆய்வேடு, ப.19.

நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது. பாப்பா விடுதலை செய்யப்பட்டு மீண்டும் பொன்மலைக்குத் திரும்பினார். தொழிற்சங்கத்தின் சார்பாக நடத்தப்பட்ட தொழிலரசு பத்திரிகையின் உதவி ஆசிரியராக பணிபுரிந்தார் பாப்பா.

சொற்பொழிவின்மூலம் தஞ்சை விவசாயிகள் சங்கத்தைக் கட்டினார். 1966ல் தொழிற்சங்கப் போராட்டங்களில் பாப்பாவின் பங்கெடுப்பு குறிப்பிடத்தகுந்தது. முதலாளித்துவ–நிலப்பிரபுத்துவ சமூக அமைப்பில் பொது சேவையில் ஈடுபடும் பெண்ணை எந்தக் கண்ணோட்டத்தோடுப் பார்க்கிறார்கள் என்ற உண்மையை அரவது வாழ்க்கையில் நேரடியாக உணர்ந்தார் பாப்பா.

வேலூர் சிறையில் அடைக்கப்பட்டிருந்தபோது பாப்பாவும், கே.பி.ஜானகியம்மாவும் தமிழ்நாட்டில் பெண்களை ஸ்தாபன ரீதியாக ஒன்று திரட்டபடவேண்டியதன் அவசியத்தை உணர்ந்தனர். சிறை வாழ்க்கையிலிருந்து விடுபட்டவுடன் அத்தகைய முயற்சியில் ஈடுபட்டனர். தமிழ்நாட்டில் ஜனநாயக மாதர் சங்கம் அமைக்க முழு முயற்சி எடுத்தார். மாதர் சங்கம் உருவானபோது அதன் தலைவர், செயலாளர் பொறுப்புக்களை ஏற்றார்.

1989ம் ஆண்டு சட்டமன்ற உறுப்பினராக பாப்பா உமாநாத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சட்டமன்றத்தில் பெண்கள் பிரச்சனைகளில் பிரத்யேக கவனம் செலுத்தினார். எண்பத்தொரு வயதுவரை பெண்ணுரிமைக்காகப் போராடிய இவர் 2011ம் ஆண்டு டிசம்பர் 17ம் நாள் காலமானார்.

பாப்பா உமாநாத்தின் மகள் உ.வாசுகி தற்போது தேசியச் செயலாளர் பொறுப்பில் இருக்கிறார். மாநில அளவில் சுமார் இருபதாண்டுகாலமாக மிகப்பெரிய பங்களிப்பை செய்து கொண்டிருப்பவர். தமிழகத்தைச் சேர்ந்த சுதா சுந்தரராமன் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் மத்தியக் குழுவில் இடம் பெற்றிருக்கிறார்.

விஜயா ஜானகிராமன், சரஸ்வதி, ஜான்சிராணி, பிருந்தா, பாலபாரதி ஆகியோர் மிக நீண்டகாலமாக மாதர் சங்க நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபட்டு வருபவர்கள்.

பாலபாரதி

திண்டுக்கல் மாவட்டம், கதிரணம்பட்டியில் கதிரியப்பனுக்கு மகளாக 1962ம் ஆண்டு மார்ச் 30ம் நாள் நாகலெட்சுமி என்ற பாலபாரதி பிறந்தார். இவர் சிறுவயதில் அங்குள்ள அரசுப் பள்ளியில் துவக்கப்படிப்பையும், பின்னர் காந்திகிராம கிராமிய பல்கலைக் கழகத்தில் மேற்படிப்பையும் முடித்தார்.

இவர் பள்ளியில், கல்லூரியில் படிக்கும்போதே பெண்கள் பற்றிய பேச்சு போட்டிகளில் சிறந்து விளங்கினார். பள்ளியில் படிக்கும்போது அரசியல் கல்வியை இவரது ஏழாம்வகுப்பு ஆசிரியர் கற்றுக்கொடுத்தார். 1984ல் வாலிபர் சங்கத்தில் இணைந்தார். அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தில் மாவட்டச் செயலாளராக உயர்ந்தபின்னர் மாதர் அமைப்பில் உள்ள பெருவாரியான பிரச்சனைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கும் விதத்தில் திண்டுக்கல்லில் பெண்களை இணைத்து பல்வேறு போராட்டங்களை நடத்தினார். திண்டுக்கல் நகரில் அரசுமருத்துவராக பணிபுரிந்து வந்த பவானிகணேசன் என்பவர் தன்னுடைய கணவரால் கொலை செய்யப்பட்டார். அவரின் கொலை தற்கொலை என்று ஊடகங்கள் செய்தி வெளியிட்டன. ஆனால் அந்த செய்தியை பார்த்த பாலபாரதி பெண்களை திரட்டி பவானியின் மரணம் தற்கொலை அல்ல கொலைதான் என்றும் கணேசனை கைது செய்யும்வரை பவானியின் பிரேதத்தைத் தூக்க விடமாட்டோம் என்றும் போராடினார். பின்னர் காவல்துறையினர் கணேசனை கைது செய்தார்கள்.

இந்தப்போராட்டத்தின் விளைவாக ஜனநாயக மாதர் சங்கம் திண்டுக்கல் நகரில் வேரூன்றி வளர்ந்தது. இதன் தொடர்ச்சியாகத்தான் 2001, 2006 மற்றும் 2011 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற சட்டமன்றத் தேர்தல்களில் திண்டுக்கல் தொகுதியின் சட்டமன்ற உறுப்பினராக பாலபாரதி தேர்வு செய்யப்பட்டார்.[60] திண்டுக்கல் நகரின் நீண்டகால பிரச்சனையாக இருந்த குடிநீர்ப் பிரச்சனை குறிப்பாக கெண்கள் மிகவும் சிரமப்படக்குடிய பிரச்சனை என்பதை தேர்தல் கோரிக்கையாகக் கொண்டு களம்நின்று வெற்றி பெற்றார். காவிரி கூட்டுக் குடிநீர்த்

60. நேர்காணல் : *பாலபாரதி*, 28 ஜனவரி 2013.

திட்டத்தை திண்டுக்கல் நகருக்கு கொண்டு வந்தார். இதன் விளைவாக வெகுநாட்களாக இருந்த தண்ணீர் பிரச்சனைக்கு ஓரளவு தீர்வு காணப்பட்டது.

தனது தொகுதி மேம்பாட்டு நிதியை மக்களுக்காக குறிப்பாக பெண்களுக்காக ஆரம்ப சுகாதார நிலையங்கள், பிரசவ வார்டுகள், சுகாதார வளாகங்கள் போன்றவைகள் அமைக்க ஒதுக்கித் தந்துள்ளார். அதேபோல் வீடுகள் இல்லாத ஏழை நடுத்தரக் குடும்ப மக்களுக்கு வீட்டு மனைகளை அரசே இலவசமாகக் கொடுத்திட வேண்டும் என்று பத்தாயிரத்துக்கும் அதிகமான பெண்களை திரட்டிப் போராடினார். இதன் விளைவுதான் 2011ம் ஆண்டு தேர்தல் வாக்குறுதியில் வீடற்ற, நிலமற்ற ஏழைக்குடும்பங்களுக்கு இலவச வீட்டு மனை வழங்குவோம் என்ற அறிவிப்பு வெளியானது.

தலித் மக்களுக்கும் வீட்டு மனைப்பட்டா கிடைக்காதவர்களுக்கும் ஐயாயிரத்துக்கும் அதிகமான பட்டாக்களை வாங்கித்தந்துள்ளார். அருந்ததிய மக்களுக்கு மூன்று சதவிகித இடஒதுக்கீடு கிடைக்கவேண்டும் அது உடனடியாக சட்டமாக்கப்படவேண்டும் என்று அவர் சட்டமன்றத்தில் வலியுறுத்தியதை அரசு ஏற்றுக்கொண்டது. இன்று அருந்ததிய மக்களுக்கு இடஒதுக்கீடும் கிடைத்துள்ளது.[61]

சாலைப்பணியாளர்கள், அங்கன்வாடி ஊழியர்கள், சத்துணவுப் பணியாளர்கள், ஆசிரியர்கள் போராட்டங்களுக்கு தலைமையேற்று குறிப்பாக பெண்கள் பிரச்சனைகள் பற்றி பேசியுள்ளார். மாவட்டக் காவல்துறை கண்காணிப்பாளர் பொதுமக்களிடம் மனுக்களை நேரடியாக பெற்றுக்கொள்ள வேண்டும், தீவிர விசாரணை நடத்திட வேண்டும் என்று பாலபாரதி கேட்டுக் கொண்டதால் இன்று மாவட்டக் காவல்துறை கண்காணிப்பாளர்கள் மனுக்களை நேரடியாக பெறுகின்றனர்.

இன்றும் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் மாநில தலைவர்களில் ஒருவராகவும், சிறந்த இலக்கியப் படைப்பாளியாகவும் இருக்கின்றார். "சில உண்மைகளும் சில பொய்களும்", "அவர்களும் அவர்களும்" போன்ற கவிதைத்

61. நேர்காணல் : *பாலபாரதி*, 28 ஜனவரி 2013.

தொகுப்புகளை வெளியிட்டுள்ளார். "லட்சிய நதியாய்" என்று பாப்பா உமாநாத் அவர்களின் வாழ்க்கை வரலாற்று நூலை எழுதியுள்ளார்.[62] பெண்களுக்கு ஏற்படும் பிரச்சனைகளுக்காக அயராது போராடிவரும் இவர் இன்றைய தமிழகத்தின் சிறந்த பெண் விடுதலைப் போராளியாக திகழ்கின்றார்.

**லீலாவதி**

1957ம் ஆண்டு செப்டம்பர் 27 அன்று மதுரையில் சௌராஷ்டிரா சமூகத்தைச் சார்ந்த வெங்கடாசலம், இந்திரா தம்பதியருக்கு மூன்றாவது மகளாக லீலாவதி பிறந்தார்.[63]

1997ம் ஆண்டு ஏப்ரல் 23ம் நாள் மதுரை வில்லாபுரம் வார்டு கவுன்சிலர் லீலாவதி கொலை செய்யப்பட்டார்.[64] ஆயுதமேந்திய ஆறு ஆண்கள் அவரைத் தாக்கி இருபத்தைந்து முறை அவரை கத்தியால் குத்தினார்கள். ஜனநாயக மாதர் சங்கத்தைச் சார்ந்த லீலாவதிமீது அவர்களுக்கு என்ன விரோதம் என்ற கேள்வி எழுகிறது. ஏழைத்தொழிலாளியான அவர் கவுன்சிலர் தேர்தலில் வெற்றி பெற்றது பலருக்கு அதிர்ச்சியை அளித்தது. பஞ்சாயத்துத் தேர்தலில் பெண்களுக்கு இடஒதுக்கீடு கிடைத்ததால்தான் லீலாவதி போன்றவர்கள் கவுன்சிலர் பதவிக்கு வரமுடிந்தது. முதல் கவுன்சில் கூட்டத்திலேயே குடிநீருக்கு காசு கொடுக்கும் பழக்கத்தை நிறுத்த வேண்டும் ஊருக்கு பைப்லைன் போட வேண்டும் என்று பேசினார் லீலாவதி. எத்தனையோ காலமாக யாருடைய ஆட்சியாக இருந்தாலும் தண்ணீர் சப்ளை என்ற பெயரில் கொள்ளையடித்தவர்களுக்கு அவரை பிடிக்காமல் போயிற்று. உள்ளூர் கடைக்காரர்களையெல்லாம் மிரட்டி மாமூல் வாங்கும் வழக்கத்தை எதிர்த்து நடந்த தர்ணாவுக்கு லீலாவதி தலைமைத் தாங்கினார். ரேஷன் கடையில் நடக்கும் ஊழலைக் கண்டித்தார். அத்துமீறி ஆக்கிரமிப்பு செய்திருந்த நிலங்களை மீட்டு அங்கு பள்ளிக்கூடம் கட்டவேண்டுமென்று

62. நேர்காணல் : *பாலபாரதி,* 28 ஜனவரி 2013.
63. என்.ராமகிருஷ்ணன், *நினைவில் வாழும் லீலாவதி,* ப.31.
64. *மேலது,* ப.20.

பேசினார்.[65] இதனால் ஆத்திரமடைந்த சிலர் அவரை கொலை செய்யத் துணிந்தனர்.

பார்ப்பவர்களுக்கு லீலாவதி ஒரு சாதாரணப் பெண்தான். ஆனால், அவருடைய நாற்பதாண்டு கால வாழ்க்கையில் கடைசி பன்னிரெண்டு ஆண்டுகளில் அவர் உள்ளுணர்வில், சிந்தனைகளில், செயல்பாடுகளில் ஏற்பட்ட மாற்றங்கள் அவரை ஒரு புது மனுஷியாக்கிவிட்டது. குடும்பம் என்னும் லட்சுமண ரேகையைத்தாண்டி லட்சியக் கனவுகளோடு இந்திய ஜனநாயக வாலிபர் சங்கத்தில் சேர்ந்தார். கைத்தறித் தொழிலாளர் சம்மேளன மாநில துணைத் தலைவர் ஆனார். அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் மாநிலக்குழு உறுப்பினரானார். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை மாநகர மாவட்டக்குழு உறுப்பினராகப் பணியாற்றினார்.[66] ஒரு சிறந்த அரசியல் செயல்வீரராகப் பரிணமித்தார்.[67] இத்தகைய பரிணாமத்தைக் கல்லூரியில் பட்டப்படிப்பு மூலம் கூடப் பெற இயலுவதில்லை. இன்றைக்கு நமது கல்வி நிறுவனங்களில் அளிக்கப்படும் கல்வி, ஒரு பெண் வேலை செய்து வருமானம் ஈட்ட உதவலாம். ஆனால் சுதந்திர சிந்தனைக்கோ செயல்பாட்டுக்கோ உதவுவதில்லை. மனுஷி என்ற முறையில் தனது பல்வேறு அடையாளங்களை, தனித்துவத்தை இனங்கண்டு வளர்த்துக் கொள்ளவும் பயன்படுவதில்லை. அரசியல் நூல்களைக் கரைத்துக் குடித்தவர்கள்கூட முழுநேர அரசியல் ஈடுபாட்டை அநாகரீகமாக, அருவறுப்பாகக் கருதுகிறார்கள். லீலாவதி படித்தது பத்தாம் வகுப்பு வரைக்கும்தான். அதுவே அவருக்குச் சாதகமாக இருந்தது. கல்வி என்ற பெயரில் வறட்டுக்கௌரவம், அச்சம் மக்களுக்கும் தங்களுக்குமிடையில் உள்ள இடைவெளியினால் அந்நியமாக்கப்பட்ட உணர்வு போன்ற தடைகளை அவர் உருவாக்கிக் கொள்ளவில்லை. அரசியல் என்றாலே ஊழல் சாக்கடை, சந்தர்ப்பவாதம், சுயநலம் என்று விரக்தியடைந்தவர்களையும் நிமிர்ந்து உட்காரச் செய்தது அவர் சாவு. மக்களின் மறுத்துப்போன சமூக மனசாட்சியை உயிர்ப்பித்தது அவர் மறைவு. தமிழ் மக்கள் மறந்துபோய்விட்ட தரமான அரசியல் பண்புகள், மரபுகள், சமூகநியதிகள், நியாயங்கள் ஆகியவற்றுக்கு

65. மைதிலி சிவராமன், *சமூகம்–ஒரு மறுபார்வை*, ப.18.
66. என்.ராமகிருஷ்ணன், *முன்குறித்தது*, ப.33.
67. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.20.

புனர்ஜென்மம் அளித்தது அவர் வாழ்க்கை. இலட்சியபூர்வ மாண்புகள், சோஷலிச சித்தாந்தம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த அரசியலுக்கு வலுவூட்டி, செழிப்பித்தது அவர் தியாகம்.

அவர் இந்திய மக்கள் மனதில் இடம்பெற்று விட்டார். தமிழக முதல்வர், தில்லியில் உள்ள இந்தியப் பெண்கள் நலக்கமிஷன் தலைவர் என்று பல பிரமுகர்களும் நூற்றுக்கணக்கான சாமானியர்களும் அவர் குடும்பத்தினரைப் பார்த்து ஆறுதல் கூறி லீலாவதிக்கு அஞ்சலி செலுத்தினர். ஈரோட்டிலிருந்து ஒரு பேருந்து நிறைய மாணவிகளும், ஆசிரியைகளும் செய்திகேட்டுப் பதறிப்போய் மதுரை சென்றனர்.[68]

கேரளத்தில் கண்ணனூரில் பீடித்தொழிற்சங்கம் நடத்திய அஞ்சலிக் கூட்டத்தில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட பெண்கள் கலந்துகொண்டனர். சரியாக எழுதக்கூடவராத பல பஞ்சாயத்துப் பெண்களிடமிருந்து உருக்கமான கடிதங்கள் வந்தன. லீலாவதி குடும்பத்துக்கு வீட்டுவசதி அளிப்பது, அவரது மூன்று மகள்களின் படிப்புக்கும் குடும்ப வருமானத்துக்கும் ஏற்பாடு செய்வது, லீலாவதி நினைவு மணிமண்டபம் கட்டுவது ஆகியவற்றுக்காக நிதிகேட்டு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி விடுத்த வேண்டுகோளுக்கு செவிமடுத்து அனைத்துத் தரப்பு மக்களும் தாராளமாக நிதி வழங்கினர். சில நகராட்சிகளிலும் ஊராட்சிகளிலும் உறுப்பினர்கள் ஒருமாத ஊதியத்தை நிதியாக அனுப்பினர். புறத்தூண்டுதலற்ற தங்கள் சுயவிருப்பத்தின் அடிப்படையில் அளிக்கப்பட்ட மக்கள் ஆதரவு அரசியலில் தார்மீகத்தை நிலைநாட்டுவது சாத்தியமே என்ற நம்பிக்கையைத் துளிர்விடச் செய்தது இந்நிகழ்ச்சி.[69]

எந்தவொரு காலக்கட்டத்தை எடுத்துக்கொண்டாலும் ஒவ்வொரு சமுதாயத்திலும் பல்வேறு அமைப்புகள் தோற்றம் கொள்கின்றன. வெவ்வேறு சித்தாந்தங்களைப் பின்பற்றி இவை இயங்குகின்றன.

---

68. மைதிலி சிவராமன், முன்குறித்தது, ப.22.
69. *மேலது.,*

மேற்கத்திய நாடுகளில் பல்வேறு ஜனநாயக இயக்கங்கள் குறிப்பாக, நிலப்பிரபுத்துவத்தை எதிர்த்து போராட்டங்கள் எழுந்தபோது மாதர் இயக்கமும் இப்போராட்டங்களில் ஒரு பகுதியாக எழுந்தது. ஆணாதிக்க கட்டமைப்புகளை எதிர்த்த இயக்கமாக வளர்ந்தது. இந்தியாவைப் பொருத்தவரையில் தேசவிடுதலைப் போராட்டத்துடன் இணைந்து செயல்பட்ட மாதர் இயக்கங்கள் இயங்கிவந்தன. தேசம் விடுதலைப் பெற்ற பிறகு சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட அனுபவம் மிக்க இடதுசாரிப்பெண்கள் அப்போதைய பிரச்சனைகளை எதிர்கொள்ள தங்களுக்கென்று ஒரு புதிய அமைப்பின் அவசியத்தை உணர்ந்தனர்.

கம்யூனிஸ்ட் கட்சியில் இணைந்து தொழிற்சங்க நடவடிக்கைகளில் ஈடுபட்ட இந்தப் பெண்கள் இந்திய மாதர் தேசிய சம்மேளனத்தில் (NFIW) ஓர் அங்கமாக ஏற்கனவே செயல்படத் தொடங்கி இருந்தனர். 1964ம் ஆண்டு கட்சியில் பிளவு ஏற்பட்ட பின் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடன் தங்களை தொடர்புபடுத்திக்கொண்ட தமிழ்மாநிலக் கிளையைச் சேர்ந்த கே.பி.ஜானகியம்மாள், ருக்மணி அம்மாள், பாப்பா உமாநாத் ஆகியோர் ஜனநாயக மாதர் சங்கம் என்ற அமைப்பை ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டனர்.

தமிழ்நாட்டில் ரயில்வே தொழிலாளர்களின் வேலை நிறுத்தப் போராட்டத்தின்போது திருச்சி, மதுரை, விழுப்புரம், ஈரோடு, போத்தனூர், மண்டபம், தனுஷ்கோடி, மேட்டூர், விருத்தாச்சலம் ஆகிய ஊர்களில் பெண்கள் கணிசமாக திரட்டப்பட்டனர். ஆங்காங்கே திரட்டப்பட்ட பெண்கள் மாதர் சங்கமாக அமைத்துக் கொண்டனர். அது போலவே பஞ்சாலைத் தொழிலாளர் போராட்டத்தில் கோவை, திருப்பூர் பகுதிகளில் பெண்கள் திரட்டப்பட்டனர். இப்போராட்டத்தில் அம்மு, பாப்பம்மாள் ஆகிய இரு பெண்கள் துப்பாக்கி சூட்டுக்கு இரையானார்கள். இதே காலத்தில் விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருந்த பல்லாயிரக்கணக்கான பெண்களை இணைத்து தஞ்சைமாவட்டத்தில் மாயவரம், மன்னார்குடி, நாகப்பட்டினம், திருத்துறைப்பூண்டி, கீழ் வெண்மணி ஆகிய பகுதிகளிலும் மதுரை மாவட்டத்தில் சில பகுதிகளிலும் நெல்லை மாவட்டத்தில் பல பகுதிகளிலும் மாதர் சங்கம் ஆரம்பிக்கப்பட்டு, விவசாயத் தொழிலாளர்களின் செங்கொடி இயக்கத்துடன்

இணைந்துநின்று வர்க்கப் போராட்டங்களிலும், சாதிய அடக்குமுறைக்கு எதிராகவும் போராட்டக் களத்தில் இறங்கினர்.

இடதுசாரி இயக்கத்தைச் சார்ந்த பெண்களுக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. உறுதியான கொள்கைபிடிப்பு, அரசை எதிர்த்து நின்று சிறைவாசம் உட்பட, பல சிரமங்களை சகித்துக்கொள்ளும் மனஉறுதி, கட்சி கட்டுப்பாட்டை ஏற்கும் பக்குவம்.

ஜனநாயக மாதர்சங்கத்தின் தமிழ்நாட்டுக்கிளையின் தலைமையிடத்தில் இயங்கிய இவர்களைப் போல், நாட்டின் பிற மாநிலங்களிலும் அகில இந்திய அளவிலும் கௌரியம்மாள், சுசீலா கோபாலன், சுபாஷினி அலி, பிருந்தா கராத், லஷ்மி ஷேகல் ஆகியோர் முக்கியமானவர்கள். 2012ல் மறைந்த லஷ்மி ஷேகல் நேதாஜியின் இந்திய தேசிய ராணுவத்தின் பெண்கள் பிரிவில் ஆயுதமேந்தி போராடியவர் என்பது குறிப்பிடத்தகுந்தது. தேச விடுதலைக்குப் பிறகு இவர் இடதுசாரி இயக்கத்தில் ஈடுபட்டு குறிப்பாக ஜனநாயக மாதர் சங்கத்தின் ஒரு முன்னோடியாகவே திகழ்ந்தார்.[70]

நாடு விடுதலையடைந்த பிறகு இடதுசாரி இயக்கப் பின்னணியில் தோன்றிய ஜனநாயக மாதர் சங்கம் இந்தியப் பெண்களின் உரிமைக்கான போராட்ட வரலாற்றில் ஒரு முக்கியத் திருப்புமுனையாகும். நமது அரசியலமைப்பு வழங்கியிருக்கும் உரிமைகள் கொள்கை அளவில் இருந்ததே தவிர நடைமுறையில் எளிய மக்களை எட்டவே இல்லை என்ற கண்ணோட்டத்தை முன்வைத்து பால் சமத்துவத்தை தீவிரமாக கோரிய அமைப்பாக இது உருவானது.

---

70. THE HINDU, 24 July 2012.

## அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் செயல்பாடுகள்

ஜனநாயக மாதர் சங்கம் உருவான காலத்தில் பொதுவாக நகர்ப்புற பெண்கள் வரதட்சணை பிரச்சனை, பொது இடங்களிலும் பணியிடங்களிலும் பாலியல் துன்புறுத்தல்கள், குடும்ப வன்முறை ஆகிய பிரச்சனைகளை மௌனமாக அனுபவித்து வந்தார்கள். கிராமப்புற உழைக்கும் பெண்களின் மேற்கூறிய பிரச்சனைகள் தவிர பொருளாதார அழுத்தங்களுக்கும் உள்ளானார்கள். பெண்களுக்கான சட்டங்களில் இருந்த குறைகளைக் களைய சட்டத்திருத்தங்களுக்கான தேவையும் உணரப்பட்டது. தங்களது பங்களிப்பைப் பற்றி ஒரு தெளிவான புரிதலுடன் தன் இலக்கை நோக்கி பயணிக்கத் தொடங்கியது ஜனநாயக மாதர் சங்கம்.

### வரதட்சணைக் கொடுமைகளுக்கு எதிராக. . . .

ஆண்–பெண் சமத்துவமற்ற சமூகத்தில் பெண்களுக்கெதிராக கொடுமைகள் தொடர்வதில் வியப்பில்லை. இத்தகைய கொடுமைகளில் ஒன்று வரதட்சணை. பெண்களுக்கென்று சொத்துரிமை இல்லாத சூழலில் திருமணத்தையொட்டி பெண் வீட்டாரிடம் ஒரு தொகையை வசூலிப்பது இயல்பான விஷயமாகவே கருதப்பட்டது. பல நூற்றாண்டுகளாக தொடர்ந்துவரும் இந்த வழக்கம் சுதந்திர இந்தியாவில் எல்லா ஜாதி மக்கள் மத்தியிலும் வேகமாக பரவியிருந்தது. திருமணமாகி புகுந்தவீடு செல்லும் பெண்ணை வெறும் கையுடன் அனுப்பி வைத்தால் அவளுக்கு மதிப்பு இருக்காது என்ற வகையில் இந்த வழக்கத்தை சமுதாயம் அங்கீகரித்து வந்தது. பெண்ணுக்கான கௌரவமாக கருதப்பட்ட வரதட்சணை, சீர் முதலியவைகளை உண்மையில் பெண்கள் உரிமையுடன் அனுபவிக்கிறார்களா என்ற கேள்வி எவரும் கேட்கவில்லை.[1] பெண்ணுக்குத் தரும் வரதட்சணையும் சீரும் தங்களது பொருளாதார நிலைமையை ஊருக்கு அறிவித்துக் கொள்ளும் பெருமையாகவே வசதி படைத்தவர்கள் கருதினார்கள். இவர்களைப் பார்த்து சாதாரண மக்களும் கடன்பட்டாவது வரதட்சணை கொடுக்கத் தொடங்கினார்கள்.

---

1. இலட்சிய பெண், செப்டம்பர் 1986.

பாத்திரங்கள், துணிகள், நகைகள், வாகனங்கள் மற்றும் பணம் ஆகியவைகள் வரதட்சணை என்ற பெயரில் தரப்பட்டும், பெறப்பட்டும் வந்துள்ளன.

பெண்களுக்கு எதிரான எத்தனையோ சமூக வழக்கங்களில் இதுவும் ஒன்று என்று சாதாரணமாக எண்ணிவிடமுடியாத அளவுக்கு இந்த வரதட்சணை பழக்கத்தையொட்டி பெண்கள் குடும்பத்துக்குள் ஏராளமான வன்முறைக்கு ஆளாகத் தொடங்கினார்கள். பேசியபடி வரதட்சணை தராவிட்டால் அவர்களை சித்தரவதைக்கு உள்ளாக்குவது என்று தொடங்கி உயிரோடு தீயிட்டு கொளுத்துவதுவரை எல்லாக் கொடுமைகளுக்கும் துணிந்தார்கள். நமது சமூக அமைப்பில் பெண்களுக்குத் திருமணம் என்பது வாழ்நாளுக்கான ஒரே ஏற்பாடாக இருப்பதும் ஆண்களுக்கு மறுமணம் சாத்தியமாக இருப்பதும் சமூக ரீதியான காரணமாக இருக்கிறது. பெரும்பாலான பெண்கள் வேலைக்குச்சென்று பொருளீட்டாமல் ஆண்களைச் சார்ந்து வாழும் நிலையும் ஒரு முக்கியமான காரணமாக இருக்கிறது.

1961ம் ஆண்டு வரதட்சணை தடைச் சட்டத்தின்படி வரதட்சணை கொடுப்பதும், வாங்குவதும் குற்றமாகும். இந்தியக் குற்றவியல் சட்டம் 498 பிரிவின் படி ஒரு பெண்ணிடம் திருமணத்தின்போதோ அதன் பிறகோ வரதட்சணை கேட்பதும் அதற்காக அவளை அச்சுறுத்துவதும் தவறாகும். திருமணமாகி ஏழு ஆண்டுகளுள்ளாக அந்த பெண்ணுக்கு ஏதேனும் கொடுமைகள் நடைபெறுமேயானால் அவளது கணவர் மற்றும் புகுந்த வீட்டார்மீது உடனடியாக நடவடிக்கை எடுக்கப்படும். இந்தச் சட்டம் அமலில் இருந்தபோதும் பெண்களுக்கு எதிரான கொடுமைகள் வரதட்சணை என்ற பெயரால் தொடர்ந்தன.

1980களில் வட இந்தியாவில் வரதட்சணை காரணமாக புதுமணப் பெண்களை எரிப்பது அதிக எண்ணிக்கையில் நடைபெற்றது. இந்தக் கொடுமையில் கணவனும் புதுமணக் குடும்பத்தாரும் இணைந்தே ஈடுபட்டார்கள்.[2]

---

2. இலட்சிய பெண், செப்டம்பர் 1986.

தென்னிந்தியாவிலும் பரவத்தொடங்கிய வரதட்சணைக் கொலைகள் தமிழ்நாட்டிலும் ஆங்காங்கே தலைத்தூக்கியது. இதற்கான காரணங்களை ஆராய்ந்த பலரும் பெண்ணின் தாழ்மையான சமூக அந்தஸ்தே இதற்கு காரணம் என்று சுட்டிக்காட்டினார்கள். குறிப்பாக திருமணம் என்ற ஏற்பாட்டில் அவள் மேலும் மலினப்படுத்தப்படுகிறாள். இந்து சமூகத்தில் திருமணங்கள் கன்னிகாதான முறைப்படி நடைபெறுகின்றன. “ஒரு ஆண் தனக்கு தானமாக தரப்பட்ட மற்ற பொருள்களை போல பெண்ணையும் ஒரு பொருளாகவே மதிக்கும் மனோபாவம் வளர்ந்துள்ளது” என்று கருத்து தெரிவித்தார்கள்.[3]

எண்பதுகளில் ஜனநாயக மாதர் சங்கத்தை அணுகிய பாதிக்கப்பட்ட பெண்களில் குறிப்பாக மத்தியத்தர வகுப்பைச் சேர்ந்த பெண்கள் வரதட்சணை கொடுமைக்கு ஆளானவர்களே. வரதட்சணை பெறுவதற்காக சில ஆண்கள் எந்த எல்லைக்கும் செல்லத் தயாராக இருந்ததற்கு ஒரு முக்கிய உதாரணம் சென்னையைச் சேர்ந்த ராகவன் என்ற நபர்.

அரசு போக்குவரத்தில் நடத்துனராக பணியாற்றிய அவருக்கு கீதா (பெயர் மாற்றம் செய்யப்பட்டுள்ளது) என்ற பெண்ணுடன் திருமணம் நடந்தது. திருமணமான மறுஆண்டு பெண் குழந்தைக்குத் தாயானார் கீதா. தனது கணவரின் சில நடவடிக்கைகள் சந்தேகத்துக்கு உரியதாக இருப்பதாக தனது தந்தையிடம் அவர் முறையிட்டார். தொடர்ந்து கீதாவின் தந்தை மருமகனை கண்காணிக்கத் தொடங்கினார். ராகவனுக்கு மற்றொரு குடும்பம் இருக்குமோ என்ற சந்தேகம் அவருக்கும் ஏற்பட்டது. ஆனால் உண்மையில் ராகவன் வரதட்சணைக்காக பல குடும்பங்களை ஏமாற்றி தொடர்ந்து மூன்றுமுறை திருமணம் செய்தவர் என்ற உண்மை கீதா வீட்டாருக்கு அதிர்ச்சியை அளித்தது. மேலும் இரண்டு பெண்களை ஏமாற்றத் துணிந்த ராகவன் இரண்டு பெண்வீட்டாரிடம் வரதட்சணையும் வாங்கி திருமணம் நிச்சயத்திருந்தார்.[4] இந்த நிலையில் கீதாவின் பெற்றோர் உதவி கேட்டு ஜனநாயக மாதர் சங்கத்தை அணுகினார்கள். அவர்மீது காவல்துறையில் புகார்செய்து உரிய நடவடிக்கை எடுக்கச் செய்தால் மேலும் பல பெண்களை

3. Pramod Kumar Mishra, *Women in South Asia*, p.130.
4. ஜூனியர் விகடன், 06 மார்ச் 1985.

காப்பாற்ற முடியும் என்று அறிவுரை செய்தார் அப்போது ஜனநாயக மாதர் சங்கத்தின் மாநிலச் செயலாளராக இருந்த மைதிலி சிவராமன்.[5]

செங்கல்பட்டு டி.ஐ.ஜி. ரமணன் வழக்கைப் பதிவுசெய்து ராகவனை கைதுசெய்ய உரிய நடவடிக்கை எடுத்தார். ராகவன் வீட்டுக்கு வரும்போது மிக இயல்பாக நடந்துகொண்டு காவல்துறைக்கு ஒத்துழைப்புத் தரும்படி கீதாவை தயார்செய்தார் மைதிலி சிவராமன். ராகவன் கைது செய்யப்பட்டபோது அவன் செய்த மோசடிகள் பத்திரிகைகளில் வெளிவந்து மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தின. “ஜனநாயக மாதர் சங்கத்தின் உதவியின்றி ஒரு மத்தியதர குடும்பத்தைச் சார்ந்த என்னால் இதனை சாதித்திருக்க முடியாது” என்று கீதாவின் தந்தை பத்மநாபன் கருத்து தெரிவித்திருந்தார்.[6]

பல பெண்களை பணத்துக்காக ஏமாற்றிய ராகவன் வரிசையில் மேலும் சில வழக்குகள் பதிவாயின. சென்னை வியாசர்பாடியைச் சேர்ந்த சாந்தி என்பவர் 1985ல் மாரிமுத்துவை மணந்துகொண்டார். திருமணமாகி மூன்று தினங்களில் அவளை மணந்துகொண்டதே பணம் சம்பாதிக்கத்தான் எனக் கணவன் கூறினான். சாந்தி பெற்றோர் வீட்டுக்கு திரும்பிச் சென்றார். மாரிமுத்து பத்து வருடங்களுக்கு முன்பே திருமணமானவர். முதல் மனைவியிடமிருந்து பிரிந்து வாழ்கிறார் என்பது மட்டும் சாந்தி வீட்டாருக்குத் தெரியும். ஆனால் குணசுந்தரி என்ற பெண்ணை இரண்டாவதாக மணந்து கொண்டார் என்ற செய்தி தெரிந்திருக்கவில்லை. மூன்றாவது மனைவியான சாந்தி உதவி கேட்டு ஜனநாயக மாதர் சங்கத்தை அணுகினார். இதற்கு மாதர் சங்கம் உரிய நடவடிக்கைகளை மேற்கொண்டது.

சென்னை கொளத்தூரைச் சேர்ந்த லஷ்மி, எழும்பூர் தாசில்தார் அலுவலகத்தில் வேலைசெய்யும் குப்புசாமி என்பவரை 1974ல் திருமணம் புரிந்தார். திருமணமாகி பல நாட்கள் சென்றபின்னர் குப்புசாமிக்கு ஏற்கனவே இரண்டுமுறை திருமணம் நடந்த செய்தி லஷ்மிக்குத் தெரிந்தது. 15.04.1986 அன்று சுற்றுலா செல்வதாக சொல்லி வெளியில் சென்று மறுபடியும் ஒரு திருமணம் செய்துள்ளார்

5. நேர்காணல் : *கீதா*, 09 மே 2012.
6. கல்கி, 31 மார்ச் 1985.

குப்புசாமி. இந்நிலையில் குடியிருக்கும் வீட்டை காலி செய்யுமாறு குப்புசாமியால் வற்புறுத்தப்பட்டார் லக்ஷ்மி. அதோடு மட்டுமல்லாமல் லக்ஷ்மிக்கும் அவரது மகளுக்கும் உயிருக்கு ஆபத்து ஏற்படும் நிலையும் உருவானது. இதை அறிந்த ஜனநாயக மாதர் சங்கம் செங்கை மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளருக்கும், சென்னை நகர காவல்துறை துணை ஆய்வாளருக்கும் மனு கொடுத்து மேல் நடவடிக்கைகளுக்காக காவல்துறையை நிர்பந்தித்தது.[7]

### சில முக்கிய வரதட்சணை வழக்குகள்

புதுக்கோட்டையைச் சேர்ந்த நாமகிரி அம்மாளின் மகள் ருக்மணி 22.08.1984 அன்று திருச்சி பொன்மலையைச் சேர்ந்த கல்யாணசுந்தரம் என்பவரை மணந்துகொண்டார். சுமார் பன்னிரண்டு பவுன் நகையும், துணிமணியும், பாத்திரங்களும் வரதட்சணையாக தரப்பட்டன. கொண்டுவந்த சீர் போதாதென்று கணவன், மாமியார், நாத்தனாரால் துன்புறுத்தபட்டாள் ருக்மணி. அடிக்கடி அம்மா வீட்டுக்கு அடி தாங்காமல் அவள் வருவதும் பிறகு கணவன் வீட்டார் அவளை அழைத்துச் செல்வதுமாக காலம் கழிந்தது. 09.04.1987 அன்று ருக்மணி ஆபத்தான நிலையிலிருப்பதாக தகவல் கிடைத்து அவள் தாயும் சகோதரனும் பொன்மலைக்குச் சென்றார்கள். ஏகப்பட்ட தீக்காயங்களுடன் சுயநினைவற்ற நிலையில் பொன்மலை மருத்துவமனையில் ருக்மணியைக் கண்டார்கள். உண்மையை மூடிமறைக்க ருக்மணியின் புகுந்தவீட்டார் முயற்சிசெய்தனர். ஆனால் அவளுக்கு சிகிச்சை அளித்த டாக்டர் உறுதியோடு நின்று மரண வாக்குமூலத்தைப் பதிவு செய்தார்.

ருக்மணியை அவளது மாமனாரும் மாமியாரும் மண்ணெண்ணெய் ஊற்றி நெருப்புவைத்து ஒரு அறைக்குள் தள்ளியிருக்கிறார்கள். துடித்து வெளியே ஓடிவந்த அவளை கழியால் தள்ளி அறைக்குள் துரத்தியிருக்கிறார்கள். அவரது அலறல் சத்தம் கேட்டு அக்கம் பக்கத்தினர் விரைந்து வந்ததால் மருத்துவமனையில் சேர்த்தனர். அங்கும் அவளை மிரட்டி விபத்து என்று சொல்ல முயற்சி செய்திருக்கிறார்கள். ஆனால் மருத்துவரின் முயற்சியால் ருக்மணியின் மரண

---

7.மகளிர் சிந்தனை, பிப்ரவரி 1987.

வாக்குமூலம் உள்ளபடி பதிவானது. விசாரணை நடத்திய ஆர்.டி.ஓ.வும் இது கொலை என அறிக்கை கொடுத்தார். இச்சம்பவம் குறித்து ஜனநாயக மாதர் சங்கத்தின் திருச்சி மாவட்டக்குழு உயர்அதிகாரிகளைச் சந்தித்து மனுக்கொடுத்து, குற்றவாளிகளுக்கு கடுமையான தண்டனை வழங்க வேண்டுமென வலியுறுத்தியது.[8]

மதுரையைச் சார்ந்த ஜலஜா என்ற எஸ்.எஸ்.எல்.சி. படித்த பெண், தனது குடும்பத்தோடு பயணம் செய்தார். அப்போது அவளை பார்த்த தமிழ்நாடு ஸ்பெஷல் போலீஸ் கான்ஸ்டபிள் கண்ணன் அவளுடைய விலாசத்தைத் தேடிப்பிடித்து ஜலஜாவின் பெற்றோரிடம் பெண்கேட்டு 1987ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 8ம் தேதி திருமணம் செய்தான். திருமணமான ஐந்தாம் நாளிலிருந்து ஜலஜா இறக்கும் வரையிலான ஐம்பத்துஇரண்டு நாட்களில் கண்ணன் ஜலஜாவின் குடும்பத்தை மிரட்டி பணம் வாங்கினான். சிகரெட் நெருப்பை உடம்பு மீதெல்லாம் வைத்து சித்ரவதை செய்தான். கணவன் வீட்டுக்குச் செல்ல மறுத்த ஜலஜாவை 'என்ன செய்வது, அது உன் தலைவிதி' என்று அனுப்பி வைத்தார்கள் பெற்றோர்கள்.

மே 30ம் தேதி இரவு ஜலஜா தீப்பற்றி இறந்துவிட்டதாக பெற்றோருக்குத் தகவல் வந்தது. பிரேதப்பரிசோதனை நடத்தப்பட்டது. விசாரணை செய்த ஆர்.டி.ஓ. பிரேதப் பரிசோதனையில் ஜலஜா தாக்கப்பட்டிருக்கிறாள் என்று எழுதியிருந்தும், அது தற்கொலையே என்று எழுதினார். இறந்த வீட்டில் கொலைக்கான தடயங்கள் பல இருக்கின்றன என அவளது பெற்றோர்கள் தந்தி அடித்தும் வீட்டிற்கு வரமறுத்தார் அந்த ஆர்.டி.ஓ. இதற்குப்பின் ஜலஜாவின் தாய் நீலாம்பாளும் ஜனநாயக மாதர் சங்கத்தின் நெல்லை மாவட்ட நிர்வாகிகளும் மாநில மையமும், நெல்லை மாவட்ட ஆட்சியாளர், எஸ்.பி., டைரக்டர் ஜெனரல் ஆப் போலீஸ் எனப் பல அதிகாரிகளையும் சென்று பார்த்தனர். அவர்களது அலுவலகங்களுக்கும் தொடர்ந்து சென்றனர். நெல்லையில் மாதர் சங்கத்தின் சார்பாக ஆர்ப்பாட்டமும் நடத்தப்பட்டது. ஜலஜாவின் கணவன் கண்ணன் காவல்துறையைச் சேர்ந்தவன் என்பதால் அவன்மீது வழக்குத்தொடர தயக்கம் காட்டப்பட்டது. சி.பி.சி.ஐ.டி.

8. மகளிர் சிந்தனை, ஜூன் 1987.

விசாரணைக்குப் பின் கண்ணன் மீதும் அவனது பெற்றோர்கள் மீதும் வழக்குத் தொடரப்பட்டது.

ஜலஜா உயிரோடு எரிக்கப்பட்டு நான்காண்டுகள் இரண்டு மாதங்கள் கழித்து 1991 ஜூலை 30ம் நாள் செஷன்ஸ் கோர்ட் கண்ணனுக்கு ஆயுள் தண்டனையும் அவனது பெற்றோர்களுக்கு ஏழாண்டு கடுங்காவல் தண்டனையும் அளித்தது.

ஆர்.டி.ஓ. விசாரணை அறிக்கை அனுப்புவதற்கே மூன்றாண்டுகள் பிடிக்கும் சூழலில் நான்காண்டுகளில் குற்றவாளிக்கு தண்டனை கிடைத்தது. இது ஜனநாயக மாதர் சங்கத்தின் முயற்சிக்கு கிடைத்த வெற்றியாகும்.[9]

இம்மாதிரியான வரதட்சணைக் கொடுமைகளை தடுத்து நிறுத்த முக்கிய கோரிக்கை அடங்கிய மனுவை 1988ம் வருடம் மாதர் சங்கம் சார்பில் உள்துறைச் செயலரிடம் அளிக்கப்பட்டது.[10] அம்மனுவில் கீழ்க்கண்ட கோரிக்கைகள் முன்வைக்கப்பட்டன.

- ஆர்.டி.ஓ. அறிக்கை பதினைந்து நாட்களுக்குள் சமர்ப்பிக்கப்பட வேண்டும்.
- வரதட்சணை கொடுமை நடந்து முப்பது நாட்களுக்குள் போலீசார் குற்றப்பத்திரிக்கை தாக்கல் செய்ய வேண்டும்.
- ஆர்.டி.ஓ. அறிக்கை வரும்வரை காத்திராமல் போலீசார் விசாரணையைத் துவக்கத்திலேயே செய்யவேண்டும்.
- பிரேதப்பரிசோதனை அறிக்கையின் நகல் பரிசீலனை செய்யப்பட வேண்டும்.
- வரதட்சணை சம்பந்தப்பட்ட புகார் நடவடிக்கைகள் பற்றி போலீசார் மூன்று மாதத்திற்கு ஒருமுறை பொதுமக்களின் கவனத்திற்கு கொண்டுவர வேண்டும் (பத்திரிகைக் குறிப்பு போல).

---

9. மகளிர் சிந்தனை, செப்டம்பர் 1991.
10. *மேலது,* ஜூலை 1988.

- ஒரு வழக்கு மேல்முறையீடு செய்யப்படும்போதோ, செய்ய இயலாதென கோப்பு மூடப்படும்போதோ, புகார் கொடுத்தவர்களுக்கு (பெண்ணின் பெற்றோர், உறவினர்) தகவல் தரப்படவேண்டும்.

வரதட்சணை கொடுமை என்றால் தொடர்புகொள்ள வேண்டிய இடம், தொலைபேசி எண் மற்றும் சாட்சி சொல்ல பொதுமக்களை ஊக்குவிக்கின்ற முறையில் தொலைக்காட்சி, வானொலி, சினிமா ஸ்லைடுகள் மூலம் விளம்பரப்படுத்தப்பட வேண்டும்.[11] இக்கோரிக்கைகள் மாதர் சங்கத்தின் தொடர் முயற்சிகளுக்குப் பிறகு ஒத்துக்கொள்ளப்பட்டது.

1985ம் ஆண்டு தமிழகத்தில் பெண்களுக்கெதிரான குற்றங்கள் அதிகரித்து வருவதை ஒட்டி மாநிலக் காவல்துறை உயர்மட்ட அதிகாரிகள் மாநாடு ஒன்று நடைபெற்றது. அதில் வரதட்சணை போன்ற பலதரப்பட்ட கொடுமைகளை கீழ்மட்ட காவல்துறை அதிகாரிகள் விசாரித்து நடவடிக்கைகள் எடுப்பது பற்றி மக்களிடையே கடும் அதிருப்தி நிலவியது. பெரும்பாலானோர் புகாரைப் பதிவு செய்யாமல் பெண்களுக்கே உபதேசம் செய்து திருப்பி அனுப்பி விடுகிறார்கள். "புருஷன் அடிப்பதை பெரிதுபடுத்தக் கூடாது, அனுசரித்துப் போக வேண்டும், அவன்மீது குற்றம் சுமத்தினால் உன் எதிர்காலம் என்னாவது" என்று கேட்கப்படுகிறது. ஆகவே இனிமேல் வரதட்சணை சம்பந்தப்பட்ட புகார்களை காவல்துறைக் கண்காணிப்பாளர்கள் விசாரிக்க வேண்டுமென்று முடிவெடுக்கப்பட்டது. மாநாட்டில் அளிக்கப்பட்ட தகவலின்படி 1984ல் பெண்களுக்கு எதிரான கொடுமைகளில் முதல் ஆறு இடம் வகித்த மாவட்டங்கள் சேலம் (1705), சென்னை (1301), தென்னாற்காடு (696), மதுரை (வடக்கு) (586), பெரியார் (492), திருச்சி (467).[12]

1961ல் இயற்றப்பட்ட வரதட்சணை தடைச் சட்டம் 1984, 1986ம் ஆண்டுகளில் திருத்தி அமைக்கப்பட்ட பிறகும் பிரச்சனைகள் தொடர்ந்தது.[13]

---

11. மகளிர் சிந்தனை, ஜூலை 1988.
12. Indian Express, 24 October 1985.
13. பெண்களும் சட்டமும் – விளக்கமும் விமர்சனமும், *கையேடு.*

1987ம் ஆண்டு கான்பூரில் மூன்று சகோதரிகள் இளம் வயதில் தங்களைத் தாங்களே மாய்த்துக் கொண்டார்கள். தங்கள் பெற்றோரால் வரதட்சணை தந்து திருமணம் செய்து கொடுக்கமுடியாத நிலையில் அவர்கள் இந்த முடிவுக்கு தள்ளப்பட்டிருக்கிறார்கள்.

1988ம் ஆண்டு நவம்பர் 4ம் தேதி பாலக்காட்டில் பதினெட்டு வயதிலிருந்து இருபத்தைந்து வயது வரையிலான நான்கு சகோதரிகள் தங்களுடைய திருமண செலவுகளால் பெற்றோர்கள் படும் தொல்லைகளுக்கு ஒரு முடிவுகாண தங்களது வாழ்க்கையையே முடித்துக் கொண்டார்கள்.[14]

தேசத்தை உலுக்கிய இதுபோன்ற செய்திகளைத் தொடர்ந்து பத்திரிகைகளிலும் தொலைக்காட்சியிலும் விவாதங்கள் நடத்தப்பட்டன.

"ஒரு பெண் மற்றொரு பெண்ணுக்கு செய்யும் கொடுமையே வரதட்சணை" பிரச்சனை. "பெண்ணுக்குப் பெண்ணே எதிரி" "மாமியார் மனம் மாறினால் மருமகள் பிழைக்கலாம்" என்பது போன்ற கருத்துக்கள் வெளியிடப்பட்டு பிரச்சனையை கொச்சைப்படுத்தி திசைத்திருப்பின.

மேற்கூறிய கருத்துக்களுக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையிலும் மக்கள் மத்தியில் வரதட்சணை குறித்து சரியான விழிப்புணர்வை ஏற்படுத்தும் வகையிலும் மகளிர் சிந்தனை என்ற இதழ் பல கட்டுரைகளை வெளியிட்டது.

வரதட்சணை பேரம், துன்புறுத்தல்கள், கொளுத்துதல் எல்லாவற்றிலுமே மாமியாரின் பாத்திரம் முக்கியமானதுதான். மாமியாராகிவிட்ட ஒரு பெண்ணின் மாமியார்த்தனம் எப்படி உருவாகியது என்ற ஆய்வுக்கு இங்கே இடமில்லை. அவள் ஒரு ஒடுக்குமுறை கருவியே தவிர, ஒடுக்குமுறையின் மூலமோ, பிரதான காரணமோ அல்ல. இதற்கு விடைகாண இந்த வரதட்சணை பிரச்சனையை, பெண்ணின் ஒட்டுமொத்தமான நிலையின் பின்னணியிலும், பரந்த சமூகச் சூழலின் அடிப்படையிலும் ஆய்வது அவசியம்.

14. மகளிர் சிந்தனை, டிசம்பர் 1988.

வரதட்சணை என்பது ஒரு சமூகக்கொடுமை மட்டுமே. சமூக சீர்திருத்தப் பிரச்சாரம், தனி நபர்களின் உறுதி, மனமாற்றம் இவற்றின் மூலமாக மட்டுமே இதை ஒழிக்கமுடியும். இதற்கும் அரசியல், பொருளாதாரம் என்பதற்குமெல்லாம் ஒரு தொடர்பும் இல்லை என்ற வாதமும் இப்பிரச்சனையின் ஆழத்தைப் புரிந்துக்கொள்ள விடாமல் சிறுமைப்படுத்துகிறது.[15]

ஒரு பெண்ணின் வருங்காலத்திற்கு பாதுகாப்பு அவளுடைய திருமணந்தான் என்ற பரவலான பார்வை எப்படியாவது, எங்கேயாவது அவளை தாரை வார்க்கவேண்டும் என்ற நிர்ப்பந்தத்தை பெற்றோர்களிடம் ஏற்படுத்துகிறது.

அதேசமயம், இச்சமூகப் பார்வையின் வேர்கள் அரசியல், பொருளாதார யதார்த்தத்தில் புதைந்துள்ளன என்பதைப் பார்க்கவேண்டும். கல்வி, தொழில்நுட்பப் பயிற்சி, வேலைவாய்ப்பு ஆகியவை மிகப் பெரும்பான்மை பெண்களுக்கு கிடைக்காத நிலையில், கணவன்மார்களுடைய கல்வியிலும், தொழிலிலும்தான் பாதுகாப்பைத் தேடவோ, பெறவோ முடிகிறது.

நல்ல வேலையில் உள்ள பெண்கள்கூட வரதட்சணை கொடுத்துத்தானே திருமணம் செய்துகொள்ள வேண்டியிருக்கிறது என்பது நியாயமான கேள்வி. மிகச் சிறுபான்மை பெண்கள் மட்டுமே தங்கள் உழைப்பில் வாழ முடிகின்ற நிலையில், பெரும்பான்மை பெண்களின் சார்பு நிலையே சமூகக் கருத்துக்கள், மதிப்புகள், அங்கீகாரம் போன்றவற்றை நிர்ணயிக்கிறது.

பாலக்காட்டு சகோதரிகளின் முடிவை, கோழைத்தனம், தோல்வி மனப்பான்மை என்றெல்லாம் விமர்சிப்பதும் பெண்களுக்குத் தன்னம்பிக்கையும், துணிச்சலும் தேவை என்று பிரகடனம் செய்வதும் சுலபமே.

ஆனால் தன்னம்பிக்கையோ, அவநம்பிக்கையோ பெரும்பாலும் குறிப்பிட்ட மரபுச் சூழலை ஒட்டியே ஏற்படுகிறது. கல்வியும், வேலை வாய்ப்பும் அடிப்படை உரிமைகளாக உள்ள சமுதாயத்தில் தன்னம்பிக்கையும், இவை விலைபொருட்களாக மாற்றப்பட்ட சமுதாயத்தில் அவநம்பிக்கையும் ஏற்படுவது இயல்பே. அதேபோல்,

---

15. மகளிர் சிந்தனை, டிசம்பர் 1988.

பொருளீட்டு நடவடிக்கைகளில் பெண்களுடைய பங்கு அவர்களுடைய சமூக அந்தஸ்தை நிர்ணயிக்கிறது. இந்த அடிப்படையில் இந்தியப் பெண்களின் தாழ்ந்த சமூக அந்தஸ்தின் ஒரு விளைவாக, பிரதிபலிப்பாகவே சமீபகாலத்தில் வரதட்சணை கொடுமை மேலும் அதிகரித்து வருகிறது.[16]

அப்படியானால், பொருளாதாரத்தில் பெண்கள் பங்கை உத்தரவாதப்படுத்தி, உயர்த்துவதற்கான கொள்கைகளை இந்திய அரசு ஏன் உருவாக்கவில்லை. பெண்களின் ஒட்டுமொத்த அந்தஸ்தை உயர்த்த போர்க்கால அடிப்படையில் நடவடிக்கைகள் எடுப்பதற்கான அரசியல் உறுதி நம் ஆட்சியாளர்களுக்கு ஏன் இல்லை. மேற்கண்ட கேள்விகள் வரதட்சணை பிரச்சனைக்கு மையமானவை. ஆனால், வரதட்சணைப் பற்றிய கூட்டங்களில் இவை பெரும்பாலும் கேட்கப்படாத கேள்விகளே. தப்பித் தவறி கேட்கப்பட்டால், இது பிரச்சனையை அரசியல்படுத்தும் முயற்சி எனக் கூறப்படும். இந்த அம்சங்கள் தவிர, அரசியலில் வேறு சில அம்சங்களும் வரதட்சணை பிரச்சனையை பாதித்துள்ளன.

மக்கள் அனைவருக்கும் சாப்பாடோ, குடிநீரோகூட உத்தரவாதப்படுத்த முடியாத இந்திய அரசின் கொள்கைகள் ஒரு சிறு பகுதி மக்கள் மட்டுமே அனுபவிக்கக் கூடிய ஒரு நுகர்ப்பொருள் கலாச்சாரத்தை உருவாக்கியுள்ளன. தொலைக்காட்சிப் பெட்டி, குளிர்சாதனப் பெட்டி போன்ற பல பொருட்களை வாங்கவேண்டும் என்ற சமூக நிர்ப்பந்தத்தை திருப்தி செய்வதும் வரதட்சணையின் நவீனப்பணிகளில் ஒன்றாகிவிட்டது. திருமணங்கள் எளிமையாக நடத்தப்படவேண்டும் என்ற சட்டத்தை இயற்றவும் இந்திய அரசு மறுத்துவருவது குறிப்பிடத்தக்கது.

இந்திய சமூக வாழ்க்கையின் எல்லாத் துறைகளும் அரசின் கொள்கைகளினால் வணிகமயமாக்கப்பட்ட நிலையில், தாம்பத்ய உறவும் வியாபார வரம்புக்குள் வந்துவிட்டது ஆச்சரியமில்லைதான். ஆகவே, வரதட்சணை கொடுமையை மனமாற்றத்தினால்தான் தீர்க்கமுடியும் என மக்கள் மீதே பாரத்தை போட்டுவிட்டு அரசு தப்ப முடியாது.

---

16. மகளிர் சிந்தனை, டிசம்பர் 1988.

மாதர் மற்றும் சமூகநல அமைப்புகள், வரதட்சணை எதிர்ப்புப் பிரச்சாரத்தை அரசியல் பொருளாதார, சமூக அமைப்புக்கு எதிரான பெரும் இயக்கத்தின் ஒரு பகுதியாகக் கொண்டு செல்வதுதான் வெற்றிக்கு வழி வகுக்கும் பாதையாகும்[17] என்று ஜனநாயக மாதர் சங்கம் கருதியது.

## பெண்களின் சொத்துரிமை திருத்தச் சட்டம் 1989

வரதட்சணைப் பிரச்சனை தடைச்சட்டம் இருந்தும் தொடர்ந்து மறைமுகமாக வரதட்சணை கொடுப்பதும், வாங்குவதும் நடைபெற்றது. பெண்களுக்கு சொத்துரிமை இல்லாததால்தான் திருமணத்தையொட்டி பெண் வீட்டாரிடம் வசூல் செய்கிறார்கள் என்ற வாதம் முன்வைக்கப்பட்டது. இதனைத் தொடர்ந்து தமிழக அரசு குடும்பச் சொத்தில் பெண்களுக்கு உரிமை தரும் புதிய சட்டம் ஒன்றை நிறைவேற்ற முயன்றது. சட்டமன்றத்தில் இதற்கு கடும் எதிர்ப்பு ஏற்பட்டது. முன்னாள் சபாநாயகர் பி.எச்.பாண்டியன் "பெண்களுக்கெதற்கு சொத்தில் பங்கு, வயதான பெற்றோர்களைப் பராமரிக்கும் கடமை அவர்களுக்கா உள்ளது பெற்றோர்களுக்கு சட்ட ரீதியாக ஜீவனாம்சம் கொடுக்க வேண்டியது ஆண்கள் மட்டுமே" என்று சட்டமன்றத்தில் பேசினார்.[18]

நீண்ட விவாதத்துக்குப் பிறகு இந்து வாரிசுரிமைச் சட்டத்துக்கு திருத்தம் ஒன்று தமிழக சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. இது இந்துக்களுக்கு கூட்டுக்குடும்ப சொத்தில் பெண்களுக்கும் பங்கு கிடைக்க வழி செய்கிறது. இச்சட்ட முன்வடிவம் கிடைத்தவுடன் ஜனநாயக மாதர் சங்க தூதுக்குழு முதலமைச்சரை சந்தித்து சில திருத்தங்களுடன், உடனடியாக இதனை நிறைவேற்றுமாறு கோரியது. மற்ற மாதர் அமைப்புகளையும் அழைத்து 1989ம் ஆண்டு இளம்பெண்கள் கிருஸ்தவ அமைப்பில் ஒரு கூட்டம் நடத்தி, கீழ்க்கண்ட ஆலோசனைகளை இறுதிப்படுத்தியது.[19] ஒரு நீண்டகால பாரபட்சத்தை ஒழிக்க வகைசெய்யும் இச்சட்டத்தை மேலும் தாமதிக்காமல் நிறைவேற்றவேண்டும். 01.01.1989 முதல் இச்சட்டம் அமலுக்கு கொண்டுவரப்பட வேண்டும். சட்டம்

17. மகளிர் சிந்தனை, டிசம்பர் 1988.
18. *மேலது,* ஜூன் 1989.
19. தீக்கதிர், 03 ஏப்ரல் 1989.

வரப்போகிறதெனத் தெரிந்தவுடன் அவசர அவசரமாக நடந்த பாகப்பிரிவினையை செல்லாததாக்க இது உதவும். குடியிருப்பு வீடுகளில் பங்கு கேட்கும் உரிமை பெண்களுக்கு (ஏற்கனவே உள்ள சட்டத்தில் இவ்வுரிமை இல்லை) கிடைக்கும் வகையில் திருத்தம் வேண்டும். ஏற்கனவே திருமணமான பெண்களுக்கும் இச்சட்டத்தினால் பயன் கிடைக்கும் வகையில் மாற்றம் வேண்டும். இக்கோரிக்கைகளடங்கிய மனுவில் கையெழுத்திட்டு, ஜனநாயக மாதர் சங்கம், இந்திய மாதர் தேசிய சம்மேளனம், இளம் பெண்கள் கிருஸ்தவ அமைப்பு, தமிழ்நாடு மகளிர் கூட்டு செயல் இணையம், சமூக நலனுக்கான பெண்கள் அமைப்பு, கில்டு ஆஃப் சர்வீஸ், மண்டே சாரிட்டி கிளப் ஆகிய அமைப்புகள் சார்பில், ஜனநாயக மாதர் சங்கப் பொதுச்செயலாளர் பாப்பா உமாநாத் தலைமையில் பெண்கள் தூதுக்குழு 04.05.1989 அன்று தமிழக முதல்வரையும், சட்ட அமைச்சரையும் சந்தித்து விவாதம் நடத்தி மனு கொடுத்தது.

07.05.1989 அன்று சட்டமன்றத்தில் பாப்பா உமாநாத், இத்திருத்தங்களை வலியுறுத்திப் பேசினார். மார்ச் 25 முதல், இச்சட்டம் அமலாகும் என்ற திருத்தத்தை சட்ட அமைச்சரே முன்மொழிய அம்மசோதா சட்டமாக்கப்பட்டது. மாதர் இயக்க வரலாற்றில் இது ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.[20]

## திருமணச் சொத்தில் பெண்ணின் உரிமை பற்றியச் சட்டம்

திருமணமான ஒரு பெண்ணுக்கு தனது சம்பாதியத்தின்மீது உரிமையில்லாத நிலையில், அவளது ஊதியம் முழுமையாக கணவன் அல்லது அவனது பெற்றோர் கைக்கு மாறி, பிறகு தினசரி செலவுக்காக அவள் அவர்களிடம் கைநீட்டி வாங்கும் இழி நிலைக்கு தள்ளப்படுகிறாள். அவள் சம்பாதிக்காதபோது கணவன் வருமானத்தில் சேர்க்கும் சொத்தில் அவளுக்குரிய பங்கைப் பற்றி பேசுவதில் என்ன அர்த்தம் எனப் பலர் நினைக்கலாம். ஆனால் நடைமுறையில் இதன் அவசியத்தையோ, நியாயத்தையோ மறுக்க முடியாது.

திருமணத்துக்குப் பிறகு சேர்க்கப்படும் சொத்து யாருக்கு உரியது என்பது பற்றி பல கேள்விகள் எழுகின்றன. பிரச்சனை என்று வந்து, தம்பதிகள்

20. மகளிர் சிந்தனை, ஜூன் 1989.

பிரியும்போது பெரும்பாலும் இச்சொத்து கணவனையே அடைகிறது.[21] ஒரு மனைவி வீட்டுவேலைகள் செய்து, கணவன் குழந்தைகளைப் பராமரித்து அக்குடும்பத்துக்கு எவ்வளவோ உழைப்பைக் கொடுக்கிறாள். ஆனால் பத்து வருடம் வாழ்ந்தபின் பிரிந்தாலும் அவளுக்கு சல்லிக்காசு கிடைப்பதில்லை. பெற்றோர் வீட்டிலும் ஆதரவு கிடைப்பது இல்லை. திடீரென நிராதரவளாகிறாள். எனவே திருமணமானபின், கணவன் அல்லது மனைவியால் சம்பாதிக்கப்படும் சொத்து, கணவன்–மனைவி இருவருக்குமே உரியதாக இருப்பதே நியாயமானது. இது பற்றிய சட்டம் இதுவரை கிடையாது என்பதால் ஜனநாயக மாதர் சங்கம் முன் முயற்சி எடுத்து டெல்லியில் ஒரு கருத்தரங்கை நடத்தியது. அதில் 'திருமணச் சொத்தில் பெண்ணின் உரிமை' என்னும் தலைப்பில் ஒரு சட்டம் இயற்றப்பட வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது.

அரசு அளிக்கும் எல்லாப் பட்டாக்களும் கணவன்–மனைவி இருவர் பெயரிலும் கூட்டாக இருக்க வேண்டும். கூட்டுப்பட்டாவை முறையாக மாநில அரசுகள் வழங்க வேண்டும். நில உச்சவரம்புக்கு மேல் நிலம் இருந்து, அரசு உபரியைக் கையகப்படுத்தும்போது, மீதி இருக்கும் நிலத்தில் மனைவியின் பாகம் பாதுகாக்கப்பட வேண்டும். இல்லையேல் மனைவியின் பாகத்தைத் தான் அரசுக்குக் கொடுத்து விட்டதாகக் கூறுவார்கள்.[22]

திருமணத்துக்குப் பின் கணவன்–மனைவி சம்பாதிக்கும் சொத்து இருவர்பெயரிலும் கூட்டாக இருக்கவேண்டும். விவாகரத்து சட்டபூர்வமானதோ, இல்லையோ மேற்கூறிய சொத்து இருவருக்கும் நியாயமான முறையில் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும். திருமணத்துக்குப் பிறகு, கணவன் மட்டுமே சம்பாதித்துக் கட்டிய வீடாக இருந்தாலும் அது கணவனின் வீடுதான் என்று கருதக்கூடாது. அவ்வீடு இருவருக்கும் சொந்தமாக இருக்க வேண்டும்.

கணவன்–மனைவி பிரிந்த பின்னும், கணவனும் அவன் உறவினர்களும் அப்பெண்ணை மிரட்டி துன்புறுத்துவதனால் அவளால் ஏற்கனவே குடியிருந்த

---

21. மகளிர் சிந்தனை, ஏப்ரல் 1991.
22. மேலது.,

வீட்டில் தொடர்ந்து வாழ முடிவதில்லை. இத்தகையச் சூழலில் அவள் குடியிருக்கும் வீட்டிற்குள் கணவனும் அவன் பெற்றோரும் நுழைவதைத் தடுக்க மாஜிஸ்ட்ரேட் உத்தரவுபெறும் வகையில் சட்டம் அமையவேண்டும். திருமணத்தின்போது குடியிருந்த வீட்டிலிருந்து கணவனால் பலவந்தமாக வெளியேற்றப்பட்டப் பெண் மீண்டும் அந்த வீட்டிற்குள் நுழைவதற்கும் சுலமாக மாஜிஸ்ட்ரேட் உத்தரவு கிடைக்க வேண்டும்.

திருமணச் சொத்து சட்டம் உருவாக்கப்படும்போது அச்சட்டத்தின் கீழ் அனைத்து மதப்பெண்களும் பயன்பெறும் வகையிலும், பெண் வசிக்கும் ஊரிலேயே வழக்குத் தொடரவும் ஏற்பாடு செய்யவேண்டும்.

திருமணச் சொத்தை கணவனோ, மனைவியோ ஒருவர் அனுமதியின்றி அடுத்தவர் வேறாருவருக்கு அன்பளிப்பாக வழங்குவதோ விற்பதோ கூடாது. இதன்மேல் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்படவேண்டும் என்பது போன்ற அம்சங்கள் கருத்தில் கொள்ளப்பட வேண்டும் என மாதர் சங்கம் வலியுறுத்தியது.[23]

**குடும்ப நீதிமன்றச் சட்டம் (1984)**

குடும்ப உறுப்பினர்களிடையே எழும் பலவித பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு அதிகமான, விசேஷ நீதிமன்றங்கள் தேவை என்பது நீண்ட காலமாக எழுப்பப்பட்டுவரும் ஒரு கோரிக்கை. பல்வேறு மாதர் அமைப்புகள், இந்தியப் பெண்களின் அந்தஸ்து பற்றி ஆய்வதற்கான குழு, வரதட்சணை தடுப்புச் சட்டத்தில் திருத்தம் கொண்டு வருவதற்கென்று அமைக்கப்பட்ட நாடாளுமன்றக் குழு போன்ற அமைப்புகள் தொடர்ந்து குடும்ப நீதிமன்றத்தின் தேவையை வலியுறுத்தி வந்துள்ளன. சட்டக் குழுவும் 1974ம் ஆண்டிலேயே பரிந்துரையை செய்தது.

அதனால், 1984ம் ஆண்டில் குடும்ப நீதிமன்றச் சட்டம் இயற்றப்பட்டது.[24] ஆனால் நாடாளுமன்றத்தின் குளிர்கால கூட்டத் தொடரின் இறுதிக்கட்டத்தில் ஒரு

---

23. மகளிர் சிந்தனை, ஏப்ரல் 1991.
24 . பெண்களும் சட்டமும்—விளக்கமும் விமர்சனமும், *முன்குறித்தது.*

மசோதாவை அதிகம் விவாதிக்காமல், சட்டமாக்கிவிட வேண்டும் என்று மத்திய அரசு செயல்பட்டது.

இச்சட்டத்தின் சில முக்கிய அம்சங்களும், குடும்ப நீதிமன்றம் எடுத்துக் கொள்ளக் கூடிய பிரச்சனைகளும்

- திருமணம் சட்டப்பூர்வமாகச் செல்லக்கூடியதா, இல்லையா.
- நீதிமன்ற உத்தரவில் கணவன்–மனைவி பிரிந்து போதல் (Judicial Separation) விவாகரத்து.
- தம்பதிகளுக்கிடையே ஏற்படும் சொத்துப் பிரச்சனைகள்.
- ஒருவருடைய சட்ட வாரிசுத் தன்மையை நிலைநாட்டுதல்.
- ஜீவனாம்சம் (alimony) குறித்த வழக்குகள்.
- பாதுகாவலர் நியமனம் அல்லது மைனர்கள் பாதுகாப்பு பற்றிய பிரச்சனைகள்.

குற்றவியல் சட்டத்திலுள்ள பராமரிப்புச் செலவு (maintenance) வழங்கும் அதிகாரம் குடும்ப கோர்ட்டுக்கு மாற்றப்பட்டுள்ளது. பத்துலட்சம் மக்கள் வசிக்கும் நகரங்களிலும், இவை தவிர மாநில அரசு எங்குதேவை என்று கருதுகிறதோ அந்த இடங்களிலும் அமைக்கப்படும். உயர்நீதிமன்றத்தின் ஒப்புதலோடு மாநில அரசு குடும்ப நீதிமன்றத்திற்கு நீதிபதிகளை நியமனம் செய்யலாம். அப்படி செய்யும்போது திருமணங்கள் முறிந்துவிடாமல் பாதுகாப்பது, குழந்தைகளின் நலன் இவற்றில் அக்கறை கொண்டு இப்படிப்பட்ட பிரச்சனைகளைத் தீர்ப்பதில் அனுபவமும் ஆற்றலும் பெற்ற நீதிபதிகளைத் தேர்ந்தெடுக்க முயற்சிக்கவேண்டும். மேலும் நீதிபதிகளை நியமனம் செய்யும்போது பெண்களுக்கு முன்னுரிமை அளிக்க வேண்டும்.

சேமநல நிறுவனங்களின் பிரதிநிதிகள், சமூகச் சேவகர்கள், குடும்ப நலத்திட்டங்களில் பணியாற்றுகிறவர்கள் போன்றவர்களையும், குடும்ப நீதிமன்றத்தின் செயல்பாட்டோடு இணைத்துக் கொள்ளலாம். குடும்ப நீதிமன்றத்தின்முன் வரும் வழக்குகளில் சம்பந்தப்பட்டவர்களில் ஒருசாரார்

விரும்பினாலும் வழக்கு பகிரங்கமாக இல்லாமல் தனியறையில் (incamera) நடத்தப்படும்.[25] குடும்ப நீதிமன்றங்களின் தீர்ப்புகளை எதிர்த்து மேல்முறையீட்டு மனு உயர்நீதிமன்றத்தில் செய்து கொள்ளலாம்.

இச்சட்டம் எந்த அளவுக்கு ஒரு நீண்டகாலத் தேவையை பூர்த்தி செய்யும்வகையில் அமைந்துள்ளது. இதன் பலம், பலவீனங்கள் பற்றி அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் துணைத்தலைவர் கனக்முகர்ஜி எம்.பி., அவர்கள் மாநிலங்களவையில் இம்மசோதா குறித்து பேசியபோது மேற்கண்ட கேள்விக்கு விடையளித்தார்.

குடும்ப நீதிமன்றம் பற்றிய மசோதா எவ்வித முன்னறிவிப்புமின்றி கூட்டத்தொடரின் இறுதியில் திடீரென்று நுழைக்கப்படுவது மிக முக்கியமான இந்த விஷயத்தில் அரசின் அவசரத்தையே காட்டுகிறது. இது குறித்து சட்டக் கமிஷனின் பரிந்துரையில் கூறப்பட்டுள்ளது. விசாரணையைத் துவக்கும்முன் சமரசத்துக்காக முழு முயற்சியையும் இந்த நீதிமன்றம் மேற்கொள்ள வேண்டும். சாதாரண சிவில் வழக்குகளில் கடைபிடிக்கப்படும் அணுகுமுறையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட அணுகுமுறை இந்த நீதிமன்றத்தின் தேவை.

ஆனால் இப்படிப்பட்ட மனிதாபிமான அணுகுமுறை (human approach) இங்கு இல்லை. மாறாக சட்டச் சிக்கல்கள் வந்தபின் தீர்க்கும் கண்ணோட்டமே (adversary approach) உள்ளது. இம்மசோதாவின் முதன்மையான குறிக்கோள் ஆலோசனை அளிப்பது, சமரசம் செய்துவைப்பது என்று குறிப்பிட்டுள்ளதுபோல் இவற்றை சீறாக செய்வதற்கு தேவையான தயாரிப்பு, நடைமுறைகள் எதுவும் இந்த மசோதாவில் இல்லை.[26]

பெரும் நகரங்களில் இந்த நீதிமன்றங்களை ஏற்படுத்துவதோடு நிறுத்திவிடக்கூடாது. கீழ்மட்ட சாமானிய மக்களும் இவற்றினால் பயன்பெற வேண்டும் என்றால் இந்த நீதிமன்றங்கள் சிறு நகரங்களிலும், கிராமங்களிலும்

25. பெண்களும் சட்டமும்–விளக்கமும் விமர்சனமும், *முன்குறித்தது.*
26. மேலது.,

அமைக்கப்பட வேண்டும் என்ற சட்டரீதியான கட்டாயத்தைக் கொண்டுவர வேண்டும். மேலும் இந்நீதிமன்றங்கள்முன் வரதட்சணை பிரச்சனைகள், தற்கொலை சம்பவங்கள் இவையெல்லாம் வருமா என்பது விளக்கமாக இல்லை.

இந்நீதிமன்றத்தில் அமர்த்தப்பட வேண்டிய நீதிபதிகளின் தகுதிகளும் சிறப்பான முறையில் கூறப்படவில்லை. மேலும் வழக்குகளை ஒட்டி புலனாய்வு செய்யும் நடவடிக்கைகளில் மாதர் அமைப்புகளை ஈடுபடுத்தலாம் என்று சொல்லப்பட்ட போதிலும் இது தெளிவாக இல்லை. ஏற்கனவே வேலைப்பளு மிகக் கூடுதலாக உள்ள உயர்நீதிமன்றங்களில் குடும்ப நீதிமன்றத் தீர்ப்புகளை எதிர்த்து மனுசெய்து கொள்ளலாம் என்று கூறியிருப்பது அவ்வளவு உபயோகமாக இருக்காது. மேலும், உயர்நீதி மன்றங்களின் அணுகுமுறை குடும்பப் பிரச்சனைகளை தீர்க்கவும் உதவாது. அதனால் குடும்பப் பிரச்சனைகளுக்காக மட்டும் விசேஷ மேல்முறையீட்டு நீதிமன்றங்கள் (special appellate courts) அமைப்பது தேவை.

“இன்று நம்முடைய சமுதாயத்தில் குடும்ப உறவுகள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளதற்கு காரணம் சட்டங்களில் உள்ள பலவீனம், குறைபாடுகள் என்பதை விட இன்றைய சமூக, பொருளாதார நிலைமைகளே என்று சொல்லலாம். பணம் பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு பலர் திருமணம் செய்துகொள்வதால் திருமண உறவுகள் வியாபாரமாகிவிட்டன. வேலையின்மை, விலைவாசி உயர்வு, பொருளாதார நெருக்கடி இவற்றின் காரணமாக இன்றைக்கு திருமணம், குடும்ப வாழ்க்கை இவற்றின் அடிப்படை ஆட்டம் கண்டுவிட்டது. வறுமையின் எல்லைக் கோட்டிற்கு கீழே உள்ள மக்கள் மத்தியில் கௌரவமும், கண்ணியமும் மிகுந்த உறவுகள் நிலவும் என்று நாம் எப்படி எதிர்பார்க்க முடியும்”[27] என்று குடும்பத்தில் எழும் பிரச்சனைகள் அவற்றின் தீர்வுபற்றி ஒரு ஆழமான பார்வையை கனக்முகர்ஜி தன்னுடைய உரையில் அளித்தார்.

## பெண் தொழிலாளர் பிரச்சனைகள்

பெண்கள் அதிக எண்ணிக்கையில் பணியாற்றும் தொழிற்சாலைகளில் உழைக்கும் பெண்களை ஒருங்கிணைத்து தொழிற்சங்கம் அமைத்து

27. பெண்களும் சட்டமும்—விளக்கமும் விமர்சனமும், *முன்குறித்தது.*

அவர்களுக்கான உரிமைகளை பெற்றுத் தருவதில் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் தீவிரம் காட்டியது. சுதந்திரத்துக்குப்பின் நமது நாட்டில் ஆண்களுக்கு நிகராக பெண்களும் பணிக்குச் செல்வது அதிகரித்துக் கொண்டே வருகிறது. இந்திய அரசியலமைப்பின் அரசு வழிகாட்டி நெறிமுறைக் கொள்கையின்படி ஆண்–பெண் என்ற பாகுபாடின்றி சமவேலைக்கு சமஊதியம் தரவேண்டியது மாநில அரசின் கடமையாகும்.

1979ம் ஆண்டு ஹார்லிக்ஸ் புட்டிகளை பேக் செய்யும் கம்பெனியில் தொழிற்சங்கம் அமைக்கப்பட்டது. நான்கு ரூபாய் ஐம்பது பைசா என்று வழங்கப்பட்ட கூலி சங்கத்தின் தொடர் போராட்டத்தால் எட்டு ரூபாயாக உயர்ந்தது.[28]

பெண்கள் தோட்டவேலை, நூற்பாலைகள், ஆயத்தஆடை தயாரித்தல், பீடித் தொழில், அரிசி ஆலை, புகையிலை பதனிடுதல், முந்திரி, தீப்பெட்டி தயாரித்தல், கட்டிட வேலை, வீட்டு வேலை, சிறு தொழில் செய்தல், மகளிர் சுயதொழில் போன்ற பல்வேறு தொழில்களில் ஈடுபடுகின்றனர். இரசாயன மருந்து தயாரித்தல், எலக்ட்ரானிக், கணினி போன்ற பல துறைகளிலும் பணிபுரிகின்றனர். இவ்வாறு பணிபுரிந்துவரும் பெண்களுக்கு பாதுகாப்பு அளிப்பதும் முதலாளிகள் சுரண்டுவதிலிருந்து தடுக்கப்படுவதும் அரசின் கடமையாகும். எனவே பெண் தொழிலாளர்களின் நலன்கருதி பல சட்டங்கள் இயற்றப்பட்டன. அவை சரிவர செயல்படாத காரணத்தால், பெண்கள் பாதிக்கப்பட்டனர். அவர்களை மீட்கும் பொருட்டு ஜனநாயக மாதர் சங்கம் தொடர்ந்து பல போராட்டங்களில் ஈடுபட்டு அவர்களுக்காக குரல் கொடுத்தது. 1981ம் ஆண்டில் மொத்த பணியாளர்களில் பதினெட்டு சதவிகிதத்தினர் பெண்கள்.[29]

ஆயத்த ஆடை தயாரிக்கும் தொழிலாளர்களுக்கு குறைந்தபட்சம் முன்னூற்று ஐம்பது ரூபாய் முதல் ஐநூற்று ஐம்பது ரூபாய் வரை மாதச்சம்பளம் அளிக்கவேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது. 1985ம் ஆண்டு எண்ணூார்

---

28. உழைக்கும் மகளிர் சிந்தனை, அக்டோபர்–நவம்பர் 1983.
29. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *பெண் வரலாறும் விடுதலைக்கான போராட்டமும்*, ப.480.

அனல்மின் நிலையத்தில் விபத்து ஏற்பட்டு ஆறு பேர் மரணமடைந்தனர். அவர்களுக்கு நஷ்டஈடு கோரி அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கமும் ஆர்ப்பாட்டத்தில் கலந்துகொண்டது. அனல்மின் நிலையத்தில் பாதுகாப்பு விதிகளை கடைப்பிடிக்காததைக் கண்டித்து கண்டனம் தெரிவிக்கப்பட்டது. 1986ம் ஆண்டு அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் டெல்லி கிளை பிற அமைப்புகளுடன் இணைந்து பெண்களின் வேலைவாய்ப்பு பற்றிய கண்காட்சியை நடத்தியது. “வேலை செய்வதற்கான உரிமையே வாழ்க்கைக்கான உரிமை” என்ற தலைப்பைக் கொண்ட இந்தக் கண்காட்சியில் அன்றைய பிரதமர் ராஜீவ்காந்தி அரசின் புதிய பொருளாதாரக் கொள்கை எவ்வாறு பெண்களை பாதிக்கிறது என்பது குறித்த விவரங்கள் மற்றும் விளக்கங்கள் அளித்தார். அது பெண்களிடையே ஒரு புதிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியது.

1988ம் ஆண்டு ஜூன் முதல்தேதி சர்வதேச குழந்தைகள் தினம் அனுசரிக்கப்பட்டது. அப்போது ஜனநாயக மாதர் சங்கம் முன்வைத்த கோரிக்கைகள் குழந்தைத் தொழிலாளர்களின் உரிமைகளை முன்னிலைப் படுத்தியது.

பள்ளிகளுக்குச் செல்லும் குழந்தைகளுக்கு மட்டுமே தமிழ்நாட்டில் சத்துணவு வழங்கப்படுகிறது. அதே சத்துணவு தொழிற்சாலைகளில் வேலை செய்யும் குழந்தைத் தொழிலாளர்களுக்கும் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அவர்களுக்கு பகுதிநேர கல்வி, பகுதிநேர வேலை என்பது உத்தரவாதப்படுத்தப்பட வேண்டும். இலவச சீருடை, புத்தகங்கள், செருப்பு ஆகியவற்றை கல்வி ஆண்டின் துவக்கத்திலேயே அளிக்க வேண்டும். அனைத்து உழைக்கும் பெண்களுக்கும் வேலைத் தளங்களிலோ குடியிருப்புப் பகுதிகளிலோ குழந்தைகள் காப்பகம் அமைக்கப்பட வேண்டும் என்பது போன்ற கோரிக்கைகள் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் மூலம் முன்வைக்கப்பட்டன.[30]

அகில இந்திய விவசாய சங்கத்துடன் இணைந்து நாடுமுழுவதும் விவசாயிகள் செப்டம்பர் 12 லிருந்து 16 வரை மறியல் போராட்டத்தை நடத்தினர். அதில் ஜனநாயக மாதர் சங்கம் கலந்துகொண்டு, ஆண்களுக்கு நிகரான

30. மகளிர் சிந்தனை, ஜூன் 1988.

வேலையை செய்யும் பெண்களுக்கு அவர்களுக்கு நிகரான ஊதியத்தை வழங்கக்கோரி போராடியது. விவசாயத் தொழிலாளப் பெண்களுக்கு பிரசவகால ஆதாயம் கிடைக்கக் கோரியது. வேலைத் தளங்களில் குழந்தைகள் காப்பகம் போன்ற பெண்களுக்கான தனிச்சிறப்பான கோரிக்கைகளையும் முன்வைத்தது.[31]

அதில் வேலைசெய்யும் உரிமையை அடிப்படை உரிமையாக்க வேண்டியும், தீவிரமான நிலச் சீர்திருத்தத்தின் மூலம் வேலை வாய்ப்புக்கான வழியை ஏற்படுத்த வேண்டியும் போராடியது. உபரி நிலங்களை நிலமற்ற குடும்பங்களுக்கு விநியோகித்து கணவன்–மனைவிக்கு கூட்டுப் பட்டா வழங்கக் கோரியும், வேலையற்ற அனைவருக்கும் வேலை கிடைக்கும்வரை உதவித்தொகை வழங்கும் உத்தரவாதத்தைக் கோரியும், சத்துணவு, அங்கன்வாடி, கைத்தறி, பால்வாடி போன்ற இடங்களில் குறைந்த ஊதியத்தில் உழைக்கும் தொன்னூறு சதவிகித பெண்களுக்கு ஊதிய பாதுகாப்பு தரக் கோரியும், சமக்கூலிச் சட்டம், விவசாயப் பெண்கள் உள்பட அமைப்பு ரீதியாகத் திரட்டப்படாத தளத்திற்கு ஓய்வூதியம் வழங்கக் கோரியும் நாடு தழுவிய பெண்களின் பேரணி பாராளுமன்றத்தின்முன் நடத்தப்பட்டது.[32]

பெண்கள் பெருமளவில் வேலைக்குச் செல்லுகின்றனர். பணியிடங்களில் அவர்களுக்கு பல பிரச்சனைகள் ஏற்படுகின்றன. தொழிற்சாலை நிர்வாகம் அப்பிரச்சனைகள் பற்றி அக்கறை காட்டாத சூழ்நிலையில்தான் 1979ம் ஆண்டு உழைக்கும் பெண்கள் ஒருங்கிணைப்புக்குழு உருவாக்கப்பட்டது. அரசும் நிர்வாகங்களும் பெண் ஊழியர்களின் பிரதான தேவைகளான, மகப்பேறு விடுப்பை கொடுக்கத் தயாராக இல்லாதபோது கம்யூனிச இந்திய தொழிலாளர் சங்கத்துடன் இணைந்து பெண் ஊழியர்களை ஒருங்கிணைத்து முயற்சி எடுத்தது ஜனநாயக மாதர் சங்கம்.

விடுமுறை நாட்களில் தேங்கிய வேலைகளை முடிக்கவும், அவசரப் பணிகளை செய்யவும் பெண் ஊழியர்களை அலுவலகங்களில் மாலை நேரங்களில்

31. தீக்கதிர், 17 செப்டம்பர் 1988.
32. மகளிர் சிந்தனை, ஆகஸ்ட் 1989.

தங்கிட உத்தரவுகள் பிறப்பித்தது மின்வாரியம். இதன் பெண் ஊழியர்கள் இரவு நேர ஷிப்டுகளில் பணிபுரிவதைத் தவிர்க்க கோரியும், அப்படி பணிபுரியும் கட்டாயம் நேர்ந்தால் மருத்துவமனை, தொலைபேசி நிலையம் போன்றவற்றில் அமைத்துக் கொடுத்துள்ள வசதிகள், பாதுகாப்புகள் போன்றவைகளை செய்துகொடுக்கக் கோரியும் திருநெல்வேலியில் பிப்ரவரி 12ம் தேதி கூடிய மாநாட்டில் வலியுறுத்தப்பட்டது.[33]

விவசாயத்துறையில் பெண்கள் எதிர்நோக்கும் பிரச்சனைகளான குறைந்துவரும் வேலை நாட்கள், காண்டிராக்ட் முறையினால் ஏற்படும் வேலை இழப்பு, இயந்திரமயமாதலால் ஏற்படும் வேலை இழப்பு, புதிய பொருளாதார கொள்கையை கடைபிடிப்பதால் ஏற்படும் பிரச்சனைகள், வேலை முறையில்மாற்றம், கூலிப் பிரச்சனைகள், சாதிக் கொடுமைகள், கடன் சுமை போன்றவைகளுக்கு தீர்வுகாணக் கோரி அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் போராடி வருகிறது.[34]

தொழிற்சங்க உரிமைகள் குறித்தும், அணிதிரட்டப்படாத தொழிலாளர்களின் நிலை குறித்தும் அக்கறை செலுத்தியது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். வேலை உத்தரவாதச் சட்டம் ஓரிரு கிராமங்களில் அமல்படுத்தப்பட்டது. அதைத் தொடர்ந்து அனைத்து கிராமங்களிலும் அமல்படுத்தக் கோரி வலியுறுத்தி வருகிறது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்.[35]

மாநிலங்களவை உறுப்பினராக இருந்த பிருந்தாகராத் பட்ஜெட் மீதான விவாதத்தின்போது, அங்கன்வாடியில் பணிபுரியும் ஐம்பது லட்சத்துக்கும் மேற்பட்ட பெண்களுக்கு குறைந்தபட்ச கூலியையும் ஓய்வூதியத்தையும் அரசு உறுதிபடுத்த வேண்டும் என்ற கோரிக்கையை விடுத்தார்.[36]

மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த கோட்டைமேடு என்ற கிராமத்தில் அரசின் நூறுநாள் வேலைத்திட்டத்தில் ஈடுபட்ட தொழிலாளர்களுக்கு இருபது ரூபாய் மட்டுமே கூலியாக வழங்கப்பட்டு வந்தது. அரசு நிர்ணயித்த கூலியை வழங்க

33. மகளிர் சிந்தனை, ஏப்ரல் 1993.
34. *மேலது*, நவம்பர் 1998.
35. *மேலது*, செப்டம்பர் 2007.
36. *மேலது*, ஏப்ரல் 2011.

வேண்டுமெனக் கோரி மாதர் சங்கம் சாலை மறியலில் ஈடுபட்டது. அதன் பின்னர் அரசு நிர்ணயித்த கூலியை அதிகாரிகள் வழங்கினர்.

ஒப்பந்த தொழிலாளர்கள் சுரண்டப்படுவதை எதிர்த்துப் போராடியது மாதர் சங்கம். தொழிலாளர் நலச் சட்டங்களை அமல் செய்யவேண்டும் எனவும் கேட்டுக்கொண்டது. பொதுவாக தொழிற்சாலைகளில் பெண் தொழிலாளர்கள் அதிகம். ஆனால் அவர்களுக்கு ஊதியம் குறைவாகவே கொடுக்கப்பட்டு வருகிறது. சிலசமயம் மோசமான பணிச்சூழலில் மரியாதையின்றி நடத்தப்படுகின்றனர். அடிப்படை உரிமைகள்கூட மறுக்கப்படுகிறது. பணியிடத்தில் ஒரே மாதிரியான வேலையை செய்தாலும் ஆண்களுக்கு கொடுக்கப்படும் ஊதியம் பெண்களுக்கு கொடுக்கப்படுவதில்லை. இந்தியாவில் ஆண்களைவிட பெண்களுக்கு முப்பத்து ஒன்பது சதவிகித ஊதியம் குறைவாகக் கொடுக்கப்படுகிறது.[37] ஆசியாவிலேயே ஆண்களைவிட பெண்களுக்கு மிகக் குறைந்த ஊதியம் கொடுக்கும் நாட்டின் பட்டியலில் இந்தியா உள்ளது. இது தனியார் நிறுவனங்களிலும் அதிகமாக இருக்கிறது. முறைசாரா தொழிலிலும் அதிகமாக காணப்படுகிறது. இப்பிரச்சனைக்கு தீர்வுகாண முயற்சி செய்து வருகிறது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்.

தேசிய கணக்குத் துறையின் புள்ளி விபரங்களின்படி (NAS) நாட்டின் நிகர உற்பத்தியில் முறைசாராத் தொழில்துறையின் பங்கு அறுபத்து இரண்டு சதவிகிதம் என கணக்கிடப்பட்டுள்ளது. இந்தியாவின் மொத்த ஏற்றுமதியில் இந்தத் துறையின் பங்கு 39.3 சதவிகிதம். அர்ஜூன் சென்குப்தா அறிக்கை பீடி, ஜரிகை, தையல், பொட்டு, ஊதுபத்தி, அமிலம், ரசாயனம் போன்ற தொழில்களில் எட்டு கோடி பெண்கள் வேலை செய்வதாகக் கூறுகிறது.

அமைப்பு ரீதியாக திரட்டப்படாத அவர்கள் ஒப்பந்ததாரர்கள் மூலம் சுரண்டலுக்கு ஆளாகின்றனர். இப்பிரச்சனைகளை முன்வைத்து அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் போராடி வருகிறது.[38]

---

37. மகளிர் சிந்தனை, மே 2012.
38. மகளிர் சிந்தனை, ஜூலை 2012.

நெசவுத் தொழிலில் லட்சக்கணக்கான பெண்கள் பணிபுரிந்து வருகின்றனர். இந்தியாவிலுள்ள முப்பதாயிரத்து எழுபது பெரிய நெசவாலைகளில் ஆயிரத்து தொள்ளாயிரத்து பன்னிரண்டு ஆலைகள் தமிழகத்தில் உள்ளன. எண்ணூற்று பதிமூன்று ஆலைகள் கோவை மாவட்டத்தில் உள்ளன. 2007ம் ஆண்டு டாலருக்கும் எதிரான ரூபாயின் மதிப்பு பதினான்கு சதவிகிதம் வீழ்ச்சியடைந்து 2011ம் ஆண்டு நூல் ஏற்றுமதி முப்பது சதவிகிதம் குறைந்தது. கடந்த பதினைந்து ஆண்டுகளில் பதினேழு மில்கள் மூடப்பட்டன. நிரந்தரத் தொழிலாளர்கள் உட்பட ஏராளமானோர் வேலை இழந்தனர். திருப்பூர் பனியன் தொழில் கடுமையான பாதிப்புக்கு உள்ளானது. இதில் ஏராளமான பணியாளர்கள் பெண்கள். இந்தப் பிரச்சனையை அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் கையிலெடுத்து அப்பெண்களை நேரில் சந்தித்து ஆய்வு நடவடிக்கையையும் மேற்கொண்டது. 2008ம் ஆண்டிலிருந்தே பணிநேரம் குறைந்ததாக பெண்கள் தெரிவித்தனர்.

தமிழகம் முழுவதிலும் வேகமாக வேலை இழப்புகள் ஏற்படுவதை தடுத்து நடவடிக்கை எடுக்கக்கோரி போராடியது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். பெண்களின் வேலை வாய்ப்பு கார்மெண்ட்ஸ் துறையில் அதிகம் இருப்பதால் இதுபற்றி ஆய்வு செய்ய அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் திருப்பூரைத் தேர்ந்தெடுத்தது.[39]

விருதுநகர் மாவட்டம் சிவகாசியில் வீட்டுவேலை செய்யும் பெண்களுக்கான கோரிக்கை மாநாட்டை செப்டம்பர் 2010ல் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் நடத்தியது.

## பெண் தொழிலாளர்களுக்கான சட்டப் பாதுகாப்பு

தொழிற்சாலைச் சட்டம் 1948ல் இயற்றப்பட்டது. இது பணிபுரியும் ஆண்–பெண் இருபாலருக்கும் சில விதிகளை கூறுகின்றது. அதில் பெண்கள் வேலை செய்யுமிடத்தில் பெண்களுக்கு அளிக்கப்படும் பாதுகாப்பு பற்றி விளக்குகிறது. அதன்படி சட்டத்தின் 19வது பிரிவு பெண் தொழிலாளர்களுக்கென்று தனிப்பட்ட கழிப்பறைகள் இருக்கவேண்டும் என்று கூறுகிறது. இச்சட்டத்தின் 2 வது பிரிவு

39. ஆர்.சந்திரா, *உலகப் பொருளாதார நெருக்கடியும் இந்தியாவும்*, ப.25.

ஒரு இயந்திரம் ஓடிக் கொண்டிருக்கும்போது அதைப் பெண் தொழிலாளர்கள் சுத்தம் செய்வதோ, எண்ணெயிடுவதோ, ஆராய்வதோ கூடாது என்று வலியுறுத்துகிறது. 21வது பிரிவு பருத்தி ஆலைகளிலும் உடலுக்கு தீங்கு விளைவிக்கும் வேலைகளிலும் பெண்கள் ஈடுபடக்கூடாது என்று தடை விதித்துள்ளது. அப்படி செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டால் தகுந்த முன்னேற்பாடுகள் செய்யவேண்டும் என்று கூறுகிறது. 48வது பிரிவு தொழிற்சாலைகளில் முப்பதுக்கும் மேற்பட்ட பெண்கள் வேலைசெய்தால் அவர்களது ஆறு வயதுக்குட்பட்ட குழந்தைகளைக் கவனித்துக்கொள்ள தனியாக குழந்தைகள் காப்பகம் அமைக்கவேண்டும் என்றும் குழந்தைகளுக்கு பாலூட்ட வேலையின் நடுவில் இடைவெளி அளிக்கவேண்டும்[40] என்றும் கூறுகிறது.

66வது பிரிவின்படி பெண்களுக்கான வேலைநேரம் காலை ஆறுமணி முதல் மாலை ஏழுமணி வரை இருக்கவேண்டும். இவ்விதிகளை மாற்றியமைக்கும் அதிகாரம் மாநில அரசுக்கு உண்டு. இரவில் பெண்கள் வேலைசெய்ய அனுமதிகிடையாது. துணி ஆலைகளில் பெண்கள் தாங்களாக முன்வந்து வேலை நேரத்துக்கு முன்னதாக வந்து தங்களுடைய மன திருப்திக்காக சுத்தம் செய்யும் பணிகளில் ஈடுபட்டால் அது சட்ட விரோதமானது. வயது முதிர்ந்த பெண்மணி முப்பது கிலோ எடையும் சிறு வயது பெண்மணி இருபது கிலோ எடையும் தூக்க அனுமதி உண்டு.

73, 74வது பிரிவுகள் குழந்தைகள் காப்பகம் பற்றிய விதிகளைக் கூறுகிறது. அதன்படி காப்பகம் பெண்கள் வேலை செய்யும் இடத்துக்கு அருகாமையிலிருக்க வேண்டும். காப்பகம் உள்ள இடத்தில் குழந்தைகளுக்குத் தேவையான பால், தொட்டில், விளையாடுமிடம், குளியலறை போன்றவை இருத்தல் வேண்டும். முப்பது குழந்தைகளுக்கு ஒரு பணிப்பெண் இருக்க வேண்டும். பெண் தொழிலாளர்களுக்கு வருடாந்திர ஊதியத்துடன்கூடிய விடுமுறை தவிர இரண்டு வார பேறுகால விடுப்புக் கொடுக்க வேண்டும். பணி செய்வதற்குப் போதுமான தகுதிகள் இருப்பின் பெண் என்ற காரணம் காட்டி வேலை வாய்ப்புக்களை மறுக்கக் கூடாது. கட்டாயப்படுத்தி எந்தப் பெண்ணையும் வேலையில் சேர்ப்பதோ நீக்குவதோ

---

40. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.481.

கூடாது. காயம் ஏற்படும் வகையில் தொழிற்சாலைகளில் அவர்களுக்கு வேலைகள் கொடுக்கக்கூடாது.

தோட்டங்களில் வேலை செய்வோர் நலன்கருதி தோட்டத் தொழிலாளர்கள் சட்டம் 1951ல் இயற்றப்பட்டது. தேயிலை, காபி, ரப்பர் தோட்டங்களில் வேலை செய்யும் பெண்களுக்கு இச்சட்டம் சில விதிமுறைகளை விதித்தது. பெண் தொழிலாளர்கள் ஐம்பது பேருக்கு மேல் இருக்கும் தோட்டங்களில் அவர்களது ஆறு வயது குழந்தைகளை கவனிக்கும் பொருட்டு குழந்தைகள் காப்பகம் அமைக்கப்பட வேண்டும். ஆறுமணிக்கு முன்பும் மாலை ஏழுமணிக்கு பின்பும் வேலைசெய்ய அனுமதிக்கக் கூடாது. தோட்டத் தொழிலாளர்களுக்கு குடியிருப்புவசதி செய்துதரவேண்டும். மழை, குளிர் போன்றவற்றிலிருந்து காக்க உதவும் குடை, கம்பளி போர்வை போன்றவை தரப்படவேண்டும். பெண்களுக்கு நோயுற்ற காலத்திலும், மகப்பேறு காலத்திலும் ஊதியத்துடன்கூடிய விடுமுறை அளிக்க வேண்டும்.[41]

பெண் தொழிலாளர்களுக்கு சட்டப்பாதுகாப்பு அவசியம் என தொடர்ந்து முயற்சி எடுத்தது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். தொழிலாளர் நல ஆலோசனைக் குழுவின் மூலம் தமிழ்நாட்டில் பெண்களுக்கான பிரசவகால ஆதாயச் சட்டம் 1961ம் ஆண்டு கொண்டுவரப்பட்டது. இச்சட்டம் பெண்கள் நலனுக்கு பாதுகாப்பாக இந்திய அரசால் இயற்றப்பட்ட சட்டங்களில் மிக முக்கியமான மகப்பேறு நலச் சட்டமாகும். இச்சட்டம் தாய்—சேய் இருவரது நலனைக் கருத்தில் கொண்டும் மகப்பேறுக்குப்பிறகு பணிப் பாதுகாப்புக்காகவும் இயற்றப்பட்டது. இச்சட்டத்தின்படி கருச்சிதைவு அல்லது குழந்தைப்பேறு முடிந்த நாளிலிருந்து ஆறு வார காலத்துக்குள் வேலை செய்யக்கூடாது. கருவுற்ற பெண்ணை அவள் கேட்டுக்கொண்ட பின்பு எந்தக் கடினமான வேலைகளையோ, அதிக நேரம் நின்றுகொண்டு செய்யும் வேலைகளையோ தரக்கூடாது. இச்சட்டத்தின் 5வது பிரிவின்படி ஒவ்வொரு பெண்ணுக்கும் பிரசவ காலத்தில் சில சலுகைகளைபெற உரிமை உண்டு. மகப்பேறு விடுப்பு ஊதியத் தொகையைப் பெற முழு உரிமை உண்டு. இந்தச் சலுகையைப்பெற பிரசவகால விடுப்புக்கு முன்பு

41. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.482.

குறைந்தது எண்பது நாட்களாவது அந்த அலுவலகத்தில் பணிபுரிந்து இருக்க வேண்டும்.

பிரசவ காலத்தில் ஒரு பெண் இறக்க நேரிட்டால் இறந்தநாள் வரை ஊதியம் பெறும் வாய்ப்பு உண்டு. பிரசவ காலத்தில் அந்த ஊதியத்தைப் பெற ஒரு பெண் தன் சார்பாக வேறு ஒருவரை நியமிக்கலாம். அந்தப் பணத்தை முன்பணமாகவும் பெற்றுக்கொள்ளலாம். பிரசவ காலத்துக்கு முன்பும் பின்பும் தேவைப்படும் வசதிகளைத் தொழிலதிபர் தர இயலாவிட்டால் மருத்துவ போனஸ் பெற அப்பெண்ணுக்கு உரிமை உண்டு. பிரசவம் தொடர்பாக ஏதேனும் உடல்நலக் கோளாறுகள் ஏற்பட்டால் ஊதியத்துடன் மேலும் அதிகப்படியாக ஒரு மாதம் விடுப்பு எடுத்துக் கொள்ளலாம். பிரசவ காலத்துக்குப் பின்பு, வேலை நேரங்களில் இரண்டு முறை குழந்தைகளுக்குப் பாலூட்ட அனுமதி உண்டு. குழந்தைகளுக்கு பதினைந்து மாதம் முடியும்வரை இந்த வசதி உண்டு.[42]

பிறகு அதில் சில மாற்றங்களை அரசு கொண்டு வந்தது. இதனால் ஏற்கனவே இரண்டு குழந்தைகள் இருந்து மூன்றாவது குழந்தை பெறுபவர்களின் நலன் பாதிக்கப்படுவதாக அமைந்தது. மூன்றாவது குழந்தைக்கு சம்பளத்துடன் கூடிய விடுப்புக் கேட்டவர்கள் "பிரசவமான உடனேயே கருத்தடை செய்து கொள்வேன்" என்று எழுதிக் கொடுக்க வேண்டும். இல்லையெனில் கொடுத்த சம்பளம் திரும்பப் பெறப்படும் என்று கூறப்பட்டது.

அப்போது ஜனநாயக மாதர் சங்கத்தின் மாநில செயலாளராக இருந்த பாப்பாஉமாநாத் பெண்கள் நலச்சட்டங்கள் முறையாக அமல்படுத்தப்படுவதில்லை என்று கண்டனம் தெரிவித்தார். பெண்கள் சுரண்டப்படுவதைத் தடுக்க ஒழுங்கான ஏற்பாடுகள் செய்யப்படுவதில்லை. ஆனால் தண்டனை மட்டும் ஏன் கொடுக்கப்படுகிறது என்று கேள்வி எழுப்பினார். பின்னர் சட்டத்திருத்தம் கைவிடப்பட்டது.[43]

42. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.483.
43. மகளிர் சிந்தனை, பிப்ரவரி 1990.

அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் சார்பாக பம்பாயிலுள்ள இந்திய வங்கி ஊழியர் சங்கத் தலைமையகத்துக்குக் கண்டனத் தந்தி அனுப்பப்பட்டது. ஒரு பிரசவத்துக்கான விடுப்பு மூன்று மாதங்கள்தான் என்ற உச்சவரம்பு நீக்கப்படவேண்டும் என்று கோரப்பட்டது. பன்னிரண்டு மாதங்களில் ஆறு மாதகாலம் அல்லது தேவைப்பட்டால் அதற்கு மேலும் என்ற முறையில் அனுமதி கொடுக்க வேண்டும் என்று கேட்கப்பட்டது.[44]

வங்கிகளின் தலைமை அமைப்பான இந்திய வங்கிகள் சங்கம் (IBA) பெண் ஊழியர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த பிரசவகால விடுமுறை விதிமுறைகளை மாற்றி அமைத்தது. கருக்கலைப்பு, கருச்சிதைவு போன்றவற்றுக்குப் பிரசவகால விடுமுறையை பயன்படுத்தக் கூடாது என்பது அவர்களின் உத்தரவு. வங்கி ஊழியர்களுக்கு பன்னிரண்டு மாத காலம் பிரசவகால விடுமுறை உண்டு. ஒரு பிரசவத்துக்கு மூன்று மாதத்துக்கு மிகாமல் விடுமுறை எடுக்கலாம். கனரா வங்கியில் பெண்களுக்கு இந்த விடுமுறை மறுக்கப்பட்டது. இதற்கு கண்டனம் தெரிவித்தது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். ஒரு பிரசவத்துக்கான விடுப்பு மூன்று மாதங்கள்தான் என்ற உச்சவரம்பு நீக்கப்பட்டு மொத்த பன்னிரண்டு மாதங்களில் ஆறு மாத காலம், தேவைப்பட்டால் அதற்கு மேலும் என்ற முறையில் அனுமதிக்க வேண்டும் என்று கோரி பம்பாயிலுள்ள இந்திய வங்கி ஊழியர் சங்கத் தலைமையகத்துக்குக் கண்டனத் தந்தியை அனுப்பியது. நீண்டப் போராட்டத்துக்குப் பிறகு கருச்சிதைவுக்கும், கருக்கலைப்புக்கும் ஆறு வாரங்களுக்கு மிகாமல் விடுப்பு கொடுத்தது இந்திய வங்கிகள் சங்கம். பிரசவத்துக்கு நான்கு முறை விடுப்பினையும் வழங்கியது.

1951ம் ஆண்டு இயற்றப்பட்ட சுரங்கச் சட்டத்தில் பெண்களுக்கான சில விதிமுறைகள் வகுக்கப்பட்டன. காலை ஆறு மணிக்கு முன்பும் மாலை ஏழு மணிக்கு பின்பும் சுரங்கத்தில் பெண்கள் தரைக்குக் கீழுள்ள பகுதியிலும், தரைக்கு மேலுள்ள பகுதியிலும் வேலைசெய்வது தடை செய்யப்படும். தரையில் உள்ள பகுதியில் வேலை செய்யும்போது ஒரு நாள் வேலை முடிந்து மறுநாள் வேலை தொடங்குவதற்கு முன் உள்ள கால இடைவெளி குறைந்தது பன்னிரண்டு

---

44. மகளிர் சிந்தனை, பிப்ரவரி 1991.

மணிநேரம் இருக்க வேண்டும். குளிர்ந்த குடிநீர் வசதி இருக்க வேண்டும். ஒரு வாரத்துக்கு நாற்பத்தெட்டு மணி நேரம் வேலை நேரமாகும். இச்சட்டம் வருவதற்கு முன் பெண்கள் வாரத்துக்கு ஐம்பத்து நான்கு மணிநேரம் வேலை செய்தனர்.[45]

விவசாயக் கூலித் தொழிலாளர்களுக்கான பாதுகாப்புச் சட்டம் கோரி 1997ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் நாடு தழுவிய போராட்டத்தைச் செய்தது. விவசாயக் கூலித் தொழிலில் பெண்களின் எண்ணிக்கை அதிகமாக உள்ளது. பெரும் நிலக்கிழார்கள் பெண்களை வேலைக்கு அமர்த்துவதால் லாபம் அடைகின்றனர். பெண்களுக்கு ஆண்களைவிட குறைந்த கூலியே கொடுக்கப்பட்டது.

பாலின அடிப்படையில் ஊதிய வேறுபாடு இருப்பதைத் தடுக்கும் பொருட்டு 1976ம் ஆண்டு சமஊதியச் சட்டம் மத்திய அரசால் இயற்றப்பட்டது.[46] இச்சட்டத்தின் 44வது பிரிவு ஒரே விதமான வேலையை செய்யும் ஆண்–பெண் உழைப்பாளிகளுக்கு ஒரே விதமான ஊதியம் அளிக்கப்படவேண்டும் என்றும் சட்டத்தின் மூலம் தடுக்கப்பட்டிருந்தாலொழிய எந்தஒரு வேலையையும் பெண் என்ற காரணம் காட்டி மறுக்கக்கூடாது என்றும் கூறுகிறது.

பெண்களின் வேலை வாய்ப்பினைப் பெருக்குவதற்காக அரசு ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஆலோசனைக் குழுக்களை நியமிக்கலாம். வேலை வாய்ப்பினை பெருக்கும் வழிவகைகளை இக்குழு எடுத்துக் கூறும். இதில் பத்து உறுப்பினர்கள் இருப்பார்கள். இதில் ஒருவராவது பெண்ணாக இருக்க வேண்டும். இக்குழுவின் முக்கிய கடமைகள் ஒரு பதிவேடு தயாரிக்க வேண்டும். அதில் பெண் ஊழியர்களின் எண்ணிக்கை வேலையின் தன்மை, எத்தனை மணிநேர வேலை, மேலும் வேலை வாய்ப்பை பெருக்குவதற்கான விதிமுறைகள், பகுதிநேர வேலைவாய்ப்பு என ஒவ்வொரு நிறுவனத்தைப்பற்றியும் தெளிவாக அதில் குறிப்பிட்டிருக்க வேண்டும். சமஊதியம் அளிக்கப்படாவிட்டால் உடனடியாகத் தொழிலாளர் நல அதிகாரியிடம் தெரியப்படுத்துதல் வேண்டும்.

---

45. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.482.
46. RESOLUTIONS, Second Conference, All India Democratic Women's Assoication, October 17-20, Trivandrum, 1986.

இந்த சமத்துவம் என்பது நடைமுறையில் முழுமையாக செயல்பட வில்லை. இச்சட்டத்தில் உள்ள சில விதிமுறைகள் அதற்கு வழிவகுக்கிறது. இச்சட்டம் இருபாலருக்கும் சமம் என்று குறிப்பிட்டாலும் அதே சட்டத்தின் 16வது பிரிவு ஊதியக் கட்டுப்பாட்டுக்கு அதிகாரம் அளிக்கிறது. ஆனால் இதற்கான அனுமதியை உரிய அரசு நிர்வாகப் பிரிவு அங்கீகாரம் அளிக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட பதவியில் ஆண்–பெண் இருவருக்குமிடையே ஊதிய வேறுபாடு இருந்தால் அந்த வேறுபாடு பாலின அடிப்படையில் கொண்டுவரப்பட்டது அல்ல என்று அரசு அறிவிக்க வேண்டும். இதனை நீதிமன்றமும் எவ்வித விசாரணையுமின்றி ஏற்றுக்கொள்ள வேண்டும். இவ்விதி பெண் ஊழியர்களின் நலனுக்கு எதிராகச் செயல்படும் வாய்ப்பினைத் தருகிறது.[47]

பெண் குழந்தைகள் குழந்தைத் தொழிலாளராக பணியாற்ற வேண்டிய கட்டாயநிலைக் குறித்து ஜனநாயக மாதர் சங்கம் கவனம் செலுத்தியது. சென்னை வண்ணாரப்பேட்டையில் பீடி சுற்றும் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டுள்ள சிறுமிகளின் நிலை குறித்து களஆய்வு செய்து அறிக்கை ஒன்று தயாரிக்கப்பட்டது.

பீடிச் சுற்றும் தொழிலில் நான்கு வயது முதல் பதினைந்து வயதுக்குட்பட்ட பெண் குழந்தைகள் அதிகமாக ஈடுபட்டிருக்கிறார்கள். ஒப்பந்ததாரர்களிடமிருந்து பீடி சுற்றுவதற்குத் தேவையான இலை மற்றும் கச்சாப் பொருட்களை வாங்கிவந்து வீட்டிலியே பீடி சுற்றப்படுகிறது. சாதாரணமாக இரண்டாயிரம் இலையில் ஆயிரத்து ஐநூறு பீடி வரை செய்யலாம். ஆனால் இதில் ஐநூறு இலைகள் சராசரியாக சேதமடைந்துவிடும். இந்தச் சேதங்களுக்கு அக்குழந்தைகளே பொறுப்பேற்க வேண்டியிருக்கிறது. சிறு குழந்தைகள் முதலில் இலைகளை வெட்டுகிறார்கள். வெட்டப்பட்ட இலைகளைக் கொண்டு பீடி சுற்றுகிறார்கள் பெரியவர்கள். இவ்வாறு சுற்றபட்ட பீடிகளின் வாயை மூடுவது (புருணி மூடுதல்) குழந்தைகளின் வேலை.[48]

மூன்று நபர்களின் பத்து மணிநேர உழைப்பில் ஆயிரம் முதல் ஆயிரத்து ஐநூறு பீடிகள் சுற்றப்படுகின்றன. இதற்கு மொத்தமாகக் கிடைக்கும் கூலி பத்து

47. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.485.
48. மகளிர் சிந்தனை, ஜூன் 1989.

ரூபாய் முதல் பதினைந்து ரூபாய்தான். எல்லோருமே தினக்கூலிகளாக பணிபுரிகிறார்கள். வைப்புநிதி கணக்குகள் ஒப்பந்ததாரர்களின் பெயரிலேயே இருப்பதால், ஒப்பந்தம் ரத்து செய்யப்படும்போதோ, வேறு ஒப்பந்ததாரரிடம் பணியை தொடரும்போதோ வைப்புநிதி கணக்குகள் மாற்றப்படுவதில்லை. இதனால் வைப்பு நிதித் திட்ட பலன்கள் இக்குழந்தைகளுக்கு முழுமையாகக் கிடைப்பது இல்லை. பதினெட்டு வயதுக்கு உட்பட்டவர்களுக்கு பெற்றோர்களின் பெயரில் வைப்பு நிதி சேமிக்கப்படுகிறது.

பீடி சுற்றும் தொழிலாளர்களுக்கென தனியாக மருத்துவமனை உள்ளது. ஆனால் அதற்குத் தேவையான அடையாள அட்டைகளை ஒப்பந்ததாரர்கள் முறையாக வழங்குவதில்லை. மேலும் அந்த தொழிலாளர்களுக்கு வீடுகட்ட கடன், கல்வி உதவித்தொகை திட்டங்களும்கூட பெயரளவுக்குதான் இருக்கின்றன. இவர்கள் பெரும்பாலும் காசநோய், ஆஸ்துமா, அல்சர் போன்ற வியாதிகளால் பாதிக்கப்படுகிறார்கள்.

மும்தாஜ் என்னும் பன்னிரண்டு வயதுச் சிறுமி "நான் இரண்டாவது வரைக்கும் ஸ்கூலுக்கு போனேன். வீட்டுல இருக்கிற எல்லோரும் இரண்டு வேள சாப்பிடனுங்கிறதுக்காக நான் பீடி சுத்த வந்துட்டேன். நான் இலை வெட்டி போடுவேன். அப்பா பீடி சுத்துவாங்க ; இந்தப் பொண்ணு புருணி மூடும்" என்றாள் தன் ஐந்து வயது தங்கையைக் காட்டி. அப்பொழுது அங்கே வந்த அந்தச் சிறுமியின் தாய் "நான் வாரம் முழுசும் சம்பாதிச்சுத் தந்தாலும் எனக்கு மதியானம் சோறு போட மாட்டேங்குறன்னு சண்டை போடுதுங்க. நா என்ன இருந்தா வஞ்சன பண்ணுறேன்"[49] என்று வருந்தினார்.

பள்ளிக்குச் சென்று துள்ளி விளையாடவேண்டிய பருவத்தில் இளம்பிள்ளைவாத நோயால் பாதிக்கப்பட்ட ஒரு சிறுமி புருணி மூடிக் கொண்டிருந்தாள். சம்ஷாத் என்ற அந்தச் சிறுமியின் வயது பத்து. பீடித் தொழிலிலேயே தன் வாழ்க்கையை இழந்து காசநோய்க்கு ஆளானவர் அக்குழந்தையின் தந்தை.

---

49. மகளிர் சிந்தனை, ஜூன் 1989.

வீட்டிலேயே செய்யக்கூடிய தொழிலாக இருப்பதால் பெரும்பாலும் பெண் குழந்தைகளே இத்தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். தங்களுடைய நிலை தன் வாரிசுக்கு வந்துவிடக்கூடாது என்பதற்காக ஆண் குழந்தைகள் வேறு தொழில்களுக்கு அனுப்பப்படுகிறார்கள். "என்னோட பொழப்பு அவனுக்கு கூடாதுன்னுதான் அவன ஸ்டீல் பட்டறைத் தொழிலுக்கு அனுப்பிச்சேன்" என்கிறார் கவுஸ்பாஷா என்னும் பதினொரு வயதுச் சிறுவனின் தந்தை.

பீடித் தொழிலின் கொடுமையிலிருந்து தப்பிக்க பட்டறைத் தொழிலுக்குச் சென்ற அக்குழந்தைகளின் நிலைமை மிகவும் கொடுமையானது. அவர்களுக்கு குறிப்பிட்ட வேலைநேரம் என்பதே கிடையாது. எவர்சில்வர் தகடு வெட்டுதல், பாலீஷ் போடுவதற்காக உருளைகளில் வஜ்ரம் தடவி ; இரும்புத் தூள்களைப் பூசுவது, பின்னர் அப்பாத்திரத்தை திராவகத்தால் கழுவுதல் போன்ற எடுபிடி வேலைகளை செய்வார்கள். இவ்வாறான வேலைகளை செய்வதால் அக்குழந்தைகளின் கைகளில் வெட்டுக் காயங்கள் ஏற்படுகிறது. இரும்புத்துகள்களை சுவாசிப்பதால் காசநோய் வருகிறது. அதிக வெப்பத்தில் வேலைபார்ப்பதால் கண்நோயும் வருகிறது. அக்குழந்தைகளுக்கு எந்தவிதமான மருத்துவ வசதியும் கிடைப்பதில்லை.

"அப்பாவுக்கு வேலையில்ல அம்மா வீடுங்கள்ள வேலை செய்யறாங்க வருமானம் பத்தாதனால படிப்ப நிறுத்தி என்ன பட்டறையில் சேத்துவுட்டுட்டாங்க" என்று பட்டறைத் தொழிலில் மூன்று வருடமாக பணிபுரியும் பஷீர் என்ற ஒன்பது வயது சிறுவன் கூறினான்.[50]

இத்தொழிலில் முழுநேரமாக வேலைபார்க்கும் சிறுவர்களைத் தவிர, கோடை விடுமுறையில் பட்டறையில் வேலைபார்க்கும் சிறுவர்களுக்கும் வாரக்கூலியாக முப்பது ரூபாய் கொடுக்கப்படுகிறது. மழைக்காலம் மற்றும் வரியேற்றக் காலங்களில் நிரந்தர வருமானம் கிடையாது.[51]

சர்வதேசக் குழந்தைகள் ஆண்டான 1979லிருந்து குழந்தைத் தொழிலாளர் பிரச்சனை பற்றி ஆய்வுசெய்ய பல குழுக்கள் அமைக்கப்பட்டன. தவிரவும் 1975ல்

50. மகளிர் சிந்தனை, ஜூன் 1989.
51. *மேலது*,

குழந்தைத் தொழிலாளர் திருத்தச் சட்டமும் 1986ல் குழந்தைத் தொழிலாளர் தடைச் சட்டமும் இயற்றப்பட்டது. மேற்கூறிய சட்டங்களின்படி குழந்தைகள் மூன்று மணிநேரம் வேலை செய்தால் ஒரு மணிநேரம் ஓய்வு கொடுக்க வேண்டும். மொத்தத்தில் ஒரு நாளைக்கு ஆறு மணி நேரத்திற்குமேல் வேலை செய்யக் கூடாது. ஆனால் இவை எதுவுமே நடைமுறைபடுத்தப்படுவதில்லை என்று மாதர் சங்கம் குற்றம் சாட்டியது.[52]

ஜூன் 1ம் தேதி சர்வதேசக் குழந்தைகள் தினத்தை முன்னிட்டு ஜனநாயக மாதர் சங்கம் சில கோரிக்கைகளை முன்வைத்தது. குழந்தைத் தொழிலாளர்களுக்கு சத்துணவு கிடைக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டும். அவர்களுக்கு பகுதிநேரக் கல்வி, பகுதிநேர வேலை என்பது உத்தரவாதப் படுத்தப்பட வேண்டும். இலவச சீருடை, புத்தகங்கள், செருப்பு பெறத் தகுதியுள்ள வசதியற்ற குழந்தைகளுக்கு, அவற்றைக் கல்வி ஆண்டின் துவக்கத்திலேயே அளிக்க வேண்டும். உழைக்கும் அனைத்து பெண்களுக்கும் வேலைத் தளங்களிலோ, குடியிருப்புப் பகுதிகளிலோ குழந்தைகள் காப்பகம் அமைக்கப்பட வேண்டும்.[53]

பெண்களின் பிரச்சனையை மட்டும் விவாதிக்காமல் குழந்தைத் தொழிலாளர்கள் பிரச்சனையையும் அவ்வப்போது விவாதித்தது ஜனநாயக மாதர் சங்கம். குழந்தைத் தொழிலாளர்களின் அவலநிலை பற்றிய கட்டுரைகள் வெளிவந்தன.

பெண் குழந்தைத் தொழிலாளர்கள் என்றில்லாமல் பொதுவாகவே குழந்தைத் தொழிலாளர்கள் பிரச்சனையில் ஜனநாயக மாதர் சங்கம் அக்கறை செலுத்தியது. 1981ம் ஆண்டு மக்கள்தொகை கணக்கெடுப்பின்படி தமிழ்நாட்டில் பதினைந்து வயதுக்குட்பட்ட குழந்தைத் தொழிலாளர்களின் எண்ணிக்கை ஒன்பது லட்சத்து

52. மகளிர் சிந்தனை, ஜூன், 1988.
53. மேலது.,

எழுபத்தைந்தாயிரத்து ஐம்பத்தைந்து. இது மொத்த உழைப்பாளர்களின் எண்ணிக்கையில் ஐந்து சதவிகிதமாகும்.[54]

நம்நாட்டில் பல்வேறு தொழில்களில் **1.6** கோடி குழந்தைகள் வேலை செய்கின்றனர். பீடி, பட்டாசு, தீப்பெட்டி தொழில்களில் மூன்று வயது முதல் பதினான்கு வயது வரையிலான குழந்தைகள் வேலை செய்கின்றனர்.

இந்தத் தொழிலில் குழந்தைகள் பெரும்பாலும் பீடியை பாக் (Pack) செய்வதிலும் பீடி நுனியை மூடும் வேலையிலும்தான் ஈடுபடுகின்றனர். இவர்கள் வேலை செய்யும் இடம் சிறியது. காற்றோட்டம் அந்த இடத்தில் கிடையாது. இந்தக் குழந்தைகள் அந்த பிரிவு சொந்தக்காரர்களுக்கு (Branch Owners) அடகு வைக்கப்படுகின்றனர். ஐம்பது ரூபாயிலிருந்து முந்நூறு ரூபாய் வரை இவர்கள் அடகு வைக்கப்படுகிறார்கள்.[55] இந்தக் கடன் தீரும் வரை இவர்கள் வேறு எந்த பிரிவுக்கும் வேலைக்கு செல்லக்கூடாது. அனைத்து இடங்களிலும் ஒரே மாதிரியான கூலி கொடுக்கப்படுவதும் இல்லை. சுகாதாரவசதி இல்லாமல் இளம் வயதிலேயே நோயால் பாதிக்கப்படுகின்றனர்.

குழந்தைகள் மிகவும் அதிகமான அளவில் வேலை செய்வது தீப்பெட்டி தொழிற்சாலைகளில்தான். நம் நாட்டிலுள்ள மொத்த தீப்பெட்டி தொழிற்சாலைகள் மூவாயிரத்து முந்நூற்று பதினொன்று. இவற்றில் இரண்டாயிரத்து நூற்று தொன்னூற்று ஐந்து தொழிற்சாலைகள் அறுபத்தாறு சதவிகிதம் தமிழ்நாட்டில் உள்ளன. அதிலும் எழுநூற்று முப்பது தொழிற்சாலைகள் சிவகாசியில் உள்ளன. அதில் அதிக எண்ணிக்கையில் குழந்தைகள் வேலை செய்கின்றனர்.[56] ஆனால் பதிவு செய்யப்பட்டது நாற்பத்து நான்கு சதவிகிதம் பேர். பல குழந்தைகள் அத்துக் கூலிக்கு வேலை செய்வோர் என்பதாலும், குழந்தைகளை வேலைக்கு வைப்பது சட்டத்துக்கு புறம்பானது என்பதாலும் இவர்களின் பெயர் பதிவேட்டில் இருப்பதில்லை.

---

54. தினமணி, பொங்கல் மலர், **1996.**
55. மேலது.,
56. மகளிர் சிந்தனை, ஜூன் **1986.**

தீப்பெட்டித் தொழிலிலும் குழந்தைகள் அதிகமாக வேலை செய்வது இரண்டு பிரிவுகளில்தான். குச்சிகளை சட்டங்களில் அடுக்குவது, குச்சிகளை பெட்டிகளில் அடுக்குவது.

1976ல் அமைக்கப்பட்ட ஹர்பன்சிங் கமிட்டி அறிக்கை இத்தொழிலில் குழந்தை உழைப்புப் பற்றி குறிப்பிடும்போது "குச்சிகள் அடுக்கும் பிரிவு ஒரு ஆரம்பப் பள்ளிபோல உள்ளது என்று சொன்னால் தவறில்லை" எனக் கூறுகிறது. இக்குழந்தைகள் விடியலுக்கு முன்பே வேன்களில் அடைக்கப்பட்டு இரவு ஏழுமணி அளவில் திரும்பிக் கொண்டுவந்து விடப்படுகின்றனர்.

காற்றில்லாத அறைகளில் வேலை செய்யும் இக்குழந்தைகள் நாள் முழுவதும் முதுகை வளைத்துக் கொண்டு உட்காருவதால் முதுகுவலி, கழுத்துவலி, மூட்டுவலி, ரத்த ஓட்டம் தடைபடுதல் போன்ற நோய்களால் பாதிக்கப்படுகின்றனர். உடல்நலம் சரியில்லாமல் வேலையின் வேகம் தடைபடுமானால் அதற்கான தண்டனை அளிக்கப்படும். ஐம்பதாயிரம் குச்சிகளை அடுக்க மூன்று ரூபாய் கூலி இக்குழந்தைகளுக்கு கொடுக்கப்படுகிறது.[57]

சிவகாசியின் சுற்றுப்புறத்தில் அதிக அளவு காணப்படும் தொழில் பட்டாசு செய்வது. மே மாதம் முதல் நவம்பர் வரை 24 மணிநேரம் வேலை நடக்கும். ஒரு மாத இடைவெளிக்குப் பிறகு மறுபடியும் அவ்வேலை தொடரும். இவ்வேலை மிகவும் அபாயகரமானது. வெடி மருந்தில் ஒரு சிறு கல் இருப்பினும் வெடிக்கும் விபத்துகள் ஏற்படும். சுத்தமான குடிநீர் அவர்களுக்கு கிடையாது. நுரையீரல் வியாதிகளால் பாதிக்கப்படுகின்றனர். ஒரு குழந்தையால் ஒரு ரூபாய் ஐம்பது காசு முதல் நான்கு ரூபாய் ஐம்பது காசு வரை சம்பாதிக்க முடியும்.[58]

குழந்தைகளைப் பாதுகாக்கும் வகையில் எவ்வளவோ சட்டங்கள் வந்தும் நடைமுறையில் அமல்படுத்தப்படுவதில்லை. சட்டங்களில் ஓட்டைகள், அத்துமீறல்கள் அதிகம். வயது வரம்பு, வேலை நிபந்தனைகள் அனைத்தும் கட்டுப்பாட்டுக்குள் இல்லை. சட்டத்தை மீறுபவர்களுக்கு கொடுக்கப்படும் தண்டனை மிகவும் குறைவு.

57. மகளிர் சிந்தனை, ஜூன் 1983.
58. *மேலது.,*

மீறுவது பற்றி சாட்சி சொல்ல முன் வருபவர்களும் யாருமில்லை. "லேபர் இன்ஸ்பெக்டர்கள்" சிலசமயம் சட்டத்தின் அத்துமீறல்களை கண்டு கொள்வது இல்லை.

விபத்தில் இறந்துவிடுவோர் எண்ணிக்கை அதிகமாக இருந்தால் ஏஜெண்டால் சடலங்கள் எரிக்கப்பட்டுவிடுகிறது. எந்தவித நஷ்டஈடும் கொடுக்கப்படுவதில்லை. இவையனைத்துக்கும் மேல் குழந்தை உழைப்புப் பற்றி 1976ல் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையை 1986 வரை அரசு வெளியிடவும் இல்லை.[59] மேற்கண்ட பிரச்சனைகள் ஜனநாயக மாதர் சங்க கூட்டங்களிலும் மாநாடுகளிலும் விவாதிக்கப்பட்டன.

1991ம் ஆண்டு சிவகாசி பட்டாசு தொழிற்சாலையில் வெடி விபத்து ஏற்பட்டு பலபேர் உயிரிழந்தனர். இதில் உயிரிழந்தவர்களில் குழந்தைகளும் அடக்கம். 1987ம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டத்தின்படி, இத்தகைய தொழில்களில் குழந்தைகள் உழைப்பை முழுவதுமாக தடைசெய்ய வேண்டும் என அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் வலியுறுத்தியது.[60]

### 'சதி' வழக்கம் மீண்டும் தலை தூக்குதல்

கணவன் இறந்து போனால் அவன் சிதையுடன் அமர்ந்து மனைவியும் உடன்கட்டை ஏறும் வழக்கம் 'சதி' என்று அழைக்கப்படுகிறது. பிரிட்டிஷ் இந்தியாவில் பரவலாக இருந்த இந்தப் பழக்கம் இராஜாராம் மோகன் ராய் போன்ற சமூக சீர்திருத்தவாதிகளால் ஒரு முடிவுக்கு கொண்டுவரப்பட்டது.

ஆனால் பெண்களைப் பொருத்தவரை மண்மூடிப்போன சில பழைமை வாதங்களும் பழக்கவழக்கங்களும் அவ்வப்போது உயிர்த்தெழுந்து அல்லது புதுவடிவம் பெற்று அதிர்வலைகளை ஏற்படுத்தி வருகிறது. அந்த வகையில் சதி என்ற அந்தக் கொடிய வழக்கமும் புத்துயிர்ப் பெற்றது.

---

59. மகளிர் சிந்தனை, ஜூன் 1983.
60. *மேலது*, ஆகஸ்ட் 1991.

1987ம் ஆண்டு செப்டம்பர் 4ம் நாள் ராஜஸ்தானிலுள்ள சீகார் மாவட்டத்தில் தியோராலா கிராமத்தில் ரூப்கன்வர் என்ற பதினெட்டு வயது நிரம்பிய இளம்பெண் தன் கணவர் இறந்தவுடன் தானாக விரும்பி கணவனின் சிதையில் விழுந்து எரிந்து சாம்பலாகி சதி மாதா வாங்கிவிட்டதாக பெருமையுடன் அறிவிக்கப்பட்டது. இந்தச் செய்தி ஒட்டு மொத்த இந்தியாவை அதிர வைத்தது.

ரூப்கன்வர் கணவனுடன் ஒன்பது மாதங்கள்தான் வாழ்ந்தாள். அவள் தானே விரும்பி சதிமாதாவாக முடிவெடுத்துவிட்டதாக குடும்பத்தினரும் கிராமத்தில் இருந்த பிற்போக்குவாதிகளும் கூறினார்கள். அவள் எரிந்து சாம்பலான இடத்தை 'சதிஸ்தலம்' என்று அறிவித்து ரஜபுத்திரகுல இளைஞர்கள் வாளை உயர்த்தியபடி காவல் காக்கின்றனர் என்று தொடர்ந்து செய்திகள் வந்தன. பத்திரிகையாளர்கள் பலரும் அந்த கிராமத்திற்குச் சென்று அந்த உண்மையை அறிய முற்பட்டனர்.

"ரூப்கன்வர் தன்னுடைய கணவனின் சிதையில் அமரும்படி வற்புறுத்தப்பட்டாள் என்பதே உண்மை. அவளுடைய கணவனின் குடும்பத்தினரை சட்ட நடவடிக்கையிலிருந்து காப்பாற்றுவதற்காக அவள் விரும்பியே உடன்கட்டை ஏறினாள் என்று கூறுகிறார்கள்" என்று ரூப்கன்வர் படித்த லால்புலா நடுநிலைப் பள்ளி தலைமை ஆசிரியர் சோடேலால் கூறினார்.[61]

கிராமத்திலிருந்த பெரும்பாலான பெண்கள் தெரிவித்தக் கருத்து இந்தியாவின் சில குக்கிராமங்களில் மதத்தின் பெயராலும் பண்பாட்டின் பெயராலும் பெண்கள் அனுபவிக்கும் துயரங்களை வெளிச்சம் போட்டுக் காட்டியது. "ரூப்கன்வர் இறந்ததே நல்லது அவள் உயிருடன் இருந்திருந்தால், அவள் வாழ்க்கை மிக மோசமாக இருந்திருக்கும். விதவையான பின், மறுதிருமணம் செய்து கொள்ள முடியாது. நல்ல துணிமணிகளோ, நகைகளோ போட முடியாது. கிணற்றுக்கு நீர் இறைக்கப் போவதற்கு கூட அனுமதியில்லை. மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சிகளில் பங்கெடுக்க முடியாது. அது தவிர ஆண்களது காமப்பிடியில் சிக்காமல் தப்பிப்பது பெரும்பாடாக இருக்கும்" என்ற தியோராலா என்ற கிராமத்தைச் சேர்ந்த ராணிதேவி என்ற பெண் கருத்து தெரிவித்திருந்தார்.

---

61. Times of India, 25 September 1987

" சதி நிகழ்ச்சி நடந்தபிறகு இரண்டு வார காலமிருந்தும் மாதர் அமைப்புகள், சமூக சேவை ஊழியர்கள், இந்நாட்டின் சக்தி வாய்ந்த இளைஞர் இயக்கங்கள் இவையெல்லாம் 'சதிஸ்தல' விழா நடத்துவதை எதிர்க்கும் வகையில் மக்கள் கருத்தை உருவாக்க எதுவும் செய்யவில்லை என்பது எனக்கு மிகுந்த அதிர்ச்சியை அளிக்கிறது" என்று அன்றைய மத்திய உள்துறை இலாக்கா உதவி அமைச்சர் ப.சிதம்பரம் மாநில சமூகநல ஆலோசனை போர்டுகள் கூட்டத்தில் தெரிவித்தார்.[62]

ஆனால் உண்மை என்னவென்றால் நாற்பது ஆண்டுகால சுதந்திரத்திற்கு பின்பும் ராஜஸ்தான் கிராமங்களில் ஐந்து சதவிகிதத்தினர்கூட எழுத படிக்கத் தெரியவில்லை என்பதால் மாதர் அமைப்புகள் வெளியிலிருந்துதான் எதிர்ப்புக்குரல் கொடுக்க முடிந்தது.[63]

'அன்றைய பிரதமரான ராஜீவ்காந்தி மக்களை இருபத்தியோராம் நூற்றாண்டுக்கு அழைத்துக் கொண்டு போவதாக சொல்லிக்கொண்டிருந்த நிலையில் அவரது கட்சிக்காரரான ராஜஸ்தான் முதலமைச்சர் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்த சதி கொடுமை இன்று மீண்டும் நடைபெறுவதைத் தடுக்க எந்த முயற்சியையும் செய்யவில்லை' என்று குற்றம் சாட்டியது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். ராஜஸ்தான் அரசு ராஜினாமா செய்ய வேண்டுமென்று தந்தியும் அனுப்பியது.[64]

ராஜஸ்தானில் சதியை பெருமைப்படுத்த தர்மரட்ச என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது. அவர்கள் ஆண்டுதோறும் 'சுன்ரி' திருவிழாவை நடத்தி ரூப்கன்வரை வழிபட்டனர். தடைசெய்யப்பட்ட விழாவில் அப்போதைய மத்திய எரிசக்தி துறை அமைச்சராக இருந்த கல்யாண்சிங் கால்வி கலந்துகொண்டார். இதற்கு கடும் எதிர்ப்பை தெரிவித்த அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் சட்ட ரீதியாகவும் தார்மீக ரீதியாகவும் கால்வி அமைச்சராக நீடிப்பது எந்த விதத்திலும்

---

62. THE HINDU, 23 September 1987
63. மகளிர் சிந்தனை, அக்டோபர் 1987.
64. *மேலது*,

நியாயமில்லை. இது எல்லா விதத்திலும் இந்தியப் பெண் குலத்தின் கௌரவத்துக்கு இழுக்காகும் என்று கருத்துத் தெரிவித்தது.[65]

ரூப்கன்வர் வழக்கில், பதினொரு வருட காலம் வழக்கு இழுத்தடிக்கப்பட்டு இறுதியில் குற்றவாளிகள் அத்தனை பேரும் விடுவிக்கப்பட்டனர். ஜாமீனில் வெளிவந்த குற்றவாளிகள், சாட்சிகள் அத்தனை பேரையும் கலைத்து, தமக்குத் தண்டனை இல்லாமல் செய்துவிட்டனர்.

மாநில பி.ஜே.பி. அரசின் சதி ஆதரவு நிலைபாடு, இந்நிலைக்கு ஒரு முக்கிய காரணம் என்று கருதிய ஜனநாயக மாதர் சங்கம் உட்பட பல அமைப்புகள் கண்டன ஆர்ப்பாட்டம் நடத்திய பின்னர், வேறு வழியில்லாமல் ராஜஸ்தான் அரசு, மேல் முறையீடு செய்தது.[66]

**மீண்டும் பால்ய விவாகம்**

1988ம் ஆண்டு சிதம்பரம் கோயிலில் ஆறு வயது முதல் பதினாறு வயது நிரம்பிய சிறுவர்–சிறுமியர் சுமார் முப்பது பேருக்கு 1987ம் ஆண்டின் இறுதியில் திருமணம் நடந்தது. 04.02.1988 அன்று மீண்டும் இருபது திருமணங்களை நடத்தியுள்ளனர். பகிரங்கமாக நடந்த இந்தச் சட்டமீறல் குறித்து தகவல் திரட்டினார் ஜனநாயக மாதர் சங்கத்தைச் சார்ந்த ஜான்சிராணி.

சிதம்பரம் கோவிலின் வருமானத்தை மட்டுமே நம்பி வாழும் முந்நூறு தீட்சிதர் குடும்பங்களில் நிலவிவரும் வழக்கம்தான் இந்தக் குழந்தை மணங்கள். இவர்கள் சாதிக்குள் திருமணம் ஆனவர்களுக்கு மட்டும்தான் இக்கோவில் வருமானத்தை பங்கிட்டுக்கொள்ள உரிமையுண்டு.

தீட்சிதர் குடும்பங்கள் தங்கள் சாதிக்குள் திருமணம் செய்வதும் அதனை உறுதிப்படுத்திக்கொள்ள பால்ய விவாகமாக செய்து வைப்பதும் ஒரு சமூக பிரச்சனையாக தோன்றினாலும் அதன் அடிப்படை கோவில் சொத்தை அனுபவிக்க வேண்டும் என்ற பொருளாதார காரணம்தான்.[67]

---

65. மகளிர் சிந்தனை, ஜனவரி 1991.
66. *மேலது,* பிப்ரவரி 1997.
67. *மேலது,* பிப்ரவரி, 1988.

தங்கள் குழந்தைகள் படித்து பட்டம் பெற்று வெளியிடங்களுக்கு வேலைக்குச் சென்றால் சுயமாக முடிவெடுக்கக்கூடும். அதனால் ஜாதிய கட்டுப்பாடு சீர்குலைந்துவிடும் என்று அச்சம் தெரிவித்தார்கள். இங்குள்ள பெண்கள் ஐந்தாம் வகுப்புவரைதான் படிக்கிறார்கள். பொதுவாக இத்திருமணங்கள் வீடுகளிலேயே நடத்தப்படும். வசதியில்லாத காரணத்தால் கோயிலில் கூட்டாகத் திருமணங்கள் நடத்தப்படுகின்றன. பால்யவிவாக தடைச்சட்டம் வந்து நூறாண்டு காலம் ஆனபின்பு சாதிக் கட்டுப்பாட்டைக் காப்பாற்ற இந்த நிலை தொடர்கிறது.[68] இத்தகைய திருமணங்கள் தொடர்வதை எதிர்த்து தென்னாற்காடு மாவட்ட ஜனநாயக மாதர் சங்க செயலாளர் ஜான்சிராணி கவர்னருக்கு ஒரு கண்டன கடிதத்தை 1988ம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் அனுப்பினார்.[69] இப்படிப்பட்ட திருமணங்கள் நடக்கும்போது அந்த வீடுகள் முன்பு மாதர் சங்கம் சார்பாக ஆர்ப்பாட்டம் நடத்துவதென்று முடிவெடுக்கப்பட்டது.

இதே காலக்கட்டத்தில் ராஜஸ்தான், பீகார் போன்ற மாநிலங்களிலும் பால்ய விவாகங்கள் நடைபெறுவதாக அறிக்கை ஒன்று தெரிவிக்கிறது. ராஜஸ்தானில் ஓராண்டில் திருமணம் செய்துகொள்ளும் பெண்கள் பதிமூன்று சதவிகிதத்தினர் பத்திலிருந்து பதினான்கு வயதுக்கும், அறுபத்தாறு சதவிகிதத்தினர் பதினைந்திலிருந்து பத்தொன்பது வயதுக்கும் உட்பட்டவர்கள். பீகாரில் பத்து சதவிகித மணப்பெண்கள் பதினாறு வயதுக்கும் குறைவானவர்கள்.[70]

### ஷாபானு வழக்கு

இந்து மதமானாலும், முஸ்லிம் மதமானாலும், கிருஸ்தவ மதமானாலும் மதத்தின் பெயரால் பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகள் இன்றுவரை தொடர்கின்றன. அவ்வப்போது சில தனி நபர்கள் மத அடிப்படை சட்டங்களுக்கு எதிராக வழக்குத் தொடர்வதும் உண்டு. ஷாபானு என்ற முஸ்லிம் பெண் தனது உரிமைகளை வலியுறுத்தி 1985ம் ஆண்டு வழக்கு ஒன்றை தொடர்ந்தபோது மிகவும் பரபரப்பானது. மத்திய பிரதேசத்தில் இந்தூரில் வசித்த ஷாபானுவின்

---

68. மகளிர் சிந்தனை, பிப்ரவரி, 1988.
69. *மேலது,* ஆகஸ்ட், 1988.
70. Indian Express, 29 October 1987.

கணவர் முகமதுகான் ஒரு வழக்கறிஞர். திருமணமாகி நாற்பத்து மூன்று வருடங்கள் கழித்து ஐந்து குழந்தைகள் பிறந்தபின் வீட்டைவிட்டு வெளியேறினார். பராமரிப்புத் தொகையாக ரூபாய் ஐநூறு வேண்டுமென்று இந்தூர் நீதிமன்றத்தில் ஷாபானு வழக்குத் தொடர்ந்தார். ரூபாய் இருபத்தைந்து கொடுத்தால் போதுமென நீதிமன்றம் தீர்ப்பளித்தது. அதனை எதிர்த்து பராமரிப்புத் தொகை அளிக்க முடியாதென மத்திய பிரதேச உயர்நீதிமன்றத்தில் முகமதுகான் மேல்முறையீடு செய்தார். உயர்நீதிமன்றமோ அதை நிராகரித்ததுடன் நில்லாமல் உதவித் தொகையை நூற்று எழுபத்தொன்பது ரூபாயாக உயர்த்தியது. மனம் தளராத முகமதுகான் உச்ச நீதிமன்றத்துக்குச் சென்றார். முஸ்லிம் திருமணச் சட்டத்தின்படி விவாகரத்து செய்தபிறகு மூன்று மாதங்கள் வரைதான் பராமரிப்பு பணம் தரவேண்டும். மேலும் மெஹர் (வரதட்சணை) தொகை திருப்பி அளிக்கப்பட்டுவிட்டதால் அப்பெண்ணுக்கு பராமரிப்புத்தொகை கொடுக்கப்பட வேண்டியதில்லை என்று வாதாடினார். மேலும் விவாகரத்து செய்யப்பட்ட பெண் தனது பராமரிப்புக்கு தன் உறவினர்களையே நாடவேண்டும் என்று முஸ்லிம் திருமணச்சட்ட போர்டு கருத்துத் தெரிவித்தது. மேற்கூறிய வாதங்களை உச்சநீதிமன்றம் ஏற்காமல் ஷாபானுவுக்கு ஆதரவாகத் தீர்ப்பளித்தது. அதோடு இவ்வழக்கிற்கான செலவுத் தொகை பத்தாயிரம் ரூபாயை முகமதுகான் ஷாபானுவுக்கு அளிக்கவேண்டும் என்றும் உத்தரவிட்டது.

இவ்வழக்கில் விசேஷ அக்கறை காட்டி, ஷாபானுவுக்காக வாதாடிய டெல்லி நகர முஸ்லிம் பெண்கள் முன்னேற்றச் சங்கத்தை உச்சநீதிமன்றம் பாராட்டியது.

இந்தத் தீர்ப்பு முஸ்லிம் பெண்களுக்கு ஜீவனாம்சம் கோர உரிமைஉண்டு என்று நிறுவியதால் ஜனநாயக மாதர் சங்கத்தின் பாராட்டைப் பெற்றது. இந்தியா முழுவதும் இந்தத் தீர்ப்புக்குப்பின் மசூதிகளிலும் பொதுக் கூட்டங்களிலும் ஷாபானு வன்மையாகக் கண்டிக்கப்பட்டார்.

“எனது சமுதாயத்தில் ரத்த ஆறு ஓடுவதற்கு காரணமாக நான் இருக்கவில்லை. எனக்காக ஒரு கிலாபத் இயக்கம் நடக்கவும் வேண்டாம். இந்தத் தீர்ப்பை விட்டுக்கொடுப்பதால் எனக்குப் பெரிய நஷ்டமில்லை. எனக்கென்ன

ஆயிரக் கணக்கிலா ஜீவனாம்சம் கிடைத்துள்ளது. வெறும் நூற்றியெண்பது தானே. என் ஒருத்தியின் பிடிவாதத்தால் இஸ்லாமிய சமுதாயத்துக்கும் மதத்துக்கும் களங்கம் வருவதை நான் விரும்பவில்லை'' என்று பேட்டி அளித்தார் ஷாபானு.[71]

உச்சநீதிமன்றம் ஷாபானுவுக்கு வழங்கியத் தீர்ப்பு குறித்து மாதர் இயக்கங்களும் சமூக ஆர்வளர்களும் அடைந்த மகிழ்ச்சி வெகுநாள் நீடிக்கவில்லை. உச்சநீதிமன்றத் தீர்ப்பு முஸ்லிம்கள் மத்தியில் கொந்தளிப்பை ஏற்படுத்தியதால், அன்றைய காங்கிரஸ் அரசு 1986ல் முஸ்லிம் பெண்கள் விவாகரத்துச் சட்டம் ஒன்றை இயற்றியது. இந்தப் புதிய சட்டத்தின்படி முஸ்லிம் பெண்களுக்கு இஸ்லாமிய சட்ட அடிப்படையில் பராமரிப்புத் தொகை உறுதி செய்யப்பட்டு அதைக் கோரும் உரிமையை வழங்கியது. தேர்தல் அரசியலை மனதில் கொண்டு சிறுபான்மையினருடன் சமரசம் செய்துகொண்ட அரசின் இந்த முயற்சி பெண்களின் உரிமை போராட்டத்துக்கு பின்னடைவை ஏற்படுத்தித் தந்தது. மதவாத சக்திகள் மீண்டும் தங்களுக்கான அதிகாரத்தைத் தக்க வைத்துக் கொண்டார்கள்.

## பொது சிவில் சட்டம்

பொது சிவில் சட்டம் என்பது அனைத்திந்தியப் பெண்கள் மாநாடு முன்வைத்த கோரிக்கையாகும். ஷாபானு வழக்கைத் தொடர்ந்து இந்தப் பொது சிவில் சட்டக் கோரிக்கை மீண்டும் உயிர்பெற்றது. திருமணம், விவாகரத்து, ஜீவனாம்சம், குழந்தையை தத்தெடுப்பது போன்ற தனிநபர் விவகாரங்கள் பலவற்றையும் கட்டுப்படுத்த எல்லா இந்தியர்களுக்கும் பொருந்தக்கூடிய ஒரு பொதுவான சட்டமே, பொது சிவில் சட்டம்.

நம் நாட்டில் பாலின சமத்துவம் இல்லையென்பது மட்டுமல்ல, பல சாதி மதங்களைச் சார்ந்த பெண்களிடையேகூட சமத்துவம் இல்லை என்பதும் உண்மை. மத அடிப்படையில் தனிநபர் அல்லது குடும்பம் சம்பந்தப்பட்ட சட்டங்கள் இன்னமும் செயல்படுவது இதற்கான முக்கிய காரணங்களில் ஒன்று. மதம் சார்ந்த மரபுகள் அனைத்துமே பெண்ணடிமைத்தனத்தை நிலைநாட்டுகின்றன.

71. Sunday Observer, December 1985.

பெண்ணடிமைத்தனமே ஒரு சமூகத்தின் பண்பாட்டுத் தனித்துவத்தை நிர்ணயிக்கும் அவலநிலை இன்னமும் நீடிக்கிறது.

எந்த மதத்தைச் சார்ந்தவர்களானாலும், மதம் சார்ந்த சட்டத்தை பின்பற்றுவதற்குச் சாதகமாக விருப்பத் தேர்வாக (optional) பொது சிவில் சட்டம் இயற்றலாம் என்று அஸ்கர் அலி என்ஜினீயர் உள்ளிட்ட இஸ்லாமிய தத்துவ அறிஞர்கள் கருதினர்.[72]

இத்தகைய பின்னணியில்தான் பல மாதர் அமைப்புகள் பொது சிவில் சட்டத்தை உடனடிக் கோரிக்கையாக வைப்பது எதிர் விளைவுகளை ஏற்படுத்தும் என்று கருதி இடைக்கால கோஷங்களை உருவாக்கியுள்ளனர். இது பொது சிவில் சட்டக் கோரிக்கையை கைவிட்டதாகாது. இதன்படி மதச் சட்டங்களில் பெண்ணுரிமைக்குச் சாதகமான மாற்றங்களைக் கொண்டுவரும் முயற்சிகளுக்கு ஆதரவும் ஊக்கமும் அளிக்க வேண்டும். அதே சமயம் சொத்துரிமை, திருமணச் சொத்தில் (Matrimonial Property) சம உரிமை, திருமணங்களைப் பதிவுசெய்வது போன்ற சம உரிமைகள் அளிக்கும் சட்டங்கள் இயற்ற இயக்கங்கள் நடத்தவேண்டும். இக்கோரிக்கைகளை அமலாக்க அனைத்து மதங்களையும் சார்ந்த பெண்கள் ஒன்றுபட்டு குரல் எழும்பும்போது, இது ஒரு சமூகத்தினரைக் குறிவைக்கிறது என்ற உணர்வு எழாது என்று அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் கருத்து தெரிவித்தது.

பாரதிய ஜனதா கட்சி தாங்கள் ஆட்சிக்கு வந்தால் பொது சிவில் சட்டம் கொண்டு வருவோம் என்று அறிவித்ததை இடதுசாரி இயக்கத்தினர் சந்தேகத்துடன் பார்த்தனர். பொது சிவில் சட்டம் என்று மாதர் சங்கம் கோரும்போது அது மதச்சார்பற்ற ஒரு கோஷம். ஆனால் இந்துமத அடிப்படைவாதிகள் சிறுபான்மை மக்களுக்கெதிரான ஆயுதமாக அதனை கையிலெடுத்துவிடக்கூடாது என்ற எச்சரிக்கை உணர்வும் இடதுசாரிகளுக்கு ஏற்பட்டது.

72. மைதிலி சிவராமன், *பெண்ணுரிமை—சில பார்வைகள்*, ப.32.

மதச்சார்பின்மை என்பது மதம் ஒருவருடைய சொந்த விஷயமாக இருக்க வேண்டுமேயன்றி அரசியலிலோ பொது வாழ்க்கையிலோ கலக்கக் கூடாது என்பதையே குறிக்கிறது. துரதிஷ்டவசமாக மதச்சார்பின்மை என்பதையே நமது நாட்டில் சரியாக புரிந்து கொள்ளப்படவில்லை.

## ஊடகங்களில் பெண்கள்

ஐ.நா.சபை 1975ம் ஆண்டை சர்வதேசப் பெண்கள் ஆண்டாக அறிவித்தது. அதனைத் தொடர்ந்து 'பெண்கள் பத்தாண்டு' (Women's Decade 1975-85) அறிவிக்கப்பட்டது. அதன் முக்கியப் பணிகளில் ஒன்றான இந்தியாவில் மத்திய அரசு பெண்களின்நிலை குறித்து ஆராய கமிட்டி ஒன்றை நியமித்தது. அந்தக் கமிட்டி தனது அறிக்கையை 1974ம் ஆண்டு சமர்ப்பித்தது.

பெண்களின் இரண்டாம்தர நிலைமைக்கான பல்வேறு காரணங்களை ஆய்வுசெய்த அந்த அறிக்கை நமது திரைப்படம், தொலைக்காட்சி, பத்திரிகைகள் போன்ற ஊடகங்களில் பெண்கள் சித்தரிக்கப்படும் முறையும் ஒரு முக்கிய காரணம் என்று சுட்டிக்காட்டியது.[73]

## பெண்களை இழிவாக சித்தரிப்பதற்கு எதிரான சட்டம் (1986)

பெண்கள் தரக்குறைவாகக் சித்தரிக்கப்படுவதற்கு எதிரான சட்டம் 1986ம் ஆண்டு இயற்றப்பட்டது. ஊடகங்களில் பெண்கள் தரக்குறைவாக சித்தரிக்கப்படுவதை எதிர்த்துப் பெண்கள் இயக்கங்கள் கிளர்ந்தெழுந்தன. 1986ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் மார்கரெட் ஆல்வா பெண்கள் தரக்குறைவாக சித்தரிக்கப்படுவதை எதிர்த்து ஒரு மசோதாவை அறிமுகப்படுத்தினார். அது 1987ம் ஆண்டு அக்டோபர் மாதம் சட்டமாகியது. இச்சட்டத்தின் முதன்மை நோக்கம் பெண்களைத் தரக்குறைவாகவும், பெருமையைக் குலைக்கும் வகையிலும், பொதும் ஒழுக்க முறைகளைக் களங்கப்படுத்தும் வகையிலும் சித்தரிப்பதைத் தடுப்பதே ஆகும். இச்சட்டம் தவறாகச் சித்தரித்தல் பற்றி விளக்காததால் பொது ஒழுக்கமுறை என்ற கருத்துக் குழப்பம் நிறைந்ததாக உள்ளது. துல்லியமற்ற விளக்கம்

73. Report of the Committee on the Status of Women in India, Government of India, December, 1974.

சட்டத்தைத் தவறாகப் பயன்படுத்துவதற்கு வழி வகுத்தது.[74] இத்தகைய வெளியீடுகள் விளம்பரங்கள் ஆகியவை மக்களின் மனதை மிக மோசமாக பாதித்தன.

நாடெங்கும் மாதர் அமைப்புகள் நடத்திவந்த கிளர்ச்சிகளின் விளைவாக அரசு இந்த விஷயத்தில் சற்று கவனம் செலுத்தி ஒரு தனிச் சட்டம் இயற்றியதை வரவேற்றது ஜனநாயக மாதர் சங்கம். இச்சட்டத்தின் முக்கிய அம்சங்களாக, பெண்ணை ஆபாசமாக அல்லது கேவலமாக சித்தரிப்பது என்பதன் விளக்கம் விவரிக்கப்பட்டுள்ளது. பெண்ணின் உருவத்தை சித்தரிக்கும் முறை அவளை கீழ்த்தரமாக காட்டினால் அது ஆபாசமாகும். சித்தரிப்பை பார்ப்பவர்களின் ஒழுக்கத்தை பாதிக்க கூடியதாக இருந்தாலும் அது ஆபாச சித்தரிப்பு எனவும் பெண்ணைக் கேவலமாகக் காட்டும் விளம்பரங்கள், வெளியீடுகள் தடை செய்யப்படும். பெண்ணைக் கேவலப்படுத்தும் வகையில் அமைந்துள்ள நூல்கள், துண்டுப் பிரசுரங்கள், ஸ்லைடு போட்டோ, எழுத்து, வரைபடம், ஓவியம் ஆகியவற்றை விநியோகிப்பது தடைசெய்யப்படும் எனவும் இருந்தது.

சட்டங்கள் எவ்வளவு கொண்டு வரப்பட்டாலும் அவை சில ஓட்டைகளுடன்தான் வருகின்றன. குற்றவாளிகள் அவற்றின் வழியாகத் தப்பித்து விடுகின்றனர். எனவே பெண்கள் அமைப்புகள் சட்டம்தான் வந்துவிட்டதே என்று இல்லாமல் அதை சரியாக அமல்படுத்த நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று ஜனநாயக மாதர் சங்கம் தனது கருத்தை வெளியிட்டது.[75]

### மீடியாக் குழு நடவடிக்கைகள்

ஜனநாயக மாதர் சங்கம் ஊடகங்களில் பெண்கள் சித்தரிக்கும் விதம் குறித்து கவனம் செலுத்தியது. மீடியாக் கண்காணிப்புக்குழு என்ற அமைப்பை ஏற்படுத்தி திரைப்படங்கள் மற்றும் பத்திரிகைகளில் பெண்கள் இழிவாக சித்தரிக்கப்படுவதை கண்காணிப்பதோடு நடவடிக்கை எடுக்கவும் முயற்சிகளை மேற்கொண்டது.

---

74. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *பெண் வரலாறும் விடுதலைக்கான போராட்டமும்*, ப.462.
75. மகளிர் சிந்தனை, ஜனவரி 1987.

ஆரம்பத்தில் ஆபாச சுவரொட்டிகளை அகற்றுவதற்காக காவல் துறையிடம் முறையிடும் பணியை செய்துவந்தது ஜனநாயக மாதர் சங்கம். பெண்களை மலினப்படுத்தும் பல்வேறு கூறுகளை ஆராயத் தொடங்கியது மீடியா.

அவ்வப்போது கூடிய மீடியாக் குழுவினர் தமிழ்த் திரைப்படங்களில் பெண்கள் எவ்வாறு மோசமாக சித்தரிக்கப்படுகிறார்கள் என்பது குறித்தும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் பெண்களின் சித்தரிப்பு குறித்தும் விளம்பரங்களில் வெளிப்படும் பெண்களைப் பற்றிய கருத்தாக்கங்கள் குறித்தும் விவாதித்தனர்.

தமிழ் சினிமாக்களிலும் பெண்களின் சித்தரிப்பு ஆய்வுக்குரியது என்று அடையாளம் கண்டது மீடியாக்குழு. மகளிர் சிந்தனையில் தொடர்ந்து சினிமா விமர்சனப் பகுதி இடம் பெற்றது. மற்ற பத்திரிகைகளில் வரும் சினிமா விமர்சனம்போல் இல்லாமல் பெண்ணிலைக் கண்ணோட்டத்துடன் தமிழ் சினிமா விமர்சிக்கப்பட்டது.

பொதுவாகவே தமிழ் சினிமாவில் இருவகையான பெண்கள் சித்தரிக்கப்பட்டார்கள். தியாகமே உருவான தாய் குடும்பத்துக்காக பல்வேறு தியாகம் செய்யும் கதாநாயகியாக ஒரு வகை. கலகம் செய்து குடும்பத்தைக் குலைக்கும் வில்லிகளாகவும், ஆளை மயக்கும் உடல் வியாபாரிகளாக மற்றொரு வகைப் பெண்களும் சித்தரிக்கப்பட்டார்கள்.

மேற்கூறிய இரண்டுவகை சித்தரிப்புமே பெண்களின் வாழ்க்கைக்கும் வளர்ச்சிக்கும் உதவுவதாக இல்லை. தியாகம் செய்யும் பெண்கள் தங்கள் தனித்துவத்தை இழந்துவிடுகிறார்கள். குடும்பம் என்ற வட்டத்துக்குள் அவர்களது எல்லைகள் குறுகிவிடுகின்றன. வீடு, திருமணம், கணவன், குழந்தைகள் இந்த எல்லைகளில் அவர்களது தியாகங்கள் எல்லை மீறியதாகவும் நல்ல விளைவுகளை ஏற்படுத்தாதவையாகவும் நேர்ந்து விடுகின்றன. இரண்டாவதாக வில்லிகளாகத் திரையில் தோன்றுபவர்கள் ஆபாசகாட்சிகளுக்காகப் பயன்படுத்தப்பட்டு வெறும் போகப் பொருட்களாகவே சித்தரிக்கப்படுகிறார்கள்.

தமிழ் சினிமாவில் பெண்களுக்கெதிரான வன்முறைகள் எப்போதும் நியாயப்படுத்தப்படுகின்றன. கணவன் தன் மனைவியை 'பளார்' என்று அறையும் காட்சி இடம்பெற்ற தமிழ் சினிமாவே அறுபதுகளில் அதிகம் காணப்பட்டது. அகங்காரம் பிடித்த பெண்ணை கதாநாயகன் அடக்குவதான கதைகளில் ஈவ்—டீஸிங் காட்சிகள் தாராளமாக இடம் பெற்றன. ஈவ்—டீஸிங் நடைபெற பெண்கள் அணியும் உடைதான் காரணம் போன்ற வசனங்கள் இடம் பெற்றன.

பாலியல் வன்முறையை தமிழ் சினிமா நியாயப்படுத்தியது. 1989ம் ஆண்டு வெளிவந்த 'புதிய பாதை' என்ற படத்தில் தன்னை பாலியல் பலாத்காரம் செய்தவனை கதாநாயகி வலியச் சென்று மணந்து கொள்ளுகிறாள். தீய குணங்கள் நிறைந்த அவனை தனது அன்பால் திருத்துகிறாள். இந்தப் படத்துக்கு தமிழக அரசின் விருது கிடைத்தபோது ஜனநாயக மாதர் சங்கம் கடும் எதிர்ப்பு தெரிவித்தது.

'இரட்டைவால் குருவி' படத்தில் இருதார மணம் நியாயப் படுத்தப்பட்டது. சட்டப்படி இருதாரமணம் புரிவது குற்றமாகும். அதனை நியாயப்படுத்தும் வகையில் தமிழ் சினிமாவின் கதையாளர்களுக்கு ஜனநாயக மாதர் சங்கம் கடும் எதிர்ப்பு தெரிவித்தது. "நடைமுறையில் உள்ளதைத்தானே திரையில் சித்தரிக்கிறோம். இதிலென்ன தவறு" என்று திரைத் துறையினர் வாதிட்டனர்.[76] அதற்கு பதிலளித்த ஜனநாயக மாதர் சங்கத்தினர் "இது போன்ற சினிமாக்கள் மக்களை தவறான வழியில் ஊக்கப்படுத்துகின்றன. நடைமுறையில் இருதார மணம் என்பது பெண்கள் வாழ்க்கையில் நேரடியாகவும் ஆண்கள் வாழ்க்கையில் மறைமுகமாகவும் பல பாதிப்புகளை ஏற்படுத்துவதாக[77] தெரிவித்தனர்".

சினிமாவில் வரும் ஈவ்—டீஸிங் காட்சிகள் பெண்களை இழிவுபடுத்துகின்றன. புறநகரங்களின் பேருந்துகளில் தவறாமல் ஒலிக்கும்

---

76. தீக்கதிர், 15 அக்டோபர் 1990.
77. *மேலது.*,

இத்தகைய பாடல்கள் பெண்கள் மீதான பாலியல் துன்புறுத்தலை ஊக்கப்படுத்துகின்றன என்றும் கருத்து தெரிவிக்கப்பட்டது.[78]

1993 டிசம்பர் 18ம் நாள் "திரைப்படங்களில் பெண்கள்" என்ற தலைப்பில் சென்னையில் கருத்தரங்கை அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் நடத்தியது.[79] அதில் திரைப்படத் துறையை சேர்ந்தவர்களும் தணிக்கைக்குழு பிரதிநிதிகளும் கலந்துகொண்டார்கள். சினிமாவில் பெண்கள் சித்தரிக்கப்படும் விதம் குறித்து பல கேள்விகளை எழுப்பும் மாதர் சங்கத்தினர், தணிக்கைக் குழுவில் இடம்பெற்று சமுதாய அக்கறையுடன் செயல்பட வேண்டும் என்று தணிக்கைக்குழு அதிகாரி அழைப்பு விடுத்தார்.

இக்கருத்தரங்கில் சினிமாவில் இடம் பெறும் தாலி சென்டிமெண்ட் போன்ற பிற்போக்குத் தனங்களைக் கண்டித்து மாதர் சங்கத்தின் சார்பில் கருத்து கூறப்பட்டது. தலைமையேற்க வந்திருந்த இயக்குனர் பாரதிராஜா "தாலிக்கு எதிராக கருத்துக் கூறும் நீங்களெல்லாம் ஏன் தாலி அணிகிறீர்கள்" என்று கேட்டார்.[80] அதற்கு பதிலளித்த மைதிலி சிவராமன், தானும் தன்னுடன் மேடையில் அமர்ந்திருக்கும் மாதர் சங்கப் பெண்களும் தாலி அணிந்திருக்கவில்லை என்றும் சடங்கு தவிர்த்த திருமணம் செய்து கொண்டவர்களென்றும் பதில் அளித்தார். பிற மாநிலங்களில் செயல்படும் ஜனநாயக மாதர் சங்கத்தார் சடங்குகளை மறுப்பதை இவ்வளவு இயல்பாக கூற முடியுமா என்ற கேள்வி எழுகிறது. "பெரியாரின் பெண் விடுதலைக் கருத்துக்கள் தமிழ் மண்ணில் ஏற்படித்தியிருந்த தாக்கமும் இந்த இயல்பு தன்மைக்கு ஒரு காரணம் என்பதை மறுக்க முடியாது" என்கிறார் உ.வாசுகி.[81]

'விழிப்பு' என்ற பெயரில் சுமார் பதினாறு மாதர் அமைப்புகளை ஒருங்கிணைத்தது ஜனநாயக மாதர் சங்கம். அவ்வமைப்பு 1994ம் ஆண்டு மத்திய தகவல் ஒளிபரப்பு செயலாளரிடம் மனு ஒன்றைக் கொடுத்தது. தணிக்கைக்

---

78. தீக்கதிர், 15 அக்டோபர் 1990.
79. கருத்தரங்க அழைப்பிதழ், 18 டிசம்பர் 1993.
80. புதிய பார்வை, டிசம்பர் 1990.
81. நேர்காணல் : *உ.வாசுகி,* 14 நவம்பர் 2012.

குழுவில் மாதர் சங்கப் பிரதிநிதிகள் சேரவேண்டும் என்ற கோரிக்கை வலியுறுத்தப்பட்டது. இதனையொட்டி தணிக்கைக்குழு சீரமைக்கப்பட்டபோது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கப் பிரதிநிதிகள் பத்து பேர் தணிக்கைக் குழு உறுப்பினர்களாக இரண்டு வருடங்களுக்கு நியமனம் செய்யப்பட்டார்கள்.[82]

இதனைத் தொடர்ந்து சென்னை மாவட்ட மீடியாக்குழு, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் பெண்கள் சித்தரிப்பு குறித்து சென்னை தொலைக்காட்சி நிலைய இயக்குநரை இருமுறை சந்தித்து விவாதித்தது. சில தொலைக்காட்சி தொடர்களுக்கு எதிர்ப்பைத் தெரிவித்ததன் அடிப்படையிலும், மற்ற சில நிர்பந்தங்களினாலும் அவற்றில் சிறு மாற்றங்கள் செய்யப்பட்டன. தொலைக்காட்சியில் காட்டப்படும் திரைப்படங்களை மறுதணிக்கை செய்யும் குழுவில், ஜனநாயக மாதர் சங்கப் பிரதிநிதி ஒருவரும் இணைத்துக் கொள்ளப்பட்டார்.

பெண்களை இழிவுபடுத்தும் ‘பாபா’ படத்தின் வசனத்தைக் கண்டித்து மூவாயிரத்துக்கும் மேற்பட்ட கையெழுத்துக்களுடன் கண்டனக் கடிதத்தை ஜனநாயக மாதர் சங்கம் ரஜினிகாந்துக்கு அனுப்பியது. இதற்கு தொலைக்காட்சியில் விளக்கமளித்தார் லதா ரஜினிகாந்த்.

‘பாய்ஸ்’ திரைப்படத்தின் ஆபாச வசனங்களையும் காட்சிகளையும் அகற்றி படத்தை மறுதணிக்கை செய்யக்கோரி சென்னையிலுள்ள திரையரங்கில் ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது. ஏராளமான பத்திரிகைகளும் தொலைக்காட்சிகளும் இதை செய்தியாக்கி விவாதத்தை ஏற்படுத்தின. இதன் விளைவாக, ஜனநாயக மாதர் சங்கம் ஆட்சேபித்திருந்த பல காட்சிகளை தயாரிப்பாளர் தாமாகவே நீக்கினார். உயர்நீதிமன்றத்தில் வழக்கும் தொடுக்கப்பட்டது. திருவாரூரில் இப்படத்தை திரையிடும் திரையரங்கின் முன் முற்றுகை போராட்டம் என துண்டுப் பிரசுரம் வெளியிட்டவுடனேயே இப்படத்தை மாற்றினர்.

---

82. Notification No.809/6/93-F(c), dated 21st December 1994. Central Board of Film Certification.

'நியூ' படத்தின் ஆபாச காட்சிகளைக் கண்டித்து சென்னையில் திரையரங்கத்தின் முன் ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது. மதுரை மாவட்ட சங்கக் குழுக்கள் ஒன்றிணைந்து மாதிரி பிலிம் சுருள் தயாரித்து அதைக் கொளுத்தி எதிர்ப்பைத் தெரிவித்தனர். ஒரு கூடுதல் ஆபாச நடனம் இணைக்கப்பட வேண்டும் என்கிற இயக்குநரின் வேண்டுகோளை தணிக்கைக்குழு நிராகரித்தது. இயக்குநர் மாதர் சங்க அமைப்பை பற்றி அவதூறு கூறினார். அதற்கு அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் கூட்டங்கள் மூலம் பதிலடி கொடுத்தது. சேலத்திலும், திருப்பூரிலும் கண்டன இயக்கங்களும் நடத்தப்பட்டது.

பேருந்துகளில் ஆபாச திரைப்படப் பாடல்கள், கேசட்டுகள் மூலம் ஒலிபரப்பப்படுவதைத் தடுக்க வேண்டும் என 2002ம் ஆண்டு நடந்த மாநாட்டில் முடிவெடுக்கப்பட்டது. மகளிர் ஆணையத்திற்கு அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் சார்பில் மனு கொடுக்கப்பட்டதன் அடிப்படையில் மோசமான பாடல்களை ஒலிபரப்பக் கூடாது என்ற சுற்றறிக்கையை அரசின் போக்குவரத்துத்துறை செயலாளர் வெளியிட்டார்.

நமது இலக்கியங்களில் தொடங்கி பழமொழிகள் வரை அனைத்திலும் பெரும்பாலும் பெண்களைக் குறித்து பிற்போக்கான பார்வையை உருவாக்கி வந்திருக்கிறது. பெண்களை அவர்களின் பிரச்சனைகளை விவாதிக்கவும் நல்ல இலக்கியங்களை மகளிர் சிந்தனையில் 'நூல் அறிமுகம்' என்ற பகுதியில் பெண்களுக்கு அறிமுகம் செய்து வைக்கவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டு செயல்படுத்தப்பட்டது.

எழுத்தாளர் ராஜம் கிருஷ்ணன் எழுதிய 'காலந்தோறும் பெண்' என்ற நூல் வெளிவந்தபோது அந்த நூல் குறித்து விவரமாக எழுதப்பட்டது. பெண்களின் நிலையை வரலாற்று ரீதியாக ஆராய்ந்திருக்கும் ராஜம் கிருஷ்ணன் வேத காலம் தொடங்கி தற்காலம் வரை பெண்களின் கீழ்முக இறக்கம் குறித்து விவரித்துள்ளார்.

கோதாவரி பாருலேக்கர், ஹெப்சிபா ஜேசுதாசன், பாமா, சிவகாமி போன்ற முக்கிய எழுத்தாளர்களின் படைப்புகள் குறித்து விவாதிக்கப்பட்டது. எழுத்தாளர்

சல்மா எழுதிய 'இரண்டாம் ஜாமங்களின் கதை' என்ற நாவல் எவ்வாறு இஸ்லாமிய பெண்களின் வாழ்க்கைக்கல்வி மறுக்கப்பட்டு உரிமைகள் மறுக்கப்பட்ட நிலையில் உள்ளது என்பதை மிக விவரமாக மகளிர் சிந்தனையில் எழுதப்பட்டது.

மேற்கூறிய நூல்விமர்சன பகுதி பெண்ணிய சிந்தனையுடன் புதியபுதிய தளங்களில் பல்வேறு பரிமாணங்களில் புரிதலை ஏற்படுத்துவதற்கு வழிவகுத்தது.

பழமொழிகளில் எவ்வாறு பெண்களைப் பற்றிய பிற்போக்கு சிந்தனை வலியுறுத்தப்படுகிறது என்பதை ஆய்வுக் கட்டுரையாக தயாரித்து மாதர் சங்கப் பெண்களுக்கு தரப்பட்டது. 'பெண்புத்தி பின் புத்தி', 'ஐந்து பெண் பெற்றால் அரசனும் ஆண்டியாவான்', 'பெட்டைக் கோழி கூவியா பொழுது விடிய போகுது' போன்ற பேச்சு வழக்கிலிருந்து பழமொழிகள் தவிர நகர்ப்புறங்களில் அதிகம் கேள்விப்பட்டிராத பழமொழிகளையும் தொகுத்தளித்து எவ்வாறு பெண்களுக்கு எதிராக சமூகக் கருத்தாக்கம் ஆழ்மனதில் பதியும் வண்ணம் சொல்லப்பட்டு வந்திருக்கிறது என்பதை தெளிவுபடுத்தியது அந்த ஆய்வுக் கட்டுரை.

### பத்திரிகைகள்

பத்திரிகைகளிலும் நகைச்சுவைத் துணுக்குகள் பெண்களை இழிவுபடுத்தும் வகையில் பெண்களின் உருவங்களை அட்டைப்படங்களாகத் தாங்கி வெளிவந்தன. பெரும்பாலும் சினிமாப்பகுதிகள் இடம்பெற்ற இவற்றில் பெண்களின் கவர்ச்சிகரமான புகைப்படங்கள் இடம் பெற்றன. 1991ம் ஆண்டு குங்குமம் பத்திரிகை 'கிளு கிளு' என்ற இலவச இணைப்பை வழங்கியபோது பல்வேறு பெண்கள் அமைப்பினரும் ஜனநாயக மாதர் சங்கத்துடன் இணைந்து எதிர்ப்பு தெரிவித்தார்கள்.[83]

### விளம்பரங்கள்

விளம்பரங்கள் அச்சில் வெளிவந்து செய்தித்தாள்கள், வாரப்பத்திரிகைகள் ஆக்கிரமித்தவை ஒருவகைப்படும். தொலைக்காட்சி நிகழ்ச்சிகளின் இடையில்

83. Economic and Political Weekly, 26 October 1991.

ஒளிபரப்பப்படும் விளம்பரங்கள் இரண்டவாது வகையாகும். இவற்றில் முதல் வகையைவிட இரண்டாம் வகை அதிகமாக மக்களை கவர்ந்தது. பின்னணி இசை மற்றும் வசனங்களால் உருவாக்கப்பட்ட இந்த விளம்பரங்கள் மேற்கூறிய விளம்பரங்களில் பெரும்பாலும் பெண்களை இழிவுபடுத்துவதாகவே இருந்தன. பெண்கள் உபயோகிக்காத பொருட்களைக்கூட அவர்களைப் பயன்படுத்தி விளம்பரம் செய்தார்கள். பெண்ணின் இடம் சமையலறைதான் என்று வற்புறுத்தும் வகையில் "இதெல்லாம் பொம்பளைங்க சமாச்சாரம்" என்று வற்புறுத்தி சொன்னது இதயம் நல்லெண்ணெய் விளம்பரம்.[84] நகை மற்றும் புடவை விளம்பரங்கள் நுகர்வு கலாச்சாரத்தை தூண்டிவிட்டு பெண்களின் ஆர்வத்தை வரையறைச் செய்தன.

பொதுவாகவே நமது சமூகத்தில் பெண் குழந்தையின் பிறப்பு வரவேற்கப்படுவது இல்லை. சென்னை தாய்–சேய் நலமருத்துவமனையில் பிறந்த குழந்தை ஆணா பெண்ணா என்பதை வெளியில் வந்து உறவினர்களுக்கு மருத்துவமனை சிப்பந்திகள் அறிவிப்பார்கள். ஆண் குழந்தை என்றால் அந்த சிப்பந்திகளுக்கு வெகுமானமாக பத்து ரூபாய் தரப்படும். பெண் குழந்தை என்றால் வெறும் ஐந்து ரூபாய் மட்டுமே தரப்படும்.[85] இத்தகைய சூழல் பெண்ணின் இரண்டாம்தர நிலைகுறித்து நமக்கு தெளிவாக உணர்த்துகிறது. விளம்பரங்களும் இந்தச் சூழலை பயன்படுத்தி ஆதாயம் காண முயன்றபோது அவற்றுக்கெதிராக நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று ஜனநாயக மாதர் சங்கம் முடிவு செய்தது.

மீடியாக் குழுவின் சார்பில் மேற்கூறிய விளம்பரங்களை தடைசெய்யக் கோரி தொலைக்காட்சி நிலையத்துக்கு கடிதம் எழுதுவது, விளம்பர நிறுவனங்களை தொடர்பு கொண்டு வலியுறுத்துவது போன்ற பணிகள் மேற்கொள்ளப்பட்டன. மாதர் சங்கத்தின் அறிவுறுத்தலுக்குப் பிறகு மேற்கூறிய விளம்பரங்கள் சில மாற்றம் கண்டன.

தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் குறிப்பாக எண்பதுகளில் நாடகங்கள் விரும்பிப் பார்க்கப்பட்டன. இவற்றில் ஆண் கதாபாத்திரங்கள் நாற்காலியில்

---

84. மகளிர் சிந்தனை, ஜூலை 1988.
85. இலட்சியப் பெண், அக்டோபர் 1985.

உட்காா்ந்திருக்க பெண் கதாபாத்திரங்கள் நின்றுகொண்டே வசனம் பேசுவாா்கள். குடும்பத்துக்குள் ஆடம்பரச் செலவுகள் செய்வது சூழ்ச்சிகள் செய்வது போன்ற பெண் கதாபாத்திரங்களும் தியாகம் செய்யும் கதாபாத்திரங்களும் ஒருசேர படைக்கப்பட்டன. 'தாயா தாரமா', 'பெண்கள் வேலைக்கு போவது அவசியமா அவசியமில்லையா' போன்ற தலைப்புகளில் பட்டிமன்றங்கள் நடத்தப்பட்டு பெண்களுக்கு எதிரான கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன. மீடியாக்குழு தொலைக்காட்சி நிலையத்துக்கு கடிதங்கள் எழுதி தங்கள் கண்டனத்தை தொடா்ந்து தெரிவித்தாா்கள்.

## பள்ளிப் பாட நூல்களில் பால் வேறுபாடு

பால் வேறுபாடு என்பது ஊடகங்களில் மட்டுமல்ல ; பள்ளிப் பாட நூல்களிலும் இருப்பதாக சமூகவியலாா் குற்றம் சாட்டினாா்கள். அன்னைத் தெரசா பல்கலைக் கழகம் பாட நூல்களில் பால் வேறுபாடு குறித்து ஆய்வு நடத்தி கருத்துப் பட்டறை ஒன்றையும் ஏற்பாடு செய்தது. அதில் ஜனநாயக மாதா் சங்க அங்கத்தினா்களும் கலந்துகொண்டு ஆலோசனை வழங்கினாா்கள்.

பால் வேறுபாடு பற்றி கீழ்கண்டவாறு ஆய்வு செய்யப்பட்டது. 1975ம் ஆண்டில் நடைபெற்ற தேசியகருத்தரங்கின் பரிந்துரைகளின்படி பாட நூல்களில் இருபாலருக்கும் சமவாய்ப்புகளும், சமஅந்தஸ்தும் கொடுக்கப்பட்டுள்ளதா என்று ஒன்று முதல் பத்தாம் வகுப்புவரை கொடுக்கப்பட்டுள்ள அனைத்து பாட புத்தகங்களும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. பாடங்களில் ஆண்களை பல துறைகளில் சிறந்தவா்களாகவும், பொறியாளா்களாகவும் சித்தாிக்கின்றனா். ஆனால் பெண்கள் பலவற்றில் சிறந்து விளங்கினாலும் ஒரு குடும்பத்தலைவியாகவே சித்தாிக்கப்படுகிறாா்கள். தவிர ஆசிாியைகளாகவும், நா்சுகளாகவும் மட்டுமே வா்ணிக்கப்படுகிறாா்கள்.

பாடத் திட்டங்களில், வாழ்க்கைக் குறிப்புகளைப் பொருத்தவரை மூன்று நிலை பாடத் திட்டங்களையும் ஒப்பிட்டு ஆராயும்போது இருபாலருக்கும் உள்ள இடைவெளி அதிகம். பல துறைகளிலுள்ள திறமை படைத்த அறிவு கூா்மையுடைய பெண்களின் வாழ்க்கைக் குறிப்புகள் வெளிவரவில்லை. மைத்ரேயி, காா்கி,

லோபமுத்ரா போன்ற பெண்களின் பெயர்கள்கூட இன்று பலருக்கும் தெரியாது. இதேபோல பாடத்தலைப்புகளை எடுத்துப் பார்த்தாலும் பால்வேறுபாடு தொடர்ந்து காணப்படுகிறது.

சித்திரங்களைப் பொருத்தவரை பெண்கள் இரண்டாம்தர குடிமக்களாகவே பெரும்பாலும் காண்பிக்கப்படுகின்றனர். குடும்பம் பற்றிய சித்திரமாக இருப்பின் பெண்ணை வீட்டு வேலை செய்வது போலவும் ஆண் நாற்காலியில் உட்கார்ந்து பேப்பர் படிப்பது போலவும், மகனை விளையாடுவது போலவும், மகளை தாய்க்கு உதவுவது போலவும் சித்தரிக்கப்பட்டுள்ளது.[86]

விளையாட்டுத் துறையை எடுத்துக் கொண்டால், சிறுமிகளை தொன்றுதொட்டு வரும் விளையாட்டுகளான பாண்டி விளையாட்டு, கயிறு தாண்டுதல் போன்றவற்றில் ஈடுபட்டுள்ளதாக காட்டுகின்றனர். ஆனால் சிறுவர்கள் கிரிக்கெட், ஹாக்கி, டென்னிஸ் போன்ற விளையாட்டுகளில் பங்கேற்பதாக காட்டப்பட்டுள்ளனர். அறிவியல் பரிசோதனைகளை பெரும்பாலும் சிறுவர்கள் செய்ய, சிறுமியர் அதை நோக்குவதுபோல காண்பிப்பது, விஞ்ஞானம் ஏதோ ஆண்களுக்கு மட்டுமென்பது போன்ற கருத்தை வலியுறுத்துவதாகும்.

தற்போது பெண்களுக்கு இந்த சமுதாயத்தில் நிலவும் அந்தஸ்தையே இந்தப் பாடப்புத்தகங்கள் எடுத்துக் காட்டுகின்றன. பட்டறையில் சில ஆலோசனைகளும் வழங்கப்பட்டன.

"பெண்கள், சிறுமிகள் பிறரை சார்ந்து இருப்பதாக உள்ள சம்பவங்கள் நீக்கப்பட வேண்டும். ஒவ்வொருவரின் திறமையும், உரிமையும் பாடங்களில் பிரதிபலிக்க வேண்டும். உதாரணமாக விளையாட்டு பற்றிய பாடத்தில் பி.டி.உஷாவை பற்றிய குறிப்புகள், சாதனைகளைப் பற்றிய பாடத்தில் இமயமலை சிகரத்தை அடைந்த பச்சேந்திரிபால் பற்றிய கட்டுரைகள் வருவது உபயோகமாக இருக்கும். பெண்கள் சமூகத்தின் ஒரு அங்கமாக கருதப்பட வேண்டும்.

86. மகளிர் சிந்தனை, மே 1988.

உதாரணமாக சரித்திர பாடத்தில் ஜான்சி ராணியை தவிர வேறு பெண்ணைப் பற்றி இல்லை. விடுதலைப் போராட்டத்தில் பங்கேற்றோரின் பேட்டிகள் இருக்கலாம்.

அனைத்துக்கும் மேலாக அந்தந்த பாடத்தை நடத்தும்போது ஆசிரியர்கள் தற்போதுள்ள நிலையை விளக்கினால் மட்டும் போதாது. கட்டுரைக்கும் செய்யுளுக்கும் அர்த்தம் சொன்னால் மட்டும் போதாது. மாறாக அந்த கருத்துக்கள் சொல்லப்பட்ட காலத்தில் ஆண்–பெண் அந்தஸ்து எப்படி இருந்தது, எப்படி மாற்றம் வரவேண்டும் என்பது பற்றிய கருத்துக்களை சமுதாய உணர்வுடன் ஆரம்பப்பள்ளியிலிருந்து, பல்கலைக்கழக படிப்புவரை எடுத்துச்சொல்வது அவசியம்[87] என்று ஜனநாயக மாதர் சங்கம் வலியுறுத்தியது.

கடந்த மூன்று ஆண்டுகளாக ஊடகத்தின் கண்காணிப்பு பணிகள் சரிவர நடக்கவில்லை என 2011ல் மாதர் சங்க மாநில மாநாட்டின் அறிக்கை தெரிவிக்கிறது. இதற்கான காரணங்களையும் ஆராய வேண்டியிருக்கிறது. “உலக மயமாதலின் காரணமாக பன்னாட்டு நிறுவனங்கள் ஊடகங்களை ஆக்கிரமித்தன. வர்த்தகம் ஒன்றையே நோக்கமாகக் கொண்டு நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன. தொலைக்காட்சிகளில் சேனலகளின் எண்ணிக்கை அதிகரித்தது. இந்த நிலையில் இவற்றைக் கண்காணிப்பதும் பதிவு செய்வதும் மாதர் சங்கத்தின் மற்ற பணிகளுக்கிடையில் மிகப்பெரிய சவாலாக இருக்கிறது” என்று பாலபாரதியின் (எம்.எல்,ஏ) கூற்றை ஒரு முக்கிய காரணமாக கருதலாம்.[88]

## அழகிப் போட்டி

பெண் என்றால் அழகு ; ஆண் என்றால் வலிமை, வீரம் என்று பண்டைய காலத்திலிருந்து நிலவிவரும் பாகுபாடு பெண்ணின் லட்சியங்களுக்கு அழகையே எல்லையாக்கிவிட்டது. தன்னைப் பிறருக்காக அழகுபடுத்திக் கொள்வதில் பல பெண்கள் தங்கள் நேரம், கவனம் முழுமையும் செலவழிக்கிறார்கள். இதனால் தங்கள் ஆற்றலையும் பலவிதமான ஈடுபாடுகளையும் வளர்த்துக் கொண்டு முழுமையான மனுஷியாக வாழாமல் அழகுப் பதுமைகளாகவும், அலங்காரப் பொருட்களாகவுமே இருந்து விடுகின்றனர்.

---

87. மகளிர் சிந்தனை, மே 1988.
88. நேர்காணல் : *உ.வாசுகி,* 29 ஜனவரி 2013.

மேற்கத்திய நாடுகளில் இந்நூற்றாண்டின் துவக்கத்தில் அழகுப் போட்டிகள் வர்த்தகப் பின்னணியில் விற்பனை விளம்பரமாகத் தோன்றின. சரக்கு விற்பனைப் போட்டியில் பெண்ணும் சரக்கானாள்.

அழகு செய்து கொள்வதோ, அழகை ரசிப்பதோ தவறு என்பதல்ல மாதர் இயக்க வாதம். அழகிகள் போட்டியைத் தனியாகப் பிரித்து பார்க்காமல், இன்றைய வணிகமயமாக்கப்பட்ட சமூகப்பின்னணியில் பரிசீலித்து இரு முக்கிய ஆரோக்கியமல்லாத போக்குகளை தெளிவுபடுத்தியது ஜனநாயக மாதர் சங்கம். ஒன்று அழகு சம்பந்தப்பட்ட பல விஷயங்கள் பெரும்வர்த்தகத்தின் உடும்புப் பிடியில் சிக்கிக் கொண்டுள்ளது என்பது. இது உலகின் அரசியல், பொருளியல் ஆதிக்க சக்திகளின் நலனுக்கு உகந்ததாகவே உள்ளது. மற்றொன்று அழகென்பது ஆராதனைக்குரிய துதிபாட வேண்டிய ஒரு சடங்கு என்ற போக்கு.[89]

இந்தியாவைப் போன்ற நிலப்பிரபுத்துவ, பழைய மரபுகள் வேரறுக்கப்படாத நாடுகளில், இவற்றிலிருந்து பெண்ணின் உணர்வுகளையும் சமூக நோக்கையும் விடுவிப்பதற்கான மிகக் கடினமான பணி ஒருபுறம் நடந்து கொண்டிருக்கிறது. மறுபுறம் பழைமை, நவநாகரிகத் தோற்றத்தோடு புத்துயிர் பெறுவதற்கான நடவடிக்கைகள் வேகமாய், சமூகத்தால் பலம் வாய்ந்த சக்திகளின் ஆசியோடு நடந்து கொண்டிருக்கிறது. இது மிகக் கவலையளிப்பதாக உள்ளது. மிஸ் யுனிவர்ஸ் போன்ற அழகிப் போட்டிகளைத் தொடர்ந்து தமிழகத்தின் நகரங்களில் மிஸ் சென்னை, மிஸ் கோவை போன்ற அழகிப் போட்டிகளும் நடைபெற்றன. ஜனநாயக மாதர் சங்கம் இந்த அழகிப் போட்டிகளுக்குப் பின்னால் இருக்கும் வர்த்தக நோக்கத்தைத் தெளிவுபடுத்தி பெண்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்தியது.

## இளம் பெண்களை கேலி, கிண்டல் செய்தல்

ஈவ் என்பது உலகின் முதல் பெண் ஏவாளைக் குறிக்கிறது. டீஸிங் என்பது பரிகாசம் செய்தல். ஆண்கள் பலவகைளில் பெண்களை மன வேதனைக்குட்பட வைக்கும் செயல்களைக் குறிக்கிறது. இக்கொடுமை பெண்களை உற்றுப்பார்ப்பது (60–1), பெண்களைப் பார்த்து கண் அடித்தல் (77–1), பெண்களை விமர்சனம்

89. மைதிலி சிவராமன், *முன்குறித்தது,* ப.66.

செய்தல் (811), பெண்களைச்சுட்டிக்காட்டி பேசுதல் (691) முன்பின் அறிமுகமற்ற பெண்களிடம் தொலைபேசியில் தொடர்பு கொண்டு பேசித் தொந்தரவு கொடுத்தல் (661), பெண்களைப் பலாத்காரம் செய்தல் (701), பெண்களின் மேலாடை அல்லது துப்பட்டாவை இழுத்தல் என்ற பல வகைகளில் நடக்கிறது.[90]

1993–94ல் சென்னைப் பல்கலைக்கழக குற்றவியல்துறை மாணவர்கள் செய்த ஆய்வில் பாலியல் துன்புறுத்தலுக்கு பெண்கள் பரவலாக ஆளாவது தெரியவந்தது. சுமார் நாற்பது சதம் பெண்கள் வேலைதளத்தில் ஆண்களால் பாலியல் துன்புறுத்தலுக்கு ஆளானதாக சொல்லியிருந்தார்கள். சுமார் பதிமூன்று சதவிகித பெண்கள் ஆண்கள் தங்களை பலாத்காரம் செய்ய முயற்சித்ததாக சொல்லியிருந்தார்கள்.

கருத்தருங்கு ஒன்றில் பேசிய குற்றவியல்துறை பேராசிரியர் கு.சொக்கலிங்கம், 1991லிருந்து இந்திய அரசு பாலினக் குற்றங்களுக்கு அதிகமான புள்ளி விவரம் அளிப்பது, இக்குற்றம் பெருகி வருவதற்கு அடையாளம் என்றார். அதே சமயம், 1995ல் பெண்களுக்கு இழைக்கப்பட்ட குற்றங்கள் ஒருலட்சத்து நான்காயிரத்து அறுநூற்று மூன்று என்றும் இதில் பாலியல் துன்புறுத்தல்கள் நான்காயிரத்து எழுநூற்று ஐம்பத்தாறு மட்டுமே என்றும் அரசு புள்ளிவிவரங்கள் கூறுவது சரியல்ல என்பதற்கு அவர் கொடுத்த விளக்கம் சென்னையில் மட்டுமே ஒரே நாளன்று ஈவ்–டீஸிங்கிற்காக நூற்று இருபத்தாறு நபர்கள் மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ளது என்பதே.[91]

ஈவ்–டீஸிங் போன்ற பாலியல் துன்புறுத்தல்கள் ஒரு சூன்யத்தில் நடைபெறுவதில்லை. குறிப்பிட்ட அரசியல், சமூக பொருளாதார சூழலில் நடைபெறுகின்றன. இதன்படி நம் சமூகத்தின் தன்மையை வரையறுத்தால் இது ஓர் ஆணாதிக்க, வர்க்க, சாதிய அமைப்பு. எந்த ஒரு நிகழ்வையும் அதன் பின்புலத்தின் அடிப்படையில் பரிசீலிப்பது, அதை முழுமையாகப் புரிந்து கொள்ள அவசியமாகிறது. நமது சமூகத்தில், சமூக பொருளாதார வேற்றுமைகளைக் கடந்து பெண்கள்

---

90. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.464.
91. தினமணி, 20 செப்டம்பர் 1998.

அனைவருமே பாலியல் கொடுமைகளுக்கு ஆளாகும்போது, இதனால் மிகவும் பாதிக்கப்படுபவர்கள் ஏழைகள், தலித்துகள், பழங்குடியினர் ஆகியோரே.

"இதில் ஈடுபடுபவர்களை பொருத்தவரை இது வெறும் வேடிக்கையாக இருக்கலாம். ஆனால் இந்த வேடிக்கையின் வேர்களை ஆணாதிக்கத்தில் இனம் காணலாம். ஆகவே ஈவ்–டீஸிங்கை பாலியல் இம்சை அல்லது பாலியல் வன்முறை என்றழைப்பதே சரியானது".[92]

1998ம் ஆண்டு ஜூலை 18ம் நாள் சென்னையைச் சேர்ந்த பெண்கள் கல்லூரி மாணவி சரிகாஷா ஈவ்–டீஸிங் கொடுமைக்கு பலியானாள். கல்லூரி முடிந்து தோழிகளுடன் வெளியே வந்து நடைபாதையில் சென்று கொண்டிருந்த போது, இளைஞர்கள் பலரை சுமந்து வந்த ஆட்டோ ஒன்று நடைபாதையை நெருங்கி வந்தது. உள்ளேயிருந்தவர்கள் பெண்கள் மீது தண்ணீர் தெளிக்க முயன்றனர். திடீரென்று எதிரே வந்து கொண்டிருந்த வாகனத்தோடு மோதுவதைத் தவிர்க்க ஆட்டோ வேகமாகத் திரும்பவே, மீட்டர் கம்பி மேல் உட்கார்ந்திருந்த இளைஞன் வெளியே தள்ளப்பட்டு நடைபாதையில் சரிகாவின் மேல் விழுந்தான். தலையில் பலத்த காயம் ஏற்பட்டு சரிகா சுயநினைவை இழந்தாள். இரண்டு நாட்கள் கழித்து மரணமடைந்தாள்.[93]

இந்த நிகழ்ச்சியைத் தொடர்ந்து பத்திரிகைகளிலும் தொலைக் காட்சியிலும் ஈவ்–டீஸிங் பற்றிய விவாதம் நடைபெற்றது. இதன் பின்னணியில் அரசு ஒரு கடுமையான அவசரப்பிரகடனம் கொண்டு வந்தது. அதன்படி ஈவ்–டீஸிங் குற்றவாளிகளுக்கு ஓராண்டு கடுங்காவல் தண்டனையும் பத்தாயிரம் ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. ஜனநாயக மாதர் சங்கமும் சென்னையில் ஈவ்–டீஸிங் எதிர்ப்பு கருத்தரங்கை நடத்தியது. இதில் கல்வியாளர்கள், பத்திரிகையாளர்கள், வழக்கறிஞர்கள், திரைப்படத் தணிக்கை அதிகாரிகள், மாணவப் பேரவைத் தலைவர்கள் ஆகியோர் பங்கேற்றனர்.[94]

---

92. மைதிலி சிவராமன், *சமூகம்–ஒரு மறுபார்வை*, ப.60.
93. THE HINDU, 19 July 1998.
94. தீக்கதிர், 29 செப்டமர் 1998.

சரிகாஷா இறந்தவுடன் தமிழக அரசு பல நடவடிக்கைகளை எடுத்தது. மாற்று உடையில் பெண்காவல்காரா் என்று அழைக்கப்படும் பல பெண் காவலா்களை கல்லூரி, பள்ளிகளின் வாசல்களில் நிறுத்தி கேலி செய்யும் நபா்களைக் கண்காணிக்கச் செய்தது. 1998ம் ஆண்டு தமிழ்நாடு அரசு கேலி செய்தல் தடைச்சட்டம் என்ற ஒரு தனிச்சட்டத்தை இயற்றியது. அதன்படி இதில் ஈடுபடுபவா்களுக்கு பத்தாயிரம் ரூபாய் வரை அபராதம் விதிக்கப்பட்டது.[95]

சென்னையில் தனியாா் கம்பெனி ஒன்றில் வேலை பாா்த்து வந்த துா்கா என்ற பெண் பணிநேரம் முடிந்து தோழிகளுடன் வீடு திரும்பிக் கொண்டிருந்தாா். அப்போது சில இளைஞா்கள் அவா்களை கிண்டல் செய்தாா்கள். துா்கா அவா்களைக் கண்டித்தாா். அவா்கள் துா்காவின் தலை முடியைப் பிடித்து இழுத்தனா். கீழே விழுந்த துா்கா தலையில் பலத்த அடிபட்டு இறந்தாா்.[96]

இந்தச் சம்பவத்தை கண்டித்து ஜனநாயக மாதா் சங்கம் கண்டனக் கூட்டம் நடத்தியது. அதன் பிறகே குற்றவாளிகள் கைது செய்யப்பட்டு அவா்கள் மீது வழக்கும் பதிவு செய்யப்பட்டது.

குமரி மாவட்டத்தில் சபிதா, சரிதா என்ற இரண்டு இளம் பெண்கள் மீது ஆசிட் வீசப்பட்டது. திருச்சி மாவட்டத்தில் ஈவ்–டீஸிங்கால் பாதிக்கப்பட்ட பெண் தீக்குளித்து இறந்தாள். தேனீ மாவட்டத்திலும் இதே பிரச்சனையால் ஒரு பெண் தற்கொலை செய்து கொண்டாள். மேற்கூறிய சம்பங்களை பதிவுசெய்து பெண் சீண்டல் எதிா்ப்பு மாநாடு ஒன்றை ஜனநாயக மாதா் சங்கம் நடத்தியது. இதற்கான காரணங்கள் பற்றிய கருத்துக்கணிப்பு ஒன்றையும் நடத்தியது.[97]

ஈவ்–டீஸிங் பிரச்சனையைக் கட்டுப்படுத்தவும் தடுக்கவும் கீழ்க்கண்ட ஆலோசனைகளை அனைத்திந்திய ஜனநாயக மாதா் சங்கம் முன்வைத்தது.

95. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.465.
96. தினத்தந்தி, 15 மாா்ச் 1999.
97. தீக்கதிா், 20 ஜூலை 2003.

- ❖ பல துறைகளைச் சேர்ந்த கருத்தாளர்கள் கொண்ட ஒரு குழுவை அமைத்து, ஈவ்–டீஸிங் கொடுமையைத் தடுக்கின்ற நீண்ட காலத் தீர்வு குறித்த பரிந்துரைகளை மூன்று மாத காலத்துக்குள் வழங்க அரசு ஏற்பாடு செய்ய வேண்டும்

- ❖ ஆரம்பக் கல்வி துவங்கி, இறுதி வரை ஆண்–பெண் இருபாலரும் சேர்ந்து படிக்கின்ற கல்வி நிலையங்களைத் தொடங்கவேண்டும். இருக்கின்ற தனித்தனி கல்வி நிலையங்கள் படிப்படியாக மாற்றப்பட வேண்டும்

- ❖ உயர்நிலைப் பள்ளி மட்டத்திலிருந்தே பாலியல் கல்வியை பாடத்திட்டமாக்க வேண்டும்

- ❖ தொடர்பு சாதன சித்தரிப்புக்களை விமர்சன ரீதியாகப் பார்க்க வைக்கிற பாடத்திட்டமும் உருவாக்கப்பட வேண்டும்

- ❖ பாலின சமத்துவக் கோட்பாடுகளை உள்ளடக்கிய பார்வையை, துவக்கக் கல்வியிலிருந்தே அளிக்க வேண்டும்

- ❖ பெண்கள் நிலை குறித்த விவரங்களை மேல்நிலை வகுப்புகளில் கட்டாயப் பாடமாக்க வேண்டும்

- ❖ பள்ளி, கல்லூரிகளில், மாணவ–மாணவியரின் தனிநபர், அந்தரங்க, உளவியல் விஷயங்களை மனம் விட்டுப் பேசவைத்து, முறையாக வழிகாட்ட தகுதிவாய்ந்த ஆலோசகர்களை நியமிக்கவேண்டும். ஏற்கனவே சில கல்வி நிலையங்களில் இருப்பது விரிவாக்கப்பட வேண்டும்

- ❖ சினிமா தணிக்கை விதிகளில் ஒன்றான "பெண்ணைத் தரம் தாழ்த்தி சித்தரிக்கக்கூடாது" என்பதில் "ஈவ்–டீஸிங் உள்ளிட்ட" என்பதும் இணைக்கப்படவேண்டும். இருக்கும் விதிகள் முறையாக அமல்படுத்தப்பட வேண்டும்

- விளம்பரங்கள், பத்திரிகை செய்திகள், கதைகள், துணுக்குகள் போன்றவை, பாலின சமத்துவப் பார்வையோடு வரவும், ஆபாசத் தன்மையற்றும் இருக்கவேண்டும். அவற்றுக்கான விதிமுறைகள் உருவாக்கப்பட வேண்டும். அவை நடைமுறைப்படுத்தப்பட வேண்டும்

- அந்நியத் தொலைக்காட்சி அலைவரிசைகள் மற்றும் உள்நாட்டுத் தனியார் அலைவரிசைகளின் வரைமுறையற்ற ஒளிபரப்பை சில அடிப்படையான தணிக்கை விதிகளுக்கு உட்படுத்த வேண்டும்

- வட்டார அளவில் இளைஞர் குழுக்கள் அமைக்கப்பட்டு ஆரோக்கியமான பொழுதுபோக்கு, கலாச்சார நடவடிக்கைகளில் இருபாலரும் ஈடுபட வாய்ப்பு உருவாக்கப்பட வேண்டும்

- விளையாட்டுக் குழுக்கள் அமைக்கப்பட்டு பெண்களுக்கு ஆர்வத்தை ஏற்படுத்தி அதில் கலந்துகொள்ள ஊக்கப்படுத்த வேண்டும்

- ஈவ்–டீஸிங் நடக்கும் பட்சத்தில் அதைத் தட்டிக்கேட்க சுற்றியிருப்போர் முன்வர வேண்டும்[98]

**பாலியல் வன்புணர்ச்சி**

ஒரு பெண்ணின் உடல், மனது, கண்ணியத்தோடு வாழ்வதற்கான மனித உரிமைகள் ஆகியவற்றின் மீது தொடுக்கப்படும் வன்முறைத் தாக்குதலே வன்புணர்ச்சி (Rape). ஆக்கிரமிப்பு உணர்வு, வன்முறை, மிரட்டல் போன்ற உணர்வுகளின் வெளிப்பாடான இச்செயல் ஒரு பெண்ணை சிறுமைப்படுத்துகிறது. போரில் ஆண்கள் கொல்லப்படுவதும், பெண்கள் பலாத்காரம் செய்யப்படுவதும் பண்டைய காலத்திலிருந்து இன்றுவரை தொடரும் நடைமுறை. மதக்கலவரங்களிலும் விரோதத்தை தீர்த்துக் கொள்ள பாலியல் பலாத்காரம் பயன்படுகிறது. தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர், கீழ்மட்ட உழைப்பாளர்கள்

---

98. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.68.

ஆகியோரைச் சார்ந்த பெண்கள் மீதான பாலியல் தாக்குதலில் உயர் ஆதிக்கவர்க்க, உயர்சாதி வெறியின் வெளிப்பாட்டைக் காணமுடிகிறது.

மனிதர்களுக்கு இழைக்கப்படும் அனைத்துக் கொடுமைகளிலும் மிகக் குறைவாக புகார்செய்யப்படுவது பலாத்காரம் என்று சொல்லப்படுகிறது. இப்படிப்பதிவான வழக்குகளில் குற்றவாளிகள் தண்டிக்கப்படுவது மிகவும் அரிது. மூன்று சதவிகித குற்றவாளிகள் மட்டுமே தண்டிக்கப்படுகின்றனர்.

1972ம் ஆண்டு சுமார் பதினாறு வயதுடைய தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த கூலிப்பெண் மதுரா தான் விரும்பிய இளைஞனோடு வீட்டைவிட்டு வெளியேறிய போது 'மைனர் பெண்' என்று தடுக்கப்பட்டு காவல் நிலையத்துக்கு கொண்டு செல்லப்பட்டாள். அங்கு காவலர்களால் பாலியல் வன்கொடுமைக்கு ஆளானாள். மும்பை உயர்நீதிமன்றம் மதுராவுக்கு சாதகமாக தீர்ப்பளித்தது. ஆனால் உச்சநீதிமன்றம் மதுராவுக்கு கொடுமை இழைத்த காவலர்களை விடுதலை செய்தது. இதற்கு கொடுக்கப்பட்ட காரணங்கள் மதுரா உடலுறவை எதிர்த்தாள் என்பதற்கு ஆதாரமாக அவளுடைய உடலில் எந்தக் காயமும் இல்லை. ஆகவே அவள் இதற்கு இசைந்திருக்கிறாள் என்று பொருள். சம்பவம் நடந்தபோது அவள் கன்னிப் பெண் அல்ல என்பது அவள் நடத்தை கெட்டவள் என்பதைக் காட்டுகிறது.

மேற்கூறிய தீர்ப்புக்கு மாதர் இயக்கங்கள் கடும் எதிர்ப்பு தெரிவித்தன. இதனைத் தொடர்ந்து கற்பழிப்புக்கு ஆளான பெண்ணை நீதிமன்றத்தில் குறுக்கு விசாரணை செய்யும் போது, கற்பழிப்பு குற்றம் சாட்டப்பட்டவனைத் தவிர மற்றவர்களுடன் அவளுக்கு இருந்த உடலுறவைப் பற்றிய கேள்விகளை எழுப்புவதை தடைசெய்ய வேண்டுமென்ற கோரிக்கையை மாதர் அமைப்புகள் முன்வைத்தனர். ஆனால் அந்தக்கோரிக்கை உடனடியாக ஏற்கப்படவில்லை. பத்தாண்டுகளுக்குப் பிறகு ஹரியானா மாநிலம் பவானிகேராவைச் சேர்ந்த சுமன்ராணி என்னும் பதினைந்து வயதுப்பெண் தான் விரும்பியவனோடு வீட்டைவிட்டு வெளியே வந்த நிலையில் காவல்துறையினரிடம் அகப்பட்டுக் கொண்டாள். இருகாவலர்களால் கற்பழிக்கப்பட்டாள். இக்குற்றத்துக்கு ஹரியானா

உயர்நீதிமன்றம் காவலர்களுக்கு பத்து ஆண்டு கடுங்காவல் தண்டனை விதித்து தீர்ப்பளித்தது. இவ்வழக்கு உச்சநீதிமன்றத்துக்கு சென்றபோது தண்டனை ஐந்து ஆண்டுகளாக குறைக்கப்பட்டது.[99]

சுமன்ராணி தீர்ப்பு ஜனநாயகவாதிகளிடம் கடும் அதிருப்தியை ஏற்படுத்தியது. இந்தத் தீர்ப்பை உச்சநீதிமன்றம் மறுபரிசீலனை செய்யவேண்டும் எனக்கோரி உச்சநீதிமன்ற தலைமை நீதிபதிக்கு பதினொரு மாதர் அமைப்புகள் இணைந்து கடிதம் எழுதினர்.

"தண்டனை, குற்றத்தின் சட்ட வியாக்கியானத்தைப் பொருத்ததா அல்லது குற்றத்துக்கு ஆளான பெண்ணின் ஒழுக்கத்தைப் பொருத்ததா. நீதிமன்றப்பார்வையில் ஒழுக்கமான பெண்மட்டும்தான் பலாத்காரத்துக்கு உட்படுத்தப்படுபவளா. ஒழுக்கமற்றவள் எனக் கருத்தப்படும் பெண் பலாத்காரம் செய்யப்பட்டால் அது பலாத்காரம் அல்ல என்றப் பொருளா. அப்படியானால் பல ஆண்களோடு உறவுள்ள ஒரு பெண்ணுக்கு தன் கண்ணியத்தைப் பாதுகாத்துக்கொள்ள உரிமையில்லையா. மிக கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டிய பலாத்கார சம்பவங்களில் கடுமையான குற்றம், லேசான குற்றம் என்ற பெண்ணின் நடத்தையை வைத்து கிரேட் பிரிப்பது என்ன நியாயம்" போன்ற கேள்விகளும் எழுப்பப்பட்டன.[100]

பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகள் இந்திய நாடெங்கும் அதிகரித்துக் கொண்டே வருகிறது. தமிழ்நாடு அதற்கு விதிவிலக்கல்ல. அப்பிரச்சனைகளில் ஜனநாயக மாதர் சங்கம் தலையிட்டு பெண்களுக்கு நியாயம் கிடைக்கப் போராடி வருகிறது.

பாலியல் வன்புணர்ச்சிக்கு ஆளாகும் பெண்கள் சட்டப்பூர்வ நடவடிக்கைக்கு ஒவ்வொரு கட்டத்திலும் போராட நேருகிறது. மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட நிலையில் மருத்துவர்களின் சான்றிதழ் பெறுவது சவாலாக இருக்கிறது. காவல்துறையினரால் குற்றத்தைப் பதிவு செய்வதற்கு முன்பு விசாரணை என்ற

---

99. மகளிர் சிந்தனை, மார்ச் 1989.
100.மைதிலி சிவராமன், *பெண்ணுரிமை . . . .*, *முன்குறித்தது*, ப.20.

பெயரில் இழிவாக நடத்தப்படுகின்றனர். இவர்களை பாதிப்புக்கு ஆளாக்கியவர்கள் சமூக அந்தஸ்து படைத்தவர்களாகவோ அரசியல் செல்வாக்கு படைத்தவர்களாகவோ இருந்தால் காவல்துறையின் பரிவு இவர்களுக்குக் கிடைப்பதில்லை. இத்தனைக்கும் மேலாக நீதித்துறையின் அணுகுமுறையும் ஆணாதிக்கப் பார்வை கொண்டதாகவே இருக்கிறது.

கல்பனாசுமதி என்னும் ஆசிரியை தர்மபுரி மாவட்டத்தின் காவல்நிலையத்தில் இன்ஸ்பெக்டர், ரைட்டர், ஹெட் கான்ஸ்டபிள், கான்ஸ்டபிள் ஆகியோரால் பாலியல் வன்புணர்ச்சி செய்யப்பட்டார். இச்சம்பவம் குறித்து கிருஷ்ணகிரி கோர்ட்டில் வழக்குப்பதிவு செய்யப்பட்டது. மூன்று ஆண்டுகள் கடந்தும் நீதிமன்றத்தில் விசாரணை நடக்கவில்லை.

இவ்வழக்கு விசாரணையை காலதாமதப்படுத்தாமல் குறுகிய காலத்துக்குள் தீர்ப்பளிக்கக் கோரி சென்னை உயர்நீதிமன்ற தலைமை நீதிபதியை அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் கேட்டது.[101]

தென்னாற்காடு மாவட்டம் முத்தாண்டி குப்பம் வசந்தா 1994 மார்ச் மாதம் காவல்துறையைச் சேர்ந்த ஐந்து பேரால் பாலியல் பலாத்காரம் செய்து கொல்லப்பட்டார். அப்போதைய தமிழக முதல்வர் சட்டமன்றத்தில் வாக்குறுதி கொடுத்தும்கூட குற்றவாளிகள் கைது செய்யப்படவில்லை. இதை எதிர்த்து தமிழ்நாட்டில் ஒன்பது மையங்களில் பல்வேறு மறியல் போராட்டங்களை நடத்தியது ஜனநாயக மாதர் சங்கம்.[102]

சந்தனக்கட்டை வீரப்பனை தேடும் அதிரடிப்படையினரால் கோவை அருகே சின்னாம்பதி கிராமத்தில் பாப்பாத்தி, மயிலாள் என்ற இரு ஆதிவாசிப் பெண்கள் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டனர். சம்பவத்தை மறைக்க ஆளும்கட்சி எம்.எல்.ஏ., மாவட்ட ஆட்சி நிர்வாகம், உள்ளூர் நிலச்சுவான்தார்கள் ஆகியோர் பெரும் முயற்சி எடுத்தனர். மாதர் சங்கம் தலையிட்டு முறையான நீதி விசாரணை

101.மகளிர் சிந்தனை, மே 1992.

102.மாநாட்டு அறிக்கை, 8வது மாநில மாநாடு, அனைத்திந்திய ஜனநாயக மாதர்சங்கம், சென்னை, 21, 22, 23 ஆகஸ்ட் 1995.

நடத்த ஏற்பாடு செய்தது. பாதிக்கப்பட்ட பெண்களுக்கு உணவு, உடை, இருப்பிடம் ஏற்பாடு செய்து கொடுத்தது. அப்போது நீதிபதி. பானுமதி கமிஷன் அறிக்கை வெளியிடப்பட்டது. அதில் பாலியல் பலாத்காரமும், சித்தரவதையும் உண்மை எனக்கூறி பாப்பாத்தி, மயிலாள் இருவருக்கும் இரண்டு லட்சம் ரூபாய் உதவித்தொகை அளிக்க நீதிமன்றம் உத்திரவிட்டது.[103] அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் சார்பில் தொகைப் பெற்றுத்தரப்பட்டது. குற்றவாளிகளை தண்டிக்க முயற்சி எடுக்கப்பட்டது.

காமராசர் மாவட்டத்தைச் சேர்ந்த உமா ஆலங்குளம் போலீசாரால் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டார். அதைக் கண்டித்து அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் சார்பில் ஊர்வலமும் கண்டன ஆர்ப்பாட்டமும் நடத்தப்பட்டது. குற்றவாளிகளை கைது செய்யாமல், போராடிய பெண்களை கைதுசெய்தது அரசு. இதை எதிர்த்துப் போராடியது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். அவரது கணவரோடு இணைந்துவாழ தகுந்த ஏற்பாட்டையும் செய்து கொடுத்தது.

ராமேஸ்வரத்தில் முருகலட்சுமி, ரங்கம்மா என்ற இரு மீனவப் பெண்கள் பணையக்கைதிகளாக போலீசாரால் அழைத்துச் செல்லப்பட்டு பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டனர். இதனைக் கண்டித்து வலுவான போராட்டங்ளை அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் நடத்தியது. இதுகுறித்து அமைக்கப்பட்ட ஒரு நபர் கமிஷனில் உண்மைகளை கொண்டுவர அனைத்து உதவிகளையும் செய்தது.

சென்னையைச் சேர்ந்த பிரகாசமேரி என்ற பெண் போலீசாரால் பணையக் கைதியாக பிடிக்கப்பட்டார். பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டு உயிரோடு எரிக்கப்பட்டார். அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் இதர ஜனநாயக அமைப்புகளுடன் இணைந்து போராட்டங்களை நடத்தியது. முதல் தகவல்அறிக்கையில் 302 பிரிவின்படி கொலைக்குற்றம் பதிவு செய்திருந்தபோதும், குற்றவாளிகள் கைது செய்யப்படவில்லை. மனித உரிமைக் கமிஷனுக்கும், மகளிர் நலக் கமிஷனுக்கும் இச்சம்பவத்தை தெரியப்படுத்தியது ஜனநாயக மாதர் சங்கம்.[104]

103. மாநாட்டு அறிக்கை, *முன்குறித்தது.,*
104 . *மேலது.,*

சம்பவங்கள் நடைபெற்ற இடங்களில் நேரில் சென்று முழு விபரங்களையும் சேகரித்து பின்னர் போராட்டங்களையும் நடத்தியது.

புதுக்கோட்டையில் ஆசிரமம் நடத்தி வந்தார் பிரேமானந்தா என்ற போலிச்சாமியார். ஆசிரமத்திலிருந்த பெண்களை பலாத்காரம் செய்தார். இச்சம்பவத்தை வெளிக் கொண்டுவந்தது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். தமிழகம் முழுவதிலும் பத்திரிகைகளில் இச்செய்தி வெளியாயின. அவர்மீது வழக்குப்பதிவு செய்யப்பட்டது. பாதிக்கப்பட்ட பெண்களை பாதுகாப்பான இடங்களில் தங்கவைத்தது ஜனநாயக மாதர் சங்கம். 1994 டிசம்பர் 12ம் தேதி 'போலிச்சாமியார்களை புறக்கணியுங்கள்' என்ற போராட்டத்தையும் நடத்தியது.[105] வழக்கை உச்சநீதிமன்றத்துக்கு மாற்றக் கோரி பிரேமானந்தா சார்பில் மனு தாக்கல் செய்யப்பட்டது. மார்ச் 1996ல் அம்மனு நிராகரிக்கப்பட்டது. ஜாமீன்மனு தாக்கல்செய்யவும் திட்டமிடப்பட்டது. அவ்வாறு ஜாமீன்மனு தாக்கல்செய்தால் அவ்வழக்கில் மூன்றாவது தரப்பாக அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தை இணைக்க நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. அதனால் அம்மனு திரும்பப் பெறப்பட்டது. புதுக்கோட்டை நீதிமன்றத்தில் மீண்டும் பிரேமானந்தா சார்பில் மனு போடப்பட்டது. மனு தாக்கல் செய்வதை எதிர்த்து ஜனநாயக மாதர் சங்கம் சார்பில் சுமார் இருநூற்றைம்பது பெண்கள் போராட்டம் நடத்தினர். அதனால் அத்திட்டம் கைவிடப்பட்டது.[106]

மருத்துவப் பரிசோதனைக்காக பிரேமானந்தாவை திருச்சிக்கு கொண்டு சென்றபோதும் ஆர்ப்பாட்டம் நடத்தப்பட்டது. குற்றச்சாட்டுகள் நிரூபிக்கப்பட்டு தீர்ப்பு வழங்கப்பட்டது. 1997ம் வருடம் ஆகஸ்ட் 20ம் தேதி புதுகை மாவட்ட நீதிபதி.பானுமதி அவர்களால் தீர்ப்பு வழங்கப்பட்டது. பிரேமானந்தாவுக்கு இரட்டை ஆயுள் தண்டனை கொடுக்கப்பட்டது.[107]

பல ஆண்டுகளாக ஜனநாயக மாதர் சங்கம் வரதட்சணைக் கொடுமை, கொலை, பாலியல் பலாத்காரம், தம்பதியினரிடையே பிணக்கு போன்ற வழக்குகளை

105. மாநாட்டு அறிக்கை, *முன்குறித்தது*.,
106. மகளிர் சிந்தனை, மே 1996.
107. *மேலது*, அக்டோபர் 1997.

சந்தித்துவந்தாலும், பிரேமானந்தா ஆசிரம விவகாரத்தில் தீவிரமாக எடுத்துக் கொண்ட முயற்சியில் தமிழக மக்களின் குறிப்பாக பெண்களின் பரவலான கவனத்தைப் பெற்றதாக பத்திரிகைகள் பாராட்டின.[108]

“நியாயத்துக்காக போராடிய ஜனநாயக மாதர் சங்கத்துக்கு கிடைத்த வெற்றி இது. அபராதத்தோடு இரட்டை ஆயுள் தண்டனை வழங்கியது என்பது நம் சட்ட வரலாற்றிலேயே இதுதான் முதல்முறை” என்று கருத்து தெரிவித்தார் பாப்பா உமாநாத்.[109]

1992 ஜூன் 2ம் தேதி, சிதம்பரம் அண்ணாமலை நகர் காவல் நிலையத்தில் கைதியாக இருந்த தன் கணவருக்கு உணவு கொடுக்கச் சென்றபோது காவல்துறையினரின் பாலியல் பலாத்காரத்துக்கு ஆளானாள் பத்மினி என்ற பெண்.[110] கணவர் நந்தகோபால் அடித்துக் கொல்லப்பட்டார். ஜனநாயக மாதர் சங்கம் சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்க பத்மினிக்கு உதவியது. அதன்படி 1993ம் வருடம் மார்ச் மாதம் 18ம் தேதி முதல்கட்டத் தீர்ப்பு வழங்கப்பட்டது. குற்றவாளிகளான ஐந்து காவலாளிகள் கைது செய்யப்பட்டனர். நஷ்டஈடாக ஒரு லட்சம்ரூபாய் பத்மினிக்கு வழங்கப்பட்டது. செஷன்ஸ் கோர்ட்டில், கொலைக்குற்றம் சேர்க்கப்படாமல், கற்பழிப்புக் குற்றத்தைமட்டுமே குறிப்பிட்டு குற்றப்பத்திரிக்கை தாக்கல் செய்யப்பட்டது. இதை எதிர்த்து முழுமையான நியாயம் கிடைக்கச் சட்ட ரீதியான இயக்கத்தைத் தொடர்ந்தது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்.[111] தொடர்ந்து போராட்டங்களை நடத்தியதோடு மட்டுமல்லாமல் பத்மினிக்கு வேலையும் வாங்கிக் கொடுத்தது. மாதர் சங்கத்தைச் சேர்ந்த ஜான்சிராணி மற்றும் பாப்பா உமாநாத் இருவரும் பத்மினியை சந்தித்து ஆறுதல் கூறினர்.[112]

பத்மினி வழக்கின் தொடர்ச்சியாக அரசு பழனியப்பா கமிஷனை நியமித்தது. அக்கமிஷன் உண்மைகளை மறைத்தது. “பத்மினி நிர்வாணமாக்கப்பட்டது உண்மை

108. இந்தியா டுடே, 15 செப்டம்பர் 1997.
109. *மேலது*,
110. மகளிர் சிந்தனை, ஜூலை 1992.
111. *மேலது*, மே 1993.
112. *மேலது*, மே 1994.

ஆனால் பலாத்காரம் செய்யப்படவில்லை. கணவர் நந்தகோபால் சித்தரவதை செய்யப்பட்டார் ஆனால் கொல்லப்படவில்லை" எனக் கமிஷனின் அறிக்கைக் கூறியது.

கடலூர் செஷன்ஸ் கோர்ட்டில் மேற்கொண்டு விசாரணை நடைபெறாமல் இருக்கக் குற்றவாளிகள் உயர்நீதிமன்றத்தில் தடை உத்தரவை பெற்றிருந்தனர். அந்த உத்தரவை நீக்க அரசு எந்த முயற்சியும் செய்யவில்லை. தடை உத்தரவை நீக்க அரசு முயற்சி செய்ய வேண்டும் என தொடர்ந்து வலியுறுத்தியது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்.[113]

தேசிய மனித உரிமைகள் ஆணையம் 1993ம் ஆண்டு அக்டோபரில் அமைக்கப்பட்டது. மாவட்ட அளவில் நிர்வகிக்கும் சட்டரீதியான நிறுவனங்களை காவலில் ஏற்படும் மரணங்கள் மற்றும் பாலியல் பலாத்காரம் மீதான தகவல் அறிக்கைகளை இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் அனுப்பிட ஆணையம் கேட்டுக்கொண்டது. இதன் பின்னர், "மாவட்ட அளவிலான சட்டம் ஒழுங்கை நிர்வகிக்கும் நிறுவன அறிக்கைகள் சாதாரணமாக ஆணையத்துக்கு வருகின்றன. போலீஸ் காவலிலும் சிறைச்சாலைகளிலும் மரணங்கள் அதிகரித்து வருவது கண்டு ஆணையம் ஆழ்ந்தகவலை கொண்டுள்ளது" என நீதிபதி ரங்கநாத் மிஸ்ரா தெரிவித்தார்.[114] அவரது கருத்து மாதர் சங்கத்தின் நிலைபாட்டுக்கு மேலும் வலிமை சேர்த்தது.

தொடர் போராட்டத்துக்குப் பிறகு உயர்நீதிமன்றத்தின் உத்தரவின்படி போலீஸ் அதிகாரி லத்திகாசரண் தலைமையில் மாநில குற்றப் புலனாய்வுத்துறை செயல்பட்டது. கடலூர் செஷன்ஸ் நீதிமன்றத்தில் வழக்கு போடப்பட்டது. தீர்ப்பும் வழங்கப்பட்டது. நான்கு கான்ஸ்டபிள்களுக்கு பத்து ஆண்டு கடுங்காவல் தண்டனையும், இரண்டு சப்–இன்ஸ்பெக்டர்களுக்கு மூன்று ஆண்டு கடுங்காவல் தண்டனையும் வழங்கப்பட்டது. வன்புணர்ச்சி குற்றம் சாட்டப்பட்ட சப்–

113.மாநாட்டு அறிக்கை, *முன்குறித்தது*,

114.தேசிய மனித உரிமைகள் ஆணையத்தின் முக்கிய உத்தரவுகளும் வழிகாட்டுதல்களும், ப.6.

இன்ஸ்பெக்டர் ஜெயராமனுக்கு அக்குற்றத்திலிருந்து விடுவிக்கப்பட்டு மூன்று ஆண்டுகள் தண்டனை மட்டுமே கொடுக்கப்பட்டது.[115]

சப்–இன்ஸ்பெக்டர் ஜெயராமனுக்குத் தண்டனையை உயர்த்தக் கோரியும், பத்மினிக்கு நிவாரணம் கேட்டும் தொடர்ந்து போராடியது ஜனநாயக மாதர் சங்கம். சி.பி.சி.டி.ஐ.டி.யினர் நீதிமன்றத்தை அணுக வேண்டும் என முதலமைச்சரிடம் மாதர் சங்கக் குழு வலியுறுத்தியது. முதலமைச்சரும் ஏற்றுக் கொண்டார். ஒன்பது சாட்சியங்களை பின்வாங்கச் செய்தனர் குற்றவாளிகள். இதனால் குற்றவாளிகள் விடுதலையாகும் நிலை ஏற்பட்டது.

அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் நடத்திய தொடர் போராட்டங்களின் விளைவாக நீதி வழங்கப்பட்டது. ஜனநாயக வாலிபர் சங்கத்தைச் சேர்ந்த தனசிங் பத்மினியை மறுமணம் புரிந்தார். 1997ம் ஆண்டு கடலூரில் பாப்பா உமாநாத் தலைமையில் திருமணம் நடைபெற்றது.[116] அவர்கள் குடியிருக்க அரசுவீடு ஒன்று பெற்றுத்தரப்பட்டது.[117]

ஜனநாயக மாதர் சங்கம் போராடக்கூடிய அமைப்பு மட்டுமல்ல இறுதிவரை பிரச்சனையின்பால் உறுதியோடு நின்று வெற்றி பெற்றுத்தரும் என்ற நம்பிக்கையை சாதாரண மக்கள் மத்தியில் இவ்வழக்கு உருவாக்கியது.

பணியிடத்தில் பெண் ஊழியர்களுக்கு எதிரான பாலியல் கொடுமைகளை கண்காணிக்கும் வரையறையை 1997ல் உச்சநீதிமன்றம் வெளியிட்டது. அதில் உடலைத் தீண்டுதல், நெருங்குதல், பாலியல் ரீதியாக விருப்பம் தெரிவித்துக் கோருதல், ஆபாச மொழியில் பேசுவது, இரட்டை அர்த்த வார்த்தைகளைப் பேசுவது, ஆபாசபடங்களை காட்டுவது போன்றவை தண்டனைக்குரியவை என்று வரையறுக்கப்பட்டது.[118]

115.மகளிர் சிந்தனை, அக்டோபர் 1997.
116.மகளிர் சிந்தனை டிசம்பர் 1997.
117.மாநாட்டு அறிக்கை, தமிழ் மாநில 9வது மாநாடு, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், நாகர்கோவில், 8, 9, 10 ஜனவரி 1999.
118.மகளிர் சிந்தனை, மார்ச் 1999.

பலாத்காரக் கொடுமையையும் எதிர்பாராத விபத்துபோல் சித்தரித்து பலாத்கார இன்சூரன்ஸ் திட்டம் ஒன்றை அப்போதைய பிரதமர் துவக்கினார். இத்திட்டத்தின்படி பத்து முதல் எழுபத்தைந்து வயதுவரையிலான பெண்கள், தாங்கள் எதிர்காலத்தில் கற்பழிக்கக்கூடும் என எதிர்பார்த்து ஆண்டுக்கு பதினைந்து ரூபாய் பிரிமீயம் செலுத்தவேண்டும். சம்பவம் நடந்தால் பாதிக்கப்பட்டவருக்கு இக்காப்பீட்டுத் தொகை வழங்கப்படும்.[119] அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் சார்பில் பொதுச்செயலாளர் பிருந்தாகராத் தலைமையில் நேரடியாக பொது காப்பீட்டுக் கழகத் தலைவர் முன் எதிர்ப்பு தெரிவித்ததைத் தொடர்ந்து அவர் அத்திட்டத்தை மறுபரிசீலனை செய்வதாக உறுதியளித்தார்.

கடலூர் மாவட்டம் விருத்தாச்சலம் வட்டத்தைச் சேர்ந்த செல்வராணி என்ற பள்ளி ஒப்பந்த ஆசிரியரை மூவர் பாலியல் பலாத்காரம் செய்தனர். வேப்பூர் காவல்நிலையத்தில் புகார் கொடுக்கச் சென்றபோது, புகாரைப் வாங்க மறுத்தனர். அங்கிருந்த உதவி ஆய்வாளர் புகாரைப் படித்துவிட்டு இரண்டு மணிநேரம் செல்வராணியிடம் விசாரணை என்ற பெயரில் மிரட்டியுள்ளார். புகாரைப் பெற்ற பிறகும் இருபத்துநான்கு மணி நேரத்துக்குள் மருத்துவப் பரிசோதனைக்கு அனுப்பாமல் மூன்று நாட்கள் கழிந்த பிறகே அனுப்பினர். அதில் பலாத்காரம் என்பது உறுதியானது. அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் இப்பிரச்சனையில் தலையிட்டது. அந்த உதவி ஆய்வாளர் இடமாற்றம் செய்யப்பட்டார். ஆர்ப்பாட்டமும் சாலைமறியலும் நடத்தப்பட்டன. கண்டனக் கூட்டமும் நடத்தப்பட்டது. தொடர்ச்சியான போராட்டத்தின் விளைவாக நான்குமாத காலத்துக்குப் பிறகு குற்றவாளிகள் சென்னை உயர்நீதிமன்றத்தில் சரணடைந்து சிறையில் அடைக்கப்பட்டனர்.[120]

1998ல் அருப்புக்கோட்டை பள்ளி மாணவி சுபலட்சுமி பாலியல் பலாத்காரம் செய்து கிணற்றில் வீசிக் கொல்லப்பட்டாள். மூன்றுபேர் மீது வழக்குப்பதிவு செய்யப்பட்டது. ஜனநாயக மாதர் சங்கம் இப்பிரச்சனையில் தலையிட்டு தொடர்

119. மகளிர் சிந்தனை, ஏப்ரல் 1999.
120. *மேலது*, ஜூலை 1999.

போராட்டத்தை நடத்தியது. இதன் விளைவாக ஸ்ரீவில்லிபுத்தூர் செசன்ஸ் நீதிமன்றம், அம்மூவருக்கும் மரணதண்டனை அளித்து தீர்ப்பளித்தது.

சென்னையில் ஒரு வாரப்பத்திரிகை பெண் நிருபர் பாலியல் துன்புறுத்தலுக்கு உள்ளானார். அப்பிரச்சனையில் மாதர் சங்கத்தைச் சேர்ந்த பிரதிநிதி அவரது விசாரணையில் பங்குபெற்றார். இதனால் விசாரணை நியாயமாக நடைபெறுவதை உத்தரவாதப்படுத்த முடிந்தது. விசாரணை நடக்கும்போதே மாதர் சங்கத்தின் கோரிக்கையின்படி குற்றவாளி வேறு ஊருக்கு பணிமாற்றம் செய்யப்பட்டார். விசாரணை முடிந்து குற்றம் நிரூபிக்கப்பட்டது. குற்றவாளி பணிநீக்கம் செய்யப்பட்டார்.[121]

2005ம் ஆண்டு அக்டோபர் மாதம் 28,29 ஆகிய தேதிகளில் தேசிய மகளிர் ஆணையம் கூடியது. பாலியல் பலாத்காரத்துக்கான இந்திய தண்டனைச் சட்டத்தையும் குற்றவியல் மற்றும் சாட்சியச் சட்டத் திருத்தங்களையும் ஆராயக் கோரியது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். அதன்படி கற்பழிப்பு என்ற சொல்லை நீக்கிவிட்டு இந்திய தண்டனைச் சட்டப்பிரிவு 375 முழுவதுமாக மாற்றப்பட்டது. புதிய சட்டவடிவில் பாலியல் பலாத்காரம் என்ற சொல் கொண்டுவரப்பட்டது.[122] 2005ல் மத்திய மனிதவள மேம்பாட்டுத்துறை "பணியிட பாலியல் துன்புறுத்தலுக்கு பாதுகாப்புச் சட்டமுன் வரைவு" ஒன்றை வெளியிட்டது.[123]

1990ம் ஆண்டில் தமிழகத்தில் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டவர்களில் இருபத்து மூன்று சதவிகிதம்பேர் பதினாறு வயதுக்கு குறைவானவர்கள். அவர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் பத்து வயதுக்கும் குறைவானவர்கள். இது இந்திய அரசின் புள்ளி விபரம்.[124]

1997ம் ஆண்டு அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் குமரி மாவட்டக்கிளை நாகர்கோவிலில் நடந்த குழந்தைகள் பாலியல் பலாத்காரம் பற்றி

121.மாநாட்டு அறிக்கை, தமிழ் மாநில 11வது மாநில மாநாடு, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், திருச்சி, 6, 7, 8 ஆகஸ்ட் 2005.
122.மகளிர் சிந்தனை, ஜனவரி 2006.
123.*மேலது*, மே 2008.
124.மைதிலி சிவராமன், *சமூகம்–ஒரு மறுபார்வை*, *முன்குறித்தது*, ப.77.

பொதுவிசாரணை செய்தது. அதில் பத்து வயதான ஒரு பெண் அதே குடியிருப்பைச் சேர்ந்த ஒரு இளைஞனால் பலாத்காரத்துக்கு உள்ளானாள். இவ்வழக்கை பதிவுசெய்ய வேண்டாம் என அவளது பெற்றோர்களுக்கு நர்ஸ், மருத்துவர், போலீஸ் அதிகாரி போன்றோர் அறிவுரை கூறினர். "இதை வெளியில் சொன்னால் பிற்காலத்தில் அவளை யார் திருமணம் செய்து கொள்வார்கள்" என்றனர். முந்திரித் தொழிற்சாலைத் தொழிலாளியான அந்தக் குழந்தையின் தாய் புகார் செய்தார். ஆனால் நீதிபதியோ அவளைத் தனி அறையில் விசாரிக்காமல் அனைவர் முன்னிலையிலும் விசாரணையை மேற்கொண்டார். ரத்தக்கறை படிந்த அவளுடைய ஆடை நீதி மன்றத்தில் சாட்சியாகத் தரப்படவில்லை. அந்தத் தாய்க்கு வழக்கு ஜெயிக்கும் என்ற நம்பிக்கையில்லை.

நான்கரை வயதான ஒரு பெண்குழந்தை இரவில் குடிசையிலிருந்து கடத்தப்பட்டு பலாத்காரம் செய்யப்பட்டாள். மருத்துவமனையில் பதினெட்டு நாட்கள் கழிந்து இருபத்து நான்கு தையல் போட்டுக்கொண்ட அவள் வீட்டை விட்டு வெளியில் வருவதே இல்லை. துக்கத்தை மறைக்கத் தந்தை குடிபோதைக்கு அடிமையானார். நியாயத்துக்கான போராட்டத்தை அக்குழந்தையின் தாய் நடத்தினார். பெண்கள் பலவீனமானவர்கள் என்ற பரவலான கருத்து பொய்யானது என்பதை இத்தகைய சம்பவங்கள் மெய்ப்பித்துக்காட்டுகின்றன.

ஆறு குழந்தைகளுடன் தினக்கூலிக்கு வேலை செய்யும் விதவையின் எட்டு வயதான மகள் அப்பகுதியைச் சேர்ந்த ஐம்பத்து இரண்டு வயதுடைய ஒருவனால் பலாத்காரம் செய்யப்பட்டாள். ஜாமீனில் வெளிவந்த அவன் அக்குழந்தையின் சகோதரியையும் பலாத்காரம் செய்யப்போவதாக மிரட்டினான். காவல் துறையினரும் அக்கறை காட்டவில்லை.

1992ம் ஆண்டு நான்கு வயதுக் குழந்தை வீட்டிலிருந்து கடத்தி பலாத்காரம் செய்யப்பட்டாள். இச்சம்பவத்தில் குற்றப்பத்திரிக்கை செய்ய நான்கு ஆண்டுகள் ஆனது. அதற்குமேல் இரண்டாண்டுகள் கழிந்த பின்னரும் விசாரணை துவங்கவில்லை. பதினான்கு நாட்கள் மருத்துவமனையில் சிகிச்சை அளித்தப்

பின்னரும் குணமடையாத அக்குழந்தையின் தந்தைக்கு வலிப்புவரத் தொடங்கியதாக அந்தத் தாய் கூறினார்.[125]

இரண்டேமுக்கால் வயதான குழந்தையின் தந்தை அரசு மருத்துவமனையில் நோயாளியாக இருந்தார். தாயுடன் வார்டில் தங்கியிருந்தபோது அக்குழந்தையை மருத்துவமனை ஊழியர் ஒருவர் கடத்திச் சென்று பலாத்காரம் செய்ததில் அக்குழந்தை இறந்தது. 1995ம் ஆண்டு நடந்த இந்தச் சம்பவத்தில் வழக்கு விசாரணை முடிந்து இரண்டே ஆண்டுகளில் விடுதலை செய்யப்பட்டான் அந்த குற்றவாளி. ஆனால் அரசு மேல்முறையீடு செய்யவில்லை. அரசு மருத்துமனையில் இப்படி ஒரு சம்பவம் நடந்ததால் நிவாரணத் தொகை கோரினார் தாய்.

பலாத்காரச் சம்பவங்களில் பாதிக்கப்படுபவரே தண்டிக்கப்படுகிறார்கள். கைத்தறி நெசவாளியின் மகள் தனது ஆசிரியர் வீட்டிலேயே பலாத்காரம் செய்யப்பட்டாள். தண்டனையோ பள்ளிப்படிப்பை நிறுத்தியதுதான். அதனால் அவள் சகோதரனும் படிப்பை நிறுத்தினான். எட்டாண்டுகளுக்குப் பின்னும் அவ்வழக்கு நிலுவையிலேயே இருந்தது. பொது நீதிமன்றத்தில் அவளது பெற்றோர்கள் தங்களது சிரமங்களை மற்றவர்களோடு பகிர்ந்துக் கொள்ளவில்லை. இதற்கு கூறப்பட்ட காரணம் இந்தச் சம்பவம் பத்திரிகையில் வந்தால் அடுத்த வாரம் நடக்கவுள்ள தங்களுடைய மூத்த மகளின் திருமணம் நின்றுவிடுமோ என்ற அச்சம். இக்குற்றத்துக்கு பலியானவளே குற்றவாளிபோல் பார்க்கப்படுவதால் பலாத்காரம் மிகக்குறைவாகப் புகார் செய்யப்படுகிறது.[126]

பொது விசாரணையில் இடம்பெற்ற நீதிபதிகள் தேசியப் பெண்கள் கமிஷன் தலைவர் மோஹினிகிரி, தேசியப் பெண்கள் கமிஷன் ஆலோசகர் பத்மா சேத், ஒய்வு பெற்ற மாவட்ட நீதிபதி ஏ.எஸ்.பிரான்சிஸ், வழக்கறிஞரும் முனிசிபாலிட்டியின் தலைவருமான ஏ.எம்.வி.டெல்பின் ஆகியோரும் தேசியப் பெண்கள் கமிஷனுக்கு உள்ள சிவில் நீதிமன்றத்து அதிகாரத்தைப் பயன்படுத்தி அரசு வழக்கறிஞர், துணைக் கண்காணிப்பாளர் ஆகியோர் அழைக்கப்பட்டு ஜனநாயக மாதர்

125.மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.79.
126.மேலது, ப.81.

சங்கத்தின் சார்பில் விசாரிக்கப்பட்டனர். மாவட்ட ஆட்சியாளரும் கலந்து கொண்டார். அப்போது தேசியப் பெண்கள் கமிஷன் சார்பில் பல உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன. பாதிக்கப்பட்ட குழந்தைகளுக்கு மனோரீதியான சிகிச்சை உட்பட மருத்துவஉதவி, மிரட்டப்பட்ட குடும்பங்களுக்கு போலீஸ் பாதுகாப்பு, நிதி நிவாரணம் ஆகியவற்றை அளிக்கவேண்டும் என்று மாதர் சங்கத்தின் சார்பில் வலியுறுத்தப்பட்டது.

குழந்தைகள் பலாத்கார நிகழ்வுகளைப் பரிசீலிக்க மாவட்டக்குழு அமைக்கப்படும். நீதிபதிகளின் உத்தரவுகள் செயல்படுத்தப்படும் என்று மாவட்ட ஆட்சியாளர் உறுதியளித்தார்.[127]

பொது விசாரணையின் துவக்கத்தில் பேசிய அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கப் பொதுச்செயலாளர் எஸ்.சுதா மற்றும் மாதர் சங்கத்தைச் சார்ந்த குமரி மாவட்டச் செயலாளர் சரசம் ஜெயராஜ் ஆகியோர் 1988–1998 வரையிலான காலத்தில் குழந்தைகள் பலாத்கார சம்பவங்களை விசாரிப்பதிலும் தண்டனை அளிப்பதிலும் அவர்கள் சந்தித்தப் பிரச்சனையை விளக்கினர். பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு புனர்நிவாரண நடவடிக்கைகளுக்கான எந்த ஏற்பாடும் இல்லாதது மிகப்பெரிய பலவீனம் என்று வலியுறுத்தப்பட்டது.

பொது விசாரணையின் இறுதியில் குற்றவாளிகள் தண்டனை பெறுவதை உத்தரவாதம் செய்யவும், பாதிக்கப்பட்ட குழந்தைகளை மேலும் காயப்படுத்தாத முறையில் விசாரிப்பதற்கும் 1992ல் தேசியப் பெண்கள் கமிஷன் நடத்திய கருத்தரங்கங்களில் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஆலோசனைகளான குழந்தை பலாத்காரம் பற்றி விசேஷ சட்டம் இயற்ற வேண்டும். பலாத்காரம் என்ற வார்த்தையின் விளக்க எல்லையை விரிவுபடுத்தி அதில் பரவலான பாலியல் துன்புறுத்தல்களை உட்படுத்த வேண்டும். குழந்தையைக் காவல்துறை விசாரிப்பது அவள் வீட்டிலும், பெற்றோர்கள் மற்றும் பெண் சமூகசேவை ஊழியர்கள் முன்னிலையில் நடக்க வேண்டும். குழந்தை பலாத்காரத்துக்கு பத்துவருட கடுங்காவல் குறைந்தபட்ச தண்டனையாக்கப்படவேண்டும். இவ்வழக்குகளில் அரசு

---

127. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.81.

வழக்கறிஞர்களாகப் பெண்களை நியமிக்கவேண்டும். பலாத்காரம் நடந்தது என்பதற்கு குழந்தையின் வாக்குமூலமே நிரூபனமாக இருக்கவேண்டும். ஆறு மாதக் காலத்துக்குள் இவ்வழக்குகள் நடத்தி முடிக்கப்படவேண்டும். பாதிக்கப்பட்ட குழந்தைகளுக்கு புனர் நிவாரணநிதி கொடுக்கப்படவேண்டும். ஆலோசனை மையங்கள் துவங்கப்படவேண்டும் போன்றவைகளை பொது விசாரணையில் வைக்கப்பட்டு அவற்றை மத்திய அரசுச் சட்டமாக்கவேண்டும் என்று ஜனநாயக மாதர் சங்கத்தின் சார்பில் வற்புறுத்தப்பட்டது.[128]

2008ம் ஆண்டில் அறுநூற்றுநான்கு பேர் மீது நானூற்று அறுபத்தாறு வழக்குகள் பதிவுசெய்யப்பட்டன. அதில் ஐம்பத்தியிரண்டு பேர் குற்றவாளிகள் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. நூற்றுபத்தொன்பது பேர் விடுவிக்கப்பட்டனர். மீதமுள்ளவர்கள் மீதான விசாரணை நிலுவையில் உள்ளது.

2009ம் ஆண்டில் அறுநூற்று எழுபத்தைந்து பேர் மீது நானூற்று அறுபத்தொன்பது வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. அதில் எண்பத்து இரண்டுபேர் குற்றவாளிகள் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இருநூற்று பதினொருபேர் விடுதலைச் செய்யப்பட்டனர். மீதமுள்ளவர்கள் மீதான விசாரணை நிலுவையில் உள்ளது.

2010ம் ஆண்டில் அறுநூற்று எண்பத்தைந்து பேர் மீது ஐநூற்றியேழு வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. அதில் முப்பத்தேழு பேர் குற்றவாளிகள் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. நூற்றியேழு பேர் விடுதலை செய்யப்பட்டனர். ஐநூற்று பதினெட்டுபேர் மீதான நீதிமன்ற விசாரணை நடைபெற்று வருகிறது. எஞ்சியவர்கள் மீதான விசாரணை நிலுவையில் உள்ளது.

2011ம் ஆண்டில் எழுநூற்று நாற்பத்தைந்து பேர் மீது ஐநூற்று எழுபத்து இரண்டு வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. அதில் பதினெட்டுபேர் குற்றவாளிகள் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. முப்பத்து நான்கு பேர் விடுதலை செய்யப்பட்டனர். ஐநூற்று தொன்னூற்றேழு பேர் வெவ்வேறு நீதிமன்றங்களில் விசாரணையை எதிர்கொண்டு வருகின்றனர். எண்பத்தாறு பேரிடம் விசாரணை நடத்தப்பட்டு

---

128.மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.82.

வருகிறது. எஞ்சியவர்கள் மீதான குற்றச்சாட்டுகள் தவறானவை என்று அவர்கள் விடுதலை செய்யப்பட்டனர்.

தில்லியில் நடப்பாண்டில் ஜனவரி முதல் நவம்பர் வரை எழுநூற்று ஐம்பத்து நான்கு பேர் மீது அறுநூற்று முப்பத்தைந்து பாலியல் வன்கொடுமை வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவற்றில் நானூற்று மூன்றுபேர் மீது நீதிமன்றத்தில் விசாரணை நடைபெற்று வருகிறது. முந்நூற்று நாற்பத்தெட்டு பேர் மீதான போலீஸ் விசாரணை நிலுவையில் உள்ளது. ஒருவர் குற்றவாளி என நீதிமன்றம் தீர்ப்பளித்து இருவர் மீதான குற்றச்சாட்டுகள் தவறானவை என விடுதலை செய்யப்பட்டுள்ளனர்.

இதேபோல தில்லிப் பெண்களை பாலியல் ரீதியாக துன்புறுத்தியதாக இந்தாண்டில் மட்டும் எழுநூற்று அறுபத்தெட்டுபேர் மீது அறுநூற்று இருபத்தினான்கு வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அதில் ஒருவர் மீது மட்டும் குற்றச்சாட்டு உறுதிசெய்யப்பட்டு குற்றவாளி என்று தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. நானூற்று இரண்டுபேர் மீது நீதிமன்ற விசாரணை நிலுவையில் உள்ளது. சந்தேகத்தின் பேரில் முந்நூற்று அறுபத்தைந்து பேரிடம் தொடர்ந்து விசாரணை நடத்தப்பட்டு வருகிறது.[129]

தலைநகரில் சமீபத்தில் எடுக்கப்பட்ட புள்ளிவிவரங்களின்படி மேற்கூறிய தகவல்கள் உறுதி செய்யப்பட்டுள்ளன. இந்தியாவின் தலைநகரம் என்பது கவனயீர்ப்புக்குரிய ஒரு இடம். பாதுகாப்பு கருதி இரவும் பகலும் காவல் துறையினரும் ராணுவத்தினரும் நடமாடக்கூடிய வாய்ப்புப் பெற்ற தலைநகரில் பெண்களுக்கு எதிரான குற்றங்களின் எண்ணிக்கை கவலை தருவதாக உள்ளது. குற்றவாளிகள் தண்டனை பெறக்கூடிய வாய்ப்பும் அரிதாகவே இருக்கிறது. இந்த நிலையில் இந்தியாவின் பிற பகுதிகளில் பெண்களுக்கு எதிரான பாலியல் கொடுமைகள் எண்ணிக்கை எவ்வளவு இருக்கும் என்பதை ஊகிக்க முடிகிறது.

பாலியல் கொடுமைகளை வழக்குகள் பதிவு செய்யப்படுவதே பெரும் பிரச்சனையாக இருக்கிறது. இந்த ஆணாதிக்க சமூகத்தில் இதனை ஒரு

---

129.தினமணி, 31 டிசம்பர் 2012.

குற்றமாகக் கருதி வழக்குப்பதிவு செய்வதை பெரும்பாலான காவல்துறை அதிகாரிகள் அலட்சியம் செய்துவிடுவது நடைமுறை உண்மையாகும். உடனே பதிவுசெய்யாமல் காலதாமதம் செய்வதும் பெரும்பாலான வழக்குகளை நீர்த்துப்போகச் செய்கிறது. மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட நிலையில் மருத்துவர்களின் சான்றிதழ் பெறுவது சவாலாக இருக்கிறது.

சாட்சிகளை கொண்டு நிரூபிப்பதும் மிகவும் கடினம். இத்தனை தடைகளையும் மீறி நீதிமன்றத்தில் வழக்கு விசாரணைக்கு வரும்போது நீதித் துறையினரின் ஆணாதிக்க மனோபாவம் குற்றவாளிகளுக்கு தண்டனை அளிப்பதில் தீவிரம் காட்ட மறுக்கிறது. பாலியல் குற்றங்களில் பாதிக்கப்பட்ட பெண்களுக்காக ஜனநாயக மாதர் சங்கத்தின் செயல்பாடுகள் மிகவும் முக்கியமானதாகிறது.

சேலம் மாவட்டம் சங்ககிரியைச் சேர்ந்த மோனிஷா என்ற எட்டு வயதுப் பெண் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டு கொலை செய்யப்பட்டாள். அவளது உடல் அருகே இருந்த மலைமீது வீசப்பட்டிருந்தது. முகத்தில் ஆசிட் ஊற்றப்பட்டிருந்தது. குழந்தையின் தாய் மீனா மாதர் சங்கத் தாலுக்கா தலைவர். குற்றவாளியை கைதுசெய்யாமல் சடலத்தை வாங்கமாட்டோம் என்று போராடியதால் குற்றவாளி கைதுசெய்யப்பட்டான். பள்ளியின் அங்கீகாரம் ரத்து செய்யப்பட்டது.[130]

“குழந்தைகளை பாலியல் தாக்குதல்களிலிருந்து பாதுகாக்கும் மசோதா 2010” என்ற மசோதாவை மத்திய அரசு தயாரித்தது. தன்னார்வ தொண்டு நிறுவனங்கள், குழந்தை உரிமை அமைப்புகள் ஆகியவற்றுடன் இணைந்து அம்மசோதா உருவாக்கப்பட்டது. குழந்தைகளை பாலியல் ரீதியாக துன்புறுத்துபவர்களை தண்டிக்க பிரிவுகள் உள்ளன. ஐ.பி.சி. 376 (வன்புணர்ச்சி) பிரிவு 354 (கௌரவத்தை சீர்குலைத்தல்) மற்றும் 1998ல் கொண்டுவரப்பட்ட தமிழ்நாட்டில் பெண்களை துன்புறுத்துவதைத் தடை செய்யும் சட்டம் ஆகியவற்றை பயன்படுத்தலாம்.

---

130. மகளிர் சிந்தனை, டிசம்பர் 2008.

2010ம் ஆண்டு புதிதாகக் கொண்டுவரப்பட்ட மசோதா ஆண்–பெண் இருபாலருக்கும் பொருந்துவதாக இருந்தது. அதன்படி தண்டனை அளிக்கவும் வகை செய்யப்பட்டது.[131]

'குற்றவியல் சட்டத்திருத்த மசோதா 2010' அல்லது 'பாலியல் துன்புறுத்தல் மசோதா' அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் மற்றும் சில அமைப்புகளின் இடைவிடா போராட்டத்தால் கொண்டுவரப்பட்டது.

அதில் தனியார் மற்றும் அரசில் முக்கியப் பொறுப்பு வகிப்பவர்கள் பாலியல் குற்றம் புரிந்தால் தண்டனை அதிகமாக கொடுக்கப்படவேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. கூட்டாக பாலியல் பலாத்காரத்தில் ஈடுபடுபவர்களுக்கு ஆயுள்தண்டனை வழங்கமுடியும். உடல் ஊனமுற்ற பெண்ணையோ கர்ப்பிணி பெண்ணையோ, சித்த சுவாதீனமற்ற பெண்ணையோ பலாத்காரம் செய்தாலும் இதே தண்டனை வழங்கப்படும் என குறிப்பிடப்பட்டுள்ளது.[132]

## வாச்சாத்தி நிகழ்வு

தருமபுரி மாவட்டம் சித்தேரி மலை அடிவாரத்தில் உள்ள ஒரு சிறிய கிராமம் வாச்சாத்தி. விவசாயம், கால்நடை வளர்ப்பு, வனப்பொருட்களை சேகரிப்பது ஆகியவை இம்மக்களின் வாழ்வாதாரம். மலையாளி எனும் பழங்குடிபிரிவைச் சார்ந்த மக்களே பெரும்பாலானோர்.

1992ம் ஆண்டு ஜூன் மாதம் 20ம் தேதி வனத்துறை, வருவாய்த்துறை, காவல்துறையைச் சேர்ந்த ஏறத்தாழ முந்நூறு பேர் துப்பாக்கி, தடி உள்ளிட்ட ஆயுதங்களுடன் வாச்சாத்தி கிராமத்தின்மீது படையெடுத்தனர். கிராமத்தைச் சேர்ந்த பெரும்பாலான ஆண்கள் ஓடிவிட அப்பாவிப்பெண்கள் இப்படையினரால் சின்னாபின்னப் படுத்தப்பட்டனர்.[133]

131. மகளிர் சிந்தனை, ஆகஸ்ட் 2010.
132. மேலது, ஜூலை 2010.
133. *மேலது*, அக்டோபர் 1992.

அக்கிராமத்துப் பெண்களுக்கு நேர்ந்த கொடுமையை வெளிச்சத்துக்குக் கொண்டுவந்தது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். நடந்ததை நேரில் கண்டறிய பாப்பா உமாநாத், மைதிலி சிவராமன் ஆகிய இருவரும் ஜூலை 30ம் தேதி அக்கிராமத்துக்குச் சென்றனர். ஓடுகள் உடைக்கப்பட்டு, கதவுகள் பெயர்த்தெடுக்கப்பட்டு வீடுகள் சூறையாடப்பட்டு பொருட்கள் கிழித்தெறியப்பட்டு கிராமமே யுத்தகளம்போல் காட்சியளித்தது. பெட்டிக் கடைகள் நொறுக்கப்பட்டிருந்தது. சுமார் இரண்டாயிரம் ஆடுகள், அறுநூறு கோழிகள் திருடப்பட்டிருந்தன. வீடுகள், பாசனக் கிணறுகள், தானியங்கள், பாத்திரங்கள் அழிக்கப்பட்டிருந்தன.

சுமார் இருநூறு குடும்பங்கள் வாழ்ந்த அக்கிராமத்தில் அப்போது மிகச் சிலரே இருந்தனர். தொண்ணூற்று நான்கு பெண்கள் இருபத்தைந்து குழந்தைகள் உட்பட சேலம் சிறையில் அடைக்கப்பட்டிருந்தனர். அச்சமயம் ஜாமீனில் வெளிவந்த பெண்களிடம் நடந்த விஷயங்களை கேட்டபோது குப்பம்மா (35), வெள்ளச்சியம்மா (55), முனியம்மா (55), முத்துவேடி (17) ஆகிய பெண்கள் நடந்ததைக் கூறினர்.[134]

ஜூன் 20ம் தேதியிலிருந்து மூன்று நாட்கள் வனத்துறையினர் சுமார் அறுநூறு பேர் வாச்சாத்தியில் தங்கினர். காட்டில் சந்தனக்கட்டைகள் வைக்கப்பட்டிருக்கும் இடத்தைக் காட்டவேண்டுமெனக் கூறி காட்டுக்குள் பதினெட்டு பெண்களை அழைத்துச் சென்று பாலியல் பலாத்காரம் செய்தனர்.

அன்று மாலை மக்கள் அனைவரும் அரூர் டவுனில் உள்ள வனத்துறை அலுவலகத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். இளம்பெண்கள் எல்லோரும் ஒரு வண்டியில் அடைக்கப்பட்டு வழியெல்லாம் வனத் துறையினரின் பாலியல் துன்புறுத்தலுக்கு உட்படுத்தப்பட்டனர்.

அங்கு ஊர் கவுண்டர் என்று அழைக்கப்படும் பெருமாள் என்ற கிராமத் தலைவரை பெண்கள் மத்தியில் நிற்கவைத்து நிர்வாணமாக்கி, பின்னர் அவரை துடைப்பத்தால் அடிக்குமாறு பெண்களை நிர்ப்பந்தப்படுத்தினர். மறுத்தவர்களுக்கு

---

134. ஆவணப்படம் : *உண்மையின் போர்க்குரல்.*

உதை விழுந்தது. விடியும்வரை பெருமாளைப் படுக்கவைத்து தடியால் அடித்தனர். பூட்ஸ் காலால் மிதித்தனர் அவர்மேல் ஏறிக்குதித்தனர்.[135]

பாதிக்கப்பட்ட பெண்கள் நீதிமன்றத்தில் அளித்துள்ள சாட்சியங்கள் ஒவ்வொன்றும் கண்ணீர்க் காவியமாகும். வன்புணர்ச்சிக்குள்ளாக்கப்பட்ட பதினெட்டு பெண்களையும் வனத்துறை அலுவலகத்தில் தனியறையில் அடைத்துவைத்து பாலியல் ரீதியான சீண்டல்களை இரவு முழுக்கச் செய்துள்ளனர். அந்தக் கொடுமை நடந்தபோது பதினெட்டு பெண்களில் மூன்றுபேர் மட்டுமே திருமணமானவர்கள். ஒருவர் பருவமடையாதவர். பள்ளியில் எட்டாம்வகுப்பு படித்துக் கொண்டிருந்த பெண். அனைவரும் பதிமூன்று வயதிலிருந்து பத்தொன்பது வயதுக்குட்பட்டவர்கள். முந்நூறுக்கும் மேற்பட்ட ஊர் மக்கள் கூடியிருந்த இடத்தில் திட்டமிட்டே இளம் பெண்களாக பார்த்துத் தேர்வுசெய்து சந்தனக்கட்டைகளை லாரியில் ஏற்ற வேண்டுமென்று சொல்லி, ஏரிக்கு அழைத்துச் சென்று பாலியல் பலாத்காரம் செய்தனர். அதில் பழனியம்மாள் என்ற பெண்ணுக்கு குழந்தை பிறந்து ஒரு மாதம் மட்டுமே ஆகியிருந்தது.

'சந்தனமரக் கடத்தலை தடுக்கிறோம்' என்ற பெயரில்தான் இவையனைத்தும் நடத்தப்பட்டன. சந்தன மரத்துக்காக, மலைவாழ் மக்களை மிருகங்களைவிட மோசமாக நடத்திய கொடுமைகள் ஏராளம். வனச்செல்வங்கள் பாதுகாக்கப்பட வேண்டுமென்பதில் இருவேறு கருத்துக்கள் இருக்க முடியாது. ஆனால் சந்தனமரக் கடத்தல் வனத்துறை அதிகாரிகளின் உதவியுடனும் ஒத்துழைப்புடனும் நடப்பதும், பெரும் மரக்கடத்தல் வியாபாரிகள்தான் சாதாரண மக்களை கூலிக்கமர்த்தி இத்தொழிலை நீண்டகாலமாகச் செய்து வருவதும் யதார்த்தமான உண்மை. சமூகத்திலுள்ள சில பெரிய மனிதர்களின் விருப்பத்துக்கு ஏற்றவாறு பணிபுரிவதற்கான கட்டாயத்தில் உள்ள எளிய நபர்கள் ஒடுக்கப்பட்ட மக்களாகிய தாழ்த்தப்பட்ட மக்களும், பழங்குடியினரும்.

அப்போது ஆட்சியிலிருந்த அரசு நடந்த அனைத்தையும் மூடி மறைத்து குற்றவாளிகளை பாதுகாத்து, பாதிக்கப்பட்ட மக்களுக்கு எதிராக செயல்பட்டதோடு

---

135.மகளிர் சிந்தனை, அக்டோபர் 1992.

மட்டுமல்லாமல் நீதிவிசாரணை நடத்தப்பட வேண்டும் என்ற நியாயமான கோரிக்கையையும் ஏற்க மறுத்தது.

ஆளும் அரசு விசாரிக்கக்கூட தயாராக இல்லாத நிலையில், அப்போதைய தமிழ்நாடு மலைவாழ் மக்கள் சங்க மாநில பொதுச் செயலாளரால் சென்னை உயர்நீதிமன்றத்தில் பொதுநல வழக்குத் தாக்கல் செய்யப்பட்டது. "படித்தவர்கள், அரசுப் பணியிலுள்ளவர்கள், உயரதிகாரிகள் இதுபோன்ற குற்றங்களை செய்திருப்பார்கள் என்பது நம்பத்தகுந்தாக இல்லை" எனக் கூறி உயர்நீதிமன்றம் இந்த மனுவைத் தள்ளுபடி செய்தது.[136]

1992 செப்டம்பர் 3ம் தேதி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அன்றைய மாநிலச்செயலாளரால் உச்சநீதிமன்றத்தில் மனுதாக்கல் செய்யப்பட்டது. உச்சநீதிமன்றமும் இவ்வழக்கை எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக விசாரிக்க வேண்டுமென்று உத்தரவிட்டது.

இதற்கிடையில் மக்களைத்திரட்டி போராட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். மாநிலம் முழுவதும் ஆர்ப்பாட்டமும், 24.09.1992 சென்னை உயர்நீதிமன்றத்தின் முன்பாக ஆர்ப்பாட்டமும் நடைபெற்றது. அதில் ஜனநாயக மாதர் சங்கத்தை சார்ந்த இருநூறு பேரும், வாச்சாத்தி கிராமத்தைச் சார்ந்த நூறு ஆதிவாசி பெண்களும் கலந்துகொண்டனர்.[137] செப்டம்பர் 4ம் தேதி முதல் அரூரில் பெ.சண்முகம் தலைமையில் காலவரையற்ற உண்ணாவிரதம் எனத் தொடர் போராட்டங்கள் நடத்தப்பட்டன. மலைவாழ் மக்களை ஒன்றுதிரட்டி சங்கத்தின் சார்பில் பாதயாத்திரை, மறியல் போராட்டங்களை நடத்தியது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம். ஆகஸ்ட் 5ம் தேதி ஏ.நல்லசிவன் அவர்களால் பாராளுமன்றத்திலும் இப்பிரச்சனை எழுப்பப்பட்டது.[138]

அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் மாநில துணைத்தலைவராக இருந்த மைதிலி சிவராமன், தேசிய தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினர்

136.பெ.சண்முகம், *வாச்சாத்தி வன்கொடுமை வழக்கும் தீர்ப்பும்*, ப.14.
137. மாநாட்டு அறிக்கை, 8வது மாநில மாநாடு, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், சென்னை, 21, 22, 23 ஆகஸ்ட் 1995.
138.மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.15.

ஆணையத்தின் தென்மண்டல ஆணையராக இருந்த பாமதி ஐ.ஏ.எஸ். அவர்களிடம் 1992ம் வருடம் ஆகஸ்ட் மாதம் மனு ஒன்றை அளித்தார். இந்த மனுவின் அடிப்படையில் பாமதி ஐ.ஏ.எஸ். ஆகஸ்ட் 6, 7, 8 ஆகிய மூன்று தினங்கள் வாச்சாத்திக்கு நேரில் சென்று நிலைமைகளை அறிந்ததுடன் மக்களிடம் விபரங்களையும் கேட்டறிந்தார். குற்றச்சாட்டுகள் அனைத்தையும் உறுதி செய்தார். வன்புணர்ச்சி குற்றம் நடந்ததா என்பதைக் குற்றம் நடந்து ஒன்றரைமாதம் ஆகிவிட்டதாலும், பாதிக்கப்பட்ட பல பெண்கள் இன்னமும் சிறையிலிருந்ததாலும் உறுதிசெய்ய முடியவில்லை என்று தேசிய ஆணையத்துக்கு அறிக்கை அனுப்பினார்.

அன்றைக்கு ஆட்சிப் பொறுப்பிலிருந்த அரசு குற்றச்சாட்டுகள் அனைத்தையும் உயர்நீதிமன்றத்திலும் மறுத்தது. உயர்நீதிமன்றம் பாமதி ஐ.ஏ.எஸ். அவர்களை ஒரு நபர் விசாரணை அதிகாரியாக நியமித்து உத்தரவிட்டது. 11.12.1992 அன்று அவர் விசாரணை அறிக்கையை உயர்நீதிமன்றத்தில் தாக்கல் செய்தார். எதுவுமே நடக்கவில்லை என்று கூறிய அரசாங்கம் உயர்நீதிமன்றத்தின் இடைக்கால உத்தரவின் அடிப்படையில் குடிதண்ணீர், மின்னிணைப்பு, பஸ் போக்குவரத்து, குடும்ப அட்டை, பள்ளிச் சான்றிதழ், நிலப்பட்டா, வீட்டைச் சரி செய்வதற்கான ஒடு ஆகியவற்றை வழங்கியது.[139] பாமதி அறிக்கையின் அடிப்படையில் மத்தியப் புலனாய்வுத்துறை விசாரணைக்கு உயர்நீதிமன்றம் உத்தரவிட்டது. இதை எதிர்த்து அரசு மேல்முறையீடு செய்தது. ஆனால் முழுபெஞ்ச், சி.பி.ஐ. விசாரணைக்கு உத்தரவிட்டதை உறுதிப்படுத்தியது. இதை எதிர்த்து தமிழக அரசு உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்தது. உச்சநீதிமன்றம் தமிழக அரசின் மனுவைத் தள்ளுபடி செய்தது. அப்போதைய சி.பி.ஐ. டி.எஸ்.பி. எஸ்.ஜெகநாதன் தலைமையிலானகுழு பல நாட்கள் வாச்சாத்தியில் தங்கி புலனாய்வை மேற்கொண்டது. 23.04.1996ல் சி.பி.ஐ. தனது விசாரணை அறிக்கையை உயர்நீதிமன்றத்தில் தாக்கல் செய்தது. பிறகு சி.பி.ஐ. கோவை நீதிமன்றத்தில் குற்றப்பத்திரிக்கையை தாக்கல் செய்தது.[140]

139. மகளிர் சிந்தனை, டிசம்பர் 1992.
140. தினத்தந்தி, 24 ஏப்ரல் 1996.

1996ம் ஆண்டு குற்றப்பத்திரிக்கையின் அடிப்படையில் சி.பி.ஐ. அனைத்துக் குற்றவாளிகளையும் கைதுசெய்து கோவை மத்திய சிறையில் அடைத்தது. இதற்கெதிராக தருமபுரி, சேலம், கிருஷ்ணகிரி உள்ளிட்ட இடங்களில் குற்றவாளிகளின் உறவினர்கள் சாலைமறியல் போராட்டத்தில் ஈடுபட்டனர். சட்டப்படி நடவடிக்கை எடுப்பதற்கு பதிலாக சட்டவிரோதமாக சிறையில் இருந்தவர்களை விடுதலை செய்தது அன்றைய அரசு.

குற்றப்பத்திரிக்கை தாக்கல் செய்யப்பட்டு ஆறு மாதத்துக்குப் பின்னும் வழக்கு விசாரணைக்கு வராததால், வாச்சாத்தி வழக்கை விசாரிப்பதற்கென்று தனி நீதிமன்றம் அமைக்கக்கோரி தமிழ்நாடு அரசின் தலைமைச் செயலாளரை சந்தித்து, 1996 அக்டோபர் 1ம் தேதி அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் சார்பில் மனு அளிக்கப்பட்டது. பலமுறை வற்புறுத்தியப் பிறகும் இது குறித்து முடிவு எடுக்காமலேயே காலம் தாழ்த்தியது அரசு. இந்தக் கோரிக்கையை வலியுறுத்தி 1997 டிசம்பர் மாதம் 28ம் தேதி அரூரில் சாலைமறியல் போராட்டம் நடத்தப்பட்டது. தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினர் வன்கொடுமை தடுப்புச் சட்டத்தில் தனி நீதிமன்றம் அமைக்க மாநில அரசுக்கு அதிகாரம் உண்டு. ஆனாலும் தனி நீதிமன்றம் அமைப்பதை தவிர்த்தது அரசு.

சம்பவம் நடந்து ஆறு ஆண்டுகள் கடந்தும் வழக்கை மத்திய குற்றப்புலனாய்வு பிரிவு நடத்திக்கொண்டே இருந்தது. வழக்கைத் துரிதப்படுத்தி குற்றவாளிகளை தண்டித்து பாதிக்கப்பட்டப் பெண்களுக்கு நீதி கிடைக்க அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் முயற்சி செய்தது. இருநூற்று அறுபத்தொன்பது பேர் குற்றம்சாட்டப்பட்டுள்ள வழக்கை விசாரித்து தீர்ப்பளிப்பது என்பது நடைமுறை சாத்தியமற்றது என்பதால் தாழ்த்தப்பட்டோர் பழங்குடியினர் வன்கொடுமை தடுப்புச்சட்டம் 1989ன் படி வாச்சாத்தி வழக்கை விசாரிப்பதற்கென்றே ஒரு சிறப்பு நீதிமன்றத்தை அமைக்க அனைத்திந்திய மாதர் சங்கம் தொடர்ந்து முயற்சியை செய்து வந்தது. குற்றப்பத்திரிக்கை தாக்கல் செய்த உடனேயே குற்றச்சாட்டுகளின் தன்மையை பொருத்து நஷ்டஈட்டுத் தொகையில் ஐம்பது சதவிகிதம் பாதிக்கப்பட்டவர்களுக்கு அரசு வழங்கவேண்டும். 1996ல் குற்றப்பத்திரிக்கை தாக்கல் செய்யப்பட்டும் 2000ம் ஆண்டுவரை அரசு நஷ்டஈட்டை

வழங்காததால் உடனே வழங்கக் கோரி ஒரு மனு 2002 நவம்பர் மாதம் உயர்நீதிமன்றத்தில் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் சார்பில் தாக்கல் செய்யப்பட்டது. அதன் பின்னர் ஒருமாத காலத்துக்குள் அரசு நஷ்டஈடு வழங்கவேண்டுமென்று உயர்நீதிமன்றம் உத்தரவிட்டது.[141]

2007 ஏப்ரல் மாதமே நீதிமன்றம் உத்தவிட்டும் அக்டோபர் இறுதிவரை அரசு நஷ்டஈடு வழங்க முன்வரவில்லை. நவம்பர் மாதம் 5ம் தேதி தருமபுரி மாவட்டஆட்சியர் அலுவலகத்தின்முன் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் சார்பில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் கலந்துகொண்டு ஆர்ப்பாட்டம் நடத்தினர். அதன்பிறகு சிறுகச்சிறுக நஷ்டஈடு வழங்கப்பட்டது. குற்றச்சாட்டுகளின் அடிப்படையில் ஆறு பிரிவுகளுக்கு வழங்கவேண்டிய இடைக்கால நஷ்டஈட்டுத் தொகையாக 2,54,06,250 ரூபாய் கோரப்பட்டது. மாதர் சங்கத்தின் நீண்ட போராட்டத்துக்குப்பின் 1,24,00,000 ரூபாய் வாச்சாத்தி மக்களுக்குப் பெற்றுத்தரப்பட்டது. பாத்திரங்கள், துணிமணிகள் போன்ற உதவிகளையும் மற்ற அமைப்புகளோடு இணைந்து வழங்கியது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்.

வாச்சாத்தி சம்பவத்தின் அத்துமீறல் மற்றும் பாலியல் வன்புணர்வு வழக்கு கிருஷ்ணகிரி செஷன்ஸ் கோர்ட்டில் நடந்தது. சாட்சியமளித்த வாச்சாத்தி பெண்களுடன் மாதர் சங்க தலைவர்களான பங்கஜவல்லி, மைதிலி சிவராமன் போன்றவர்களும் சாட்சியமளித்தனர்.

2002ம் ஆண்டு முதல் கிருஷ்ணகிரியிலும் தர்மபுரியிலுமாக இவ்வழக்கு விசாரணை நடந்து முடிந்தது. அனைத்து இடையூறுகளையும் தாண்டி இவ்வழக்கின் தீர்ப்பு 2011ம் ஆண்டு செப்டம்பர் 29ம் நாள் கூறப்பட்டது. மத்திய குற்றப்புலனாய்வுக் கழகத்தால் குற்றம் சாட்டப்பட்ட இருநூற்று அறுபத்தொன்பது பேரில் உயிருடன் உள்ள இருநூற்று பதினைந்துபேருக்கு தண்டனை வழங்கப்பட்டது.[142] மாவட்ட நீதிபதி எஸ்.குமரகுரு அவர்கள் தீர்ப்பை வாசித்தார். வாச்சாத்தி வழக்கில் குற்றம் சுமத்தப்பட்ட இருநூற்று அறுபத்தொன்பது பேருமே

141.மகளிர் சிந்தனை, அக்டோபர் 2012.
142. *மேலது*, நவம்பர் 2011.

குற்றவாளிகள் என்றும் இறந்துபோன ஐம்பத்து நான்கு பேர் தவிர உயிரோடுள்ளவர்களுக்கு தண்டனை மற்றும் அபராதம் விதித்துத் தீர்ப்பளித்தார். நான்கு ஐ.ஃஎப்.எஸ். அதிகாரிகள் உட்பட வனத்துறையைச் சேர்ந்த நூற்று இருபத்தாறு பேர், காவல்துறையைச் சேர்ந்த எண்பத்து நான்கு பேர், வருவாய்த்துறையைச் சேர்ந்த ஐந்து பேர் தண்டனைப் பெற்றனர். அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் தொடர்ந்த போராட்டம் அதன் இறுதி இலக்கை எட்டியது.

## தேசியப் பெண்கள் கமிஷன்

வீட்டிலும் வெளியிலும் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகள் அதிகரித்து வருகின்றன. பெண்கள் பலாத்காரம் செய்யப்படுவது, துன்புறுத்தப்படுவது, வரதட்சணைக்காக எரிக்கப்படுவது போன்றவற்றைத் தடுக்க பல சட்டத்திருத்தங்கள் கொண்டுவரப்பட்ட பின்னும் இக்குற்றங்களுக்காகத் தண்டிக்கப்படுபவர்கள் மிகச் சிலரே.

அரசு நேரடியாக நடத்தும் நிறுவனங்கள், அரசின் உதவியோடு நடத்தப்படும் நிறுவனங்கள் ஆகிய பலவற்றில் சம ஊதியச்சட்டம், மகப்பேறு விடுப்புச்சட்டம், குறைந்தபட்ச ஊதியச்சட்டம் போன்ற பலச் சட்டங்கள் மீறப்படுகின்றன. இப்படிப்பட்ட அரசின் பல அத்துமீறல்களையும் கண்காணித்து அவற்றை எதிர்த்து கண்டிப்பாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமானால் அரசியல் அமைப்புச்சட்ட அந்தஸ்தோடு, கூர்மையான பல்லுள்ள ஒரு பெண்கள் கமிஷன் அமைக்கப்படவேண்டும் என்பது மாதர் இயக்க அனுபவத்தின் அடிப்படையில் எழுந்தக் கோரிக்கை.

1971ம் ஆண்டு ஐ.நா.சபையின் வேண்டுகோளின்படி பெண்களின் நிலைபற்றி ஆராய ஒரு தேசியக்குழு நியமிக்கப்பட்டது. அக்குழு பெண்களின் சமூக பொருளாதார நிலைகளில் பெண்களின் உரிமை மற்றும் சட்டம், வேலைவாய்ப்பு, கல்வி, அரசியல் பங்கேற்பு, நலப்பிரச்சனைகள் போன்றவற்றை ஆராய்ந்தது. அக்குழு சமுதாயத்தில் ஏற்பட்ட மாறுதல்கள் பல வகைகளிலும் பெண்களை பாதித்துள்ளது என்று கூறியது.

மேலும் பெண்களுடைய உரிமைகளைப் பாதுகாப்பதற்காக இயற்றப்பட்டச் சட்டங்கள் பெண்களிடம் எந்த பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை எனவும் தெரியவந்தது. இந்த உரிமைகளை உண்மையாகவும் பொருளுடையதாகவும் ஆக்குவதற்கான முயற்சிகளை பரிந்துரை செய்தது. இதைத் தொடர்ந்து 1975ம் ஆண்டு சர்வதேசப்பெண்கள் ஆண்டு கொண்டாடப்பட்டதும் அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டதும் அக்குழுவுக்கு ஒரு பலமாக அமைந்தது.

கட்டாய பதிவுத் திருமணமுறை இருக்கவேண்டும். 1961ல் கொண்டுவரப்பட்ட வரதட்சணை தடுப்புச்சட்டம் இதன் இலக்கை செயல்படுத்த தவறியது. இந்தச் சட்டத்துக்குக்கீழ் எந்த ஒரு வழக்கையும் கொண்டுவரவில்லை. இச்சட்டத்தில் பரிசுப்பொருட்கள் என்ற பெயரில் எல்லாப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. அவை ஐநூறு ரூபாய்க்குள் இருக்கவேண்டும் என்றும் கூறியது. இது மிகப்பெரிய பலவீனமாக கருதப்பட்டது. இந்திய அரசாங்கம் அரசியலமைப்பின் விதிகளைப் பின்பற்றி பெண்களின் வளர்ச்சிக்கான கொள்கைகளை வகுக்கவேண்டும். பெண்களின் நிலை பற்றி ஐ.நா.குழு தனது இருபத்தைந்தாவது அறிக்கையில் தேசிய ஆணையம் ஒன்றை ஏற்படுத்தி அதன் மூலம், கல்வி, உடல்நலம், வேலைவாய்ப்பு போன்றவைகளை கிடைக்க ஏற்பாடு செய்யவேண்டும், இந்தப் பரிந்துரையை மத்திய அரசும் மாநில அரசுகளும் ஏற்றுச் செயல்படுத்த வேண்டும் என்ற பரிந்துரையை செய்து 1975ம் ஆண்டு ஜனவரி 1ம் தேதி அறிக்கை சமர்ப்பித்தது.[143]

1990ம் ஆண்டு வி.பி.சிங் ஆட்சியில் தேசியப் பெண்கள் கமிஷன் சட்டம் இயற்றப்பட்டது.[144] மாதர் இயக்கங்களின் சுமார் பதினேழு ஆண்டுகால கோரிக்கை நிறைவேறியதை ஜனநாயக மாதர் சங்கம் வரவேற்றது. அதேசமயம் இச்சட்டம் மாதர் அமைப்புகளின் எதிர்பார்ப்புகளை முழுமையாக நிறைவேற்றவில்லை என்ற எதார்த்தம் உணரப்பட்டது. 'தேசியப் பெண்கள் கமிஷன் எதிர்நோக்கும் சவால்கள்' என்ற தலைப்பில் சென்னையில் பல்வேறு மாதர் அமைப்புகள் ஏற்பாடு செய்த கூட்டம் நடைபெற்றது. இதில் தலைமையேற்ற தேசியப் பெண்கள் கமிஷனின்

143. ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.495.
144 . Women's Equality, Quarterly Bulletin of AIDWA, April-June, 1992, Vol.V, No.2.

உறுப்பினரும், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க மத்தியக்குழு உறுப்பினருமான சுபாஷினிஅலி கமிஷன் எந்தெந்தப்பணிகளுக்கு முன்னுரிமை அளிக்கிறது என்பது குறித்தும் கமிஷனின் அதிகார வரையறை குறித்தும் நம்பிக்கை அளிக்கும்படி பேசினார்.[145]

இவ்வாறு மிகுந்த எதிர்பார்ப்புகளுடன் சில மாநிலங்களில் இயற்றப்பட்ட கமிஷன்கள் அடிப்படையில் பலவீனமாகவே அமைந்து மாதர் அமைப்புகளுக்கு ஏமாற்றம் அளித்தது. தேசியப் பெண்கள் கமிஷன் சட்டப்படி, கமிஷனில் கீழ்க்கண்ட துறைகளுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும். சட்டம், தொழிற்சங்கம், தொழிற்சாலை, நிர்வாகம், மாதர் அமைப்புகள், பொருளாதார மேம்பாடு, ஆரோக்கியம், கல்வி மற்றும் சமூக நலத்துறை.

தமிழ் மாநிலச் சட்டத்தில் இத்தகைய பரந்த பிரதிநிதித்துவத்துக்கு இடமில்லை. இதன் அமைப்பும் அரசாணை அடிப்படையில்தான். சட்டத்தின் அடிப்படையில் அல்ல. பொதுவாகவே பெண்கள் விஷயங்கள் ஓரங்கட்டப்படும் சூழலில் கமிஷனுக்கு சட்ட அந்தஸ்து இன்றியமையாதது ஆகிறது. தேசியக் கமிஷன் உறுப்பினர்கள் அனைவருமே மாத ஊதியம் பெறும் முழுநேர ஊழியர்கள் என்பதற்கு மாறாக தமிழ்நாடு கமிஷன் உறுப்பினர்கள் அனைவரும் பகுதிநேர ஊழியர்கள் என்பதும் அதன் அந்தஸ்தை தாழ்த்துகிறது.

தமிழ் மாநிலக் கமிஷனின் பணிகள், அதிகாரங்கள் ஆகியவற்றைப் பொருத்தமட்டில் தேசியக் கமிஷன் சட்டத்திலிருந்து பல அம்சங்கள் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆனால் அவற்றை செயல்படுத்தத் தேவையான முக்கிய அதிகாரம் கொடுக்கப்படவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. புகார்மீது விசாரிக்கத் தேவைப்படும் தகவல்கள், ஆவணங்கள் ஆகியவற்றை அரசு இலாக்காக்கள் கமிஷனுக்கு அளிக்க வேண்டும் என்று மட்டுமே அரசாணைக் கூறுகிறது. கொடுக்கத்தவறியவர்கள், காலதாமதம் செய்பவர்கள்மீது மேலிடத்தில் முறையீடு செய்யலாம். இதுகூட அரசு நிறுவனங்களுக்கே பொருந்தும்; தனியார் துறைகளுக்கு

145. தினமணி, 31 ஆகஸ்ட் 1992.

பொருந்தாது. இத்துறையிலுள்ள ஏராளமான அலுவலகங்களும் ஆலைகளும் விதிவிலக்குகள்.

இந்தியப் பெண்கள் கமிஷனுக்கு ஒரு சிவில் நீதிமன்றத்துக்குள்ள அதிகாரங்கள் அளிக்கப்பட்டுள்ளது. ஒருவரை அழைத்து விசாரிக்கவும் நீதிமன்றம் அல்லது அலுவலகத்திலிருந்து ஆவணங்களை வரவழைக்கவும் அதிகாரம் உண்டு. இந்த ஆணைகளை மறுத்தவர்கள் நீதிமன்றத்தை அவமதித்த குற்றத்துக்கு ஆளாவார்கள். ஒரிஸா மாநில அமைச்சர் ஒருவர் பொது நிகழ்ச்சி ஒன்றில் தன்னிடம் தவறாக நடந்துக் கொண்டதாக தேசியக் கமிஷனிடம் ஒரு பெண் முறையிட்டபோது சம்பந்தப்பட்ட அமைச்சரை விசாரணைக்கு அழைத்தது தேசியப் பெண்கள் கமிஷன்.[146]

பெண்கள் சம்பந்தப்பட்ட அனைத்துப் பிரதானக் கொள்கை விவகாரங்களிலும் மத்திய அரசு இக்கமிஷனை கலந்தாலோசிக்கவேண்டும் என்று தேசியக்கமிஷன் சட்டத்தில் கூறப்பட்டுள்ளது. இந்த முக்கிய அம்சம் மாநிலச் சட்டத்தில் இல்லை. இது மாநிலக் கமிஷனின் குறைந்த மதிப்பை மீண்டும் வலியுறுத்துகிறது. இத்தன்மையை மாற்ற மாதர் அமைப்புகள் கீழ்க்கண்ட பரிந்துரைகளை முன்வைத்தது.

◈ மாநிலக் கமிஷன், சட்ட அடிப்படையில் உருவாக்கப்பட்டு சுயமாக செயல்படக்கூடியதாக இருக்கவேண்டும்

◈ கமிஷன் தலைவர் பத்தாண்டு காலமாவது மாதர் இயக்கத்தில் ஈடுபட்டவராக இருத்தல்வேண்டும்

◈ கமிஷன் உறுப்பினர்களில் தலைவர் உட்பட மிகப் பெரும்பான்மையினர் கமிஷன் பணிகளில் முழு நேரமும் ஈடுபடவேண்டும்

◈ கமிஷனுக்கு ஒரு சிவில் நீதிமன்றத்தின் அதிகாரங்கள் கொடுக்கப்பட வேண்டும்

---

146. மைதிலி சிவராமன், *பெண்ணுரிமை . . .,* *முன்குறித்தது,* ப.70.

- மகளிருக்காக வழங்கப்படும் கொள்கைகள், சட்ட திட்டங்கள் பற்றியும் கமிஷனை அரசு கட்டாயமாக கலந்து ஆலோசிக்க வேண்டும்

- கமிஷன் தலைவர் மாநிலத் திட்டக்குழுவில் Ex-officio உறுப்பினராக இருக்கவேண்டும்

- மக்கள்தொடர்பு சாதனங்களில் பெண்கள் முற்போக்கான முறையில் சித்தரிக்கப்படுவதற்கு உதவியாக தொலைக்காட்சி, அகில இந்திய வானொலி, திரைப்படத் தணிக்கைக்குழு ஆகியவற்றுக்கு ஆலோசனை வழங்கும் அதிகாரம் கமிஷனுக்கு இருக்க வேண்டும்

மேலும் 1996ல் தேசியப் பெண்கள் கமிஷன் நடத்திய கருத்தரங்கங்களில் வைக்கப்பட்ட சில பரிந்துரைகள்.

குழந்தை என்ற வார்த்தையின் விளக்கம் பதினெட்டு வயதுக்குட்பட்டோரை உள்ளடக்க வேண்டும். மருத்துவச் சான்றிதழுக்கு காத்திருக்காமல் முதல் தகவல் அறிக்கை உடனடியாகத் தாக்கல் செய்யப்பட வேண்டும். ஏற்கனவே அதிர்ச்சிக்குள்ளாகிய குழந்தைகளிடம் விசாரணையை மிகச் சுருக்கமாக முடிக்கவேண்டும். மிக அத்தியாவசியமான கேள்விகளையே கேட்க வேண்டும். சென்னையில் நடந்த ஒரு பலாத்கார நிகழ்வில் குழந்தையிடம் போலீசார் கேட்ட கேள்விகள் எழுத இயலாத ஆபாசங்கள். அதற்குப்பின் அச்சிறுமி காவல் நிலையத்துக்குப் போகவே மறுத்துவிட்டாள். பெரும்பான்மை வழக்குகளில் குற்றம் சாட்டப்பட்டவர்கள் மருத்துவ அறிக்கையின் அடிப்படையிலேயே நிரபராதி என விடுவிக்கப்படுகின்றனர். ஆகவே இத்தகைய வழக்குகளில் மருத்துவ அறிக்கையின் அடிப்படையில் மட்டுமே தீர்ப்புகள் அமையக் கூடாது.[147]

பல்வேறு குறைகள் இருந்தாலும் 2002ம் ஆண்டு தமிழ் மாநில பெண்கள் ஆணையத்தின் தலைவராக டாக்டர்.வசந்திதேவி நியமிக்கப்பட்டதை அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் வரவேற்றது. அவரது பதவிக் காலத்தில் ஜனநாயக மாதர் சங்கம் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு எதிராக சட்டப்பூர்வ

147. மைதிலி சிவராமன், *சமூகம்–ஒரு மறுபார்வை, முன்குறித்தது*, ப.83.

நடவடிக்கைகளை வலியுறுத்தி மாநில தேசியப் பெண்கள் கமிஷனை அணுகினார்கள். "கமிஷனின் அதிகார வரையறை காரணமாக அந்தந்த பிரச்சனைகளை அதற்கு தொடர்புடைய காவல்துறையினரை வற்புறுத்தும் பணியை மட்டுமே செய்யமுடிந்தது" என்கிறார் டாக்டர்.வசந்தி தேவி.[148]

## 33 சதவிகித இட ஒதுக்கீடு

1920களில் குறிப்பிட்டபிரிவு பெண்களுக்கு மட்டுமே வாக்குரிமை இருந்தது. 1935ல் இந்திய அரசுச்சட்டம் வாக்குரிமை வழங்கியபோதும் அனைத்துப் பெண்களுக்கும் அந்த உரிமை இல்லை. கல்வி, சொத்து போன்றவை வாக்குரிமையைத் தீர்மானிக்கும் காரணிகளாக இருந்தன. 1935ம் ஆண்டுச் சட்டம் நாற்பத்தொரு தொகுதிகளை மாநில சட்டச்சபைகளில் பெண்களுக்கென்று ஒதுக்கியது. 1937ல் புதிய அரசியல் சட்டம் உருவாக்கப்பட்டபொழுது, பெண்களுக்கென இடஒதுக்கீடு செய்யப்படவில்லை. ஆங்கிலேயர் காலத்தில் செய்யப்பட்ட ஒதுக்கீட்டுக்கு மதம் ஒரு அடிப்படையாக இருந்தது.

1952ல் முதல் மக்களவைத் தேர்தலில் 4.4 சதவிகித பெண்கள் மட்டுமே போட்டியிட்டனர். 1976க்குப் பின் பெண்களின் அரசியல் பங்கேற்பு அதிகரிக்க முயற்சிகள் மேற்கொள்ள வேண்டுமென மகளிர் அந்தஸ்து பற்றியக் கமிட்டி பரிந்துரை செய்தது. 1988ல் பெண்களுக்கான தேசிய தொலைநோக்குத் திட்டம் பெண்களுக்கு முப்பது சதவிகிதம் ஒதுக்கீடு செய்யவேண்டுமென்று பரிந்துரை செய்தது. 1993ல் அரசியல் சாசனத்தில் கொண்டுவரப்பட்ட 73 மற்றும் 74வது திருத்தங்கள் பெண்களின் இடஒதுக்கீடு 33 சதவிகிதமாக உள்ளாட்சி அமைப்புகளில் இருக்கவேண்டுமென்று குறிப்பிட்டது.

1996ம் ஆண்டு நடந்த உள்ளாட்சித் தேர்தலில் 33 சதவிகித இடஒதுக்கீட்டின் அடிப்படையில் தமிழகத்தில் நடந்தது. அதில் நாற்பதாயிரத்துக்கும் மேற்பட்ட பெண்கள் உள்ளாட்சி அமைப்புகளுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஜனநாயக மாதர் சங்கத்தைச் சேர்ந்த பெண்களும் குறிப்பிட்ட எண்ணிக்கையில் இருந்தனர்.

---

148. நேர்காணல் : *டாக்டர்.வசந்தி தேவி*, 07 நவம்பர் 2011.

உள்ளாட்சி அமைப்புகளில் பெண்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு செயல்படத் துவங்கியபோது பெண் என்ற முறையில் பல்வேறு பிரச்சனைகளை சந்திக்க வேண்டியிருந்தது.

இதில் மதுரை மாவட்ட லீலாவதிக்கு நேர்ந்த அனுபவம் மிகக் கொடூரமானது. ஜனநாயக மாதர் சங்கத்தைச் சார்ந்த இவர் மதுரை மாநகராட்சியின் கவுன்சிலராக தேர்ந்தெடுக்கப்பட்டார். பதினொரு மாதங்களில் மிகவும் சிறப்பாகச் செயல்பட்டு குடிநீர் விநியோகம், ரேஷன் கடையை முறைப்படுத்துதல், கள்ளச்சாராய எதிர்ப்பு போன்ற நடவடிக்கைகளை மேற்கொண்டார். மக்களின் செல்வாக்கு அதிகரித்து வருவதைப் பார்த்து அப்போதைய ஆளும் கட்சியின் வட்டச் செயலாளரும் மற்றும் சில சமூக விரோதிகளும் சேர்ந்து லீலாவதியைக் கொலை செய்தனர். அதிர்ச்சியடைந்த ஜனநாயக மாதர் சங்கம் பெரும் போராட்டம் நடத்தி தங்கள் கண்டனத்தைத் தெரிவித்தது.

1997ம் ஆண்டு மே மாதம் மதுரையில் மாநில அளவிலான கண்டனப் பொதுக்கூட்டத்தையும் பேரணியையும் நடத்தியது. மூவாயிரத்துக்கும் மேற்பட்ட பெண்கள் தடையைமீறி ஊர்வலமும் சென்றனர். தினசரிப் பத்திரிகைகளும் வாரப்பத்திரிகைகளும் லீலாவதியின் சேவையை புகழ்ந்து எழுதினர். அரசியலில் பெண்கள் பங்குகொண்டால் சமூக விரோத கும்பலால் எத்தகைய அபாயத்தை சந்திக்க வேண்டியிருக்கும் என்பதற்கு லீலாவதியின் படுகொலை ஒரு உதாரணம். அரசியலில் வன்முறை எதிர்த்த போராட்டத்தை தமிழகமெங்கும் கொண்டு சென்றது ஜனநாயக மாதர் சங்கம்.

ஆரம்பத்தில் மாதர் அமைப்புகள் உள்ளாட்சி அமைப்புகளில் இடஒதுக்கீடு கோரின. காலப்போக்கில் பாராளுமன்றம்வரை படிப்படியாக பெண்கள் அதிகம் தேர்ந்தெடுக்கப்படும் நிலைமை ஏற்படும் என்று எதிர்பார்த்தனர். ஆனால் பெண்களைப் பற்றிய பிற்போக்கான சமூகப் பார்வை இதற்கு தடையாகவே இருந்துவந்துள்ளது. சமுதாயத்தின் சரிபாதியாக உள்ள பெண்கள் ஆட்சி அதிகாரம் கொள்கைமுடிவு போன்றவற்றில் பங்கேற்பதுதான் ஜனநாயகத்தை அர்த்தமுள்ளதாக்கும் என்று ஜனநாயக மாதர் சங்கம் கருதியது.

1996ம் ஆண்டு சட்டமன்றம், நாடாளுமன்றத்தில் பெண்களுக்கு 33 சதவிகித இடஒதுக்கீடு அளிக்கும் 81வது அரசியல்சட்ட சீர்திருத்த மசோதா மக்களவையில் தாக்கல் செய்யப்பட்டு இறுதி முடிவுக்காக செலக்ட் கமிட்டிக்கு விடப்பட்டது.[149]

நாடு முழுவதும் பெண்கள் இடஒதுக்கீட்டுக்கு ஆதரவாகவும் எதிராகவும் விவாதம் நடைபெற்றது. கடும் எதிர்ப்புகளுக்கு பிறகு இம்மசோதாவை பல்வேறு அரசியல் கட்சிகளும் ஆதரித்தன. சுமார் பதினான்கு வருடகால போராட்டத்துக்குப் பின் 2010ம் ஆண்டு மார்ச் 9ம் தேதியன்று பெண்களுக்கான இடஒதுக்கீட்டு மசோதா மாநிலங்களவையில் தாக்கல் செய்யப்பட்டது. ஆனால் இன்றுவரை நிறைவேற்றப்படவில்லை.[150] மகளிர் இடஒதுக்கீட்டுக்கான மிக நீண்ட தொடர் போராட்டத்தை நடத்தியதில் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்துக்கு மிகப்பெரிய பங்கு இருக்கிறது.

கிராமத்து மக்கள் அவர்களுக்கு வரும் பிரச்சனைகளை அவர்களே தீர்த்துக் கொள்ளவும், தங்களுடைய முன்னேற்றத்தையும் வளர்ச்சியையும் அவர்களே திட்டமிட்டுச் செயல்படவும் உதவும் ஒரு அமைப்பே பஞ்சாயத்து ராஜ் என்னும் ஊராட்சி அமைப்பாகும். 1989ல் கொண்டுவரப்பட்ட இந்திய அரசியல் சட்டத்தின் 64ம் திருத்தச் சட்டம், புதிய பஞ்சாயத்து அமைப்பை இந்தியாவிலுள்ள எல்லா மாநிலங்களும் ஏற்றுக்கொண்டு நடைமுறைப்படுத்தக் கட்டாயப்படுத்துகிறது.[151]

ஆனால், கடந்த காலத்தில் தொடர்ந்து ஆட்சிக்கு வந்த தமிழக அரசுகள் பஞ்சாயத்துத் தேர்தலை நடத்தாமல் சாக்குபோக்கு சொல்லி வந்தன. இந்தச் சூழ்நிலையில் கடந்த 1994ம் ஆண்டு அதிக விவாதங்களின்றி அவசர அவசரமாக தமிழகச் சட்டசபையில் உருவாக்கப்பட்டதுதான் தமிழ்நாடு ஊராட்சிகள் சட்டம் (1994). நிறைகுறை பல இருப்பினும் பஞ்சாயத்துத் தேர்தலில் பெண்கள் எப்படி செயலாற்ற வேண்டும் என்பதை சுலபமான முறையில் பட்டிதொட்டிகளில் உள்ள பெண்கள் எல்லோரும் புரிந்துகொள்வது மட்டுமல்லாமல் அந்த தேர்தலில்

149. THE HINDU, 18 November 1996.
150. The Indian Express, 10 Mrach 2010.
151. மகளிர் சிந்தனை, ஜூலை 1989.

பங்குகொண்டு வெற்றி பெற்று பஞ்சாயத்து மூலமாக ஆக்கப்பூர்வமான பணிகளைப் புரிந்திட வேண்டும் என்ற திடமான நோக்கத்துடன் அகில இந்திய ஜனநாயக மாதர் சங்கம் ஒரு நூலைத் தயாரித்து வெளியிட்டது.

பஞ்சாயத்துச் சட்டத்தில் 73வது 74வது அரசியல் சட்டத் திருத்தங்கள் மூலம் சில முக்கியமான மாற்றங்களை மத்திய அரசு கொண்டு வந்தது.[152] சட்டத்தின்படி, தமிழகத்தில் இரண்டு அடுக்கு பஞ்சாயத்து இருந்தது. எல்லாப் பதவிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டவையாக இருக்க வேண்டிய கட்டாயமும் கிடையாது. புதிய சட்டத்திருத்தத்தின்படி எல்லா மாநிலங்களிலும் மூன்று அடுக்கு பஞ்சாயத்துக்கள் இருக்கும். ஊருக்கான வளர்ச்சித் திட்டங்களை இவர்களே நிறைவேற்றுவார்கள். இதில் மிக முக்கியமானது பெண்களுக்கு மூன்றில் ஒருபகுதி இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. வார்டு உறுப்பினரிலிருந்து தலைவர் பதவிவரை இந்த ஒதுக்கீடு உள்ளது. தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களுக்கும் மக்கள்தொகை அடிப்படையில் ஒதுக்கீடு உண்டு. இதிலும் பெண்களுக்கான தொகுதிகள் ஒதுக்கப்படும். கிராமம், ஒன்றியம், மாவட்டம் மூன்றிலும் பிரதிநிதிகள் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

இப்புதியச் சட்டப்படி, ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை கட்டாயம் பஞ்சாயத்து தேர்தல் நடத்தவேண்டும். இடையில் காலியிடங்கள் ஏற்பட்டால் அல்லது பஞ்சாயத்து கலைக்கப்பட்டால் ஆறு மாதங்களுக்குள் கட்டாயம் இடைத்தேர்தல் நடத்தவேண்டும். ஆனால் துரதிஷ்டவசமாக, முதல் தேர்தல் பற்றி சட்டத்தில் குறிப்பிடாமல் விட்டதால், அதையே சில அரசுகள் தேர்தலை தள்ளிப்போட பயன்படுத்தின.[153]

1994 ஏப்ரல் மாதம் தமிழ்நாட்டில் மத்திய அரசின் சட்டம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. வந்த ஓராண்டிலிருந்து தமிழ்நாடு மாநில அரசு தேர்தலை நடத்தியிருக்க வேண்டும். தேதியெல்லாம் அறிவித்தும்கூட அன்றைய அரசு தேர்தல் நடத்தாமல் தள்ளிப்போட்டது.

---

152.எங்களுக்கும் காலம் வரும்—*கையேடு*, ப.2.
153. *மேலது*, ப.3.

பஞ்சாயத்துக்கள் மூலமாக மக்களின் ஜனநாயக உரிமைகளை அதிகப் படுத்துவது, சுயாட்சிமுறைகளை வலுப்படுத்துவது, பின்தங்கியவர்களையும் முன்னேற்றமடையச் செய்வது இவையெல்லாம் புதிய பஞ்சாயத்துச் சட்டத்தின் நோக்கமாகும்.

ஆனால் மாநில சட்டங்கள், மாநில அரசிடம் இருக்கும் அதிகாரங்களை கீழ் மட்டங்களுக்கு ஒப்படைக்கும்படியாக இல்லை. மத்திய சட்டத்தின் 11வது அட்டவணைப்படி இருபத்தொன்பது துறைகளின் பணிகள் பஞ்சாயத்துக்களுக்கு ஒதுக்கலாம் என்று பரிந்துரை செய்தது. ஆனால் தமிழ்நாடு மாநிலச் சட்டம் குறுகிய அம்சங்களை மட்டுமே பஞ்சாயத்து நிர்வாகத்துக்கு கொண்டு வந்தது.

நாடாளுமன்றம், சட்டமன்றங்களில் பிரதிநிதிகள்தான் பேசுவார்கள். ஆனால் பஞ்சாயத்துத் தேர்தலில் வாக்களித்தவர்களே நேரடியாக கிராம சபையில் பங்கெடுத்து பேசமுடியும். கேள்விகள் கேட்க முடியும். தவறை சுட்டிக்காட்ட முடியும். மக்களுக்கு பயன்படுகிற விதத்தில் வழிநடத்தமுடியும். இதுதான் ஆட்சி அதிகாரத்தில் பெண்கள் பங்கெடுக்க எடுத்து வைக்கும் முதல் படியாகும்.

கிராமப் பஞ்சாயத்து ஏறத்தாழ ஐநூறு குடும்பங்கள் கொண்ட ஒரு பகுதியாகும். மக்கள்தொகை அடிப்படையில் ஒரு பஞ்சாயத்து இரண்டு அல்லது மூன்று கிராமங்களை உட்கொண்டதாகவும் இருக்கலாம். இந்த ஒவ்வொரு கிராமப் பஞ்சாயத்தை வார்டுகளாகவும் பிரிப்பார்கள். குறைந்தது ஐந்து வார்டுகள் அதிகபட்சம் பதினைந்து வார்டுகளாக இருக்கலாம். மக்கள்தொகை அடிப்படையில் ஆய்வாளர் முடிவுசெய்து அறிவிப்பார். வாக்காளர்களே நேரடியாக வார்டு உறுப்பினர்களை தேர்ந்தெடுப்பார்கள். வார்டு உறுப்பினர்கள் உதவித் தலைவராக ஒருவரை தேர்ந்தெடுக்கலாமே தவிர, தலைவரை தேர்ந்தெடுக்க முடியாது. தலைவரை வாக்கின் மூலமாக வாக்காளர்கள்தான் தேர்ந்தெடுப்பார்கள். பஞ்சாயத்துக்கு இரண்டுவித கடமைகள் உண்டு. ஒன்று நடைமுறைப்பணிகள் மற்றொன்று வளர்ச்சிப் பணிகள்.

நடைமுறைப்பணிகள் :

சாலைகள், சிறுபாலங்கள், அணைகள், சிற்றூர் சாலைகள் அமைத்து பேணி வருதல். சாலைவிளக்கு வசதி, சலவைகுளியல், நீர் வழங்குதல், நீர்நிலைய கட்டுமானம், இடுகாடு ஏற்படுத்தித் தருதல், தெரு துப்பரவு, மாசு அகற்றுதல், பொதுக்கழிப்பிட வகைசெய்தல் போன்றவை நடைமுறைப்பணிகள்.

வளர்ச்சிப் பணிகள் :

சாலையோர மரங்கள் நடுதல் அவற்றைப் பாதுகாத்தல் பொதுச் சந்தை ஏற்படுத்துதல் அவற்றை பேணிவருதல், விழாக்களைப் பார்வையிடுதல், சமூகக்கூடம், பூங்கா, உடற்பயிற்சி மையம், நூலகம் அமைத்தல். மக்கள் பாதுகாப்பு, நலவாழ்வு, பொழுதுபோக்கு வசதிகளுக்கு வகைசெய்தல், ஒதுக்கீடு செய்யப்படாத காடுகள் நிர்வகித்தல், சமுதாயச் சொத்து, அரசு புறம்போக்கு மேய்ச்சல் நிலம், களத்து மேடு போன்றவற்றை நிர்வகித்தல், நீர்ப்பாசனம் போன்றவைகளை செய்வதற்கு இணைக் கமிட்டிகளை நியமிக்கலாம். மத்திய அரசின் நிதி ஒதுக்கீடு, மாநில அரசின் நிதி ஒதுக்கீடு, வரிகள் மூலம் அல்லது வேறு வகையில் நிதி வசூல் என்று நிர்வகிக்கப்பட்டுள்ளது.

அடுத்தது ஊராட்சி ஒன்றியம். இதில் ஐயாயிரம் குடும்பங்கள் அடிப்படையில் ஊராட்சி ஒன்றியங்கள் பிரிக்கப்படும். இதற்குள் வார்டுகள் அறிவிக்கப்படும். வார்டு உறுப்பினர்களை வாக்காளர்கள் தேர்ந்தெடுப்பார்கள். அப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட வார்டு உறுப்பினர்கள் ஒன்றியத் தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள். வார்டு உறுப்பினர்களுள் ஒருவரை அவர்களே தேர்ந்தெடுத்து தலைவராக அறிவிப்பார்கள். உப தலைவரையும் இவர்களே தேர்ந்தெடுப்பார்கள்.[154]

ஊராட்சி ஒன்றியத்துக்கு ஏராளமான பணிகள் இருக்கின்றன. சுகாதார நிலையம், தாய்–சேய் மையம், குடும்பக் கட்டுப்பாடு, ஏழைகளுக்கு வீடுகள், அனாதை இல்லம் கட்டுமானம் செய்தல், வேளாண்மை மேம்பாடு, கால்நடை மருத்துவமனை, பிறப்பு–இறப்பு தொடர்பான புள்ளி விவரங்கள் பேணுதல், தனியார்

154.எங்களுக்கும் காலம் வரும், *முன்குறித்தது*, ப.12.

தொடக்கப் பள்ளிகளுக்கு மானியம், குடிசைத்தொழில் வளர்ப்பு, தேசிய விரிவாக்கப் பணித்திட்டங்களை நிறைவேற்றும் பொறுப்பு போன்றவைகள்.

மாவட்ட அளவில் தேர்ந்தெடுக்கப்படும் பஞ்சாயத்து, மூன்றாவது அடுக்கு உள்ளாட்சி அமைப்பு. இதில் மக்கள்தொகை அடிப்படையில் வார்டுகள் பிரிக்கப்பட்டிருக்கும். இந்த வார்டு உறுப்பினர்களும் வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இதன் தலைவரையும் உபதலைவரையும் வார்டு உறுப்பினர்களே தேர்ந்தெடுப்பார்கள். பஞ்சாயத்து தலைவர் மட்டும் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவார். மற்ற இரண்டு அடுக்கிலும் (நடு, மேல்) வார்டு உறுப்பினர்கள்தான் தேர்ந்தெடுப்பார்கள். இதுதவிர இந்த மாவட்ட வாக்காளர் பட்டியலில் இடம்பெறும் எம்.எல்.ஏ., எம்.பி. இதன் உறுப்பினர்கள் ஆவார்கள். மேலும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களில் ஐந்தில் ஒரு பகுதி அடிப்படையில் ஊராட்சி ஒன்றிய சேர்மன்கள்தான் மத்தியிலிருந்து அனுப்பி வைப்பார்கள்.

இதன் முக்கிய வேலைகள் ஊராட்சி ஒன்றியம் மற்றும் கிராமப் பஞ்சாயத்து அனுப்பும் ஆண்டறிக்கைகளை வைத்துத் திட்டங்களை சரிபார்த்து ஆலோசனைக் கொடுக்க வேண்டும். சில குறிப்பிட்டத் துறைகளில் மற்ற இரண்டடுக்கு பஞ்சாயத்துக்களின் வேலைகளை கண்காணிக்கும். அவை உணவு மற்றும் வேளாண்மை, தொழில்கள், தொழிலாளர்நலம் மற்றும் கூட்டுறவு, பொதுப் பணிகள், மக்கள் நலவாழ்வு, கல்வி மற்றும் உள்ளாட்சி நிர்வாகம்.[155]

மேற்கூறிய வகையில் தமிழக அரசு நிறைவேற்றிய சட்டத்தைத் தொடர்ந்து ஜனநாயக மாதர் சங்கம் பெண்கள் மத்தியில் அவர்களுக்கு கிடைத்திருக்கும் இந்த அறிய வாய்ப்பு குறித்துப் பல விழிப்புணர்ச்சிக் கூட்டங்களை நடத்தியது. பெண்கள் உள்ளாட்சி அமைப்புகளில் இடம் பெறுவதால் எவ்விதமான நன்மைகள் ஏற்படும் என்பதற்கு சில வாதங்களை முன்வைத்தார்கள்.

வீட்டு நிர்வாகத்தை திறம்பட நடத்தும் அனுபவம் பெண்களுக்கு கிராம நிர்வாகத்திலும் கைக்கொடுக்கும். மைல் கணக்கில் நடந்து தண்ணீர் சுமந்துவரும்

---

155.எங்களுக்கும் காலம் வரும், *முன்குறித்தது*, ப.14.

பெண்கள் கையில் அதிகாரம் கிடைத்தால் அவர்களால் அதற்கான தீர்வை தேடமுடியும் என்று கூறியதுடன் இலவச சட்ட உதவி மையத்துடன் இணைந்து கையேடு ஒன்றையும் வெளியிட்டது. அதில் அன்றாடப் பிரச்சனைகளான தண்ணீர்ப் பிரச்சனை, கழிப்பறைப் பிரச்சனை, புறம்போக்கு நிலத்தில் மாட்டுக்கான தீவனம் உற்பத்தி செய்து தேவையுள்ளவர்களுக்குக் கிடைக்க ஏற்பாடு செய்தல், கள்ளச்சாராயம் ஒழிப்பு போன்றவற்றில் பெண்கள் தீவிரமாக செயல்பட முடியும் என்று எடுத்துக் கூறப்பட்டது.[156]

## தலித் பெண்கள்

இந்தியா விடுதலைப் பெற்று ஐம்பது ஆண்டுகள் கடந்த பின்னர் தீண்டாமை கொடுமை சுதந்திர இந்தியாவில் இன்னமும் தொடர்கிறது. 1996ம் ஆண்டு முதல் தென் மாவட்டங்களில் சாதிக்கலவரங்கள் தொடர்ந்து நடைபெற்றுள்ளன. திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங்களில் துவங்கிய கலவரம் பின்னர் விருதுநகர் மாவட்டத்தை பாதித்து ராமநாதபுரம் வரை பரவியது. நூற்றுக்கும் மேற்பட்ட உயிர்கள் இக்கலவரங்களில் பலியாகின. லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள சொத்துக்கள் கொள்ளையடிக்கப்பட்டு சூறையாடப்பட்டன.

ஆரம்பத்தில் இடதுசாரி இயக்கங்கள் சாதிய ஏற்றத்தாழ்வுகளை ஒரு பொருட்டாக கருதவில்லை. மார்க்சிய கொள்கையின்படி வர்க்கப்பாகுபாடு ஒன்றே பலப் பிரச்சனைகளின் ஊற்றுக்கண். இந்தப் பார்வை உலகில் பல்வேறு நாடுகளுக்கும் பொருந்தக் கூடியதுதான். ஆனால் இந்தியாவில் புரையோடிப்போயிருந்த சாதிய ஏற்றத்தாழ்வுகள் வர்க்க ஏற்றத்தாழ்வுகளையும் மீறி குரூர முகம் காட்டின. ஆங்காங்கே சாதி அமைப்புகள் உருவாகி தங்களது உரிமைகளுக்காகவும் மனித உரிமை மீறல்களுக்காகவும் குரல்கொடுக்க ஆரம்பித்தபோது தலித் மக்களும் மிகவும் பிற்படுத்தப்பட்ட மக்களும் அவற்றின்பால் ஈர்க்கப்பட்டனர். இந்தப்போக்கு இடதுசாரிகளின் கட்டமைப்பில் மெல்லிய அதிர்வுகளை ஏற்படுத்தியது.

---

156.எங்களுக்கும் காலம் வரும், *முன்குறித்தது*, ப.14.

தேசம் முழுவதிலும் வர்க்க ரீதியாக ஒடுக்கப்பட்ட மக்கள் இருந்தாலும் அவர்களுக்கிடையில் சாதிரீதியாக ஒடுக்கப்பட்ட மக்களின் வலியும் வேதனையும் தனித்தன்மை வாய்ந்தது என்பதை உணர்ந்து கொண்டனர் இடதுசாரிகள். சாதி ஏற்றத்தாழ்வை ஒதுக்கிவிட்டு வெறும் வர்க்க அடிப்படையில் ஜனநாயக உரிமையை நடத்த முடியாது என்பதும் தெளிவாயிற்று. பெண்கள் பிரச்சனைக்கு தொடர்ந்து குரல் கொடுத்து வந்த ஜனநாயக மாதர் சங்கம் இந்தப் புதிய சவாலை ஏற்றுக் கொண்டது. தலித் மக்களின் மத்தியில் அதிகபட்சமாக ஒடுக்குமுறைக்கு ஆளாகும் தலித் பெண்கள்மீது தங்கள் கவனத்தைத் திருப்பினார்கள்.

வர்க்க ரீதியான ஒடுக்குமுறை, சாதிய ரீதியான ஒடுக்குமுறை, பால் ரீதியான ஒடுக்குமுறை என மூன்று வகையான ஒடுக்குமுறைக்கு தலித் பெண்கள் உள்ளாகிறார்கள். சென்னையில் மற்ற மாதர் அமைப்புகளோடு இணைந்து ஆதிதிராவிட நலத்துறை செயலரை அழைத்து கருத்தரங்கை நடத்தினார்கள். இந்தக் கருத்தரங்கில் ஐநூறு பெண்கள் கலந்துகொண்டனர். இது தமிழகத்தில் தீண்டாமைக் கொடுமை எந்த அளவுக்கு வேரோடியிருக்கிறது என்பதைக் காட்டியது.

தலித் பெண்கள் மாநாட்டை தூத்துக்குடி, திண்டுக்கல் மாவட்டம் ஒட்டன்சத்திரம், புதுக்கோட்டை மாவட்டம் கறம்பக்குடி, கடலூர் மாவட்டம் குறிஞ்சிப்பாடி ஆகிய இடங்களில் அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் நடத்தியது. இம்மாநாடுகளின்போது களஆய்வு செய்து தீண்டாமையின் வடிவங்களைக் கண்டறிந்து அவற்றை முன்வைத்தனர். மாநாட்டில் பங்கெடுத்த தலித் பெண்கள் தாங்கள் அனுபவித்து வரும் தீண்டாமைக் கொடுமைகளை உணர்ச்சி பூர்வமாக கூறினார்கள்.

மாநாட்டில், கிராமங்களில் இரண்டு அல்லது மூன்று டம்ளர் முறை இருந்து வருகிறது மேல் சாதியினர் தெருவுக்குள் செருப்பணிந்து செல்ல முடிவதில்லை கோயில்களுக்குள் தலித் மக்கள் செல்ல முடிவதில்லை. தாழ்த்தப்பட்ட பெண்கள் பொதுக் குழாய்களில் தண்ணீர் பிடிக்க செல்லுகிறபோது அவமானப்படுத்தப்படுகிறார்கள். பொது சுடுகாடுகளில் தலித் மக்களுக்கு அனுமதி

மறுக்கப்படுகிறது, தலித் மாணவிகள் கிராமங்களில் சைக்கிளில் செல்ல முடிவதில்லை என்ற கருத்துக்களை தெரிவித்தார்கள்.[157]

விருதுநகர் மாநாட்டில் தீர்மானித்தப்படி 2002ம் ஆண்டு செப்டம்பர் 12ம் நாள் கஸ்தூரி நினைவு தினத்தன்று தீண்டாமை கொடுமைகளைக் கண்டித்து திருச்சி, நாகை, திருவாரூர், பெரம்பலூர், தஞ்சை மாவட்டங்களில் எழுச்சியான மறியல் போராட்டத்தை நடத்தியது ஜனநாயக மாதர் சங்கம். அதில் ஆயிரத்து முந்நூற்று மூன்று பெண்கள் கலந்துகொண்டனர். கலந்துகொண்ட பெண்களில் எழுபத்தாறு சதவிகிதம் தலித் பெண்கள். எந்தப் பகுதி பெண்களுக்காகப் போராடுகிறோமோ, அவர்களது பங்கேற்பும் அவசியம் என ஜனநாயக மாதர் சங்கம் கருதியது.[158]

தலித் மக்களின் அடிப்படை பிரச்சனை தீண்டாமைதான். ஆனாலும் அவர்கள் மேற்கொள்ளும் தொழிலும், வாழும் சூழ்நிலையும் அவர்களின் வாழ்க்கைத் தன்மையை நிர்ணயிக்கின்றன. இதற்கு மிகச் சிறந்த உதாரணம்தான் கிழக்கு மாவட்டம். திருப்பூரின் பல பகுதிகளில் வசிக்கும் இம்மக்கள் நகராட்சியின் கீழ் பணிபுரியும் நகரசுத்தி தொழிலாளர்கள். பெண்களின் வருமானம்தான் முழுமையாக குடும்பத்துக்கு பயன்படுகிறது. வேலையில் ஏற்படும் அருவறுப்பு காரணமாக ஆண்கள் குடிப்பதாக கூறினாலும், அதே பணியை மேற்கொள்ளும் பெண்கள் பெரும்பாலும் இப்பழக்கத்துக்கு ஆளாவதில்லை. ஆனாலும் பெண் தொழிலாளர்களை வேலைக்கு எடுப்பதில்லை. 1992ல் சிதம்பரனார் மாவட்டம் நாலுமூலைக் கிணறு கிராமத்தில் தலித் மக்கள் பெரும்பான்மையாக வசிக்கும் பகுதியில் காவல் துறையினர் துப்பாக்கிச்சூடு நடத்தினர். இதனை எதிர்த்து அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் சிதம்பர மாவட்டச் செயலாளர் மல்லிகா உச்சநீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தார். அவரது தொடர் முயற்சியால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணம் கிடைத்தது. அதனால் அவரை

157.தீக்கதிர், ஜனவரி 1999.

158.மாநாட்டு அறிக்கை, தமிழ் மாநில 11வது மாநாடு, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், திருச்சிராப்பள்ளி, 6,7,8 ஆகஸ்ட் 2008.

முன்னெச்சரிக்கை என்ற பெயரில் கைதுசெய்து அச்சுறுத்தினர். ஆனாலும் அவர் இதுபோன்ற பழிவாங்கும் நடவடிக்கைக்காக பின்வாங்கவில்லை.

சிவகங்கை மாவட்டம், படமிஞ்சி கிராமத்தைச் சேர்ந்த அழகம்மை ஊட்டச்சத்து பணியாளராக பணிபுரிந்தார். இவர் தந்தையிடம் இருந்த ஒரு ஏக்கர் நிலத்தை தன் பெயருக்கு மாற்றச் சொல்லி கணவரால் அச்சுறுத்தப்பட்டார். இதனை ஏற்க முடியாத அழகம்மை விவாகரத்துப் பெற்றார். ஆனால் கிராம அம்பலக்காரர் கட்டப்பஞ்சாயத்து நடத்தி அவரை அவமானப்படுத்தினார். பாதிக்கப்பட்ட தலித் பெண்ணான அழகம்மைக்கு ஜனநாயக மாதர் சங்கம் துணை நின்றது.

திண்டுக்கல் மாவட்டம் நீலமலைக் கோட்டை கிராமத்தில் உள்ள தலித் பெண்களுக்கு அரசின் உதவித் திட்டங்கள் சென்று சேராத நிலை இருந்தது. கார்ப்பிணிப் பெண்களுக்கு அரசு தரும் டாக்டர்.முத்துலட்சுமி மகப்பேறு உதவித்திட்டம் மூலம் வழங்கப்படும் நிதியுதவி கிடைக்கவில்லை. காரணம் கிராம செவிலியர் ஜோதி தன் கடமையிலிருந்து தவறியதுதான். அவர்மீது நடவடிக்கை எடுக்கக் கோரி ஜனநாயக மாதர் சங்கம் ஆர்ப்பாட்டம் நடத்தியது. பேச்சுவார்த்தையின் இறுதியில் தலித் பெண்களுக்கு நிவாரணம் கிடைத்தது. ஜோதி அவர்களிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டார்.

மதுரை மாவட்டம் உத்தபுரம் கிராமத்தில் தலித் மக்கள் தீண்டாமைக் கொடுமையை அனுபவித்து வந்தார்கள். அவர்கள் வசிப்பிடத்தை சுற்றிச் சுவர் எழுப்பப்பட்டிருந்தது. 12.07.2010 அன்று மார்க்சிஸ்ட் கட்சி உத்தபுரத்தில் போராட்டம் நிகழ்த்தியபோது அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கமும் தீவிரம் காட்டியது.[159] மிக நீண்ட போராட்டத்துக்கு பிறகு தீண்டாமை சுவர் உடைக்கப்பட்டு தலித் மக்களுக்கு நீதி கிடைத்தது.

**மக்கள்தொகை கொள்கை**

சுமார் ஐம்பத்தைந்து ஆண்களாக இந்தியாவில் பெண்கள் கருத்தடைச் சாதனங்களின் பரிசோதனைக் கூடங்களாக பயன்படுத்தப்பட்டு வருகின்றனர்.

---

159. தீக்கதிர், 13 ஜூலை 2010.

இப்பெண்களுக்கு தாங்கள் பயன்படுத்தும் கருத்தடைச் சாதனங்களின் விளைவுகள் பற்றித் தெரிவதில்லை. பிரசவம் முடிந்து வீடு திரும்பும் பெண்களுக்கு அனைவருக்கும் காப்பர்–டி பொருத்தி அனுப்ப வேண்டும் என்று அரசு உத்தரவுப் பிறப்பித்தது. நோக்கம் நல்லது என்பதால் இம்மனிதஉரிமை மீறல் நியாயமாகாது.

World Watch Institute என்ற அமைப்பின் ஆய்வறிஞர் ஜோடி ஜேக்கப்சன் "இந்தியாவின் மக்கள்தொகை கட்டுப்பாடு திட்டங்களில் உள்ள குறைபாடுகளின் காரணமாக கருத்தடை சாதன முறைகளை உபயோகிக்கும் பெண்களின் விகிதாச்சாரம் குறைவாகவும் இத்திட்டங்களின்மீது அவர்களுக்கு அவநம்பிக்கையும் சந்தேகமும் அதிகமாகவும் உள்ளது. ஒரு பொருளாதார சக்தி என்ற முறையில் இந்தியப் பெண்கள் நீண்ட காலமாக புறக்கணிக்கப்பட்டு வந்துள்ளனர். அதேசமயம் இந்தியக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தினர் பெண்களை விடாப்பிடியாக தொடர்ந்து கொண்டு இருக்கின்றனர். இவர்கள் தரமான மருத்துவ வசதிகளைப் பெறுவதற்குரியவர்கள் என்பதால் அல்ல. மக்கள்தொகைக் குறியீடுகளின் துப்பாக்கி இலக்குகள் என்பதால்" என்று கூறுகிறார்.

கடந்த சில ஆண்டுகளில் கருத்தடை சாதனங்களாக விளம்பரப்படுத்தப்பட்டவை "டெபோ ப்ரொவெரா" என்ற மூன்று மாதங்களுக்கு ஒருமுறை போட்டுக்கொள்ள வேண்டிய அமெரிக்க ஹார்மோன் ஊசியும் மற்றும் இடது முழங்கை சதைக்குள் பொருத்திக் கொள்ள வேண்டிய "நார்ப்ளான்ட்" என்ற மாத்திரையும் ஆகும்.

டெபோ ப்ரொவெரா பெண்களின் உடல் நலனை பாதிக்காது என்று அமெரிக்கா கூறும் முன்பே அதை இந்தியாவில் திணிப்பதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இதற்கு சில மாதர் இயக்கங்கள் எதிர்ப்பு தெரிவித்தன. அதனால் அது தற்காலிகமாக நிறுத்தப்பட்டது.[160]

நார்ப்ளான்ட் ஹார்மோன் மாத்திரைகள் ஐந்து ஆண்டுகள்வரை கருத்தரிப்பைத் தடுக்கக் கூடியது. இது இந்திய மக்கள்தொகை பிரச்சனைக்கு ஒரு

---

160. மைதிலி சிவராமன், *பெண்ணுரிமை . . . ,* *முன்குறித்தது,* ப.51.

வரப்பிரசாதம் என்று வர்ணிக்கப்பட்டது. இதை பயன்படுத்தும் பெண்களுக்கு தொடர்ந்து மருத்துவ கண்காணிப்பு அவசியம். இதனால் காசநோய் முதல் புற்றுநோய்வரை வரும் அபாயம் உள்ளது. இம்மாத்திரைகள் உடலிலிருந்து வெளியே எடுக்காவிட்டால் உடலுக்கு தொடர்ந்து பாதிப்புகளை ஏற்படுத்தும். வேலைதேடி இடம்விட்டு இடம் பெயரும் பெண்களுக்கு இது சாத்தியமல்ல என்று மாதர் அமைப்புகள் இதற்கு கடும் எதிர்ப்பு தெரிவித்தன.[161]

1989ம் ஆண்டுவரை தமிழகத்தில் ஐநூறு பெண்களுக்கு நார்ப்ளான்ட் மாத்திரைகள் பரிசோதனைக்காக பொருத்தப்பட்டது. 1997ல் சென்னையிலுள்ள தாய்–சேய் மருத்துவமனையில் இருபது பெண்களுக்கு இம்மாத்திரை பொருத்தப்பட்டது. இவர்கள் அனைவரும் கண்காணிக்கப்பட்டு வருகிறார்களா அவர்களுடைய அனுபவம் என்ன என்பதை அரசு கவனம் செலுத்துகிறதா என்று மாதர் அமைப்புகள் குரல் எழுப்பின.[162] இதன் விளைவுகளை புரிந்துக் கொள்ளக்கூடிய நகரவாசிகளுக்கு மட்டும் இது பொருத்தப்படும் என்று அரசு மருத்துவர்கள் கூறினார்கள். மக்கள்தொகைக் கட்டுப்பாட்டை தீவிரப்படுத்த வேண்டும் என்று உலக வங்கியிடமிருந்து உத்தரவு வந்தால் இம்மாத்திரைகள் ஏழைஎளியப் பெண்களுக்கு பொருத்தப்படும் என்றும் இதைத் தவிர்க்க வேண்டுமென்றும் மாதர் அமைப்புகள் கண்டனம் தெரிவித்தது.

கருக்கலைப்பு செய்து கொள்வதை சுலபமாக்கும் சட்டம் 1971ம் ஆண்டு இயற்றப்பட்டது.[163] இதன் பின்னரும் கர்ப்பத்தைக் கலைத்துக் கொள்ளும் அதிகாரம் பெண்களுக்கு முழுமையாக கிடைக்கவில்லை. இக்காரணத்தினால் கர்ப்பிணிகளில் பத்தில் ஒரு பகுதியினர் இறக்கின்றனர்.

கேரளாவுக்கு அடுத்தபடியாக பிறப்பு விகிதத்தை குறைத்துள்ளது தமிழகம் என்று கூறுகிறது அரசு. குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சைகளுக்கு பெண்களைத் தேடி பிடிக்கின்றனர் கிராமப்புற கடைநிலைப் பெண் ஊழியர்கள்.

---

161. மகளிர் சிந்தனை, ஏப்ரல் 1994.
162. *மேலது.,*
163. மைதிலி சிவராமன், முன்குறித்தது, ப.53.

அதிகமான குழந்தை இறப்பு விகிதம், வயதான காலத்தில் பெற்றோர்கள் குழந்தைகளை சார்ந்திருக்க வேண்டிய நிலைமை, ஆண்குழந்தைப் பெற வேண்டும் என்ற நிர்பந்தம், குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டத்தை செயல்படுத்துவோர் மக்களின் உணர்வுகளை மதிக்காமல் அலட்சியமாக நடத்தும்போக்கு, பெண்களின் தாழ்ந்த அந்தஸ்து, வறுமை போன்றவை குடும்பக்கட்டுப்பாட்டு திட்டம் நாட்டு மக்களிடம் எடுபடுவதில்லை. இப்பிரச்சனைகளை தீர்க்காமலேயே இலக்குகளை அடைய வேண்டுமென்று அரசு செயல்படுகிறது.

மூன்றாவது குழந்தையைப் பெறும் பெண் அரசு ஊழியர்களுக்கு ஊதியத்தோடுக்கூடிய பேறுகால விடுப்பு மறுப்பு, ஊதிய உயர்வு தடுப்பு, பணிக்கால வெட்டு போன்றவைகள் நடப்பில் உள்ளன. தமிழ்நாட்டில் பெண் அரசு ஊழியர் மூன்றாவது குழந்தையைப் பெற்றுக்கொண்டவுடன் அறுவை சிகிச்சை செய்துகொள்ளவில்லை எனில் அவருடைய விடுப்பு ஊதியம் பிடிக்கப்படும். ஆனால் ஆண் ஊழியர்களுக்கு அவ்வாறான விதிகள் கிடையாது.

மூன்றாம் குழந்தை பற்றிய கட்டுப்பாட்டை தொழிற்சாலை, சுரங்கம், கடை, நிறுவனம் போன்றத் துறைகளில் உழைக்கும் பெண்களுக்கு அரசு பேறுகால ஆதாயச் சட்டத்தை மாற்றப்போவதாக செய்தி வெளிவந்தது. இது நடைமுறைக்கு வந்தால் ஊதியத்தை இழக்க இயலாத பெண்கள் மூன்றாம் பிரசவத்துக்குப்பின் உடன் வேலைக்குப் போவதால் உடல்நலம் பாதிக்கப்படும். தாய்ப்பாலின் அவசியம் பற்றி உரக்கப் பேசப்படும் காலத்தில் பச்சிளம் குழந்தைகள் பால்புட்டிகளின் தயவில் விடப்படும். இரண்டும் பெண் குழந்தைகளாக இருந்தால் ஆண் குழந்தை பெற்றுக்கொள்ள இரண்டாவது திருமணம் செய்பவர்களின் பட்டியல் நீளும். இந்த விளைவுகளுக்கு பயந்து பல பெண்கள் வேலையை விடும் சூழ்நிலை ஏற்படும். ஸ்கேன் செய்து ஆணா–பெண்ணா என்று பார்ப்பதனால் கருச்சிதைவு செய்துகொள்ளும் பழக்கம் அதிகமாகும். மேலும் பெண்ணின் சமூகப் பொருளாதார அந்தஸ்து தாழ்வடையும் சூழ்நிலை உருவாகும் என்று மாதர் அமைப்புகள் கருதின.

இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் குடும்பக் கட்டுப்பாடு திட்டங்கள் மீது மாதர் இயக்கத்தின் கவனம் மற்றும் செயல்பாடுகள் தீவிரமடைந்தது.

மக்கள்தொகை கட்டுப்பாட்டை மாதர் இயக்கம் எதிர்க்கவில்லை. உண்மையில் கருத்தடைச் சாதனங்களுக்கான ஸ்தாபன ரீதியான கோரிக்கை முதல்முறையாக பெண்கள் அமைப்புகளிடமிருந்து சுதந்திரத்துக்கு முன்பே எழுந்தது. ஆனால் 1987–1997 வரையிலான காலக்கட்டத்தில் பெண்ணின் மறுஉற்பத்தி ஆற்றல் நாட்டிற்கே மிகப்பெரிய அபாயம் என்றும் இதை நிர்பந்தம் உட்பட அனைத்து முறைகளையும் உபயோகித்து கட்டுப்படுத்த வேண்டும் என்ற ஒரு கருத்து உருவாக்கப்பட்டது. டாக்டர்.சுவாமிநாதன் தலைமையில் ஏற்படுத்தப்பட்ட மக்கள்தொகை கொள்கை குழுவின் நகல் அறிக்கையிலும் இத்தகைய கருத்து மாதர் சங்கங்களை பீதியடைச் செய்திருக்கிறது. குடும்பக்கட்டுப்பாடு பற்றி அரசின் அணுகுமுறைமீது மாதர் இயக்கத்தின் நிலைபாட்டை பிரபல பெண்ணியலாளர் டாக்டர்.வீணாமஜூம்தார் விளக்கியிருக்கிறார்.[164] இந்திய மக்கள்தொகை கட்டுப்பாட்டுத்திட்டத்தை ஒட்டிய மாதர் இயக்கத்தின் விமர்சனம் மற்றும் கோரிக்கைகளில் முக்கியமானவைகள்.

மக்கள்தொகை அதிகரிப்புக்குப் பெண்ணே பிரதான குற்றவாளியாக்கப்பட்டு திட்டங்களும் அவளையே குறி வைக்கின்றன. ஆணுக்குச் செய்யப்படும் அறுவை சிகிச்சை எளியதாக இருந்தும் குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சைகளில் தொண்ணூற்று ஆறு சதவிகிதம் பெண்களே செய்து கொள்ளுகின்றனர். இத்தகைய பொறுப்புக்களை ஆணும் பெண்ணுமாக சமமாகப் பகிர்ந்து கொள்ளும் வகையில் அரசின் திட்டங்கள் மாற்றப்பட வேண்டும். ஒரு தாய் என்ற ரீதியில் குழந்தைப் பிறப்பைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற கோணத்திலிருந்து மட்டுமே பெண்ணின் உடல்நலப் பிரச்சனைகள் அணுகப்படுகின்றன. ஒரு மனிதப் பிறவிக்குரிய ஆற்றல்களோடும் கண்ணியத்தோடும் அவள் வாழவேண்டும் என்பதற்காக அல்ல.[165]

பெண்களுக்குத் தரமான இலவச மருத்துவ வசதிகள், கல்வி, வேலை வாய்ப்பு போன்றவற்றை அளிப்பதற்கு அரசு போர்க்கால அடிப்படையில் செயல்படவேண்டும். இதுவே குடும்பக்கட்டுப்பாட்டு திட்டங்கள் வெற்றியடையக் கூடியச் சூழலை உருவாக்கும். வளர்ச்சியடைந்த நாடுகளில் உபயோகிக்கப்படும்

---

164. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.57.
165.மேலது, ப.58.

கருத்தடைச் சாதனங்களை நம்நாட்டுப் பெண்களின்மீது சுமத்துவதை நிறுத்தவேண்டும். தங்களுக்குத் தேவையான கருத்தடைச் சாதனங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் சுதந்திரம் நம் பெண்களுக்கு உண்டு என்ற அரசின் கூற்று நடைமுறை உண்மையல்ல. பல்வேறு சாதனங்களின் விளைவுகள் பற்றிய தகவல்கள் அவர்களுக்கு கிடைப்பதில்லை. சில கருத்தடைகளை உபயோகப்படுத்துவதற்கு தேவையான வசதிகளைக் கொண்ட ஆரம்ப சுகாதார மையங்கள் மிகக் குறைவானவையே. துணைச் சுகாதார மையங்களில் இச்சாதனங்கள் இல்லை. குடும்பக்கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்வதற்கான வசதிகள் நாற்பது சத மையங்களில் மட்டுமே இருக்கின்றன. பிரசவத்துக்கு முன்பு தேவையான வசதிகளும்கூட கிடையாது என்று மாதர் இயக்கங்கள் தங்கள் கருத்துக்களை முன்வைத்தன.

மேலும் கருத்தடைகள் பெண்களுக்கு கிடைப்பதால் மட்டுமே அவர்களுக்கு தங்கள் மறுஉற்பத்தி ஆற்றல்மீது ஆளுமை ஏற்பட்டுவிடுவதில்லை. பெண்ணடிமைத்தனத்தை ஒழித்து அவர்களின் சமூக அந்தஸ்தை உயர்த்தாமல் கருத்தடைத் தொழில்நுட்பத்தையே அதிகமாக சார்ந்துள்ளநிலை மிகக்குறுகிய கண்ணோட்டமாகும். வளர்ச்சியே மிகச் சிறந்த கருத்தடை என்ற இந்திய அரசின் கோஷம் சர்வதேச அரங்கங்களில் பிரகடனம் என்ற அளவில் நின்றுவிட்டது. இந்தியாவின் பொருளாதார நெருக்கடிக்கு மக்கள்தொகைதான் பிரதானக் காரணம் என்ற பார்வையே ஒரு அடிப்படைக் கோளாறு. இதனால் நடைமுறை செயல்பாட்டில் எழுந்துள்ள பிரச்சனைகள் பெண்களை அதிகம் பாதித்துள்ளது. குடும்பக் கட்டுப்பாடு இலக்குகளை பூர்த்தி செய்ய வேண்டுமென்று சமூக நல ஊழியர்களை கெடுபிடி செய்வது, மூன்றாம் குழந்தைப் பெற்றுக்கொண்ட உழைக்கும் பெண்களுக்கு விடுப்பு இல்லை என்பது போன்ற தண்டனைகள் உடனடியாக நிறுத்தப்பட வேண்டும்[166] என்று மேலும் எடுத்துக் கூறியது.

புதிய பொருளாதாரக் கொள்கையின் கீழ், மருத்துவத்துக்கான நிதிஒதுக்கீடு குறைக்கப்படும் சூழலில் மருத்துவ வசதிகள் அளிக்கும் பொறுப்பை வணிக ரீதியான தனியார் அமைப்புகளுக்கு விட்டுவிடும் போக்கு, பெண்களின்

166. மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.59.

ஆரோக்கியத்தை மேலும் பாதிக்கிறது. தேர்தல்களில் பங்கு கொள்வோருக்கு இரு குழந்தைகளுக்குமேல் இருக்கக் கூடாது என்ற டாக்டர்.சுவாமிநாதன் குழுவின் ஆலோசனை இறுதியானால் பஞ்சாயத்து அமைப்புகளில் முப்பத்துமூன்று சதவிகிதம் பெண்கள் பங்கேற்கும் உரிமையானது, எட்டு லட்சம் பெண்களில் கணிசமானவர்களுக்கு மறுக்கப்படும். இதன்மூலம் தங்கள் வாழ்நிலையின்மீது ஓரளவு ஆளுமையை ஏற்படுத்திக் கொள்வதற்கான நல்ல வாய்ப்பு பறிக்கப்படும் என்றும் புதிய மக்கள்தொகை கொள்கையை உருவாக்கும் அதிகாரத்தை ஒரு குழுவிற்கு விட்டுவிடாமல் ஒரு தேசிய விவாதத்தை நடத்த வேண்டும் என மாதர் அமைப்புகள் கோரிக்கை விடுத்தன.[167]

## உலக மகளிர் தின வரலாறு

1908ம் ஆண்டு நியூயார்க்கில் துணி உற்பத்தித் தொழிலில் ஈடுபட்ட பெண்கள் தங்களுடைய தொழில் சம்பந்தப்பட்ட நிலைகளில் மாற்றம்செய்ய வேலை நிறுத்தம் செய்தனர். இந்த நடவடிக்கையை அமெரிக்க சோஷலிஸ்ட் கட்சி பாராட்டி பிப்ரவரி 28ம் நாளை உலக மகளிர் தினமாக அறிவித்துக் கொண்டாடியது.

1910ம் ஆண்டு உலக சோஷலிஸ்ட் கட்சி, கோபன் ஹேகனில் கூடியது. இதனைத் தொடர்ந்து பல நாடுகளும் பொதுவாக மார்ச் 19ம் நாளை உலக மகளிர் தினமாக அறிவித்தன. இம்மாநாட்டில் பதினேழு நாடுகளைச் சார்ந்த நூற்றுக்கும் மேற்பட்ட பெண்கள் கலந்துகொண்டனர். இம்மாநாடு உலக நாடுகளிடையே மகளிர்தினம் குறித்த விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியது. இதனால் ஆஸ்திரேலியா 1911ல் மார்ச் 19ம் நாளையே உலக மகளிர் தினமாக அறிவித்து மாநாடு நடத்தியது. இதனைத் தொடர்ந்து ஜெர்மனி, சுவிட்சர்லாந்து, டென்மார்க் போன்ற நாடுகளும் மகளிர் தினத்தைக் கொண்டாடுவதாக அறிவித்தன. இம்மாநாடுகளில் பெண்கள் வேலையில் சேர்ந்து பயிற்சி பெறவும் ஆண்–பெண் வித்தியாசமின்றி இருக்கவும் உரிமைகளைக் கேட்டுக் கொண்டனர். பெண்களுக்கு வாக்குரிமையும் பொது அலுவலகங்களில் வேலைபார்க்கும் உரிமையையும் வலியுறுத்தினர்.

---

167.மைதிலி சிவராமன், *முன்குறித்தது*, ப.60.

1972ம் ஆண்டு டிசம்பர் 18ம் நாள் கூடிய ஐ.நா.சபை 1975ம் ஆண்டை பன்னாட்டு மகளிர் ஆண்டாக கொண்டாட வேண்டுமென தீர்மான எண் : 3010 XXVII-ன் படி அறிவித்தது. ஐ.நா.சபையிலுள்ள அனைத்து நாடுகளும், பெண்களின் சபையிலுள்ள அனைத்து நாடுகளும், பெண்களின் உரிமைகளை மேம்படுத்தவும், பெண்களுக்கெதிரான வேறுபாட்டை ஒழிக்கவும் ஒத்துழைப்புத் தரவேண்டும் என்றும் கேட்டுக் கொண்டது.

பன்னாட்டு மகளிர்தின கருத்தரங்கு 1975ம் ஆண்டு ஜூன் 19 முதல் ஜூலை 2ம் தேதி வரை நடைபெற்றது. இம்மாநாட்டில் நூற்று முப்பத்துமூன்று நாடுகள் கலந்துகொண்டன. கலந்துகொண்ட ஆயிரம் உறுப்பினர்களில் எழுபது சதவிகிதத்தினர் பெண்கள். முப்பது அம்சங்களைக் கொண்ட தீர்மானத்தை நிறைவேற்றியது.

ஆண்–பெண் சம உரிமை, குடும்பத்திலும் மற்றும் சமூகத்திலும் ஆண்–பெண் சம வாய்ப்புக்கள், ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே மாதிரியான பணி என்றால் ஒரே மாதிரியான ஊதியம், பெண்கள் சமூக, பொருளாதார, கலாச்சார அமைப்புகளில் முழுமையாக கலந்துகொள்ளும் உரிமை, பெண்களுக்கு எதிராக அமைக்கப்படும் ஆண்களின் உரிமைகளை அகற்றுதல் போன்றவைகள் இடம்பெற்றன. இதில் இந்தியா சார்பாக எஸ்.கோச்சார், பிரபா ராவ், மார்கரெட் ஆல்வா, சகினா ஏ.ஹஸன் மற்றும் சியாமளா பாப்பு போன்றோர் கலந்துகொண்டனர்.

இந்தியாவில் பன்னாட்டு மகளிர் ஆண்டில் சிறப்பான திட்டங்கள் பெண்களுக்காக நிறைவேற்றப்பட்டன. அந்த ஆண்டில் பெண்களுக்கு சட்டவசதிகள் அளிக்கப்பட்டன. பெண்களின் வேலைவாய்ப்பு, உடல்நலம், குடும்பக்கட்டுப்பாடு, சத்துணவு, கல்வி போன்ற விஷயங்களில் சட்டங்கள் கொண்டுவரப்பட்டது. தேசியச் சட்டம் ஒன்று ஏற்படுத்தப்பட்டு பெண்கள் குடும்பங்களை எவ்வாறு திட்டமிடல் வேண்டும் என்று எடுத்துரைத்தது. இச்சட்டம் பெண்களைப்பற்றியத் தாழ்வான அபிப்ராயங்களை மாற்ற உதவியது. பெண்களது சட்ட, சமூக, பொருளாதார உரிமைகளைப் பற்றிய விழிப்புணர்வையும் ஏற்படுத்தியது. அரசின் சமூக நலத்துறை பெண்களது தேவைகளை அறிய பல

மாநாடுகளை நடத்தியது. இதனைத் தொடர்ந்து பல மாநில அரசுகள் பெண்களின் பிரச்சனைகளை கவனத்துடன் அணுகியது. கருத்தரங்கங்களின் மூலம் குழந்தைத் திருமணம், விபச்சார ஒழிப்பு, வரதட்சணை, மூட நம்பிக்கை ஆகியவற்றால் பெண்களுக்கு உள்ள பாதிப்பை அதிகமாக விவாதித்தன.[168]

நியூயார்க் நகரில் நெசவுத்தொழில் செய்து கொண்டிருந்த பெண்கள் கூலி உயர்வுக்காகவும் வேலை நேரக் குறைப்புக்காகவும், பாலியல் கொடுமையைக் கண்டித்தும் 1857ம் ஆண்டு மார்ச் 8ம் நாள் வேலை நிறுத்தம் செய்தனர். 1903ம் ஆண்டும் அதேநாளில் வேலைநேரமான பதினாறுமணி நேரத்தைக் குறைக்க வேண்டுமெனவும், பாலியல் கொடுமையைத் தடுத்துநிறுத்த வேண்டுமெனவும், வாக்குரிமை வேண்டுமெனவும் கோரி மீண்டும் போராட்டம் மற்றும் வேலைநிறுத்தம் செய்தனர்.

1909ம் ஆண்டு, மன்ஹாட்டனில் பெண்கள் தம் கோரிக்கைகளை வலியுறுத்திப் பேரணி நடத்தினர். அதில் சுமார் இரண்டாயிரம் பெண்கள் கலந்துகொண்டனர். அந்த ஊர்வலம் பெண்களுக்குச் சமூக மற்றும் அரசியல் உரிமைகள் வேண்டுமென வலியுறுத்தி நடத்தப்பட்டது. அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி முதலிய நாடுகளிலும் பெண்கள் போராட்டம் நடத்தினர். இதற்கு பெருவாரியான தொழிற்சங்கங்கள் ஆதரவு தந்தன. மேலும் வாக்குரிமை, சமூக அந்தஸ்து ஆகிய கோரிக்கைகளுக்கும் ஆதரவு பெருகியது.

1910ம் ஆண்டு, ஜெர்மன் நாட்டில் கிளாரா ஜெட்கின் என்பவரின் தலைமையில் கோபன் ஹேகனில் சோஷலிசப் பெண்களின் இரண்டாவது சர்வதேச மாநாடு நடந்தது. அதில் ஜனநாயக உரிமைகள், சமாதானம், தேசிய சுதந்திரம் ஆகியவற்றுக்காக உழைக்கும் பெண்களுக்கு பெண்கள் தினமொன்று அறிவிக்க வேண்டும் என்ற கோரிக்கையும் வைக்கப்பட்டது.

எனவே, மார்ச் 8ம் தேதி போராட்டத் தினமாக இருந்ததால் அந்தத் தினம் அன்றிலிருந்து உழைக்கும் பெண்கள் தினமாகக் கடைப்பிடிக்கப்பட்டது. ஜெர்மனி, டென்மார்க் உள்ளிட்ட பல்வேறு உலக நாடுகள் மார்ச் 8ம் தேதியை பெண்கள்

---

168.ப.சு.சந்திரபாபு, இல.திலகவதி, *முன்குறித்தது*, ப.640.

தினமாக கொண்டாடின. ரஷ்யாவில் தொழிற்புரட்சி ஏற்பட பெண்கள் தினமும் ஒரு காரணம்.

இதனை தொடர்ந்து 1975ம் ஆண்டு மார்ச் 8ம் தேதியை சர்வதேசப் பெண்கள் தினமாக ஐ.நா.சபை அறிவித்தது. அதற்குப்பிறகு பெண்கள் தினம் கொண்டாடப்பட்டு வருகிறது. ஐ.நா. சபை பெண்கள் தினத்தை அறிவித்த பிறகு உலக நாடுகள் பெண்களுக்குச் சமஉரிமை கொடுக்க முன்வந்தன.

இத்தினத்தின்போது, இந்தியாவில் தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம், இடஒதுக்கீடு, பெண்கள்மீதான வன்முறை, வேலை செய்யும் இடத்தில் பாலியல் கொடுமை, விலைவாசி உயர்வு ஆகியவை குறித்து கூட்டங்கள் நடத்தப்பட்டன. மேலும் பெண்கள் அமைப்புகள் இந்தத் தினத்தைத் தங்களின் கோரிக்கைகளை வலியுறுத்தும் தினமாக கடைப்பிடித்து வருகிறது.[169]

தமிழகத்தில் பல்வேறு அமைப்புகள் மகளிர் தினத்தை பெண்களுக்கு மரியாதைத்தரும் ஒரு தினமாகவே பரவலாக கொண்டாடுகின்றனர். சமீபகாலமாக மகளிர் தினத்தையொட்டி புடவைக் கடைகளிலும் நகைக் கடைகளிலும் பெண்களுக்கு சலுகைகள் தரப்படுகின்றன. சர்வேதச மகளிர் தினம் என்பது ஒரு கொண்டாட்ட நிலையில் நீர்த்துபோன நிலையிலும் ஜனநாயக மாதர் சங்கம் ஒவ்வொரு ஆண்டும் ஏதேனும் ஒரு பிரச்சனையை முன்வைத்து மகளிர் தினத்தை அனுசரிக்கிறது. உதாரணமாக 1991ம் ஆண்டு சர்வதேச மகளிர் தினம் மதவாத எதிர்ப்பு தினமாகவும் போர் எதிர்ப்புத் தினமாகவும் கொண்டாடப்பட்டது.[170]

ஜனநாயக மாதர் சங்க செயல்பாடுகளை வரலாற்று ரீதியாக ஆராயும்போது கம்யூனிச கொள்கைகளின் அடிப்படையில் பெண் சமத்துவத்தை வலியுறுத்தி ஜனநாயக ரீதியான போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தியிருப்பது தெளிவாகிறது. பல்வேறு படிநிலைகளைக் கடந்து வந்திருக்கும் இந்த இயக்கத்தின் போராட்ட வரலாறு இந்தியப் பெண்களின் அரசியல், சமூக, பொருளாதார மற்றும் கலாச்சார கூறுகளை உள்ளடக்கிய பன்முகத்தன்மை கொண்டதாகவே உள்ளது.

169. மகளிர் சிந்தனை, மார்ச் 2011.
170. Women's Equality, Quarterly Bulletin of AIDWA, April-June 1991, Vol.IV, No.2.

## முடிவுரை

இந்திய மாதர் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் நமது சமுதாய வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றிருக்கிறது. சென்னையில் தோன்றி நாடு முழுவதிலும் கிளைகளைக் கொண்டிருந்த இந்த அமைப்பு, தேசிய அந்தஸ்தைப் பெற்றிருந்த அகில இந்தியப் பெண்கள் மாநாடு என்ற அமைப்பின் ஒரு அங்கமாகவும் ஓர் காலகட்டத்தில் இயங்கியது. அதே சமயம் சென்னையை மையப்படுத்திய அதன் செயல்பாடுகள் ஒரு தனிப்பட்ட அடையாளத்தையும் இந்த அமைப்புக்கு ஏற்படுத்தியிருக்கிறது என்றால் அது மிகையாகாது.

தமிழ்நாட்டுப் பெண்களை பொருத்தவரையில் பொது வாழ்க்கையில் ஈடுபடுவதற்கான சூழ்நிலை அமையவில்லை என்றே கூறலாம். வடநாட்டில் காங்கிரஸ் மாநாடுகளில் கலந்துகொண்டு திரும்பிய கல்கி ஆனந்த விகடனில் (01.07.1927) கட்டுரை ஒன்றை எழுதினார். "வடநாட்டில் காங்கிரஸ் மாநாடுகளில் நம்பிக்கையூட்டும் காட்சியைக் கண்டேன். அங்கே பெண்கள் சகஜமாக மாநாட்டுப் பந்தலில் பொதுச் சேவையில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். ஆண்களும் அவர்களை மிகுந்த மரியாதையுடன் நடத்துகிறார்கள். ஆனால் இங்கு தமிழ்நாட்டில் ஒரு பெண் தெருவில் நடந்தால் போதும் அதற்கு முன் பெண்களையே பார்த்திராதவர்கள்போல் ஆண்கள் அவர்களை உற்று நோக்குகிறார்கள். தெருவில் இறங்கி நடக்கவோ, கடற்கரையில் உலாவவோ நமது பெண்கள் தயக்கம் காட்டுகிறார்கள். காரணம் ஆண்களின் இந்த உற்றுநோக்கும் கீழ்மைகுணம். இந்த நிலை எப்போதுதான் மாறப் போகிறதோ" என்று தன் ஆதங்கத்தை பதிவு செய்திருக்கிறார். கல்கியின் கூற்று அப்போது நிலவிய பெண்களுக்கு எதிரான சமூகத் தடைகளுக்கு ஓர் முக்கிய ஆதாரமாகும்.

இத்தகைய சூழலில் பெண்களுக்கான ஒரு இயக்கமாக இந்திய மாதர் சங்கத்தின் தோற்றமும் அதன் வளர்ச்சிப் படிகளும் வரலாற்றில் முக்கிய நிகழ்வுகளாக அமைகின்றன.

இந்திய மாதர் சங்கத்தில் இந்தியப் பெண்கள் மட்டுமல்லாமல் ஐரோப்பிய பெண்மணிகளும் அங்கம் வகித்தார்கள். அன்னிபெசன்ட், மார்கரெட் கசின்ஸ்

ஆகிய முன்னணிப் பெண்கள் இந்தியாவைத் தாயகமாக கொண்டவர்கள் இல்லை. ஆனால் அவர்கள் இந்தியப் பெண்களின் பின்தங்கிய நிலைமை குறித்து அக்கறைக் கொண்டிருந்தார்கள். இந்திய மாதர் சங்கத்தின் வளர்ச்சியில் ஆர்வம் காட்டிய ஐரோப்பிய பெண்மணிகள் காலனி ஆதிக்கத்திற்கு எதிரானவர்களே. முக்கியமாக அன்னிபெசன்ட் அம்மையார் காலனி ஆதிக்கத்திலிருந்து இந்தியர்கள் விடுபட வேண்டும் என்று முழு மூச்சுடன் பாடுபட்டார். தன்னாட்சி இயக்கம் என்ற இயக்கத்தையே நடத்திக் காட்டியவர். இவர்களைத் தவிர ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்த பெண்களில் சிலரும் இந்தியப் பெண்களின் முன்னேற்றத்தில் அக்கறைக் கொண்டிருந்தனர். உதாரணமாக லிட்டன் பிரபுவின் சகோதரியான லேடி கான்சிடன்ஸ் லிட்டன் இங்கிலாந்தில் பெண்களின் வாக்குரிமைக்காக போராடி இரண்டு முறை சிறை சென்றவர். பல்வேறு நாடுகளிலும் உள்ள பெண்களின் நிலைமை, அவர்களின் போராட்டம் குறித்த செய்திகளைத் திரட்டி இந்திய மாதர் சங்கத்திற்கு அனுப்பி வைத்தவர்.

இவ்வாறாக உலகெங்கிலும் பெண்களுக்கான தனிப்பட்ட அடையாளமும் உரிமைகோரும் இயக்கங்களும் வலிமை பெற்றபோது இந்திய மாதர் சங்கம் அதன் ஒரு அங்கமாகவே தோற்றம் கண்டது.

1927ல் அகில இந்திய அளவில் சட்டபூர்வமான மாற்றங்களைக் கோரும் வலிமையான ஓர் அமைப்பாக இந்திய மாதர் சங்கம் உருவாக்கிய அமைப்புதான் அகில இந்தியப் பெண்கள் மாநாடு. இரண்டு அமைப்புகளும் ஒன்றுக்கொன்று ஆதரவாக செயல்பட்ட போதிலும் மாநிலத்துக்கு வெளியே அனைத்திந்திய பெண்கள் மாநாடுதான் பரவலாக அறியப்பட்டது. நாளடைவில் அனைத்திந்திய பெண்கள் மாநாட்டின் ஒரு அங்கமாக இந்திய மாதர் சங்கம் இயங்கத் தொடங்கியது. ஆனாலும் சென்னை மாகாணத்தில் மிக வீரியமுடன் செயல்பட்டு பல்வேறு சமூக மாற்றங்களை விரைவுபடுத்திய பங்கு இந்திய மாதர் சங்கத்துக்கு உண்டு. இந்தக் காலக்கட்டத்தில் தமிழகத்தைச் சேர்ந்த கல்விகற்ற பெண்களின் அடையாளமாகவே இந்த அமைப்பு இருந்தது.

பெரும்பாலும் உயர்வகுப்பை சேர்ந்தவர்களும் செல்வந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் இதன் தலைமைப் பொறுப்பை ஏற்றாலும்கூட ஓரளவு மத்தியதரவர்க்க பெண்களையும் இந்த இயக்கம் ஈர்த்திருந்தது.

ஆரம்பத்தில் சுயேச்சையான ஒரு இயக்கமாகத்தான் இது தோன்றியது. முக்கியமாக அகில இந்தியப் பெண்கள் மாநாடு அரசியலை தவிர்த்து இயங்க வேண்டும் என்ற குறிக்கோளை பகிரங்கமாக அறிவித்தது. இதற்கு என்ன காரணம் என்றால் அரசாங்கத்தைப் பகைத்துக் கொள்ளாமல் அவர்களை முறைப்படி அணுகி, கோரிக்கைகளை முன்வைத்து மாநாடுகளில் தீர்மானங்களைக் கொண்டுவந்து வலியுறுத்துவதன் மூலம் பெண்களுக்கு பல சலுகைகளைப் பெற்றுத் தரலாம் என்று இந்த அமைப்பினர் நம்பினர். 1930களுக்குப் பிறகு அவர்களது நிலைபாடு மாறிப் போனது. நேரடியாகவே அரசியலில் பங்குகொள்ளத் தொடங்கினர். இந்த மாற்றத்திற்கு காரணம் இந்த இயக்கத்தின் வாக்குரிமைக்கான கோரிக்கை. ஆண்களுக்கு சமமாக வாக்குரிமை கோரும்போது அதேபோன்ற சமமான பங்களிப்பை அரசியல் ஈடுபாட்டிலும் நிரூபிக்க வேண்டிய கட்டாயம் நேர்ந்தது. தொடர்ந்து நடந்த உப்பு சத்தியாகிரகம் சட்டமறுப்பு இயக்கம் ஆகியவற்றில் பங்குகொண்டு பெரும்பாலான இந்திய மாதர் சங்கப் பெண்கள் சிறைச் சென்றனர்.

உத்வேகம் பெற்ற தமிழகப் பெண்கள் தங்களுக்கென்று ஓர் அமைப்பை ஏற்படுத்திக்கொண்டு தங்கள் உரிமைகளை வலியுறுத்தியபோது அது எத்தன்மையதாக இருந்தது என்பது கேள்விக்குரியது. இதற்கு விடை தேடவேண்டுமானால் அந்தக்காலக்கட்டத்தில் முன்வைக்கப்பட்ட கருத்தியலையும் நாம் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும்.

காலனித்துவ காலத்திலும், அதற்கு பின்வந்த காலத்திலும் பெண்களுக்கான விடுதலைக் கருத்தியல் ஆண்களால் முன்வைக்கப்பட்ட போது, பெண் பலவித முரண்பட்ட பால்நிலை சம்பந்தப்பட்ட கருத்தியல்களுக்கு முகங்கொடுக்க வேண்டியவளாய் இருந்தாள். இவற்றில் ஒன்றே தேசியவாத எல்லைகளுக்குட்பட்டதுமாகும். இந்தியப் பெண்களது குணங்களும் செய்கைகளும் இந்திய சமூக, சமய பாரம்பரியத்தின் வெளிப்பாடுகள். இவை நமது நாகரிகத்தின்

உன்னத வெளிப்பாடுகள். இந்திய தர்மத்தின் ஒட்டு மொத்தமான பிரக்ஞை. அவை மேலைநாட்டு பண்பாட்டுக்கும் அதனை வெளிப்படுத்தும் பெண்களது பண்புக்கும் நேர் எதிரானவை. இந்திய எதிர்க்கருத்தியலானது, பெண்களையும் அவர்களது பெண்மைக்குரிய குணங்களையும் மேற்குலக நாகரிகத்திற்கு எதிரான, ஆனால் தாழ்வாகக் கருதப்பட முடியாத கீழைத்தேச சமூக, சமய பாரம்பரியத்தின் மேன்மைக்குரிய கூட்டு வெளிப்பாடு எனக் கொள்கிறது. இதனோடு ஒப்பிடுகையில் மேற்கத்தைய நாகரிகம் என்பது உயிரற்ற அறிவுவாதமாகும். இத்தகைய கருத்துடையோரில் காந்தியும் ஒருவராவார். அவரது தேசிய விடுதலைக் கோட்பாடான அகிம்சையோடு பெண்கள் விடுதலையையும் சேர்த்துக் கொண்டார். புராணகால இந்தியப் பெண்களான சீதை, தமயந்தி போன்ற பெண்களைப் பாராட்டியதோடு அத்தகைய பெண்களையே எக்காலத்துக்கும் உரிய இந்தியப் பெண்களின் மாதிரிகளாகக் கொண்டார். பாரம்பரியமாக இருந்துவந்த ஆண்–பெண் இருபாலரது நடைமுறை விதிகளில் எவ்வித மாற்றத்தையும் கொண்டுவரக் கூடாது என்பதில் மிகத்தீவிரமான ஒரு கொள்கையைக் கடைப்பிடித்தார்.

அதே சமயம் தமிழகத்தில் தோன்றிய தேசியக் கவிஞர் சுப்ரமணிய பாரதியார், "இன்றே இப்பொழுதே தொடங்குங்கள், அடிமைகளாய் இருப்பதற்கு உடன்படாதீர்கள். ஆண்களுக்குச் சொல்லுங்கள், நாங்கள் உங்களோடு வாழ மறுக்கிறோம் என்று. எல்லா விதத்திலும் நான் உனக்குச் சமமானவள் என சத்தமிட்டுச் சொல்லுங்கள். நீ என்னுடைய சமத்துவத்தை அங்கீகரித்தால் நான் உன்னோடு வாழ்வேன். இல்லையென்றால் நான் சமைக்கமாட்டேன். இவ்வீடு எனக்குமுரியது. ஆகையால் நான் வீட்டிலிருந்து வெளியேறமாட்டேன்" என்று பெண்களை உரிமை முழக்கமிட தூண்டினார்.

இவ்வாறு தேசியவாதிகள் முன்வைத்த பெண்ணிலைவாத கருத்தாக்கம் இந்திய மாதர் சங்க மற்றும் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டு அங்கத்தினரிடையே ஆழமாக ஊடுறுவி இருந்தது. அதேசமயம் இந்தக் கருத்தாக்கம்தான் சமத்துவ கோரிக்கையின் ஆரம்பமாகவும் இருந்தது. பால்ரீதியான சமத்துவம் கோரிய சட்டங்கள் ஏற்படவும் வழிவகுத்தது.

எவ்வாறு தேசியவாதிகள் பெண்களின் உரிமைகள் குறித்து முரண்பாடான கருத்துக்களைக் கொண்டிருந்தார்களோ அவ்வாறே இந்திய மாதர் சங்கம் போன்ற அமைப்புகளும் தேசிய இயக்கத்திற்கு ஆதரவு தெரிவிக்க வேண்டிய நிலையில் இருந்ததால் தங்களது உரிமைக்கான போராட்டத்தில் முரண்பாடுகளை சந்திக்க நேர்ந்தது. 1929ல் வட்டமேஜை மாநாடு பற்றிய அறிவிப்பு வெளிவந்தவுடன் உடனடியாக அரசாங்கப் பிரதிநிதிகளை சந்தித்து அந்த மாநாட்டில் பெண் பிரதிநிதிகளுக்கு இடம் தர வேண்டும் என்ற கோரிக்கையை வைத்தது இந்திய மாதர் சங்கம். இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து வழங்குவது பற்றி விவாதம் செய்வதற்கு மட்டுமே கூட்டப்பட்ட இந்திய தேசிய காங்கிரஸ் இந்த மாநாட்டை புறக்கணிக்க முடிவு செய்தது. வேறு வழியின்றி இந்திய மாதர் சங்கம் தங்களது ஒத்துழைப்பை திரும்ப பெற்றுக் கொண்டது.

இதற்கும் முன்பாக 1927ல் சைமன் குழுவின் வருகை அறிவிக்கப்பட்ட போது பெண்களின் வாக்குரிமைக்காக தொடர்ந்து போராடிக் கொண்டிருந்த இந்திய மாதர் சங்கம் அந்த குழுவுக்கு ஆதரவு நல்கி அதில் பெண் பிரதிநிதிகளை சேர்த்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டது. 1929 பிப்ரவரி மாதம் வந்த சைமன் குழுவில் இந்தியர் எவரும் இடம் பெறாததால் இந்திய தேசிய காங்கிரஸ் அதனை புறக்கணித்தது. வேறு வழியின்றி இந்திய மாதர் சங்கமும் தேசியவாதிகளுடன் ஒத்துழைத்தது.

பெண்களுக்கான வாக்குரிமை போராட்டத்தில் முன்னேற்றம் காண தங்களுக்கு கிடைத்த வாய்ப்பையெல்லாம் இந்திய தேசிய காங்கிரசின் அரசியல் நிலைபாடுக்காக விட்டுத்தர வேண்டிய சூழ்நிலை இந்திய மாதர் சங்கத்தின் அமைப்பாளர்களுக்கு மிகவும் கடினமாக இருந்ததுடன் சோர்வடைய செய்யும் படியும் இருந்தது.

இந்திய மாதர் சங்கமும் அகில இந்தியப் பெண்கள் மாநாடும் இணைந்து சாதித்த சார்தா சட்டம், தேவதாசி முறை ஒழிப்புச்சட்டம் ஆகியவை முக்கிய சாதனைகளாகும். இதைத் தவிர பெண்களுக்கு சொத்துரிமையின் அவசியம் குறித்து தங்களது கூட்டங்களில் விவாதித்தார்கள். ஸ்திரீ தர்மம் பத்திரிகையில்

இது பற்றி பல கட்டுரைகள் எழுதப்பட்டிருக்கின்றன. இந்திய பெண்களை மிகப் பெரிய அளவில் பாதித்த விதவைக் கொடுமையும் மிக ஆழமாக விவாதிக்கப்பட்டது.

ஆரம்பத்தில் இந்தியப் பெண்களுக்கே உள்ள தயக்கத்துடன் மிக மென்மையான முறையில் இந்திய மாதர் சங்கத்தின் குரல் ஒலித்தது. "நாங்கள் மேலைநாட்டுப் பெண்களை போன்ற சுதந்திரத்தை விரும்பவில்லை. குடும்பம் சார்ந்த கடமைகளே எங்களுக்கு மிகவும் முக்கியம். ஒரு மனைவியாக, தாயாக ஆற்ற வேண்டிய கடமைகளை மிகமிக முக்கியமாக கருதுகிறோம். இந்தியப் பண்பாட்டின் அடிப்படைத் தன்மைகளோடு முரண்படாத அதே சமயம் நியாயமான சில கோரிக்கைகளை மட்டுமே நாங்கள் வலியுறுத்துகிறோம்" என்ற தொனியில் பேசாத பெண் தலைவர்களே இந்திய மாதர் சங்கத்தில் இல்லை என்பதற்கு ஸ்திரீ தர்மம் பத்திரிகையின் கட்டுரைகளே ஆதாரமாய் இருக்கின்றன.

ஆனால் இதே தொனி இறுதிவரை நீடிக்கவில்லை. குறிப்பாக வாக்குரிமைக்கான போராட்டத்தில் நேரடி அரசியலில் ஈடுபட்டதும் சிறை சென்றதும் அவர்களை மேலும் வலிமைப்படுத்தியது. லோதியன் கமிட்டி பெண்களுக்கு சொத்துக்களின் அடிப்படையில் கணவனுக்கு வாக்குரிமையிருந்தால் அதே அடிப்படையில் மனைவிக்கும் வாக்குரிமை உண்டு என்றும் ஏற்கனவே வாக்குரிமைப் பெற்ற கணவனின் விதவை மனைவிக்கும் அந்த உரிமை உண்டு என்றும் பரிந்துரைத்ததை இந்திய மாதர் சங்கம் கடுமையாக எதிர்த்தது.

"நாங்கள் சம உரிமைமிக்க குடிமக்கள் என்ற அடிப்படையில் எங்களை தனிநபராகக் கருதி வாக்குரிமை வழங்க வேண்டும். தவிர திருமண உறவு தகுதியின் அடிப்படையில், கணவரின் அந்தஸ்தின் அடிப்படையில் வாக்குரிமை வழங்குவது முறையல்ல. இதனை ஒருபோதும் ஏற்க முடியாது" என்ற வாதம் இந்திய மாதர் சங்கத்தால் முன்வைக்கப்பட்டது. இத்தகைய ஆணித்தனமான வாதங்களை முன்வைப்பதற்கு தமிழகத்தில் நிலவிய அரசியல், சமூக சூழலும் ஒரு முக்கிய காரணம். பெரியாரின் கொள்கைகளும் சுயமரியாதை இயக்கப் பெண்களின்

அணுகுமுறையும் இந்திய மாதர் சங்கப் பெண்கள் மீது தாக்கத்தை ஏற்படுத்தி இருக்கக் கூடும் என்பதை ஆய்வுப் போக்கில் அறிய முடிகிறது.

காலனி ஆதிக்க காலத்திலேயே இந்தியா முழுவதிலும் பரவலாக வளர்ந்தது இடதுசாரி இயக்கம். இதில் ஆரம்பத்தில் இருந்தே பெண்கள் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருந்தார்கள். பெண்கள் சந்திக்கும் பிரச்சனைகளை எதிர் கொள்ளவும் பெண்கள் மத்தியில் இயக்கத்தை வளர்க்கவும் பெண்களுக்கான தனிப்பிரிவின் அவசியம் உணரப்பட்டது.

ஜனநாயக உரிமைகளை காக்கவும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவுமான போராட்டங்களில் பெண்களை முழுமையாக ஈடுபடுத்த இந்திய கம்யூனிஸ்டுகள் முழு மூச்சுடன் பாடுபட்டனர். இடதுசாரி இயக்கங்களில் ஈடுபட்ட பெண்கள், பெண்களின் பிரச்சனைகளுக்கு பிரத்யேக கவனம் தேவைப்பட்ட நிலையில் தங்களுக்கென்று தனி அமைப்பை உருவாக்கிக் கொண்டனர்.

இந்திய மாதர் சம்மேளனம் உருவானது. கம்யூனிஸ்ட் கட்சி இரண்டாகப் பிரிந்தபிறகு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பெண்கள் பிரிவாக ஜனநாயக மாதர் சங்கம் உருவாயிற்று. ஏற்கனவே இந்திய மாதர் சம்மேளனத்தில் அங்கம் வகித்த கே.பி.ஜானகியம்மாள், பாப்பா உமாநாத் ஆகியோர் ஜனநாயக மாதர் சங்கத்திற்கு அடித்தளம் வகுத்தனர்.

அகில இந்தியப் பெண்கள் மாநாடு மற்றும் இந்திய மாதர் சங்கம் போன்ற இயக்கங்கள் வலுவிழந்த நிலையில் இடதுசாரிப் பெண்களின் எழுச்சி அரசியல் சமூக வரலாற்றில் ஒரு புதிய பரிணாமத்தை ஏற்படுத்தியது.

இந்திய மாதர் சங்கத்துக்கும் இந்திய தேசிய காங்கிரசுக்கும் இடையேயிருந்த உறவுபோல் தனித்தும் இணைந்தும் இல்லாமல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடனான அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் உறவு கொள்கையளவில் ஒன்றுபட்டது. வர்க்கரீதியான போராட்டத்தில் பெண்கள் பெருமளவில் கலந்து கொள்வது அவசியம் என்று கம்யூனிஸ்ட் கட்சி கருதியது.

“பெண்கள் விடுதலை பெறாதவரை பாட்டாளி வர்க்கம் முழு விடுதலை பெற முடியாது” என்று லெனின் கூறினார்.

“பெண்கள் பொது வாழ்விற்கு, அரசியல் வாழ்விற்கு கொண்டுவரப்படாவிட்டால், தங்களது மூச்சு வரை செய்யும் வீட்டு சமையலறை வேலையிலிருந்து அவர்கள் வெளிக் கொணரப்படாவிட்டால், உண்மையான விடுதலையை உத்தரவாதம் செய்ய முடியாது. சோஷலிசத்தைக் கொண்டு வருவது இருக்கட்டும், ஜனநாயக அமைப்பை கட்டுவதுகூட சாத்தியமில்லை” என்றும் லெனின் கூறினார்.

பெண்கள் பிரச்சனை அனைத்துமே நாட்டின் அரசியல் சமூக கட்டமைப்புடன் தொடர்புடையதுதான். சமுதாயத்தில் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ளவும், தங்கள் வாழ்க்கை நிலைகளை மேம்படுத்திக் கொள்ளவும், பெண்கள் அரசியல் இயக்கங்களில் தீவிரமாகப் பங்குகொள்ள வேண்டியது அவசியம் என கம்யூனிஸ்டுகள் கருதினர்.

அவர்களின் கூற்றுப்படி விடுதலைக்குப்பிறகு இந்திய அரசு முதலாளித்துவ பாதையை தேர்ந்தெடுத்துக் கொண்டதால் பெண்களுக்கு தங்கள் உரிமைகளை அனுபவிக்க வாய்ப்புகள் உண்டாக்கப்படவில்லை. கல்வி, வேலை, அரசியலில் பங்கு ஆகியவற்றில் அவர்களுக்கு சம வாய்ப்புகள் தரப்படவில்லை.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி இந்திய மாணவர் சங்கம் (SFI), ஜனநாயக வாலிபர் சங்கம் (DYFI), ஜனநாயக மாதர் சங்கம் ஆகிய உட்பிரிவுகளை ஏற்படுத்தியபோது வெவ்வேறு தளத்தில் வெவ்வேறு பிரச்சனைகளுடன் இருக்கும் மக்களை அணுகுவது, கொள்கைகளை கொண்டு செல்வது போன்ற இலக்குகளை கருத்தில் கொண்டது. ஆனால் மேற்கூறிய இலக்குகளைத் தாண்டி ஜனநாயக மாதர் சங்கம் தமிழ் சமுதாயத்தில் மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றது. புதிய பரிமாணங்களுடன் வளர்ந்திருக்கும் இந்த அமைப்பு இன்று தமிழ் சமூகத்தின் தவிர்க்க முடியாத சக்தியாக உருவாகி இருக்கிறது. இது எப்படி நேர்ந்தது என்ற தேடலின் விளைவாக ஜனநாயக மாதர் சங்கத்தின் வரலாற்று முக்கியத்துவம்

வாய்ந்த பல்வேறு சாதனைகள் இவ்வாய்வின் மூலம் கண்டு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

சர்வதேச அளவில் நடைபெறும் கம்யூனிஸ்ட் மாநாடுகளில் எடுக்கும் முடிவுகளில் ஒருங்கிணைந்து கொள்கைகளை வகுத்துக் கொள்கிறார்கள். உலகப் பொருளாதாரம், உலகச் சந்தை ஆகியவற்றை கணக்கில் கொண்டு தொழிலாளர் சுரண்டப்படும் நிலையை ஆராய்ந்து இவர்களின் சர்வதேச மாநாடுகளில் எடுக்கப்படும் முடிவுகளை இந்தியா போன்ற நாடுகளில் வேரூன்றி இருக்கும் கம்யூனிஸ்ட் கட்சிகள் முன்னெடுத்து செல்கின்றன. பெண்களுக்கான வேலை, சம ஊதியம், தரமான பணிச் சூழல், குழந்தைகள் நலம், குடும்ப அமைப்புக்குள்ளும் பெண்ணின் அந்தஸ்தை உயர்த்தும் மாற்றங்கள் ஆகியவற்றை கம்யூனிஸ்ட் இயக்கம் முதன்மையாகக் கருதுகிறது. கம்யூனிஸ்டுகளின் மாநாடுகளில் பெண்களின் தற்போதைய பிரச்சனைகள் அனைத்தும் விவாதிக்கப்படுகின்றன என்பது ஆய்வின் மூலம் பெறப்படுகிறது.

1967ல் ஐ.நா. பொதுச்சபை பெண்களுக்கெதிரான ஏற்றத்தாழ்வுகளை களையும் அறிவிப்பை செய்தது. அதைத் தொடர்ந்து பெண்களின் உரிமைக்கான அறிவிப்புகள், தீர்மானங்கள், பரிந்துரைகள் ஆகியவற்றை அவ்வப்போது தயாரித்து பெண்களின் அந்தஸ்தை உயர்த்த முயற்சியை எடுத்துக்கொண்டன. ஒவ்வொரு நாட்டிலும் நிலவும் சட்டங்கள் விவாதிக்கப்பட்டன. இதனைத் தொடர்ந்து ஒவ்வொரு நாடும் பெண்களுக்கான நலத்திட்டங்கள், சட்டத்தீர்வுகள் போன்றவற்றை பரிந்துரைக்கத் தொடங்கின.

எத்தகைய செயல் திட்டங்களாக இருந்தாலும் தற்போதைய அமைப்பில் சாதாரண மக்களை சென்றடைவதும் அவர்களின் உரிமைகளை பாதுகாப்பதும் சவாலாக இருக்கும் நிலையில் ஜனநாயக மாதர் சங்கம் ஏனைய கட்சிகளில் இருக்கும் பெண்கள் பிரிவைப்போல் அல்லாமல் சீரிய கொள்கை திட்டத்துடன் உழைக்கும் பெண்களை ஒருங்கிணைத்தது இந்த இயக்கத்தின் சிறப்பம்சம் ஆகும்.

ஆரம்பகட்டத்தில் தண்ணீர் பஞ்சம் நேரும்போது பானைகளைத் தூக்கிக் கொண்டு போராடுவது, ஆபாச போஸ்டர்கள் மீது தார் பூசி அழிப்பது, தொழிற்சங்க

பெண்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்துவது, ரேஷன் கடை பொருட்கள் விநியோகத்தை முறைப்படுத்தக் கோருவது போன்ற சாதாரண அணுகுமுறையுடன் தொடங்கிய இந்த இயக்கம் நாளடைவில் பல புதிய பரிமாணங்களைக் கண்டது. அவ்வப்போது மாவட்ட அளவிலும் மாநில அளவிலும் மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை அகில இந்திய அளவிலும் மாநாடுகள் நடத்தி பாட்டாளி வர்க்கப் பெண்களின் போராட்ட வாழ்க்கையை, அதன் சிக்கல்களை, அதற்குப் பின்னாலிருக்கும் ஒடுக்குமுறைகளை அடையாளம் கண்டு கொண்டது.

எழுபதுகளில் தங்களை ஓரளவு நிலைநிறுத்திக் கொண்ட இந்த அமைப்பு எண்பதுகளில் மத்தியதர வர்க்கப் பெண்களிடம் சிந்தனை மாற்றத்தை உருவாக்கியது. தான் தன்னுடைய வங்கிப் பணி அல்லது ஆசிரியப் பணி தனது குடும்பம் என்று வட்டத்திற்குள் இயங்கிவந்த இந்தப் பெண்கள் தொழிற் சங்கங்கள் மூலமாக ஜனநாயக மாதர் சங்கத்தின்பால் ஈர்க்கப்பட்டனர்.

படித்த அலுவலகப் பணியாற்றிவந்த பெண்கள் மத்தியில் பெண்களின் பிரச்சனை குறித்து சித்தாந்த ரீதியான புரிதல் உருவானது. இந்தப்போக்கு இயக்கத்திற்கு மேலும் வலிமை சேர்த்தது. "ஒரு பெண்ணாக இருந்து அதற்குரிய வாழ்க்கை சூழல்களை அனுபவித்த போதிலும்கூட மாதர் சங்கத்தில் இணைந்த பிறகுதான் ஏனைய பிரச்சனைகளுக்கும் பெண்கள் அனுபவிக்கும் பிரச்சனைகளுக்கும் இருக்கும் தொடர்பை நான் புரிந்து கொண்டேன்" என்று கூறுகிறார் பாலபாரதி எம்.எல்.ஏ.

பல்வேறு வளர்ச்சிப்படிகளை கடந்து வந்திருக்கிறது ஜனநாயக மாதர் சங்கம். எழுபதுகளில் விலைவாசி உயர்வு, ரேஷன் கடை போராட்டங்கள் குடிநீருக்கான போராட்டங்கள் என்று பாட்டாளிவர்க்க பெண்களின் அன்றாட பிரச்சனைகளை மையமாக வைத்து மாதர் சங்கம் இயங்கியது. பெண் தொழிலாளிகளை ஒருங்கிணைத்து தொழிற் சங்கத்தை வலிமைபடுத்தும் முயற்சியிலும் ஈடுபட்டது.

எண்பதுகளில் ஜனநாயக மாதர் சங்கத்தின் தனிநபர் பிரச்சனைகளுக்கும் முக்கியத்துவம் தரப்பட்டன. ஒவ்வொரு சனிக்கிழமையும் ஒரு சட்ட ஆலோசகர் முன்னிலையில் பாதிக்கப்பட்ட பெண்கள் தங்களின் குறைகளை கூறுவார்கள்.

அதற்கான தீர்வுதேடும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். இவ்வாறு ஜனநாயக மாதர் சங்கத்தின் கதவுகளை தட்டியவர்கள் பெரும்பாலும் வரதட்சணையால் பாதிக்கப்பட்ட பெண்களே.

ஷாபானு வழக்கு, ரூப்கன்வர் சதி, சரிகாஷாவின் மரணம் போன்றவை பத்திரிகைகளுக்கு பரபரப்புச் செய்தியாக இருந்த காலக்கட்டத்தில் மாதர் சங்கம் இவற்றை பற்றி மக்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்த சீரிய முயற்சிகளை மேற்கொண்டது. பெண்கள் குறித்த பல்வேறு சட்ட மாற்றங்களுக்கு முயற்சிசெய்த ஜனநாயக மாதர் சங்கம் அதில் வெற்றியும் பெற்றது.

- வரதட்சணை கொலைகளைத் தடுக்க திருமணமாகி ஏழாண்டுகளுக்குள் ஒரு பெண் மரணமடைந்தால் கணவரை விசாரணைக்குட்படுத்தும் சட்ட மாற்றம்
- மாலை ஆறு மணிக்குமேல் பெண் குற்றவாளிகளை கைது செய்யக் கூடாது என்றும்
- விசாரணைக்காக இரவில் காவல் நிலையத்தில் தங்க வைத்தால் கட்டாயம் ஒரு பெண் போலீஸ் துணையாக இருக்க வேண்டும் என்று கோரிய சட்ட மாற்றம்
- தொழிற்சாலைகளில் பெண்களை இரவுப் பணிக்கு அமர்த்தினால் அவர்களுக்கு உரிய பாதுகாப்பு அளிக்கும் சட்ட திருத்தம்
- குடும்ப வன்முறைச் சட்டம்

ஆகியவை மாதர் சங்கத்தின் சாதனைப் பட்டியலில் முக்கிய இடம்பெற கூடியவை என்ற முடிவுக்கு இவ்வாய்வு இட்டுச் செல்கிறது.

பெண்களுக்கான தேசிய கமிஷனின் தமிழ் நாட்டுப் பிரிவு ஏற்பட்டதும் ஜனநாயக மாதர் சங்கத்தின் தொடர் முயற்சியால்தான். தொண்ணூறுகளில் ஜனநாயக மாதர் சங்கம் சர்வதேச அளவில் விவாதிக்கப்பட்ட மனித உரிமை பிரச்சனைகளில் கவனம் செலுத்தினார்கள். சிதம்பரம் பத்மினி, வாச்சாத்தி ஆகிய பாலியல் பலாத்காரங்கள் மிகப்பெரிய அளவில் விவாதிக்கப்பட்டன. மனித உரிமை

மீறல்களில் கவனம் செலுத்தியதன் விளைவாக மாதர் சங்கத்தின் கவனம் மிக இயல்பாக தலித் பெண்களின்பால் திரும்பியது.

1991ல் கோயமுத்தூரில் நடந்த மாநாட்டில் ஜனநாயக மாதர் சங்கம் இனியும் எல்லாப் பெண்களையும் ஒரேதளத்தில் வைத்து பார்த்துக் கொண்டிருக்க முடியாது. சமுதாயத்தில் பல அடுக்குகள் இருப்பதுபோல பெண்களிலும் வெவ்வேறு பிரிவுகள் இருப்பதையும் நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். முஸ்லிம் பெண்கள், தலித் பெண்கள் ஆகியோரின் பிரச்சனைகளை பொதுவில் வைத்துப் பார்க்காமல் சிறப்பு கவனம் செலுத்த வேண்டும் என்று முழங்கினார் அகில இந்திய தலைவரான பிருந்தாகராத்.

அப்போதிலிருந்தே மாதர் சங்கத்தின் அணுகுமுறையில் மாற்றம் நேர்ந்தது. “வர்க்கப் பிரிவினையை மட்டும் கருத்தில் கொள்ளாமல் ஜாதிமத ஏற்றத் தாழ்வுகளையும் கணக்கில் கொள்ளத் தொடங்கினோம்” என்கிறார் ஜனநாயக மாதர் சங்கத்தின் தற்போதைய தமிழ் மாநில செயலாளரான உ.வாசுகி.

இவ்வாறு காலத்திற்கு ஏற்ப வரலாற்று ரீதியான பல மாற்றங்களை கண்டிருக்கிறது ஜனநாயக மாதர் சங்கம். இந்த இயக்கத்துக்கும் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்துக்கும் நேரடித் தொடர்பு இல்லை ஆனாலும் தந்தை பெரியாரின் கருத்துக்கள் அவ்வப்போது மகளிர் சிந்தனையில் இடம் பெற்றன.

காலனி ஆதிக்க காலத்தில் உருவான இந்திய மாதர் சங்கம் (WIA) அகில இந்தியப் பெண்கள் மாநாடு (AIWC) ஆகியவை எடுத்துக் கொண்ட பிரச்சனைகளின் தொடர்ச்சியாகத்தான் ஜனநாயக மாதர் சங்கத்தின் செயல்பாடுகளை பார்க்க முடிகிறது. இந்திய மாதர் சங்கம் ஜாதி மற்றும் சமூக அந்தஸ்தின் உயர்வு நிலையில் இருந்த பெண்களின் குரல் என்றால் ஜனநாயக மாதர் சங்கம் ஜாதிய வர்க்க அமைப்பில் ஒடுக்கப்பட்ட உழைக்கும் பெண்களின் குரலாக இருக்கிறது. இந்திய மாதர் சங்கம் சுயேட்சையாகத் தோன்றிய தேசிய அரசியலுடன் ஒட்டியும் வெட்டியும் பெண்களின் பிரச்சனைகளுக்காகவே உரிமைக் குரல் எழுப்பியது. தேசிய வரையறைக்குட்பட்ட பெண்ணிலைப் பார்வை மட்டுமே

அவர்களுக்கு இருந்தது. அதையும் மீறிய வகையில் போராட்டக்களம் முக்கியமாக அரசியல் விடுதலைக்கான போராட்டக்களம் அவர்களை சற்றே தீவிரப்படுத்தியது என்று கூறலாம். இந்த தன்மையே இந்திய மாதர் சங்கத்தின் சிறப்பான கூறு. சுதந்திரத்திற்குபின் இந்த அமைப்பின் பொறுப்பாளர்கள் அதனை வெறும் சேவை மைய்மாக ஆக்கிவிட்ட நிலையில் மிகப் பெரிய வெற்றிடம் ஏற்பட்டது. அந்த வெற்றிடத்தை நிரப்பும் வகையில் இந்திய மாதர் தேசிய சம்மேளனமும் அதனைத் தொடந்து ஜனநாயக மாதர் சங்கமும் பெண்களின் பிரச்சனைகளை கையிலெடுத்துக் கொண்டன.

நவீனப் பெண்ணிலைவாதம் என்ற திசையில் பயணிக்காமல் ஜனநாயக அமைப்பில் கடைநிலை பெண்களுக்காக அவர்களின் உரிமைகளுக்காக போராடிவருவது இந்த இயக்கத்தின் தனித்தன்மை ஆகும்.

உதாரணமாக தண்ணீர் என்பது மக்கள் அனைவருக்குமான பிரச்சனை. ஆனால் ஜனநாயக மாதர் சங்கம் பானைகளோடு பெண்களை மட்டுமே தொடர்பு படுத்தி போராட வைப்பது நியாயம்தானா என்ற கேள்வியை எழுப்பினார் எழுத்தாளர் செ.யோகநாதன். இதற்கு பதிலளித்த ஜனநாயக மாதர் சங்க பொறுப்பாளர்களில் ஒருவரான மைதிலிசிவராமன் "குழாயடியில் மணிக்கணக்கில் தவம் கிடப்பவர்கள் பெண்கள்தாமே" என்று வாதிட்டார்.

"தண்ணீர் குடத்தை பெண்கள் தலையில் சுமத்தியிருப்பதே பாரபட்சமானது என்றால் தண்ணீர் பிரச்சனைக்கு குரல் கொடுப்பதற்கும் அவள்தான் பொறுப்பா" என்ற கேள்வியை எழுப்பினார் செ.யோகநாதன் (இலட்சிய பெண், ஜூன் 1987).

மாதர் சங்கத்தின் இந்த அணுகுமுறை பின்னணியில் பெண்ணை கருத்தியில் ரீதியாக தனிமைப் படுத்துவதை உணராமல் ஏழை, எளியப் பெண்களின் அன்றாடப் பிரச்சனைக்காக போராடும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பார்வையே மிகுந்திருந்தது.

சமத்துவ வாழ்வு பெற தனித்து நின்றால் சாத்தியமல்ல. இன்றைய சமுதாய அமைப்பை தகர்த்து புதியதொரு சமுதாயம் காண வேண்டும் என்ற கருத்தை முன்வைத்தார் பாப்பா உமாநாத்.

இவ்வாறு தாங்கள் சார்ந்துள்ள கட்சியின் கொள்கைகளுடன் ஒத்திசைந்து தங்களது கொள்கைகளை வகுத்துக் கொண்டது ஜனநாயக மாதர் சங்கம். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை சார்ந்து இயங்க வேண்டிய நிலை ஜனநாயக மாதர் சங்கத்தை கருத்தியில் ரீதியாக வரையறைபடுத்தி இருக்கிறது. ஆனால் கட்சிக்கு அப்பாற்பட்டு பெண்கள் என்ற அடிப்படையில் எவர் வேண்டுமானலும் மாதர் சங்கத்தில் இணையலாம் என்ற நிலைபாடு இந்த அமைப்பை மேலும் விரிவுபடுத்தியிருக்கிறது.

தனிநபர் பிரச்சனைகளை சமூக பிரச்சனையாக விவாதத்திற்கு கொண்டுவந்து சட்டப்பூர்வ தீர்வுகளை தேடியது. அமைப்பை எதிர்த்து கேள்வி கேட்கும் அதே தருணத்தில் நாடாளுமன்றம், சட்டமன்றம், உள்ளாட்சி அமைப்புகள், ஊடகங்கள் என்று அத்துனை தளங்களிலும் பெண்ணுரிமைக்குரல் ஒலிக்கச் செய்வது இவர்களின் நேர்மறை அணுகுமுறையாகும்.

ஆணாதிக்கம் என்ற வார்த்தையை மிகுந்த எச்சரிக்கை உணர்வுடன் பயன்படுத்தும் இந்த அமைப்பினர், தங்களது போராட்டங்களிலும் பொதுக்கூட்டங்களிலும் இயக்கம் சார்ந்த ஆண் தோழர்களையும் ஈடுபாடு காட்ட வேண்டும் என்று கருதுபவர்கள். குடும்ப அமைப்பில் பெண் மட்டும் ஏன் இரட்டைசுமை சுமக்க வேண்டும். ஆண்களும் வீட்டு வேலைகளில் பங்கெடுத்துக் கொள்வதுதானே நியாயம் என்று கேள்வி எழுப்பும் இந்த இயக்கத்தினர், குடும்ப அமைப்புக்குள் பெண்கள் சுரண்டப்படுவதைத்தான் எதிர்க்கிறோமே தவிர குடும்ப அமைப்பை எதிர்க்கவில்லை என்ற விளக்கமும் தருகிறார்கள்.

அதிதீவிர போக்குகளை தவிர்த்து ஆண்களுக்கும் விழிப்புணர்வை ஏற்படுத்தி அவர்கள் பெண்ணை சக மனுஷியாக பாவிக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். மனித உரிமை பிரச்சனைகளை ஜனநாயக மாதர் சங்கம்

முன்னெடுத்து செல்வது என்பது குறிப்பாக தலித் பெண்கள் பிரச்சனையில் கவனம் செலுத்துவதும் காலத்தின் கட்டாயம் ஆகும்.

"உழைக்கும் பெண்கள் பங்கு பெறாமல் எந்த சோஷலிச புரட்சியும் சாத்தியமில்லை. பல விடுதலை இயக்கங்களின் அனுபவமானது எந்த அளவுக்கு பெண்கள் பங்கெடுத்துக் கொள்ளுகிறார்களோ அந்த அளவுக்கு வெற்றியை உறுதிப்படுத்தியிருக்கிறது" என்ற லெனின் கூற்றை அடிப்படையாகக் கொண்டு ஜனநாயக மாதர் சங்கத்தில் பிரச்சனைகள் விவாதிக்கப்படுகின்றன. மார்க்சின் கூற்றுப்படி உழைக்கும் மக்களின் வர்க்கப்போராட்டம் ஒன்றுதான் புரட்சிகரமான மாற்றங்களையும் சோஷலிசத்தையும் ஏற்படுத்தி பெண்களின் உரிமைகளை பாதுகாக்கும். தமிழகத்தில் இத்தகைய வர்க்கப்போராட்ட வரலாறு என்பது தனித்த ஆய்வுகளுக்குரிய பகுதிகளாகும்.

வரலாற்றில் பெண்களின் பங்களிப்பு சரியாக பதிவு செய்யப்படாத நிலையில் இருபெரும் மாதர் இயக்கங்களின் வாயிலாக பெண்களின் வரலாற்றை ஆராயும் முயற்சியே இந்த ஆய்வு ஆகும். ஒரு நூற்றாண்டுகால தமிழகப் பெண்கள் வரலாற்றில் இந்திய மாதர் சங்கம் மற்றும் ஜனநாயக மாதர் சங்கத்தின் வரலாறு என்பது உயர்ஜாதிப் பெண்களில் தொடங்கி தலித் பெண்கள் வரை ஊடுருவி வந்திருக்கும் உரிமைப் போராட்டங்களின் வரலாறாகும்.

இன்றைய அளவில் இத்தகைய உரிமைகளை, போராட்டங்களின் வரலாற்றை பெண்களிடையே பதிவுசெய்ய வேண்டும் என்ற நோக்கிலும், பெண்களின் உரிமைகளுக்கான தொடர் போராட்டங்களின் தாக்கம் குறித்த ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கிலும் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. இனிவரும் காலத்தில் இத்தகைய ஆய்வுகள் ஒருபெரும் படிப்பினையை ஏற்படுத்துவதோடு மட்டுமல்லாமல் பல ஆய்வுகளுக்கான அடித்தளமாக இருக்கும் என்ற நோக்கிலும் இந்த ஆய்வு ஒரு வரலாற்றுப் பார்வையில் தெளிவுபடுத்தியுள்ளது.

# துணை நூற்பட்டியல்

## முதன்மைச் சான்றுகள்

## I. ஆவணங்கள் (Records)

### அரசு ஆணைகள் (Government Orders)

G.O. No. 47, Law (General) Department, Government of Madras, 6 February, 1934.

G.O.No. 407, Judicial Department, 2 October, 1924.

G.O.No. 266, Home Department, Government of India, August 1873, NA.

Notification No.809/6/93-F(c), dated 21st December 1994. Central Board of Film Certification.

### அறிக்கைகள் (Reports)

RESOLUTIONS, Second Conference, All India Democratic Women's Association, Trivandrum, 17-20 October 1986.

Report of the Committee on the Status of Women in India, Government of India, December,1974.

Women's Indian Association, Twentieth and Twenty-First *Annual Report*, Madras, 1936-38.

மாநாட்டுக் குறிப்புகள், ஜனநாயக மாதர் சங்கம், முதலாவது மாநில மாநாடு, திருவாரூர், 28, 29 டிசம்பர் 1974.

மாநாட்டு அறிக்கை, 8வது மாநில மாநாடு, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், சென்னை, 21, 22, 23 ஆகஸ்ட் 1995.

மாநாட்டு அறிக்கை, 9வது மாநில மாநாடு, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், நாகர்கோவில், 8, 9, 10 ஜனவரி 1999.

மாநாட்டு அறிக்கை, தமிழ் மாநில 11வது மாநில மாநாடு, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், திருச்சி, 6, 7, 8 ஆகஸ்ட் 2005.

மாநாட்டு அறிக்கை, தமிழ் மாநில 12வது மாநாடு, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், திருநெல்வேலி 27, 28, 29 செப்டம்பர் 2008.

ஆவணப்படம் : *உண்மையின் போர்க்குரல்*, தயாரிப்பு : தமிழ்நாடு மலைவாழ் மக்கள் சங்கம், ஆக்கம் : பாரதி கிருஷ்ணகுமார்.

**II. நேர்காணல்கள்**

உ.வாசுகி,

சரோஜினி வரதப்பன்,

பாலபாரதி எம்.எல்.ஏ.,

வசந்தி தேவி,

**III. பத்திரிகைகள்**

Economic and Political Weekly

Equality

Indian Express

Indian Ladies Magazine

Sunday Observer

THE HINDU

Times of India

அவள் விகடன்

ஆனந்த விகடன்

இந்தியா டுடே

இலட்சிய பெண்

கல்கி

கிருஹலட்சுமி

குடியரசு

சிந்தாமணி

சுதேசமித்திரன்

தினத்தந்தி

தினமணி

தீக்கதிர்

மகளிர் சிந்தனை

ஜனசக்தி

ஜூனியர் விகடன்

ஜெகன்மோகினி

ஸ்திரீ தர்மம்

## இரண்டாம் நிலைச் சான்றுகள்

**Agrwal.M.B.**, *Human Rights and Gender Violence*, Translation International Into Local Justice, Navyug Books International, Delhi, 2012.

**Altekar.A.S.**, *The Position of Women in Hindu Civilization*, Motilal Banarsidass, Delhi, 1959.

**Anandhi.S.**, *Middle Class Women in Colonial Tamilnadu : Gender Relations and the Problem of Consciousness*, Unpublished Thesis, Jawaharlal Nehru University, New Delhi, 1992.

**Annie Besant,** *An Autobiography*, The Theosophical Publishing House, Chennai, 1893.

**Asima Sahu**, *Women's Liberation and Human Rights*, Pointer Publishers, Jaipur, 2000.

**Asish Kumar Das**, *Human Rights in India*, Sarup & Sons, Prasant Kumar Mohanty, New Delhi, 2007.

**August Bebel**, *Women and Socialism*, All India Democratic Women's Association, Andhra Pradesh Committee, Hyderabad, 2010.

**Bhasin, Kamala and Bina Agarwal**, *Women and Media*, Kali for Women, New Delhi, 1984.

**Chakravarti, Uma**, *Rewriting History : The Life and Times of Pandita Ramabai*, Kali for Women, New Delhi, 1998.

**Chopra.P.N, Puri.B.N, Das.M.N.**, *A Social, Cultural and Economic History of India*, *Macmillan*, New Delhi, 1974

**Desai.A.R.**, *Social Background of Indian Nationalism Popular Prakashan*, Bombay, 1976.

**Geraldine Forbes**, *Women in Modern India*, Cambridge University Press, New York, 1998.

**Jagadeesan.P**, *Marriage and Social Legislation in Tamilnadu*, Elatchiappenn Publications, Chennai, 1990.

**Jogan Shankar**, *Devadasi Cult : Sexological Analysis*, New Delhi, 1990.

**Kanak Mukherjee**, *Women's Emancipation Movement in India*, National Book Centre, New Delhi, 1989.

**Lina Gonsalves**, *Women and Human Rights*, A.P.H. Publishing Corporation, New Delhi, 2011.

**Max Muller.F.**, *Rammohan to Ramakrishna*, Rupa & Co., New Delhi, 2002

**Manohar Kaur**, *Women in India's Freedom Struggle*, New Delhi, 1992.

**Mohini Chatterjee**, *Women's Human Rights*, Aavishkar Publishers, Distributors, Jaipur, 2005.

**Mytheli Sreenivas**, *Wives, Widows & Concubines : The Conjugal Family Ideal in Colonial India*, Orient Blackswan, New Delhi, 2009.

**Nandi Bhatia**, *Performing Women / Performing Womanhood Theatre, Politics And Dissent in North India*, Oxford University Press, New Delhi, 2010.

**Neera Desai & Usha Thakkar,** *Women in Indian Society*, National Book Trust, India, New Delhi, 2001.

**Pramod Kumar Mishra**, *Women in South Asia, Dowry Death and Human Rights Violations,* Authors Press, 2000.

**Promilla Kapur**, *Empowering the Indian Woman*, Publications Division, Ministry of Information and Broadcasting, Government of India, New Delhi, 2001.

**Ramaswami Aiyar.C.P.**, *Annie Besant, Publications Division*, Ministry of Information and Broad casting, Government of India, New Delhi, 1963.

**Reddy.S.K.**, *Social Change Thems and Perspectives*, Navyug Books International, Delhi, 2011.

**Sarojini Varadappan**, *Everlasting, Reminiscences My Rhythm of Life*, An Autobiography, Shantha Publishers, Chennai, 2011.

**Savita Vishnoi**, *Economic Status of Women in Ancient India*, Kusumanjali Prakashan, Meerut, 1987.

**Shamsuddin Shams**, *Women Law and Social Change*, Ashish Publishing House, New Delhi, 1991.

**Tharu & Lalitha, Ed.** *Women Wirting in India*, Vol.I.

**Upreti.H.C, Nandini Upreti**, *Women and Problems of Gender Discrimination*, Pointer Publishers, Jaipur, 2000.

History AIWC *website –www.aiwc.org.in*, accessed on 24.12.2012.

**அருணன்**, *இந்திய கம்யூனிச இயக்க வரலாறு*, அன்னம் வெளியீடு, சிவகங்கை, **1993.**

**இலக்குவன்.கி.**, *இந்திய கம்யூனிஸ்ட் இயக்க வரலாறு (1920–1933)*, (தமிழாக்கம்) பாரதி புத்தகாலயம், சென்னை,2006.

**காதரைன் மேயோ**, *இந்திய மாதா, கார்முகில் பதிப்பகம்*, மதுரை, 1928, இரண்டாம் பதிப்பு, 1987.

**கேசவன்.கோ**, *சுயமரியாதை இயக்கமும் பொதுவுடைமையும்*, சரவணபாலு பதிப்பகம், விழுப்புரம், 1999.

**கிளாரா ஜெட்கின்**, *மகளிர் விடுதலை இயக்கங்கள்*, புரட்சிகர மகளிர் முன்னணி, தமிழ்நாடு, சென்னை, 1989.

**ஞாநி**, *நெருப்பு மலர்கள்*, ஞான பானு, சென்னை, 2006.

**சந்திரசேகரன்.ச.,** *பண்பாட்டு உருவாக்கத்தில் பத்திரிக்கைகளின் பங்கு* (கருத்தரங்க கட்டுரைகள்), சரவணபாலு பதிப்பகம், விழுப்புரம், 1989.

**சந்திரபாபு.ப.சு, திலகவதி.இல.,** *பெண் வரலாறும் விடுதலைக்கான போராட்டமும்,* பாரதி புத்தகாலயம், சென்னை,2011.

**த.சுப்பிரமணியன்,** *ஆயுதமேந்திய அபூர்வப் பெண்மணிகள்,* சிவசக்தி பப்ளிகேசன், சென்னை, 2008.

**சுப்ரமண்ய பாரதி,** *பெண் விடுதலை,* தொகுப்பு : கல்பனா ஞானபாரதி வெளியீடு, ஈரோடு, 1981.

**செல்வி.திருச்சந்திரன்,** *தமிழ் வரலாற்றுப் படிமங்கள் சிலவற்றில் ஒரு பெண்நிலை நோக்கு,* குமரன் புக்ஹவுஸ், சென்னை, 1997.

**செல்வி.திருச்சந்திரன்,** *பெண்ணடிமையின் பரிமாணங்களும் பெண்ணுரிமையின் விளக்கமும்,* பெண்கள் கல்வி நிலையம் 24வது வெளியீடு, கொழும்பு.

**சேதுராமலிங்கம்.மெ, நடராசன்.கோ.,** *தேசிய மனித உரிமைகள் ஆணையத்தின் முக்கிய உத்தரவுகளும்,* வழிகாட்டுதல்களும், தேசிய மனித உரிமைகள் ஆணையம், புதுடில்லி, 2002.

**டாங்கே.எஸ்.ஏ.,** *பண்டைக்கால இந்தியா,* (தமிழில் எஸ். ராமகிருஷ்ணன்) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1955.

**தந்தைப் பெரியார்,** *பெண் ஏன் அடிமையானாள்,* பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு, சென்னை, 1992.

**திருச்சி.வே.ஆனைமுத்து,** *தமிழ்நாட்டில் பண்பாட்டுப் புரட்சி,* பெரியார் நூல் வெளியீட்டகம், திருச்சி, 1980.

**நம்பூதிரிபாட்.இ.எம்.எஸ்.,** *இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு,* (தமிழில் : இலக்குவன்.கி.,) பாரதி புத்தகாலயம், சென்னை, 2010.

**நீரா தேசாய், விபூதி பட்டேல்,** *இந்தியப் பெண்கள் சாதனையும் சவால்களும்,* (தமிழாக்கம் : ரீட்டாம்மா, இராஜேஸ்வரி), நீரோடை, மதுரை, 1987.

**பத்மினி சென் குப்தா,** *சரோஜினி நாயுடு,* (தமிழாக்கம் : மு,க,தங்கவேலன்), சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 1996.

**பாலபாரதி.கே.,** *இலட்சிய நதியாக . . . பெண்ணுரிமை போராளி பாப்பா உமாநாத்தின் பயணச் சுவடுகள்,* அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், சென்னை, 1998.

பிரபஞ்சன், *பெண்,* தமிழ்ச் சங்கம், சென்னை, 1997.

பிரேமா.இரா., *கற்பு–கலாச்சாரம்,* தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1998.

பெரியசாமித் தூரன்.ம.ப., *பாரதியும் பெண்மையும்,* வானதி பதிப்பகம், சென்னை, 1979.

மதுகிஷ்வர், *தேசிய உணர்வும் மதவாதமும்,* (தமிழ் மொழிபெயர்ப்பு நூல்), விடியல் பதிப்பகம், கோவை, 1993.

மனோகர்.பி, *பெண் விடுதலையில் பெரியார்,* தமிழ் வேந்தன் பதிப்பகம், உளுந்தூர் பேட்டை, 2008.

முத்துச் சிதம்பரம், *பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும்,* தமிழ்ப் புத்தகாலயம், சென்னை,1995.

மைதிலி சிவராமன், *ஒரு வாழ்க்கையின் துகள்கள்,* ஒரு குடும்ப ஆவணத்திலிருந்து, (தமிழில் : கி.இரமேஷ்) பாரதி புத்தகாலயம், சென்னை, 2009.

மைதிலி சிவராமன், *சமூகம்–ஒரு மறுபார்வை,* தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1998.

மைதிலி சிவராமன், *பெண்ணுரிமை–சில பார்வைகள்,* தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1997.

ராமகிருஷ்ணன்.என்., *ஒரு அம்மாவின் கதை,* சென்னை புக்ஸ், சென்னை, 1990.

ராமகிருஷ்ணன்.என்., *தமிழகத்தில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் (1917–1964),* வைகை வெளியீடு, மதுரை, 2002.

ராமகிருஷ்ணன்.என்., *நினைவில் வாழும் லீலாவதி,* பாரதி புத்தகாலயம், சென்னை, 2008.

ராஜதுரை.எஸ்.வி, கீதா.வ., *பெரியார் : சுயமரியாதை சமதர்மம்,* விடியல் பதிப்பகம், கோவை, 1996.

ராஜம் கிருஷ்ணன், *இந்திய விடுதலைப் போரில் பெண்கள்,* நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, புதுதில்லி, 1997.

ராஜம் கிருஷ்ணன், *காலந்தோறும் பெண்,* நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, புதுதில்லி, 1994.

ராஜேந்திரன்.பி.எல்., *மகளிர் மனம் கவர்ந்த முத்து*, பூங்கொடி, பதிப்பகம், சென்னை, 1972.

வள்ளிநாயகம்.ஏ.பி., *பெரியார் பிறப்பித்த பெண்ணுரிமைப் பிரகடனங்கள்*, ஜீவசகாப்தன் பதிப்பகம், மதுரை, 1996.

விமலா பரூக்கி, ரேணு சக்ரவர்த்தி, *கம்யூனிஸமும் பெண்களும்*, இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி, சென்னை, 1976.

விமலா பரூக்கி, *மகளிர் விடுதலையில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பங்கு*, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ் மாநிலக்குழு சிறப்பு வெளியீடு, இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி 60 ஆண்டு நிறைவு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

ஜீவானந்தம்.ப., *ஜீவாவின் புதுமைப் பெண்*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1968.

ஹர்கிஷன்சிங் சுர்ஜித், *இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தின் பெருமைமிகு வரலாறு*, மதுரை, 1994.

*தேசிய மனித உரிமைகள் ஆணையத்தின் முக்கிய உத்தரவுகளும் வழிகாட்டுதல்களும்*, தேசிய மனித உரிமைகள் ஆணையம், புதுடில்லி, 2002.

உஷா.சு., *தோழர் பாப்பா உமாநாத்*, M.Phil ஆய்வேடு, சென்னை பல்கலைக் கழகம், அக்டோபர், 2008.

## சட்டக்கல்வி மற்றும் உதவி நிறுவனம், அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம், கம்யூனிஸ்ட் கட்சி வெளியீடுகள்

*அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம் துவக்கமும்—வளர்ச்சியும்*, கையேடு, சென்னை.

*எங்களுக்கும் காலம் வரும்*—கையேடு, சட்டக்கல்வி மற்றும் உதவி மற்றும் நிறுவன (LEAS) வெளியீடு, சென்னை, 1996.

*கிராமப்புறப் பெண்கள்—ஒரு பார்வை*, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க வெளியீடு, சென்னை, 1995.

சந்திரா.ஆர்., *உலகப் பொருளாதார நெருக்கடியும் இந்தியாவும்*, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க வெளியீடு, சென்னை, 2010.

*சட்டங்கள் நமக்காக நம்மைக் காக்க*, சட்டக்கல்வி மற்றும் உதவி நிறுவன (LEAS) வெளியீடு, சென்னை.

*தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினர் வன்கொடுமைகள் தடுப்புச் சட்டமும் விதிகளும்*, மக்கள் கண்காணிப்பகம், மதுரை, 2009.

*பெண்களும் சட்டமும்–விளக்கமும் விமர்சனமும்*, தமிழக ஜனநாயக மாதர் சங்க மாநிலக்குழு வெளியீடு, சென்னை.

*நீதியா அநீதியா*, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க வெளியீடு, சென்னை.

*நேசத்தை வளர்ப்போம் தேசத்தைக் காப்போம்*, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க தமிழ் மாநிலக்குழு வெளியீடு, சென்னை.

*பெண்ணடிமை விலங்கொடிப்போம் பெண்ணடிமை விலங்கொடிப்போம்*, தமிழகன், பாட்டாளி பதிப்பகம், ஈரோடு, 1987.

*விடியலை நோக்கி*, அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க வெளியீடு, சென்னை.

*ஜீவனாம்சம்*, சட்டக்கல்வி மற்றும் உதவி நிறுவனம், சென்னை.

**சண்முகம்.பெ**, *வாச்சாத்தி வன்கொடுமை வழக்கும் தீர்ப்பும்*, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்நாடு மாநிலக் குழு, சென்னை, 2011.

**சம்பத்.பி**, *உத்தபுரம் தீண்டாமை ஒழிப்பின் அடையாளமாய்*, தமிழ்நாடு தீண்டாமை ஒழிப்பு முன்னணியுடன் இணைந்து அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க தமிழ் மாநிலக்குழு வெளியீடு, சென்னை.

## பிற்சேர்க்கை–I

### அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்க மாநில மாநாடுகளின் தொடர் பட்டியல்

1. 1974, டிசம்பர், திருவாரூர்
2. 1978, செப்டம்பர், மதுரை
3. 1981, ஜனவரி, சிவகாசி
4. 1983, செப்டம்பர், புதுக்கோட்டை
5. 1986, செப்டம்பர், திண்டுக்கல்
6. 1989, ஆகஸ்ட், மதுரை
7. 1992, ஆகஸ்ட், நாகப்பட்டினம்
8. 1995, செப்டம்பர், சென்னை
9. 1999, ஜனவரி, நாகர்கோவில்
10. 2002, ஆகஸ்ட், விருதுநகர்
11. 2005, ஆகஸ்ட், திருச்சி
12. 2008, செப்டம்பர், திருநெல்வேலி
13. 2011, ஆகஸ்ட், திருப்பூர்



# STRI-DHARMA

Official Organ of the Women's Indian Association

Vol. I. No. 1 | January 1918 | Price, 2 Annas

Our symbol represents the ideal influence of woman, which it is the object of our Association to make an actuality in every detail of daily life in every part of India. The work has begun in the Madras Presidency (the place of the woman's feet), but its life-force springs from religion (her heart is in the region of Benares), and its intellect must be as clear and cool as the Himalayan regions into which rises her head.

Serene and self-reliant must stand each member, with hands outstretched to sisters and brothers both in the East and West, to give them from her active right hand Beauty and Prosperity represented by the lotus, the flower that bears within itself male and female qualities equally, and from the lamp in her left hand to extend the steady flame of inspiration which will light the fire of the united life of man and woman, the fire of devotion to our Sacred Religion and of love for humanity, the fire of patriotism, the fire of zeal for reform.

Thus she represents Religion, Knowledge, Organisation, Service, Beauty, Prosperity, Inspiration and Co-operation all offered freely to Mother India by each of her daughters.

## Dedication.

**To the women of India to-day, and to the memory of the Indian Women of all past ages who have set an example of Courage, Wisdom and Devotion to Truth.**

### Contents.



### Women's Indian Association.

*President*: Mrs. Annie Besant.
*Secretary*: Mrs D. Jinarajadasa.
*Treasurer*: Miss. Shivamma.
(Mrs Mahadeva Sastri.)

The Editor will be glad to receive articles suitable for publication in English and in any of the Indian languages.

All communications to be addressed to the Editor Mrs D. Jinarajadasa, Women's Indian Association, Adyar, Madras.

1918-ஜனவரியில் வெளிவந்த ஸ்திரீ தர்மம் பத்திரிகையின் முகப்பு பக்கம்

1317 Vol. XVII—No. 5




# Stri-Dharma

OFFICIAL ORGAN OF THE WOMEN'S INDIAN ASSOCIATION.



MARCH, 1934

*Subscription Rates*

*India, Rs. 5* *W.I.A. Members, Rs. 3* *Foreign, 10 Sh.*

*Single Copy, As. 8*

*1934*-மார்ச்சில் வெளிவந்த ஸ்திரீ தர்மம் பத்திரிகையின் முகப்பு பக்கம்




THE INDIAN LADIES' MAGAZINE

VOL. XVII.] JULY, 1917. [No. 1.


## The Gentle Maiden.

There's one that is pure as an angel
And sweet as the flowers in May,
Her eyes have the glint of sunlight
As it brightens the dark sea-wave,
And more than the deep-sea treasure
The heart of that maid I crave.
The sound of her voice is about me
The spell of her presence there,
And whether my prayer be answered,
Or whether she pass me by,
The thought of that gentle maiden
Will follow me till I die.

*1917*-ஜூலையில் வெளிவந்த 'The Indian Ladies Magazine' பத்திரிகையின் முகப்பு பக்கம்

# உழைக்கும் மகளிர் சிந்தனை

மாத ஏடு

| அக்டோபர், நவம்பர் | 1983 | 18 |
|---|---|---|

★ ★ ★

★ ஜனநாயக போராட்டத்தில் பெண்கள்

★ "சொல்ல கொதிக்குதுடா நெஞ்சம்"

★ போராடும் பெண்களுக்கு ஆதரவு தாரீர் நிதியுதவி அளித்திடுவீர்

★ உழைக்கும் பெண்கள் மாநாடு

★ தண்ணீர்! தண்ணீர்!!

40 காசுகள்

★ ★ ★

## அக்டோபர் புரட்சியும் பெண்களும்

அக்டோபர் புரட்சியா? அது என்ன என்று சிலர் கேட்கலாம்.

இன்று எல்லாத் துறைகளிலும் முன்னேறி, பொருளாதார வளர்ச்சி கண்டு, வெகுவாக முன்னேறி இன்று உலகில் உள்ள மற்ற நாடுகளுக்கு எடுத்துக்காட்டாக இன்று சோவியத் யூனியன் விளங்கு கிறதல்லவா?

1917-ம் ஆண்டுக்கு முன் இருந்த ரஷ்ய மக்களின் (இன்றைய சோவியத் யூனியன்) நிலைமை வேறு. இன்றைய நிலைமை வேறு. 1917-ல் ஆட்சி, தொழிலாளர்கள் கைக்கு மாறியதுதான்—ஏற்பட்ட புரட்சிதான்—இந்த மாற்றங்களுக்குக் காரணம்.

அடிமைத் தளைகளால் பிணைக்கப்பட்டு, வறுமையிலும், நோயிலும், பசியிலும், பட்டினியிலும் வாடிய ரஷ்ய தொழிலாளர்களும், விவசாயிகளும் புது வாழ்வு பெற—மனிதனாக உயர்ந்து நிற்க—காரணமாக இருந்தது அக்டோபர் புரட்சி.

குறிப்பாக பெண்கள் நிலையில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன.

அடிப்படை மனித உரிமை களற்று,
சமூகத்திலும், குடும்பத்திலும் ஒடுக்கப்பட்டு—
சொற்பக் கூலியில், நீண்ட வேலை நேரத்தையும்
தாங்கொணாத வேலைப் பளுவையும் சுமந்து—
வாடி வதங்கி நலிந்த அன்றைய நிலை மாறியது.
"உற்பத்தி சாதனங்கள் ஒரு சிலரிடம் மட்டுமே குவிந்து,
அதன் மூலம், மற்றவர்களை கூலிக்காரர்களாக மாற்றி
சுரண்டும் முறை நீடிக்கும் வரையில்—
பெண்களுக்கு உண்மையான விடுதலை இல்லை" – என்று
வலியுறுத்திய சோஷலிச சிற்பிகளின் கொள்கைகளை ஏற்று
பொதுவுடைமைச் சமுதாயத்தை அமைத்த பிறகே
பெண்ணடிமைத்தனம் மறைந்தது! விடுதலை பிறந்தது!
சம உரிமை, சம வாய்ப்பு, பெற்று
"ஆணுக்குப் பெண் இளைப்பில்லை காண்"—
என்று நிமிர்ந்து நிற்கும் நிலை அங்கு ஏற்பட்டது
அக்டோபர் புரட்சிக்குப் பின்பே!
ஏழ்மையும், பசியும், பட்டினியும், வேலையில்லாத் திண்டாட்டமும்
பறந்தோட,
தேர்ந்த கல்வி, ஞானம், ஏற்றவேலை
சமஉரிமை பெற்று,சுதந்திரப் பறவைகளாய் பெண்களும்சிறகடித்துப்
பறக்க முடியும்—என்று காட்டிய "
அக்டோபர் புரட்சியை—நினைவு கூறுவோம்!
எதற்காக?—நாமும் அவ்வாறு மாற முடியும்—அதற்காக
செயல்படுவோம் என்று சபதமேற்க.

ஆசிரியர் : J. விஜயாள்

*1983*-அக்டோபர் - நவம்பரில் வெளிவந்த உழைக்கும் மகளிர் சிந்தனை பத்திரிகையின் முகப்பு பக்கம்



# மகளிர் சிந்தனை

| | |
|---|---|
| ள... | |
| றையில் மூன்று நாட்கள்... | |
| ரு தாய் பலி | |
| விதை | |
| மான பணிப்பெண் | |
| ளுக்கு பதவி உயர்வு | |
| ண்டா? இல்லையா? | |
| ரைப்பட விமர்சனம் | |
| மேடையிலே...)— | |
| ஸ்லீம் தனியார் சட்டம் | |
| லகைச் சுற்றி... | |
| ற்றும் பல... | |

## போராட்டப்புயலில் உருவான ஒற்றுமை!

*38 நாட்கள் ஆசிரிய பெருமக்களின் போராட்டம்!*
*அநீதிக்கு எதிரான அரசு ஊழியர்களின் போராட்டம்*
*வாழும் உரிமை பறிக்கப்பட்ட மீனவர்களின் போராட்டம்!*
*சுரண்டலுக்கு எதிரான பஞ்சாலைத் தொழிலாளர்கள் போராட்டம்!*

இப்படி தமிழ்நாடெங்கிலும் ஒன்றரை மாதங்களாக வீசியடித்த போராட்டப்புயல் இயற்கையாக மையம் கொண்ட இரண்டாவது புயலை அடித்து விரட்டியதுடன் ஆணவத்தின் உச்சியிலே இருமாந்து நின்ற ஆளவந்தார்களை அடிபணியச் செய்தது!

இந்த போராட்டங்களுக்கு பேராதரவு தெரிவித்து டிச-11 மாநிலம் முழுவதிலும் பாட்டாளிகள் நடத்திய பொது வேலை நிறுத்தம் தஞ்சைத் தரணியின் விவசாயத் தொழிலாளர் நடத்திய வேலை நிறுத்தம்! அனைத்துக் கட்சிகளும் அறிவித்த 13ம் தேதி முதல் நடத்த

— [illegible] உமாநாத் —

விருந்த மறியல் போராட்டம்! போராட்டப்புயல் சூறாவளியாக மாறிடும் சூழலைப் பார்த்தபின் முதல்வர் எம்.ஜி.ஆர். ஆசிரியர் கூட்டுப் போராட்டக்குழுவுடன் பேச்சு வார்த்தை நடத்துகிறார். போராட்டம் தற்காலிகமாக முடிவுக்குக் கொண்டு வரப்படுகிறது.

38 தினங்கள் ஆசிரியர்கள் நடத்திய வரலாற்றுச் சிறப்புமிக்கப் போராட்டம். 10 ஆயிரம் ஆசிரியைகள் உள்பட 60 ஆயிரம் பேர்கள் கைது. சிறைகள் நிரம்பிவழிந்தன. சட்டப்படி கைதிகளுக்குத்தர வேண்டிய வசதிகளும் மறுக்கப்பட்டன. போராட்டத்தில் ஈடுபட்ட 17 ஆசிரியர்கள் தங்கள் இன்னுயிரை அர்ப்பணித்தனர். இந்தப் போராட்டத்தில் குறிப்பிட வேண்டிய அம்சம், ஆசிரியைகள் காட்டிய ஒப்பற்ற வீரம், உருக்கு போன்ற உறுதி, அடக்கு முறைகளை சிறைக் கொடுமைகளை தீரமுடன் சந்தித்த சிறப்பு ஆகியவைகள் தான்


ஆசிரியர் குழு
[illegible] உமாநாத் (ஆசிரியர்)
[illegible] சிவராமன் ([illegible])

ஜனவரி 1986
இதழ் 13
50 காசுகள்


ஜனநாயகம் — சமத்துவம் — பெண் விடுதலை

*1986*-ஜனவரியில் வெளிவந்த மகளிர் சிந்தனை பத்திரிகையின் முகப்பு பக்கம்

# இந்திய மாதர் சங்கம்,
# அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கம்
# - ஒரு வரலாற்று ஆய்வு

*(குறிப்பாக தமிழ்நாடு தொடர்பாக)*

**சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு**
**முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்படும்**
**ஆய்வேடு**

ஆய்வாளர்

**G.செல்வி,** M.A., M.Phil.,

நெறியாளர்

**முனைவர் S.P. மேகலை,** M.A.(His), M.A.(Yoga), M.Phil., MBA.(Tou.Mt), Ph.D.,
இணைப் பேராசிரியர்



**முதுகலை மற்றும் ஆராய்ச்சி வரலாற்றுத்துறை**
பச்சையப்பன் கல்லூரி
சென்னை–600 030.

**ஜூன் - 2013**

# முடிவுரை

இந்திய மாதர் சங்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் நமது சமுதாய வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றிருக்கிறது. சென்னையில் தோன்றி நாடு முழுவதிலும் கிளைகளைக் கொண்டிருந்த இந்த அமைப்பு, தேசிய அந்தஸ்தைப் பெற்றிருந்த அகில இந்தியப் பெண்கள் மாநாடு என்ற அமைப்பின் ஒரு அங்கமாகவும் ஓர் காலகட்டத்தில் இயங்கியது. அதே சமயம் சென்னையை மையப்படுத்திய அதன் செயல்பாடுகள் ஒரு தனிப்பட்ட அடையாளத்தையும் இந்த அமைப்புக்கு ஏற்படுத்தியிருக்கிறது என்றால் அது மிகையாகாது.

தமிழ்நாட்டுப் பெண்களை பொருத்தவரையில் பொது வாழ்க்கையில் ஈடுபடுவதற்கான சூழ்நிலை அமையவில்லை என்றே கூறலாம். வடநாட்டில் காங்கிரஸ் மாநாடுகளில் கலந்துகொண்டு திரும்பிய கல்கி ஆனந்த விகடனில் (01.07.1927) கட்டுரை ஒன்றை எழுதினார். "வடநாட்டில் காங்கிரஸ் மாநாடுகளில் நம்பிக்கையூட்டும் காட்சியைக் கண்டேன். அங்கே பெண்கள் சகஜமாக மாநாட்டுப் பந்தலில் பொதுச் சேவையில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். ஆண்களும் அவர்களை மிகுந்த மரியாதையுடன் நடத்துகிறார்கள். ஆனால் இங்கு தமிழ்நாட்டில் ஒரு பெண் தெருவில் நடந்தால் போதும் அதற்கு முன் பெண்களையே பார்த்திராதவர்கள்போல் ஆண்கள் அவர்களை உற்று நோக்குகிறார்கள். தெருவில் இறங்கி நடக்கவோ, கடற்கரையில் உலாவவோ நமது பெண்கள் தயக்கம் காட்டுகிறார்கள். காரணம் ஆண்களின் இந்த உற்றுநோக்கும் கீழ்மைகுணம். இந்த நிலை எப்போதுதான் மாறப் போகிறதோ" என்று தன் ஆதங்கத்தை பதிவு செய்திருக்கிறார். கல்கியின் கூற்று அப்போது நிலவிய பெண்களுக்கு எதிரான சமூகத் தடைகளுக்கு ஓர் முக்கிய ஆதாரமாகும்.

இத்தகைய சூழலில் பெண்களுக்கான ஒரு இயக்கமாக இந்திய மாதர் சங்கத்தின் தோற்றமும் அதன் வளர்ச்சிப் படிகளும் வரலாற்றில் முக்கிய நிகழ்வுகளாக அமைகின்றன.

இந்திய மாதர் சங்கத்தில் இந்தியப் பெண்கள் மட்டுமல்லாமல் ஐரோப்பிய பெண்மணிகளும் அங்கம் வகித்தார்கள். அன்னிபெசன்ட், மார்கரெட் கசின்ஸ்

ஆகிய முன்னணிப் பெண்கள் இந்தியாவைத் தாயகமாக கொண்டவர்கள் இல்லை. ஆனால் அவர்கள் இந்தியப் பெண்களின் பின்தங்கிய நிலைமை குறித்து அக்கறைக் கொண்டிருந்தார்கள். இந்திய மாதர் சங்கத்தின் வளர்ச்சியில் ஆர்வம் காட்டிய ஐரோப்பிய பெண்மணிகள் காலனி ஆதிக்கத்திற்கு எதிரானவர்களே. முக்கியமாக அன்னிபெசன்ட் அம்மையார் காலனி ஆதிக்கத்திலிருந்து இந்தியர்கள் விடுபட வேண்டும் என்று முழு மூச்சுடன் பாடுபட்டார். தன்னாட்சி இயக்கம் என்ற இயக்கத்தையே நடத்திக் காட்டியவர். இவர்களைத் தவிர ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்த பெண்களில் சிலரும் இந்தியப் பெண்களின் முன்னேற்றத்தில் அக்கறைக் கொண்டிருந்தனர். உதாரணமாக லிட்டன் பிரபுவின் சகோதரியான லேடி கான்சிடன்ஸ் லிட்டன் இங்கிலாந்தில் பெண்களின் வாக்குரிமைக்காக போராடி இரண்டு முறை சிறை சென்றவர். பல்வேறு நாடுகளிலும் உள்ள பெண்களின் நிலைமை, அவர்களின் போராட்டம் குறித்த செய்திகளைத் திரட்டி இந்திய மாதர் சங்கத்திற்கு அனுப்பி வைத்தவர்.

இவ்வாறாக உலகெங்கிலும் பெண்களுக்கான தனிப்பட்ட அடையாளமும் உரிமைகோரும் இயக்கங்களும் வலிமை பெற்றபோது இந்திய மாதர் சங்கம் அதன் ஒரு அங்கமாகவே தோற்றம் கண்டது.

1927ல் அகில இந்திய அளவில் சட்டபூர்வமான மாற்றங்களைக் கோரும் வலிமையான ஓர் அமைப்பாக இந்திய மாதர் சங்கம் உருவாக்கிய அமைப்புதான் அகில இந்தியப் பெண்கள் மாநாடு. இரண்டு அமைப்புகளும் ஒன்றுக்கொன்று ஆதரவாக செயல்பட்ட போதிலும் மாநிலத்துக்கு வெளியே அனைத்திந்திய பெண்கள் மாநாடுதான் பரவலாக அறியப்பட்டது. நாளடைவில் அனைத்திந்திய பெண்கள் மாநாட்டின் ஒரு அங்கமாக இந்திய மாதர் சங்கம் இயங்கத் தொடங்கியது. ஆனாலும் சென்னை மாகாணத்தில் மிக வீரியமுடன் செயல்பட்டு பல்வேறு சமூக மாற்றங்களை விரைவுபடுத்திய பங்கு இந்திய மாதர் சங்கத்துக்கு உண்டு. இந்தக் காலக்கட்டத்தில் தமிழகத்தைச் சேர்ந்த கல்விகற்ற பெண்களின் அடையாளமாகவே இந்த அமைப்பு இருந்தது.

பெரும்பாலும் உயர்வகுப்பை சேர்ந்தவர்களும் செல்வந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் இதன் தலைமைப் பொறுப்பை ஏற்றாலும்கூட ஓரளவு மத்தியதரவர்க்க பெண்களையும் இந்த இயக்கம் ஈர்த்திருந்தது.

ஆரம்பத்தில் சுயேச்சையான ஒரு இயக்கமாகத்தான் இது தோன்றியது. முக்கியமாக அகில இந்தியப் பெண்கள் மாநாடு அரசியலை தவிர்த்து இயங்க வேண்டும் என்ற குறிக்கோளை பகிரங்கமாக அறிவித்தது. இதற்கு என்ன காரணம் என்றால் அரசாங்கத்தைப் பகைத்துக் கொள்ளாமல் அவர்களை முறைப்படி அணுகி, கோரிக்கைகளை முன்வைத்து மாநாடுகளில் தீர்மானங்களைக் கொண்டுவந்து வலியுறுத்துவதன் மூலம் பெண்களுக்கு பல சலுகைகளைப் பெற்றுத் தரலாம் என்று இந்த அமைப்பினர் நம்பினர். 1930களுக்குப் பிறகு அவர்களது நிலைபாடு மாறிப் போனது. நேரடியாகவே அரசியலில் பங்குகொள்ளத் தொடங்கினர். இந்த மாற்றத்திற்கு காரணம் இந்த இயக்கத்தின் வாக்குரிமைக்கான கோரிக்கை. ஆண்களுக்கு சமமாக வாக்குரிமை கோரும்போது அதேபோன்ற சமமான பங்களிப்பை அரசியல் ஈடுபாட்டிலும் நிரூபிக்க வேண்டிய கட்டாயம் நேர்ந்தது. தொடர்ந்து நடந்த உப்பு சத்தியாகிரகம் சட்டமறுப்பு இயக்கம் ஆகியவற்றில் பங்குகொண்டு பெரும்பாலான இந்திய மாதர் சங்கப் பெண்கள் சிறைச் சென்றனர்.

உத்வேகம் பெற்ற தமிழகப் பெண்கள் தங்களுக்கென்று ஓர் அமைப்பை ஏற்படுத்திக்கொண்டு தங்கள் உரிமைகளை வலியுறுத்தியபோது அது எத்தன்மையதாக இருந்தது என்பது கேள்விக்குரியது. இதற்கு விடை தேடவேண்டுமானால் அந்தக்காலக்கட்டத்தில் முன்வைக்கப்பட்ட கருத்தியலையும் நாம் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும்.

காலனித்துவ காலத்திலும், அதற்கு பின்வந்த காலத்திலும் பெண்களுக்கான விடுதலைக் கருத்தியல் ஆண்களால் முன்வைக்கப்பட்ட போது, பெண் பலவித முரண்பட்ட பால்நிலை சம்பந்தப்பட்ட கருத்தியல்களுக்கு முகங்கொடுக்க வேண்டியவளாய் இருந்தாள். இவற்றில் ஒன்றே தேசியவாத எல்லைகளுக்குட்பட்டதுமாகும். இந்தியப் பெண்களது குணங்களும் செய்கைகளும் இந்திய சமூக, சமய பாரம்பரியத்தின் வெளிப்பாடுகள். இவை நமது நாகரிகத்தின்

உன்னத வெளிப்பாடுகள். இந்திய தர்மத்தின் ஒட்டு மொத்தமான பிரக்ஞை. அவை மேலைநாட்டு பண்பாட்டுக்கும் அதனை வெளிப்படுத்தும் பெண்களது பண்புக்கும் நேர் எதிரானவை. இந்திய எதிர்க்கருத்தியலானது, பெண்களையும் அவர்களது பெண்மைக்குரிய குணங்களையும் மேற்குலக நாகரிகத்திற்கு எதிரான, ஆனால் தாழ்வாகக் கருதப்பட முடியாத கீழைத்தேச சமூக, சமய பாரம்பரியத்தின் மேன்மைக்குரிய கூட்டு வெளிப்பாடு எனக் கொள்கிறது. இதனோடு ஒப்பிடுகையில் மேற்கத்தைய நாகரிகம் என்பது உயிரற்ற அறிவுவாதமாகும். இத்தகைய கருத்துடையோரில் காந்தியும் ஒருவராவார். அவரது தேசிய விடுதலைக் கோட்பாடான அகிம்சையோடு பெண்கள் விடுதலையையும் சேர்த்துக் கொண்டார். புராணகால இந்தியப் பெண்களான சீதை, தமயந்தி போன்ற பெண்களைப் பாராட்டியதோடு அத்தகைய பெண்களையே எக்காலத்துக்கும் உரிய இந்தியப் பெண்களின் மாதிரிகளாகக் கொண்டார். பாரம்பரியமாக இருந்துவந்த ஆண்–பெண் இருபாலரது நடைமுறை விதிகளில் எவ்வித மாற்றத்தையும் கொண்டுவரக் கூடாது என்பதில் மிகத்தீவிரமான ஒரு கொள்கையைக் கடைப்பிடித்தார்.

அதே சமயம் தமிழகத்தில் தோன்றிய தேசியக் கவிஞர் சுப்ரமணிய பாரதியார், "இன்றே இப்பொழுதே தொடங்குங்கள், அடிமைகளாய் இருப்பதற்கு உடன்படாதீர்கள். ஆண்களுக்குச் சொல்லுங்கள், நாங்கள் உங்களோடு வாழ மறுக்கிறோம் என்று. எல்லா விதத்திலும் நான் உனக்குச் சமமானவள் என சத்தமிட்டுச் சொல்லுங்கள். நீ என்னுடைய சமத்துவத்தை அங்கீகரித்தால் நான் உன்னோடு வாழ்வேன். இல்லையென்றால் நான் சமைக்கமாட்டேன். இவ்வீடு எனக்குமுரியது. ஆகையால் நான் வீட்டிலிருந்து வெளியேறமாட்டேன்" என்று பெண்களை உரிமை முழக்கமிட தூண்டினார்.

இவ்வாறு தேசியவாதிகள் முன்வைத்த பெண்ணிலைவாத கருத்தாக்கம் இந்திய மாதர் சங்க மற்றும் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டு அங்கத்தினரிடையே ஆழமாக ஊடுறுவி இருந்தது. அதேசமயம் இந்தக் கருத்தாக்கம்தான் சமத்துவ கோரிக்கையின் ஆரம்பமாகவும் இருந்தது. பால்ரீதியான சமத்துவம் கோரிய சட்டங்கள் ஏற்படவும் வழிவகுத்தது.

எவ்வாறு தேசியவாதிகள் பெண்களின் உரிமைகள் குறித்து முரண்பாடான கருத்துக்களைக் கொண்டிருந்தார்களோ அவ்வாறே இந்திய மாதர் சங்கம் போன்ற அமைப்புகளும் தேசிய இயக்கத்திற்கு ஆதரவு தெரிவிக்க வேண்டிய நிலையில் இருந்ததால் தங்களது உரிமைக்கான போராட்டத்தில் முரண்பாடுகளை சந்திக்க நேர்ந்தது. 1929ல் வட்டமேஜை மாநாடு பற்றிய அறிவிப்பு வெளிவந்தவுடன் உடனடியாக அரசாங்கப் பிரதிநிதிகளை சந்தித்து அந்த மாநாட்டில் பெண் பிரதிநிதிகளுக்கு இடம் தர வேண்டும் என்ற கோரிக்கையை வைத்தது இந்திய மாதர் சங்கம். இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து வழங்குவது பற்றி விவாதம் செய்வதற்கு மட்டுமே கூட்டப்பட்ட இந்திய தேசிய காங்கிரஸ் இந்த மாநாட்டை புறக்கணிக்க முடிவு செய்தது. வேறு வழியின்றி இந்திய மாதர் சங்கம் தங்களது ஒத்துழைப்பை திரும்ப பெற்றுக் கொண்டது.

இதற்கும் முன்பாக 1927ல் சைமன் குழுவின் வருகை அறிவிக்கப்பட்ட போது பெண்களின் வாக்குரிமைக்காக தொடர்ந்து போராடிக் கொண்டிருந்த இந்திய மாதர் சங்கம் அந்த குழுவுக்கு ஆதரவு நல்கி அதில் பெண் பிரதிநிதிகளை சேர்த்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டது. 1929 பிப்ரவரி மாதம் வந்த சைமன் குழுவில் இந்தியர் எவரும் இடம் பெறாததால் இந்திய தேசிய காங்கிரஸ் அதனை புறக்கணித்தது. வேறு வழியின்றி இந்திய மாதர் சங்கமும் தேசியவாதிகளுடன் ஒத்துழைத்தது.

பெண்களுக்கான வாக்குரிமை போராட்டத்தில் முன்னேற்றம் காண தங்களுக்கு கிடைத்த வாய்ப்பையெல்லாம் இந்திய தேசிய காங்கிரசின் அரசியல் நிலைபாடுக்காக விட்டுத்தர வேண்டிய சூழ்நிலை இந்திய மாதர் சங்கத்தின் அமைப்பாளர்களுக்கு மிவும் கடினமாக இருந்ததுடன் சோர்வடைய செய்யும் படியும் இருந்தது.

இந்திய மாதர் சங்கமும் அகில இந்தியப் பெண்கள் மாநாடும் இணைந்து சாதித்த சார்தா சட்டம், தேவதாசி முறை ஒழிப்புச்சட்டம் ஆகியவை முக்கிய சாதனைகளாகும். இதைத் தவிர பெண்களுக்கு சொத்துரிமையின் அவசியம் குறித்து தங்களது கூட்டங்களில் விவாதித்தார்கள். ஸ்திரீ தர்மம் பத்திரிகையில்

இது பற்றி பல கட்டுரைகள் எழுதப்பட்டிருக்கின்றன. இந்திய பெண்களை மிகப் பெரிய அளவில் பாதித்த விதவைக் கொடுமையும் மிக ஆழமாக விவாதிக்கப்பட்டது.

ஆரம்பத்தில் இந்தியப் பெண்களுக்கே உள்ள தயக்கத்துடன் மிக மென்மையான முறையில் இந்திய மாதர் சங்கத்தின் குரல் ஒலித்தது. "நாங்கள் மேலைநாட்டுப் பெண்களை போன்ற சுதந்திரத்தை விரும்பவில்லை. குடும்பம் சார்ந்த கடமைகளே எங்களுக்கு மிகவும் முக்கியம். ஒரு மனைவியாக, தாயாக ஆற்ற வேண்டிய கடமைகளை மிகமிக முக்கியமாக கருதுகிறோம். இந்தியப் பண்பாட்டின் அடிப்படைத் தன்மைகளோடு முரண்படாத அதே சமயம் நியாயமான சில கோரிக்கைகளை மட்டுமே நாங்கள் வலியுறுத்துகிறோம்" என்ற தொனியில் பேசாத பெண் தலைவர்களே இந்திய மாதர் சங்கத்தில் இல்லை என்பதற்கு ஸ்திரீ தர்மம் பத்திரிகையின் கட்டுரைகளே ஆதாரமாய் இருக்கின்றன.

ஆனால் இதே தொனி இறுதிவரை நீடிக்கவில்லை. குறிப்பாக வாக்குரிமைக்கான போராட்டத்தில் நேரடி அரசியலில் ஈடுபட்டதும் சிறை சென்றதும் அவர்களை மேலும் வலிமைப்படுத்தியது. லோதியன் கமிட்டி பெண்களுக்கு சொத்துக்களின் அடிப்படையில் கணவனுக்கு வாக்குரிமையிருந்தால் அதே அடிப்படையில் மனைவிக்கும் வாக்குரிமை உண்டு என்றும் ஏற்கனவே வாக்குரிமைப் பெற்ற கணவனின் விதவை மனைவிக்கும் அந்த உரிமை உண்டு என்றும் பரிந்துரைத்ததை இந்திய மாதர் சங்கம் கடுமையாக எதிர்த்தது.

"நாங்கள் சம உரிமைமிக்க குடிமக்கள் என்ற அடிப்படையில் எங்களை தனிநபராகக் கருதி வாக்குரிமை வழங்க வேண்டும். தவிர திருமண உறவு தகுதியின் அடிப்படையில், கணவரின் அந்தஸ்தின் அடிப்படையில் வாக்குரிமை வழங்குவது முறையல்ல. இதனை ஒருபோதும் ஏற்க முடியாது" என்ற வாதம் இந்திய மாதர் சங்கத்தால் முன்வைக்கப்பட்டது. இத்தகைய ஆணித்தனமான வாதங்களை முன்வைப்பதற்கு தமிழகத்தில் நிலவிய அரசியல், சமூக சூழலும் ஒரு முக்கிய காரணம். பெரியாரின் கொள்கைகளும் சுயமரியாதை இயக்கப் பெண்களின்

அணுகுமுறையும் இந்திய மாதர் சங்கப் பெண்கள் மீது தாக்கத்தை ஏற்படுத்தி இருக்கக் கூடும் என்பதை ஆய்வுப் போக்கில் அறிய முடிகிறது.

காலனி ஆதிக்க காலத்திலேயே இந்தியா முழுவதிலும் பரவலாக வளர்ந்தது இடதுசாரி இயக்கம். இதில் ஆரம்பத்தில் இருந்தே பெண்கள் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருந்தார்கள். பெண்கள் சந்திக்கும் பிரச்சனைகளை எதிர் கொள்ளவும் பெண்கள் மத்தியில் இயக்கத்தை வளர்க்கவும் பெண்களுக்கான தனிப்பிரிவின் அவசியம் உணரப்பட்டது.

ஜனநாயக உரிமைகளை காக்கவும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவுமான போராட்டங்களில் பெண்களை முழுமையாக ஈடுபடுத்த இந்திய கம்யூனிஸ்டுகள் முழு மூச்சுடன் பாடுபட்டனர். இடதுசாரி இயக்கங்களில் ஈடுபட்ட பெண்கள், பெண்களின் பிரச்சனைகளுக்கு பிரத்யேக கவனம் தேவைப்பட்ட நிலையில் தங்களுக்கென்று தனி அமைப்பை உருவாக்கிக் கொண்டனர்.

இந்திய மாதர் சம்மேளனம் உருவானது. கம்யூனிஸ்ட் கட்சி இரண்டாகப் பிரிந்தபிறகு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பெண்கள் பிரிவாக ஜனநாயக மாதர் சங்கம் உருவாயிற்று. ஏற்கனவே இந்திய மாதர் சம்மேளனத்தில் அங்கம் வகித்த கே.பி.ஜானகியம்மாள், பாப்பா உமாநாத் ஆகியோர் ஜனநாயக மாதர் சங்கத்திற்கு அடித்தளம் வகுத்தனர்.

அகில இந்தியப் பெண்கள் மாநாடு மற்றும் இந்திய மாதர் சங்கம் போன்ற இயக்கங்கள் வலுவிழந்த நிலையில் இடதுசாரிப் பெண்களின் எழுச்சி அரசியல் சமூக வரலாற்றில் ஒரு புதிய பரிணாமத்தை ஏற்படுத்தியது.

இந்திய மாதர் சங்கத்துக்கும் இந்திய தேசிய காங்கிரசுக்கும் இடையேயிருந்த உறவுபோல் தனித்தும் இணைந்தும் இல்லாமல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடனான அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தின் உறவு கொள்கையளவில் ஒன்றுபட்டது. வர்க்கரீதியான போராட்டத்தில் பெண்கள் பெருமளவில் கலந்து கொள்வது அவசியம் என்று கம்யூனிஸ்ட் கட்சி கருதியது.

“பெண்கள் விடுதலை பெறாதவரை பாட்டாளி வர்க்கம் முழு விடுதலை பெற முடியாது” என்று லெனின் கூறினார்.

“பெண்கள் பொது வாழ்விற்கு, அரசியல் வாழ்விற்கு கொண்டுவரப்படாவிட்டால், தங்களது மூச்சு வரை செய்யும் வீட்டு சமையலறை வேலையிலிருந்து அவர்கள் வெளிக் கொணரப்படாவிட்டால், உண்மையான விடுதலையை உத்தரவாதம் செய்ய முடியாது. சோஷலிசத்தைக் கொண்டு வருவது இருக்கட்டும், ஜனநாயக அமைப்பை கட்டுவதுகூட சாத்தியமில்லை” என்றும் லெனின் கூறினார்.

பெண்கள் பிரச்சனை அனைத்துமே நாட்டின் அரசியல் சமூக கட்டமைப்புடன் தொடர்புடையதுதான். சமுதாயத்தில் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ளவும், தங்கள் வாழ்க்கை நிலைகளை மேம்படுத்திக் கொள்ளவும், பெண்கள் அரசியல் இயக்கங்களில் தீவிரமாகப் பங்குகொள்ள வேண்டியது அவசியம் என கம்யூனிஸ்டுகள் கருதினர்.

அவர்களின் கூற்றுப்படி விடுதலைக்குப்பிறகு இந்திய அரசு முதலாளித்துவ பாதையை தேர்ந்தெடுத்துக் கொண்டதால் பெண்களுக்கு தங்கள் உரிமைகளை அனுபவிக்க வாய்ப்புகள் உண்டாக்கப்படவில்லை. கல்வி, வேலை, அரசியலில் பங்கு ஆகியவற்றில் அவர்களுக்கு சம வாய்ப்புகள் தரப்படவில்லை.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி இந்திய மாணவர் சங்கம் (SFI), ஜனநாயக வாலிபர் சங்கம் (DYFI), ஜனநாயக மாதர் சங்கம் ஆகிய உட்பிரிவுகளை ஏற்படுத்தியபோது வெவ்வேறு தளத்தில் வெவ்வேறு பிரச்சனைகளுடன் இருக்கும் மக்களை அணுகுவது, கொள்கைகளை கொண்டு செல்வது போன்ற இலக்குகளை கருத்தில் கொண்டது. ஆனால் மேற்கூறிய இலக்குகளைத் தாண்டி ஜனநாயக மாதர் சங்கம் தமிழ் சமுதாயத்தில் மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றது. புதிய பரிமாணங்களுடன் வளர்ந்திருக்கும் இந்த அமைப்பு இன்று தமிழ் சமூகத்தின் தவிர்க்க முடியாத சக்தியாக உருவாகி இருக்கிறது. இது எப்படி நேர்ந்தது என்ற தேடலின் விளைவாக ஜனநாயக மாதர் சங்கத்தின் வரலாற்று முக்கியத்துவம்

வாய்ந்த பல்வேறு சாதனைகள் இவ்வாய்வின் மூலம் கண்டு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

சர்வதேச அளவில் நடைபெறும் கம்யூனிஸ்ட் மாநாடுகளில் எடுக்கும் முடிவுகளில் ஒருங்கிணைந்து கொள்கைகளை வகுத்துக் கொள்கிறார்கள். உலகப் பொருளாதாரம், உலகச் சந்தை ஆகியவற்றை கணக்கில் கொண்டு தொழிலாளர் சுரண்டப்படும் நிலையை ஆராய்ந்து இவர்களின் சர்வதேச மாநாடுகளில் எடுக்கப்படும் முடிவுகளை இந்தியா போன்ற நாடுகளில் வேரூன்றி இருக்கும் கம்யூனிஸ்ட் கட்சிகள் முன்னெடுத்து செல்கின்றன. பெண்களுக்கான வேலை, சம ஊதியம், தரமான பணிச் சூழல், குழந்தைகள் நலம், குடும்ப அமைப்புக்குள்ளும் பெண்ணின் அந்தஸ்தை உயர்த்தும் மாற்றங்கள் ஆகியவற்றை கம்யூனிஸ்ட் இயக்கம் முதன்மையாகக் கருதுகிறது. கம்யூனிஸ்டுகளின் மாநாடுகளில் பெண்களின் தற்போதைய பிரச்சனைகள் அனைத்தும் விவாதிக்கப்படுகின்றன என்பது ஆய்வின் மூலம் பெறப்படுகிறது.

1967ல் ஐ.நா. பொதுச்சபை பெண்களுக்கெதிரான ஏற்றத்தாழ்வுகளை களையும் அறிவிப்பை செய்தது. அதைத் தொடர்ந்து பெண்களின் உரிமைக்கான அறிவிப்புகள், தீர்மானங்கள், பரிந்துரைகள் ஆகியவற்றை அவ்வப்போது தயாரித்து பெண்களின் அந்தஸ்தை உயர்த்த முயற்சியை எடுத்துக்கொண்டன. ஒவ்வொரு நாட்டிலும் நிலவும் சட்டங்கள் விவாதிக்கப்பட்டன. இதனைத் தொடர்ந்து ஒவ்வொரு நாடும் பெண்களுக்கான நலத்திட்டங்கள், சட்டத்தீர்வுகள் போன்றவற்றை பரிந்துரைக்கத் தொடங்கின.

எத்தகைய செயல் திட்டங்களாக இருந்தாலும் தற்போதைய அமைப்பில் சாதாரண மக்களை சென்றடைவதும் அவர்களின் உரிமைகளை பாதுகாப்பதும் சவாலாக இருக்கும் நிலையில் ஜனநாயக மாதர் சங்கம் ஏனைய கட்சிகளில் இருக்கும் பெண்கள் பிரிவைப்போல் அல்லாமல் சீரிய கொள்கை திட்டத்துடன் உழைக்கும் பெண்களை ஒருங்கிணைத்தது இந்த இயக்கத்தின் சிறப்பம்சம் ஆகும்.

ஆரம்பகட்டத்தில் தண்ணீர் பஞ்சம் நேரும்போது பானைகளைத் தூக்கிக் கொண்டு போராடுவது, ஆபாச போஸ்டர்கள் மீது தார் பூசி அழிப்பது, தொழிற்சங்க

பெண்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்துவது, ரேஷன் கடை பொருட்கள் விநியோகத்தை முறைப்படுத்தக் கோருவது போன்ற சாதாரண அணுகுமுறையுடன் தொடங்கிய இந்த இயக்கம் நாளடைவில் பல புதிய பரிமாணங்களைக் கண்டது. அவ்வப்போது மாவட்ட அளவிலும் மாநில அளவிலும் மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை அகில இந்திய அளவிலும் மாநாடுகள் நடத்தி பாட்டாளி வர்க்கப் பெண்களின் போராட்ட வாழ்க்கையை, அதன் சிக்கல்களை, அதற்குப் பின்னாலிருக்கும் ஒடுக்குமுறைகளை அடையாளம் கண்டு கொண்டது.

எழுபதுகளில் தங்களை ஓரளவு நிலைநிறுத்திக் கொண்ட இந்த அமைப்பு எண்பதுகளில் மத்தியதர வர்க்கப் பெண்களிடம் சிந்தனை மாற்றத்தை உருவாக்கியது. தான் தன்னுடைய வங்கிப் பணி அல்லது ஆசிரியப் பணி தனது குடும்பம் என்று வட்டத்திற்குள் இயங்கிவந்த இந்தப் பெண்கள் தொழிற் சங்கங்கள் மூலமாக ஜனநாயக மாதர் சங்கத்தின்பால் ஈர்க்கப்பட்டனர்.

படித்த அலுவலகப் பணியாற்றிவந்த பெண்கள் மத்தியில் பெண்களின் பிரச்சனை குறித்து சித்தாந்த ரீதியான புரிதல் உருவானது. இந்தப்போக்கு இயக்கத்திற்கு மேலும் வலிமை சேர்த்தது. "ஒரு பெண்ணாக இருந்து அதற்குரிய வாழ்க்கை சூழல்களை அனுபவித்த போதிலும்கூட மாதர் சங்கத்தில் இணைந்த பிறகுதான் ஏனைய பிரச்சனைகளுக்கும் பெண்கள் அனுபவிக்கும் பிரச்சனைகளுக்கும் இருக்கும் தொடர்பை நான் புரிந்து கொண்டேன்" என்று கூறுகிறார் பாலபாரதி எம்.எல்.ஏ.

பல்வேறு வளர்ச்சிப்படிகளை கடந்து வந்திருக்கிறது ஜனநாயக மாதர் சங்கம். எழுபதுகளில் விலைவாசி உயர்வு, ரேஷன் கடை போராட்டங்கள் குடிநீருக்கான போராட்டங்கள் என்று பாட்டாளிவர்க்க பெண்களின் அன்றாட பிரச்சனைகளை மையமாக வைத்து மாதர் சங்கம் இயங்கியது. பெண் தொழிலாளிகளை ஒருங்கிணைத்து தொழிற் சங்கத்தை வலிமைபடுத்தும் முயற்சியிலும் ஈடுபட்டது.

எண்பதுகளில் ஜனநாயக மாதர் சங்கத்தின் தனிநபர் பிரச்சனைகளுக்கும் முக்கியத்துவம் தரப்பட்டன. ஒவ்வொரு சனிக்கிழமையும் ஒரு சட்ட ஆலோசகர் முன்னிலையில் பாதிக்கப்பட்ட பெண்கள் தங்களின் குறைகளை கூறுவார்கள்.

அதற்கான தீர்வுதேடும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். இவ்வாறு ஜனநாயக மாதர் சங்கத்தின் கதவுகளை தட்டியவர்கள் பெரும்பாலும் வரதட்சணையால் பாதிக்கப்பட்ட பெண்களே.

ஷாபானு வழக்கு, ரூப்கன்வர் சதி, சரிகாஷாவின் மரணம் போன்றவை பத்திரிகைகளுக்கு பரபரப்புச் செய்தியாக இருந்த காலக்கட்டத்தில் மாதர் சங்கம் இவற்றை பற்றி மக்கள் மத்தியில் விழிப்புணர்வு ஏற்படுத்த சீரிய முயற்சிகளை மேற்கொண்டது. பெண்கள் குறித்த பல்வேறு சட்ட மாற்றங்களுக்கு முயற்சிசெய்த ஜனநாயக மாதர் சங்கம் அதில் வெற்றியும் பெற்றது.

- வரதட்சணை கொலைகளைத் தடுக்க திருமணமாகி ஏழாண்டுகளுக்குள் ஒரு பெண் மரணமடைந்தால் கணவரை விசாரணைக்குட்படுத்தும் சட்ட மாற்றம்
- மாலை ஆறு மணிக்குமேல் பெண் குற்றவாளிகளை கைது செய்யக் கூடாது என்றும்
- விசாரணைக்காக இரவில் காவல் நிலையத்தில் தங்க வைத்தால் கட்டாயம் ஒரு பெண் போலீஸ் துணையாக இருக்க வேண்டும் என்று கோரிய சட்ட மாற்றம்
- தொழிற்சாலைகளில் பெண்களை இரவுப் பணிக்கு அமர்த்தினால் அவர்களுக்கு உரிய பாதுகாப்பு அளிக்கும் சட்ட திருத்தம்
- குடும்ப வன்முறைச் சட்டம்

ஆகியவை மாதர் சங்கத்தின் சாதனைப் பட்டியலில் முக்கிய இடம்பெற கூடியவை என்ற முடிவுக்கு இவ்வாய்வு இட்டுச் செல்கிறது.

பெண்களுக்கான தேசிய கமிஷனின் தமிழ் நாட்டுப் பிரிவு ஏற்பட்டதும் ஜனநாயக மாதர் சங்கத்தின் தொடர் முயற்சியால்தான். தொண்ணூறுகளில் ஜனநாயக மாதர் சங்கம் சர்வதேச அளவில் விவாதிக்கப்பட்ட மனித உரிமை பிரச்சனைகளில் கவனம் செலுத்தினார்கள். சிதம்பரம் பத்மினி, வாச்சாத்தி ஆகிய பாலியல் பலாத்காரங்கள் மிகப்பெரிய அளவில் விவாதிக்கப்பட்டன. மனித உரிமை

மீறல்களில் கவனம் செலுத்தியதன் விளைவாக மாதர் சங்கத்தின் கவனம் மிக இயல்பாக தலித் பெண்களின்பால் திரும்பியது.

1991ல் கோயமுத்தூரில் நடந்த மாநாட்டில் ஜனநாயக மாதர் சங்கம் இனியும் எல்லாப் பெண்களையும் ஒரேதளத்தில் வைத்து பார்த்துக் கொண்டிருக்க முடியாது. சமுதாயத்தில் பல அடுக்குகள் இருப்பதுபோல பெண்களிலும் வெவ்வேறு பிரிவுகள் இருப்பதையும் நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். முஸ்லிம் பெண்கள், தலித் பெண்கள் ஆகியோரின் பிரச்சனைகளை பொதுவில் வைத்துப் பார்க்காமல் சிறப்பு கவனம் செலுத்த வேண்டும் என்று முழங்கினார் அகில இந்திய தலைவரான பிருந்தாகராத்.

அப்போதிலிருந்தே மாதர் சங்கத்தின் அணுகுமுறையில் மாற்றம் நேர்ந்தது. "வர்க்கப் பிரிவினையை மட்டும் கருத்தில் கொள்ளாமல் ஜாதிமத ஏற்றத் தாழ்வுகளையும் கணக்கில் கொள்ளத் தொடங்கினோம்" என்கிறார் ஜனநாயக மாதர் சங்கத்தின் தற்போதைய தமிழ் மாநில செயலாளரான உ.வாசுகி.

இவ்வாறு காலத்திற்கு ஏற்ப வரலாற்று ரீதியான பல மாற்றங்களை கண்டிருக்கிறது ஜனநாயக மாதர் சங்கம். இந்த இயக்கத்துக்கும் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்துக்கும் நேரடித் தொடர்பு இல்லை ஆனாலும் தந்தை பெரியாரின் கருத்துக்கள் அவ்வப்போது மகளிர் சிந்தனையில் இடம் பெற்றன.

காலனி ஆதிக்க காலத்தில் உருவான இந்திய மாதர் சங்கம் (WIA) அகில இந்தியப் பெண்கள் மாநாடு (AIWC) ஆகியவை எடுத்துக் கொண்ட பிரச்சனைகளின் தொடர்ச்சியாகத்தான் ஜனநாயக மாதர் சங்கத்தின் செயல்பாடுகளை பார்க்க முடிகிறது. இந்திய மாதர் சங்கம் ஜாதி மற்றும் சமூக அந்தஸ்தின் உயர்வு நிலையில் இருந்த பெண்களின் குரல் என்றால் ஜனநாயக மாதர் சங்கம் ஜாதிய வர்க்க அமைப்பில் ஒடுக்கப்பட்ட உழைக்கும் பெண்களின் குரலாக இருக்கிறது. இந்திய மாதர் சங்கம் சுயேட்சையாகத் தோன்றிய தேசிய அரசியலுடன் ஒட்டியும் வெட்டியும் பெண்களின் பிரச்சனைகளுக்காகவே உரிமைக் குரல் எழுப்பியது. தேசிய வரையறைக்குட்பட்ட பெண்ணிலைப் பார்வை மட்டுமே

அவர்களுக்கு இருந்தது. அதையும் மீறிய வகையில் போராட்டக்களம் முக்கியமாக அரசியல் விடுதலைக்கான போராட்டக்களம் அவர்களை சற்றே தீவிரப்படுத்தியது என்று கூறலாம். இந்த தன்மையே இந்திய மாதர் சங்கத்தின் சிறப்பான கூறு. சுதந்திரத்திற்குபின் இந்த அமைப்பின் பொறுப்பாளர்கள் அதனை வெறும் சேவை மையமாக ஆக்கிவிட்ட நிலையில் மிகப் பெரிய வெற்றிடம் ஏற்பட்டது. அந்த வெற்றிடத்தை நிரப்பும் வகையில் இந்திய மாதர் தேசிய சம்மேளனமும் அதனைத் தொடந்து ஜனநாயக மாதர் சங்கமும் பெண்களின் பிரச்சனைகளை கையிலெடுத்துக் கொண்டன.

நவீனப் பெண்ணிலைவாதம் என்ற திசையில் பயணிக்காமல் ஜனநாயக அமைப்பில் கடைநிலை பெண்களுக்காக அவர்களின் உரிமைகளுக்காக போராடிவருவது இந்த இயக்கத்தின் தனித்தன்மை ஆகும்.

உதாரணமாக தண்ணீர் என்பது மக்கள் அனைவருக்குமான பிரச்சனை. ஆனால் ஜனநாயக மாதர் சங்கம் பானைகளோடு பெண்களை மட்டுமே தொடர்பு படுத்தி போராட வைப்பது நியாயம்தானா என்ற கேள்வியை எழுப்பினார் எழுத்தாளர் செ.யோகநாதன். இதற்கு பதிலளித்த ஜனநாயக மாதர் சங்க பொறுப்பாளர்களில் ஒருவரான மைதிலிசிவராமன் “குழாயடியில் மணிக்கணக்கில் தவம் கிடப்பவர்கள் பெண்கள்தாமே” என்று வாதிட்டார்.

“தண்ணீர் குடத்தை பெண்கள் தலையில் சுமத்தியிருப்பதே பாரபட்சமானது என்றால் தண்ணீர் பிரச்சனைக்கு குரல் கொடுப்பதற்கும் அவள்தான் பொறுப்பா” என்ற கேள்வியை எழுப்பினார் செ.யோகநாதன் (இலட்சிய பெண், ஜூன் 1987).

மாதர் சங்கத்தின் இந்த அணுகுமுறை பின்னணியில் பெண்ணை கருத்தியில் ரீதியாக தனிமைப் படுத்துவதை உணராமல் ஏழை, எளியப் பெண்களின் அன்றாடப் பிரச்சனைக்காக போராடும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பார்வையே மிகுந்திருந்தது.

சமத்துவ வாழ்வு பெற தனித்து நின்றால் சாத்தியமல்ல. இன்றைய சமுதாய அமைப்பை தகர்த்து புதியதொரு சமுதாயம் காண வேண்டும் என்ற கருத்தை முன்வைத்தார் பாப்பா உமாநாத்.

இவ்வாறு தாங்கள் சார்ந்துள்ள கட்சியின் கொள்கைகளுடன் ஒத்திசைந்து தங்களது கொள்கைகளை வகுத்துக் கொண்டது ஜனநாயக மாதர் சங்கம். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை சார்ந்து இயங்க வேண்டிய நிலை ஜனநாயக மாதர் சங்கத்தை கருத்தியில் ரீதியாக வரையறைபடுத்தி இருக்கிறது. ஆனால் கட்சிக்கு அப்பாற்பட்டு பெண்கள் என்ற அடிப்படையில் எவர் வேண்டுமானலும் மாதர் சங்கத்தில் இணையலாம் என்ற நிலைபாடு இந்த அமைப்பை மேலும் விரிவுபடுத்தியிருக்கிறது.

தனிநபர் பிரச்சனைகளை சமூக பிரச்சனையாக விவாதத்திற்கு கொண்டுவந்து சட்டப்பூர்வ தீர்வுகளை தேடியது. அமைப்பை எதிர்த்து கேள்வி கேட்கும் அதே தருணத்தில் நாடாளுமன்றம், சட்டமன்றம், உள்ளாட்சி அமைப்புகள், ஊடகங்கள் என்று அத்துனை தளங்களிலும் பெண்ணுரிமைக்குரல் ஒலிக்கச் செய்வது இவர்களின் நேர்மறை அணுகுமுறையாகும்.

ஆணாதிக்கம் என்ற வார்த்தையை மிகுந்த எச்சரிக்கை உணர்வுடன் பயன்படுத்தும் இந்த அமைப்பினர், தங்களது போராட்டங்களிலும் பொதுக்கூட்டங்களிலும் இயக்கம் சார்ந்த ஆண் தோழர்களையும் ஈடுபாடு காட்ட வேண்டும் என்று கருதுபவர்கள். குடும்ப அமைப்பில் பெண் மட்டும் ஏன் இரட்டைசுமை சுமக்க வேண்டும். ஆண்களும் வீட்டு வேலைகளில் பங்கெடுத்துக் கொள்வதுதானே நியாயம் என்று கேள்வி எழுப்பும் இந்த இயக்கத்தினர், குடும்ப அமைப்புக்குள் பெண்கள் சுரண்டப்படுவதைத்தான் எதிர்க்கிறோமே தவிர குடும்ப அமைப்பை எதிர்க்கவில்லை என்ற விளக்கமும் தருகிறார்கள்.

அதிதீவிர போக்குகளை தவிர்த்து ஆண்களுக்கும் விழிப்புணர்வை ஏற்படுத்தி அவர்கள் பெண்ணை சக மனுஷியாக பாவிக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். மனித உரிமை பிரச்சனைகளை ஜனநாயக மாதர் சங்கம்

முன்னெடுத்து செல்வது என்பது குறிப்பாக தலித் பெண்கள் பிரச்சனையில் கவனம் செலுத்துவதும் காலத்தின் கட்டாயம் ஆகும்.

“உழைக்கும் பெண்கள் பங்கு பெறாமல் எந்த சோஷலிச புரட்சியும் சாத்தியமில்லை. பல விடுதலை இயக்கங்களின் அனுபவமானது எந்த அளவுக்கு பெண்கள் பங்கெடுத்துக் கொள்ளுகிறார்களோ அந்த அளவுக்கு வெற்றியை உறுதிப்படுத்தியிருக்கிறது” என்ற லெனின் கூற்றை அடிப்படையாகக் கொண்டு ஜனநாயக மாதர் சங்கத்தில் பிரச்சனைகள் விவாதிக்கப்படுகின்றன. மார்க்சின் கூற்றுப்படி உழைக்கும் மக்களின் வர்க்கப்போராட்டம் ஒன்றுதான் புரட்சிகரமான மாற்றங்களையும் சோஷலிசத்தையும் ஏற்படுத்தி பெண்களின் உரிமைகளை பாதுகாக்கும். தமிழகத்தில் இத்தகைய வர்க்கப்போராட்ட வரலாறு என்பது தனித்த ஆய்வுகளுக்குரிய பகுதிகளாகும்.

வரலாற்றில் பெண்களின் பங்களிப்பு சரியாக பதிவு செய்யப்படாத நிலையில் இருபெரும் மாதர் இயக்கங்களின் வாயிலாக பெண்களின் வரலாற்றை ஆராயும் முயற்சியே இந்த ஆய்வு ஆகும். ஒரு நூற்றாண்டுகால தமிழகப் பெண்கள் வரலாற்றில் இந்திய மாதர் சங்கம் மற்றும் ஜனநாயக மாதர் சங்கத்தின் வரலாறு என்பது உயர்ஜாதிப் பெண்களில் தொடங்கி தலித் பெண்கள் வரை ஊடுருவி வந்திருக்கும் உரிமைப் போராட்டங்களின் வரலாறாகும்.

இன்றைய அளவில் இத்தகைய உரிமைகளை, போராட்டங்களின் வரலாற்றை பெண்களிடையே பதிவுசெய்ய வேண்டும் என்ற நோக்கிலும், பெண்களின் உரிமைகளுக்கான தொடர் போராட்டங்களின் தாக்கம் குறித்த ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கிலும் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. இனிவரும் காலத்தில் இத்தகைய ஆய்வுகள் ஒருபெரும் படிப்பினையை ஏற்படுத்துவதோடு மட்டுமல்லாமல் பல ஆய்வுகளுக்கான அடித்தளமாக இருக்கும் என்ற நோக்கிலும் இந்த ஆய்வு ஒரு வரலாற்றுப் பார்வையில் தெளிவுபடுத்தியுள்ளது.